(இ-ள்) உரனென்னுந்தோட்டியான்-அறிவென்னுமங்குசத்தினு லே- ஓரைந்தும்- (பொறிகளாகியயானைக)ளைந்தையும்—காப்பான் (தன்தன்புலன்களின்மேல்செல்லாமற்) காப்பவன் ஜீவரனென்னும் வைப்புக்கு - (எல்லாநிலங்களினும்) மேலானதென்று சொல்லப்படு கிறமோட்சநிலத்துக்கு—ஓர்வித்து ஒருவித்தாவான் எ-று (கருத்து ஐம்பொறிகளையும், ஐம்புலன்களிற்செல்லாமற் காப்பவன் மோட்ச நிலத்துக்கு வித்தாவான் என்பதாம். ❋ அந்நிலத்திலேபோய் முளை த்தலின் வித்தென்றார். இங்கே பிறந்தும் இறந்தும் வருகிற மனித னல்லனென்பதாம். [ஏகதேசவுருவகவணி.] (௪)

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா ......... ❋
னிந்திரனே சாலுங் கரி ............................................. ❋

(இ-ள்.) ஐந்தவித்தான்-(புலன்களிற்செல்லுகின்ற) வைந்தாசை களையுமொழித்தவனது-ஆற்றல்-வல்லமைக்கு—அகல்விசும்புளார்அ கன்றபொன்னுலகத்துள்ளதேவர்க்கு—கோமான்-தலைவனாகிய- இந் திரனே-தேவேந்திரனே—சாலுங்கரி-போதுமானசாக்ஷியாம்-எ-று) (கருத்து கௌதமமுனி வல்லமைக்குத்தேவேந்திரனே சாக்ஷியாம் என்பதாம். ❋ ஐந்தாசைகளையும் நீக்காமல் சாபத்தை அடைந்துநி ன்று அவ்வாசைகளை நீக்கினவனாகிய கௌதமமுனிவனது வல்லமை யைத் தெரிவித்தானாதலின் இந்திரனே சாலுங்கரியென்றார். (௫)

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் .......... ... .. ❋
செயற் கரிய செய்கலா தார் .... ...... ... .... ... ❋

(இ-ள்.) (ஒத்தபிறப்பினராகியமனிதர்களிலே) —பெரியர்-பெரி யோர்ஜீ-செயற்கரிய-செய்தற்கரியவைகளை ஜீ—செய்வார்-செய்வார்க ள்-சிறியர்-சிறியோர்ஜீசெயற்கரிய-அச்செய்தற்கரியவைகளை- செய்க லாதார்-செய்யமாட்டாதார். எ, று. (கருத்து பெரியோர் செய்தற்கரி யவைகளைச்செய்வார்கள். சிறியோர்செய்தற்கரியவைகளைச்செய்யார் கள் என்பதாம். ❋ எனவே- பெரியோர்-செய்தற்கெளியவைகளைச் செய்யாரென்பதும், சிறியோர் அவைகளைச் செய்வாரென்பதும் தோன்றுதல் அறிக. செய்தற்கெளியவை-மனத்தை வேண்டியபடி யேபோகவிடுதல்- ஆசைகொள்ளுதல்- கோபித்தல்- இவைமுதலான வையாம். செய்தற்கரியவை- இயமம்-நியமம்- ஆசனம்- பிராணாயாம ம் பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி-எனஎண்வகையோகங் களாம். (௬)

சுவையொளியூறோசை நாற்றமென் றைந்தின் ... ... *
வகைதெரிவான் கட்டே யுலகு ......... ........... ..... *

(இ-ள்) உலகு-உலகமானது-சுவையொளியூறோசை நாற்றம் சுவையும் ஒளியும் ஊறும்ஓசையும்நாற்றமும் — என்று - என்றுசொல்லப்பட்ட-ஐந்தின் - பஞ்சதன்மாத்திரைகளது-வகை - கூறுபாட்டை-தெரிவான்கட்டே-ஆராய்பவனறிவினிடத்ததே. எ-று கருத்து உலகமானது பஞ்சதன்மாத்திரைகளை யறிபவனிடத்ததே யென்பதாம் ☼ சுவை-ரசமும், ஒளி-உருபமும் ஊறு ஸ்பரிசமும், ஆம்- ஐந்தின் வகையாவன - அவையைந்தும், அவற்றின்மேற்றோன்றிய பூதங்களைந்தும், அவற்றின்கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும், ஆக இருபதுமாம், வகைதெரிவானென்றதனாற்றெரிகின்றபுருடனும், அவன்றெரிதற்குக் காரணமாகிய - மான்-அகங்காரம் - மனம்-எனப்பட்டவையும் அவற்றுக்குமுதலாகியமூலப்பகுதியும், கொள்ளப்படும். இவ்விருபத்தைந்து தத்துவக்கூட்டமல்லது,உலகென வேறில்லையென்று,உலகினது இருப்பை அறிதலால் அறிவினிடத்ததாயிற்று, பூதமைந்து -நிலம்-நீர் - தீ - காற்று-வான் - ஞானேந்திரியமைந்து மெய்-வாய் கண்-மூக்கு- செவி-கன்மேந்திரியமைந்து-வாக்கு-பாதம்-பாணி-பாயு - உபஸ்தம் மூலப்பகுதி-மாயை. [இவைநான்குபாட்டாலும் பெருமைக்குக்காரணங்களும் ஐம்பொறியடக்கலும், யோகப்பயிற்சியும், தத்துவஞானமும் ஆமென்பது சொல்லப்பட்டது, (எ)

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து ,.......... *
மறைமொழி காட்டி விடும் ........ . .............. *

(இ-ள்) நிறைமொழி-(பய)னிறைந்தசொல்லையுடைய-மாந்தர்முனிவரது-பெருமை-மகிமையை — நிலத்து நிலவுலகத்தில்-மறைமொழி-(அவராணையாகச்சொல்லிய)மந்திரங்களே-காட்டிவிடும்-(பிரத்தியக்ஷமாகக்) காட்டிவிடும். எ,று.(கருத்து)முனிவரது மகிமையை-அவர்கள் மந்திரங்களே காட்டும் என்பதாம். ☼ பயனிறைந்தமொழி யாவது அவர் அருளினாலே சொன்னாலும், கோபத்தினாலே சொன்னாலும்,அதனதன் பிரயோசனத்தைக் கொடுத்தேவிடுஞ்சொல்-காட்டுதல் பிரயோசனப்பட்டு அம்மகிமையை அறிவித்தல். (அ)

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி ....... *
கணமேயுங் காத்த லரிது ..................... ........ *

(இ-ள்) குணமென்னுங்குன்று-(துறவுமெய்யறிவுஆசையில்லாமை முதலான) நற்குணங்களாகியமலையின்மேல்-ஏறிநின்றார்- ஏறிநின்ற முனிவரது— வெகுளி - கோபமானது - கணமேயும் - (தானுள்ள வளவு) க்ஷணகாலமேயாயினும்-காத்தல்-(கோபிக்கப்பட்டவராலே) தடுத்தல்கூ—அரிது-அரிதாம். (எ,று) (கருத்து) முனிவர்கள் கோப மானது கோபிக்கப்பட்டவராலே தடுத்தல்கூடாது என்பதாம். ❋ அசையாமையும் பெருமையும்பற்றிக் குணங்களை மலையாக உருவகஞ்செய்தார். அநாதியானபழக்கத்தினாலேஒரோவிடத்துக் கோபம் தோன்றியபோதே அதனை மெய்யுணர்வு அழிக்கும் ஆகலால் கண மேயுமென்றும், நிறைமொழி மாந்தராகலால் காத்த லரிதென்றும் சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் ஆவராணை சொல்லப்பட்டது.] (௯)

அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்.....❋
செந்தண்மை பூண்டொழுக லான்............ .... ❋

(இ-ள்.) எவ்வுயிர்க்கும்- எல்லாவுயிர்களின்மேலும்-செந்தண்மை செவ்வையானவருளை-பூண்டு-விரதமாகக்கொண்டு- ஒழுகலான் - நடக்கையினாலே —அந்தணரென்போர்-'அந்தணரென்று சொல்லப்படுவோர்-அறவோர்-துறவறத்திநின்றவர். (எ,று) (கருத்து) அந்தண ரென்றுசொல்லப்படுவோர் முனிவர்களே என்பதாம். ❋ மற்று- அசைநிலை. அந்தணரென்பது அழகிய தண்மையையுடையவரென்னுங்காரணப்பெயராகலின் அவ்வருளுடையார்க் கல்லது மற்றவர்க்காகாதென்பது (கருத்து) [அப்படி ஆணையை யுடையவராயினும்உயிர்களிடத்தேஅருளுடையரென்பதுஇதனாற்சொல்லப்பட்டது] (௰)

# ௪-ஆம்-அதி-அறன்வலியுறுத்தல்.

அஃதாவது-அம்முனிவரால் அறிவிக்கப்பட்டமூன்றுள் அறமானதுமற்றைப் பொருளின்பங்கள்போலாகாமல் இம்மைமறுமைவீடு என்கிற மூன்றையும் தருதலால் அவற்றினும் உறுதியுடைத்தென்பது சொல்லுதலாம் — அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

சிறப்பீனுஞ் செல்வமுமீனுமறத்தினூஉங் ........ .. ❋
காக்கமெவனோ வுயிர்க்கு ... ......... ........... ❋

(இ-ள்) சிறப்பு-மோக்ஷத்தையும்※—ஈனும் - கொடுக்கும். -செல்வமும்- (சுவர்க்கமுதலாகிய) செல்வத்தையும்※-ஈனும்-கொடுக்கும். (ஆதலால்)-உயிர்க்கு-(மனித)ருயிர்க்கு- அறத்தினூஉங்கு - தருமத்தின்மேற்பட்ட—ஆக்கம்- பெருக்கத்தைத்தருவது※- எவன்- யாது. (எ;று.) (கருத்து.) மக்களுயிர்க்குத் தருமத்தின் மேற்பட்ட திலலை என்பதாம். ※ ஓ- அசைநிலை- எல்லாப்பேறுகளினும் சிறந்ததாகலின்மோக்ஷத்தைச் சிறப்பென்றார். ஆக்கம்-மேன்மேலுயர்தல்[இதனால்அறத்தினும்அதிகமாகிய உறுதி இல்லையென்பதுசொல்லப்பட்டது

அறத்தினூஉங் காக்கமுமில்லை யதனை.................*
மறத்தலி னூங்கில்லை கேடு.................*

(இ-ள்.) (ஒருவனுக்கு)-அறத்தினூஉங்கு- தருமஞ் (செய்தலின்) மேற்பட்ட - ஆக்கமும் - பெருக்கத்தைத் (தருவதும்※) —இல்லை- இல்லை.-அதனை-அத்தருமத்தை—மறத்தலினூங்கு - (மயக்கத்தால்) மறந்துவிடுதலின் மேற்பட்ட -கேடு-கேட்டைத் (தருவதும்※) இல்லை-இல்லை. எ,று. (கருத்து) தருமத்தின்மேற்பட்டசெல்வமுமில்லை. அத்தருமத்தை மறத்தலைப்பார்க்கிலுங் கேடில்லை என்பதாம். ※ அறத்தினூங்காக்கமுமில்லையென முன்சொல்லப்பட்டதையே ※ அநுவதித்தார் - அதனாலே கேடுவருதலைச் சொல்லுதலாகிய பயனோக்கி [இதனால்அது செய்யாதபோது கேடுவருதல் சொல்லப் பட்டது.]

ஒல்லும் வகையா லறவினை யோவாதே.................*
செல்லும்வா யெல்லாஞ் செயல்.................*

(இ-ள்.) ஒல்லும்வகையால்- (தமக்குத்தமக்குக்கூடும்) வகையால் அறவினை-தருமமாகிய நல்வினையை-ஓவாதே- இடைவிடாமல் - செல்லும்வாயெல்லாம்-(அது) செல்லுமிடங்களிலுமெல்லாம் - செயல் செய்யக்கடவர். எ,று. (கருத்து) மனம்வாக்குக்காய மிம் மூன்றாலுந்தருமஞ்செய்யக் கடவர்கள் என்பதாம். ※ கூடும் வகையாவது-இல்லறம் பொருளளவுக்கு ஏற்கவும், துறவறம் சரீர நிலைக்கு ஏற்கவும் செய்தலாம். செல்லுமிடங்களாவன-மனமும், வாக்கும், காயமும், ஆம். அவற்றினாலே செய்யப்படுகிற அறங்களாவன- நற்சிந்தையும் நற்சொல்லும், நற்செயலும், ஆம்! [இதனால்அறம்செய்யுமாறுசொல்லப்பட்டது] (௩)

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற.................*
னாகுல நீர பிற.................*

※ அறவாதமாவது முன்சொல்லப்பட்டதையே.
மற்றொன்றை விதித்தற்பொருட்டுப்பின் அநுவதிப்பது

(இ-ள்.) மனத்துக்கண் (அறஞ்செய்பவன் — தன்) நெஞ்சினிடத்து-மாசிலனாதல் - குற்றமில்லாதவனாகக்கடவன் - அறம்-தருமமாவது-அனைத்து- அவ்வளவே—பிற-அது ஒழிந்தசொல்லும்வேடமும்— ஆகுலநீர - (அறமெனப்படுவனவல்ல) - ஆரவாரகுணத்தையுடையனவாம். (எ;று) (கருத்து) தருமஞ்செய்பவன் மனமாசற்றிருக்கக்கடவன் அவ்வளவேயறம் என்பதாம் ❁ குற்றம் தீயவை நினைத்தல்.பிறர் அறியவேண்டிச் செய்யப்படுதலால் ஆகுல நீரபிறவென்றார். மனநிலைகுற்றமுடையவனாகியபோது அதன்வழிப் பட்டவாக்கினாலும் காயத்தினாலும் செய்யப்படுகிற அறங்களிலே பயன் இல்லையென்பதும் பெறப்பட்டது.

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு ...... *
மிழுக்கா வியன்ற தறம்.................................. *

(இ-ள்.) அழுக்காறு- (பிறருயர்ச்சி) பொறாமையும்- அவா- (ஐம்புல) வாஞ்சையும்- வெகுளி-(அவைகாரணமாகப் பிறர்மேல் உண்டாகிற) கோபமும் - இன்னாச்சொல்- (அதுபற்றிவருகிற) கடுஞ்சொல்லும்-நான்கும்- ஆகியவிந்நான்கினையும்- இழுக்கா-கடிந்து- இயன்றது-(ஒழிவில்லாமல்) நடந்தது-அறம்- தருமமாவது. (எ;று) (கருத்து) பொறாமை ஆசை கோபங் கடுஞ்சொல் இந்நான்குங்கடிந்து நடந்ததேதருமம் என்பதாம். ❁ இதனால் இந்நான்கோடு கலந்துநடந்தது அறமெனப் படாதென்பதுங்கொள்க, [இவையிரண்டுபாட்டாலும் அறத்தினியல்பு சொல்லப்பட்டது. (௫)

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது ............ *
பொன்றுங்காற் பொன்றாத் துணை ...................... *

(இ-ள்) நாம் இப்போது இளையோமாகலின்) -அன்று - இறக்குநாளில்- அறிவாமென்னாது- செய்வோமென்றுநினையாமல்- அறம்-தருமத்தை-செய்க-(தினந்தோறுஞ்) செய்யக்கடவர்-அது- அப்படிச்செய்யப்பட்டதருமமானது-பொன்றுங்கால்-உடம்பினின்றுமுயிர்போங்காலத்து- பொன்றாத்துணை - (அவ்வுயிர்க்கு அழியாததுணையாம்.(எ,று) (கருத்து) இறக்கும்போது தருமஞ்செய்வோமென்னாது இருக்கும்போதே தருமஞ்செய்க அத்தருமமிறக்கும்போதுத் துணையாம். என்பதாம். ❁ மற்று-அசைநிலை. செய்தவுடம்பழியவும் உயிரோடுகூடி மற்றையுடம்பிலும் செல்லுதலால் அழியாததுணையாயிற்று. [இதனால்அப்படிப்பட்ட தருமத்தை நிலையில்லாதவுடம்புஇருக்கிற போதேசெய்கவென்பது சொல்லப்பட்டது] (௬)

○ அகத்திபம் அன்றமுன்குள்ளதிர்மறையசைநிலை

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை .... .........❋
பொறுத்தானோ டூர்ந்தா னிடை ............ ... .... ❋

(இ-ள்.) அறத்தாறு-தருமத்தின்பயன்-இதுவென- இதுவென்று-(ஆகமவளவையால்)அறிவிக்க-வேண்டா-வேண்டியதில்லை-சிவிகை-தண்டிகையை ஐ பொறுத்தானோடு-சுமப்பவனோடு- ஊர்ந்தானிடை-செலுத்துவோனிடத்துக் (காட்சியளவையினாலேயே அறியப்படும் எ, று (கருத்து) தருமத்தின்பயன் சிவிகையெடுப்பவனிடத்திலும் ஏறுபவனிடத்திலுங் காணப்படும். என்பதாம். ❁ எனவென்றதனால். சொல்லளவையாகிய ஆகமபிரமாணமும். பொறுத்தானோ டூர்ந்தானிடையென்றதனால்-காட்சியளவையாகிய பிரத்தியக்ஷபிரமாணமும் கொள்ளப்பட்டன - அறியப்படுமென்பது குறைந்து நின்றதனால்-சொல்லெச்சம்[இதனால் அழியாத துணையாதல்தெளிவிக்கப்பட்டது

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன் ❋
வாழ்நாள் வழியடைக்குங் கல்.............. ..... ... ❋

(இ-ள்) ஒருவன்-ஒருவன்-வீழ்நாள்-(செய்யாமற்)கழியுநாள்-படாஅமை-உண்டாகாமல்-நன்று-தருமத்தை ஐ ஆற்றின்-செய்வானாயின் அஃது-அச்செய்கையானது-வாழ்நாள்-(அவன்சரீரத்தோடுகூடிவாழு)நாளது -வழி-(வரு)வழியை ஐ அடைக்குங்கல்-(வாராம)லடைக்குங்கல்லாம்.எ, று (கருத்து) ஒருவன் தருமத்தைச்செய்தால் அத்தருமமவன் பிறப்பைநீக்குமென்பதாம். ❁ அஞ்ஞானம்-அகங்காரம்-அவாவிருப்பு - வெறுப்பு-என்கிற- ஐவகைக்குற்றங்களால் வருகிற-நல்வினை-தீவினை-என்கிற இருவகை வினைகளும் உள்ளவரைக்கும் உயிர் உடம்போடு கூடிநின்று அவற்றின் பயன்களாகியசுகதுக்கங்களை அநுபவிக்கும் ஆதலால் அக்காலமுழுதும் வாழ்நாளெனப்பட்டது.] [அ]

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்......... ❋
புறத்த புகழு மில....................... .................. ❋

(இ-ள்) அறத்தான்-இல்லறத்தோடுபொருந்தி-வருவதே- வருமின்பமே ஐ இன்பம்-இன்பமாகும்மற்றெல்லாம்அதனோடுபொருந்தாது வருவனவெல்லாம் ஐ (இன்பமாயினும்)புறத்த-துன்பத்துட்சேர்வனவாம்-புகழும்-புகழையும் ஐ இல-உடையனவல்ல, எ, று (கருத்து) தன் மனைவியொடு கூடுமின்பமே யின்பமாகும் பிறன்மனைவியொடு கூடுமின்பந் துன்பமாம் என்பதாம். ❁ இன்பம்காமத்தின நடவும். இன்பத்திற்புறமெனவே துன்பமாயிற்று டாவதனால வரு

ம் பிறனில் விழைவு முதலானவை அப்போது இன்பமாய்த் தோன்றுமாயினும் பின்பு துன்பமாய் விளைதலாற் புறத்தவென்றார். புகழுமிலவெனவே - அறத்தோடு வருவதாகிய வின்பம் புகழுமுடைத்தாமென்பதுபெற்றாம். [இதனால் அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும்,, பெறுவாரென்பதுசொல்லப்பட்டது.] (௯)

செயற்பால தோரு மறனே யொருவற்………… *
குயற்பால தோரும் பழி……… ………………… *

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு-செயற்பாலது- செய்தற்றன்மையது- அறனே-நல்வினையே-உயற்பாலது- ஒழிதற்றன்மையது- பழி(யே)-தீவினையே. எ,று.)(கருத்து) ஒருவனுக்குச் செய்யத்தக்கது நல்வினை செய்யத்தகாதது தீவினை என்பதாம். ※ தேற்றேகாரம்பின்னுங்கூட்டப்பட்டது. ஒருமிரண்டும்- அசைநிலைகள். பழிக்கப்படுவதாகிய தீவினையைப்பழியென்றார். இதனாற்செய்வதும், ஒழிவதும், நியமிக்கப்பட்டன ] (௰)

பாயிரமுற்றிற்று.



# இல்லறம்.



இல்லறமாவது - இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லப்படுகிற வழியிலே நின்று அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடுகூடிச் செயப்படுவதாம். ஆதலின் அதனை முதலிலே சொல்லத்தொடங்கினார்-

## ௫-ஆம், அதி, இல்வாழ்க்கை.



அஃதாவது மனையாளோடு கூடி வாழ்தலினது சிறப்பாம். இல்வாழ்க்கை நிலையானது அறஞ் செய்தற்குரிய இருவகை நிலைகளுள்ளே முதலாதலின் இது அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு……… *
நல்லாற்றி னின்ற துணை …………………………………… *

(இ-ள்.) இல்வாழ்வானென்பான் - இல்லறத்தோடு கூடிவாழ்பவனென்று சொல்லப்படுவோன்—இயல்புடைய (துறவறத்) தன்மையையுடைய-மூவர்க்கும் (மற்றை மூவர்க்கும்-நல்லாற்றில் (-அவரது) (நல்லொழுக்க) வழிகளில் - நின்ற-நிலைபெற்ற- துணை- துணையாவான். எ,று.) (கருத்து) இல்லறத்தில் வாழ்பவன் பிரமசாரி; வானப்பிரத்தன், சந்நியாசி, இம்மூவர்க்குந் துணையாவான் என்பதாம் ❋ இல்லென்பது அதனறத்தை உணர்த்தலால் ஆகுபெயர். மற்றைமூவராவார்-ஆசாரியனிடத்தே ஓதுகின்றவனும்விரதங்காக்கின்றவனும் ஆகிய பிரமசாரியும், காட்டினிடத்தேபோய்மனைவியோடுதவஞ்செய்கிறவனாகிய வானப்பிரஸ்தனும், எல்லாப்பற்றுக்களையும்விட்டவனாகிய சந்நியாசியும், என்றறிக. இல்வாழ்வான்- பசி- நோய்-குளிர்-முதலானவற்றால் அவரொழுக்கங்களுக்கு இடையூறு வராமல் உண்டி மருந்து முதலானவைகொடுத்து அவரவரொழுக்க வழிகளிலே தப்பாமல் நடத்துகையினாலேநல்லாற்றினின்றதுணையென்றார். (க)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு ... ❋
மில்வாழ்வா னென்பான் றுணை......... ........... ❋

(இ-ள்) துறந்தார்க்கும்-(ஆதாரமானவராலே) விடப்பட்டோர்க்கும்—துவ்வாதவர்க்கும்-வறுமைப்பட்டவர்க்கும் -இறந்தார்க்கும்-(ஒருவருமில்லாமல்வந்து) இறந்தவர்க்கும்—இல்வாழ்வானென்பான்-இல்வாழ்வானென்றுசொல்லப்படுவோனே -துணை -துணையாவான். (எ-று) (கருத்து) துறந்தவர்க்கும், வறியவர்க்கும், இறந்தவர்க்கும், இல்வாழ்வான் துணையாம் என்பதாம். ❋ ஆதாரமானவராலே விடப்பட்டவர்க்குப் பாவமொழிய அவர்க்கு ஆதாரமாய்நின்றுவேண்டுவன செய்தலாலும், வறுமைப்பட்டவர்க்கு உணவு முதலானவை கொடுத்தலாலும், இறந்தவர்க்கு நீர்க்கடன் முதலானவைசெய்து நல்லகதியை அடைவித்தலாலும், துணையென்றார். [இவையிரண்டுபாட்டாலும் இல்வாழ்க்கை எல்லாவுபகாரங்களுக்கும் உரித்தாதல் சொல்லப்பட்டது.] (உ)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங் ❋
கைம்புலத்தா றோம்ப றலை..................... .. ❋

(இ-ள். தென்புலத்தார் பிதிரரும் - தெய்வம் தேவரும்—விருந்து-அதிதியரும்- ஒக்கல்-சுற்றத்தாரும்- தான்-தானும்- என்று-என்றுசொல்லப்பட்ட-ஐம்புலத்து - ஐந்திடத்துஞ் செயப்படுகின்ற—ஆறு-(அற) வழியை -ஓம்பல்-வழுவாமற்செய்தல் - தலை- (இல்வாழ்

வானுக்குச்) சிறப்புடையவறமாம், எ-று) (கருத்து) பிதிர்க்குந் தெய்வத்திற்கும் விருந்திற்கு மினத்திற்குந் தனக்குந் தருமஞ்செய்தல் தலைமையானதருமமாம் என்பதாம். ✲ ஆங்கு- அசைநிலை. பிதிரர் ஓர்தேவசாதியார்! அவர்க்கு இடம் தெற்காதலின்-தென்புலத்தாரென்றார், தெய்வம்-சாதியொருமை. விருந்து-புதுமை-அது இங்கே புதியவராய்வந்தவரை உணர்த்தலினாலேஆகுபெயர். தான்செவ்வையாயிருந்துகொண்டு எல்லா வறங்களையும் செய்ய வேண்டுதலின் தன்னைக்காப்பாற்றுதலும் அறமாயிற்று. இவ்வைந்துவகையுந் தருமஞ்செய்தற்கு இடங்களாகையால் ஐம்புலமென்றார், இவ்வைந்திடங்களும் ஐந்துபங்குவேண்டுதலால்அரசனுக்குஆறில்ஒருபங்காயிற்று.

பழியஞ்சிப் பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை...... ✲
வழியெஞ்சலெஞ்ஞான்றுமில்.......... ..... ......... ✲

(இ-ள்) (பொருள்சம்பாதிக்கும்போது)—பழி-பாவத்துக்கு-அஞ்சி பயப்பட்டுச் (சம்பாதித்து)பாத்து- (அப்பொருளை முன்சொல்லப்பட்ட பதின்மர்களுக்கும்) பங்கிட்டு—ஊண்-(தான்) உண்ணுதலை-வாழ்க்கை-(ஒருவனது) இல்வாழ்க்கையானது — உடைத்தாயின் - உடையதானால்-வழி -(அவனது) சந்ததியானது - எஞ்சல் - குறைதல்-எஞ்ஞான்றும் - எந்நாளும்-இல்-இல்லை.எ,று.) (கருத்து)பாவத்திற்குப்பயந்து பொருளைத்தேடிப் பங்கிட்டுண்ணுமொருவன் சந்ததியானது குறைதலில்லை என்பதாம். ✲ பாவத்தால்வந்த பிறன் பொருளைப் பங்கிட்டுண்டால் அறமானது ,பொருளுடையானையும், பாவமானது தன்னையும், அடைந்து சந்ததி அழியுமாதலால் பழியஞ்சியென்றார், வாழ்பவனது உடைமை வாழ்க்கைமேல் ஏற்றப்பட்டது. (ச)

அன்புமறனு முடைத்தாயினில்வாழ்க்கை.... ....... ✲
பண்பும்பயனுமது ...... ........ ..... ......... ..... ✲

(இ-ள்) இல்வாழ்க்கை- (ஒருவனது)இல்வாழ்க்கை யானது- அன்பும்-(தன்மனையாளிடத்துச்செய்யத்தகு மன்பினையும்) அறனும் (பிறர்க்குப்பகுத்துண்ணுதலாகிய) அறத்தினையும் உடைத்தாயின். உடைத்தானால்-அது அவ்வுடைமையானது- (அவ்வில்வாழ்க்கைக்கு)-பண்பும்-குணமும் பயனும்-பிரயோசனமும்ஆம். எ,று. (கருத்து) ஒருவனில்வாழ்க்கை அன்பையு மறத்தையு முடைத்தானால் அவ்வுடைமையானது குணமும் பிரயோசனமுமாம் என்பதாம்- ✲ மனையாளுக்கும் கணவனுக்கும் மனவொருமையில்லாதபோது இல்லறம் முடிவுபெறாதாகையால் அன்புடைமை பண்பும் அறமுடை

ஷமையனும், ஆயின. அன்பையும், அறனையும், முன்வைத்த ஒழுங்கின்படி அவற்றோடு சம்பந்தமுள்ள பண்பையும், பயனையும், வைத்தலால் நிரனிறையணி. [இவைமூன்றுபாட்டாலும் இல்வாழ்வோன் அறஞ்செய்யுமாறுசொல்லப்பட்டது.] (௫)

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற் ❋
போஒய்ப்பெறுவதெவன் ........................ .... ❋

(இ-ள்) (ஒருவன்) இல்வாழ்க்கை-இல்வாழ்க்கையை--அறத்தாற்றின்-தருமத்தின்வழியில் - ஆற்றின்-செலுத்துவானாயின்-புறத்தாற்றில்-(அவன் அதற்குப் புறமாகியவழியிலே—போஒய்-சென்று-பெறுவது-பெறும்பயன்-எவன்-யாது-(எ-று) (கருத்து) ஒருவன் இல்வாழ்க்கையைத்தருமவழியாகநடத்துவானாகில் துறவறத்திற்போய்ப்பெறும்பயன் என்னைஎன்பதாம் ❋ தருமத்தின்வழி-பழியஞ்சிப்பகுத்துண்ணுதலும் அன்புடைமையுமென முன்சொல்லப்பட்டவழியாம், புறத்தாறு-மனையைவிட்டு வனத்திலேசெல்லுநிலை, அந்நிலைதரும்பயனை இதுதருமென்னும் பொருள்தோன்றற்குப் போய்ப்பெறுவதெவனென்றார் (௬)

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான் ...... ❋
முயல்வாரு ளெல்லாந் தலை ...... ..... . .. ........... ❋

(இ-ள்) இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையிலேநின்று - இயல்பினான் (அதற்குரிய)வியல்போடுகூடி-வாழ்பவனென்பான்-வாழ்பவனென்றுசொல்லப்படுவோன்-முயல்வாருளெல்லாம்-(ஐம்புலன்களைவிட்டு முயற்சிசெய்வாரெல்லாருள்ளும்-தலை-மேற்பட்டவனாவான் (எ-று) (கருத்து) தருமவியல்போடு இல்லறத்தில்வாழ்பவன் தவஞ்செய்வோரெல்லாருள்ளுந்தலையாவான் என்பதாம் ❋ முற்றத்துறந்தவராகிய சந்நியாசிகள் ஐம்புலன்களைவிட்டமையால், முயல்வாரென்றது-வனத்திலே தவஞ்செய்வோராகியவானப்பிரஸ்தரை, இல்வாழ்வோன் அம்முயற்சிசெய்யாமலேபயனைப்பெறுதலினாலே தலையென்றார்

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை....... ❋
நோற்பாரி னோன்மையுடைத்து ...... ............ .❋

(இ-ள்) (தவஞ்செய்வோரையும்) ஆற்றின்- (தமது) வழியிலே-ஒழுக்கி-நடத்தி-அறன்-(தானுந்தன்)னறத்தினின்றும்- இழுக்கா-தவறாத-இல்வாழ்க்கை-இல்வாழ்க்கையானது-நோற்பாரின் - அத்தவஞ்செய்வாரது நிலையினும்- நோன்மை-பொறுமையை—உடைத்

து-உடையதாம்.எ-று.)(கருத்து.) தவத்தோரைத்தவவழியினடக்கச் செய்து தானுந் தன்னில்லறத்தினின்று தவறாதவாழ்க்கையானது தவஞ்செய்வோர் நிலையினும் பொறுமையுடையது என்பதாம். ※ பசிமுதலான இடையூறு தீர்த்தலால்ஆற்றினொழுக்கியென்றார் நோற்பாரென்பது அவரது நிலையை உணர்த்தலால் ஆகுபெயர். தவஞ்செய்வோரது நிலை அவருக்குவந்தநோயை அல்லது இல்வாழ்வானது நிலைபோல் பிறருக்குவந்த நோயையும் பொறுத்தலில்லாமையால்நோற்பாரி னோன்மையுடைத்தென்றார். (௮)

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும் .... ※
பிறன்பழிப்ப தில்லாயி னன்று ..................... ※

(இ-ள்) இருவகையறங்களுள்)-அறனெனப்பட்டது-(நூல்களால்) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது -இல்வாழ்க்கை-இல்வாழ்க்கையே.(மற்றைத்துறவறமோ வென்றால்-அஃதும்- அதுவும் பிறன்பழிப்பது-பிறனாற்பழிக்கப்படுவதை இல்லாயின்- இல்லாதிருந்தால்நன்று-(அவ்வில்வாழ்க்கையோடொருதன்மைபதாக) நன்றாம்- எ-று.(கருத்து)அறனென்று சொல்லப்பட்டது இல்வாழ்க்கையாகும் துறவறமும்பிறனாற்பழிக்கப்படுவ தில்லாதிருந்தால்நல்லது என்பதாம்.※ ஏகாரத்தினாலே இல்லறத்தினின்றும்பிரிக்கப்பட்டதுறவறத்தை அஃதென்பது சுட்டிநின்றது. பிறன்பழிப்பதென்றது கூடாவொழுக்கத்தை. துறவறத்தில்மனத்தையும் பொறிகளையும் அடக்கவேண்டிய வருத்தம் உண்டாயிருத்தலால் அது நிறைவேறுவது அரிது,இல்லறத்திலே அவ்வருத்தம் இல்லாமையால் இது நிறைவேறுவது எளிது,ஆகலால் அப்படிப்பட்டதுறவறம் பழுதுபடாமல் நடந்துவரும்போது இல்லறத்தோடு சேர்த்து எண்ணப்படுவதாயிற்று,[இவைநான்குபாட்டாலும் இல்லறமே பயனுடையதென்று அதன்சிறப்புச்சொல்லப்பட்டது.] (௯)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்※
தெய்வத்துள் வைக்கப் படும் ....... .........※

(இ-ள்) வாழ்வாங்கு-இல்லறத்தோடுகூடி வாழுமியல்பினால்-வையத்தின்-மண்ணுலகத்துள்- வாழ்பவன்-வாழ்பவன் (மண்ணுலகத்தானேயாயினும்)வானுறையும்-விண்ணுலகத்திலிருக்கின்ற தெய்வத்துள் -தேவருள்-வைக்கப்படும்-(ஒருவனாக)வைத்து நன்குமதிக்கப்படுவான்.எ-று,(கருத்து) இல்லறத்துவழுவாதுவாழ்பவன்தெய்வத்துளொருவனாகமதிக்கப்படுவான் என்பதாம். ※ பின்னேதேவனாய்ப்பிறந்

து அவ்வறப்பயனை அநுபவித்தல் நிச்சயமாயிருக்கையால் தெய்வ த்துள் வைக்கப்படுமென்றார். [இதனால் இல்லறத்தின் மறுமைப்பய ன் சொல்லப்பட்டது.] இம்மைப்பயன் புகழ். அதை இறுதியிலே சொல்லுகிறார். (ய)

## சு-ஆம்-அதி-வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது-அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம். இதனாலேயே அதிகார முறைமையும் விளங்கும்

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்... *
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை ....................... *

(இ-ள்) மனைத்தக்க-இல்லறத்துக்குத்தக்க-மாண்புடையளாகி- நற்குண நற்செய்கைகளை யுடையவளாகி- தற்கொண்டான் - தன்னைக் கொண்டவனது-வளத்தக்காள் வாழ்க்கை- வரவுக்குத்தகுந்த வாழ்க்கையுடையவள்-துணை-(அவ்வில்லறத்துக்குத்) துணையாவாள்-எ,று-) (கருத்து) இல்லறத்திற்குத்தக்க நற்குண- நற்செய்கையுடையவளாகித் தன்னைக்கொண்ட கணவன்-வரவுக்குத்தக்க செலவுசெய்பவள் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள் என்பதாம். ※நற்குணங்களாவன- துறந்தவரையுபசரித்தலும், வறியவரிடத்தே யருளுடைமையும், முதலானவையாம், நற்செய்கைகளாவன-வாழ்க்கைக்கு வேண்டும்பொருள்களறிந்து காப்பாற்றிவைத்தலும், உண்டிசமைத்தல் வல்லமையும், உபகாரஞ்செய்தலும், முதலானவையாம், வருவாய்க்குத் தக்கவாழ்க்கையாவது-முதலுக்குத்தக்கபடிசெலவுசெய்தல், [இதனால் இவ்விரண்டு நன்மைகளும் சிறந்தனவென்பது சொல்லப்பட்டது] (க)

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை...... *
யெனைமாட்சித் தாயினு மில். .. ......... ................*

(இ-ள்)மனைமாட்சி- இல்லறத்துக்குத்தகுந்த நற்குண நற்செய்கைகள்-இல்லாள்கண்-(ஒருவனது) மனையாளிடத்தே-இல்லாயின்-இல்லையாயின் -வாழ்க்கை- அவ்வில்வாழ்க்கையானது-எனைமாட்சித்தாயினும்-(செல்வத்தால்) எவ்வளவுபெருமையை உடையதாயினும்-இல்-அப்பெருமையை உடையதன்று. (எ-று) (கருத்து) இல்லறத்திற்குத்தகுந்தநற்குண நற்செய்கை மனையவளிடத் தில்லாதாயின் அவ்வில்வாழ்க்கைஎவ்வளவு சிறப்புடைத்தாயினும் பயனில்லை என்பதாம். ※ பயன்படாமையால் இல்லையென்றார். (உ)

இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ..... .....*
னில்லவண் மாணாக்கடை........ .... ............ ....*

(இ-ள்) (ஒருவனுக்கு) -இல்லவள்-மனையாள்-மாண்பானால்-நற்குணநற்செய்கையுள்ளவளாயிருந்தால்-இல்லது-இல்லாதது என்-யாது,-இல்லவள்-அம்மனையாள்-மாணாக்கடை-அப்படிப்பட்டவளாகாதிருந்தால்-உள்ளது-உள்ளது என்-யாது. (எ-று) (கருத்து) மனையவள் நற்குணநற்செய்கை யுடையவளாகில் இல்லாதது யாது அம்மனைவி நற்குண நற்செய்கை யில்லாதவளாகில் உள்ளது யாது என்பதாம். ☼ மாண் என்பதுங் குணப்பெயர் இங்கே அதனை உடையவளுக்கு ஆயிற்று. [இவ்விரண்டு பாட்டாலும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது மனையாளது நற்குணநற்செய்கையே மற்றவையல்லவென்பது சொல்லப்பட்டது. (௫)

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்.....*
திண்மையுண் டாகப் பெறின் ........ ........ .....*

(இ-ள்) கற்பென்னுந்திண்மை-கற்பென்னுங்கலங்காநிலைமை—உண்டாகப்பெறின்- உண்டாயிருக்கப்பெற்றால்-(ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள்)-பெண்ணின்-மனையாளினும்-பெருந்தக்க உயர்வாகிய பொருள்கள்-யா-எவை-உள-இருக்கின்றன. எ-று)(கருத்து) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் கற்பையுடையமனைவியைப்பார்க்கிலும் எவையிருக்கின்றன என்பதாம். ☼ கற்புடையாள்போல் அறமுதலாகிய மூன்றுக்கும் ஏதுவாம்பொருள்கள்வேறில்லாமையால் -யாவுளவென்றார். [இதனால் கற்புநலத்தது சிறப்புச் சொல்லப்பட்டது.

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்*
பெய்யெனப் பெய்யு மழை ........... ... ....... .. *

(இ-ள்) தெய்வம்-(பிற) தெய்வத்தை-தொழாள் -வணங்காளாகி-கொழுநன் -(தனது தெய்வமாகிய) கணவனை-தொழுது-வணங்கிநின்று-எழுவாள்-(நித்திரைவிட்) டெழுந்திருப்பவள்-பெய்யென -பெய்யென்றுசொல்ல-மழை மழையானது-பெய்யும்-பொழியும்-(எ-று.) (கருத்து) பிறதெய்வத்தை வணங்காளாகிக் கணவனைத்தொழுதெழுபவள் பெய்யென்றுசொல்ல மழைபெய்யும் என்பதாம். ☼ தெய்வந்தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங் காலத்தாகலின்-தொழுதெழுவாளென்றார். தொழாஅளென்பது -தொழுதென்

த்திரிந்து நின்றது. தெய்வமும் ஏவல்செய்யுமென்பதாம். [இதனு
ல்கற்புடையவளது வல்லமை சொல்லப் பட்டது. (௫)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற *
சொற்காத்துச் சோர்விலாள் பெண் .................. *

(இ-ள்) தற்காத்து-(கற்பினின்றும்வழுவாமல்) தன்னைக்காப்பாற்
றிக்கொண்டு-தற்கொண்டாற்பேணி -தன்னைக்கொண்டவனையும்-(உ
ண்டிமுதலானவற்றால்) உபசரித்து -தகைசான்ற- (தம்மிருவரிடத்
தும்) நன்மையமைந்த சொற்காத்து-புகழை (நீங்காமற்) காப்பாற்
றி சோர்விலாள்- (முன்சொல்லப்பட்ட நற்குணநற்செய்கைகளிலு
ம்) மறவியில்லாதவளே -பெண்-பெண்ணாவாள் (எ-று) (கருத்து)க
ற்பிலிருந்துதன்னைக்காத்துத் தன்கணவனைக் காப்பாற்றிநற்குணந
ற்செய்கைகளைமறவாதவளே மனையவள் என்பதாம். ✿ தன்னிடத்
துப்புகழாவது - ஊரார் கற்பினாலே தன்னைப்புகழ்வது. [இதனால் த
ன்னைப் புகழ்தற் சிறப்புச்சொல்லப்பட்டது. (௬)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர் .............. *
நிறைகாக்குங் காப்பே தலை .............................. *

(இ-ள்) மகளிர்-பெண்டிரை-சிறை சிறையினாலே-காக்கும்- (தலை
வர்) காக்கும்-காப்பு-காவலானது எவன்- என்னபிரயோசனத்தைச்
செய்யும்-செய்யும் நிறை- (தமது) நிறையால்-காக்கும்- (அவர்)கா
க்கும்-காப்பே-காவலே-தலை முதன்மையானகாவல். (எ-று) (கருத்
து) கணவர்வைத்தகாவலென்செயும் பெண்கள்கற்பால்தங்களைக்கா
த்துக்கொள்ளுங்காவலே தலைமையானகாவல் என்பதாம். ✿ சிறை-
யதிற்காவல் வாயிற் காவல்முதலானவை நிறை-மனதைக் கற்பின்வ
ழியிலே நிறுத்தல் காவலிரண்டிலும் நிறைக்காவல் இல்லாதவிடத்
துச் சிறைக்காவலாலே பயன் இல்லை என்றதற்கு நிறைகாக்குங் கா
ப்பே தலையென்றார். [இதனால் தன்னைக் காத்தலினது சிறப்புச்சொ
ல்லப்பட்டது. (எ)

பெற்றாற்பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப் புப் *
புத்தேளிர் வாழு முலகு ............................ *

(இ-ள்.) பெண்டிர்-மகளிர்- பெற்றார்- (தம்மைக்) -கொண்டகண
வனை-பெறின்-(பூசித்தல்)பெறுவராயின் புத்தேளிர் -தேவர்- வாழு
ம்-வாழ்தற்கிடமாகிய-உலகு -உலகத்தில்- பெருஞ்சிறப்பு- (அவரால்

செய்யப்படும்) பெரியசிறப்பினை- பெறுவர்- அடைவர். எ,று.)(கருத்து) பெண்கள் கணவனை வணங்கப்பெற்றால் தேவரால் சுவர்க்கத்தில்வணங்கப்படும் பெருஞ்சிறப்படைவர் என்பதாம் ※ பூசித்தல் வருவிசக்ப்படுதலால் சொல்லெச்சம். [இதனால்தம்மைக்கொண்டவனைப்பூசித்தபெண்டிர் தேவர்களாலே பூசிக்கப்படுவரென்பதுசொல்லப்பட்டது.] (௮)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன் ........ *
னேறுபோற் பீடு நடை ............ ............ .... *

(இ-ள்.)புகழ் கீர்த்தியை- புரிந்த- விரும்பிய- இல்- மனையாளை— இலோர்க்கு- இல்லாதவர்க்கு- இகழ்வார்முன்-(தம்மை) யிகழ்ந்து பேசும் பகைவர்முன்- ஏறுபோல்-ஆண்சிங்கம்போலும்- பீடுநடை பெருமிதநடை - இல்லை- இல்லை. எ,று.) (கருத்து)கற்பெண்ணுங்கீர்த்தியை விரும்பியமனையவளில்லாதவர்க்குத் தமது பகைவர்முன்சிங்கம்போலும் பெருமிதநடையில்லை என்பதாம். ※ புரிந்தவென்பதனீறு விகாரத்தால்தொக்கது . பெருமிதநடையானுக்குச் சிங்கவேறுநடையினால் உபமானமாதலால்ஏறுபோலென்றார். [இதனால் புகழைக் காப்பாற்றாத விடத்தே உண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத ... .... ........... *
னன்கல னன்மக்கட் பேறு ............................. *

(இ-ள்.)(அறிந்தோர்) -மனை - மனையாளது - மாட்சி-நற்குணநற்செய்கைகளை-மங்கலம்-(ஒருவனுக்கு) நன்மையாம் - என்ப என்று சொல்லுவார் - நன்மக்கட்பேறு- நல்லபுதல்வனைப்பெறுதலை- அதன் - அதற்கு-நன்கலன்- நல்லவாபரணம்- (என்ப)-என்றுசொல்லுவார்-எ,று.)(கருத்து) மனையவள்நற்குணநற்செய்கைகளை யொருவனுக்குநன்மையென்றும் நல்லபுத்திரனைப்பெறுதலை அந்நன்மைக்காபரணமென்றுஞ் சொல்லுவர் என்பதாம். ※ அறிந்தோரென்பது வருவிக்கப்பட்டது. மற்று -அசை. [இதனால் வாழ்க்கைத்துணைக்காவதோரணிகலஞ்சொல்லி அதனால்பின்வருவதாகிய அதிகாரத்துக்குத்தோற்றுவாய் செய்யப்பட்டது.] (௰)






## எ-ஆம்-அதி-புதல்வரைப்பெறுதல்.



அஃதாவது முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும், தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலாலும், அல்லது செலுத்தக்கூடாமைபால் - அக்கடன் செலுத்தற்பொருட்டு நல்லமக்களைப் பெறுதலாம். அதிகாரமுறைமை முன்பெறப்பட்டது.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த....... *
மக்கட்பே றல்ல பிற..... .................. ... ..... ..*

(இ-ள்.) பெறுமவற்றுள்-(ஒருவன்) பெறும் பேறுகளுள்- அறிவறிந்த-அறியவேண்டுமவைகளை அறிதற்குரிய- மக்கட்பேறல்ல-புதல்வரைப் பெறுதலையல்லது - பிற - மற்றைப்பேறுகளை- யாம் - நாம் அறிவதில்லை - மதிப்பதில்லை. எ,று.) (கருத்து) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் அறியவேண்டியவைகளையறிந்த மக்கட்பேற்றையல்லது பிறபேற்றையாமதிக்கவேண்டியதில்லை. என்பதாம். ❊ அறிதற்குக் காரணமாகிய வரிமை அவ்வறிதலை உண்டாக்கியேவிடுமாதலின் அத்துணிவுபற்றி அறிந்தவென இறந்தகாலத்தாற்சொல்லினார். அறிவறிந்தவென்றதனால்மக்களென்னும் பெயர்பெண்பாலை ஒழித்துநின்றது (இதனாலே புதல்வரைப்பெறுதலினதுசிறப்புச்சொல்லப்பட்டது.

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப் ....... *
பண்புடை மக்கட் பெறின்...... ...... ..... .............. *

(இ-ள்.) பழிபிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத- பண்புடை - நற்குணங்களையுடைய- மக்கட்பெறின்- புதல்வரைப்பெறுவாராயின்- எழுபிறப்பும் - (வினைவசத்தினாலே யுண்டாகிற) எழுவகைப்பட்டபிறப்பிலும்- தீயவை-துன்பங்கள்- தீண்டா (சென்று ஒருவனை)யடையாவாம். எ,று.) (கருத்து) பழிக்கப்படாத நற்குணமுடையபுதல்வரைப் பெறுவாராயின் எழுவகைப்பிறப்பிலுந் துன்பங்களணுகா என்பதாம். ❊ தந்தை தாய்களது தீவினை சேய்சற் பொருட் அவரைக்குறித்துப்புதல்வராலே செய்யப்படும் தானதருமங் களுக்கு அவரதுநற்குணம் காரணமாகலின் பண்புடைமக்களென்றார். எழுபிறப்புமேழுதலைமுறையுமாம். எழுபிறப்பாவன-தேவர்-மனிதர் விலங்கு பறவை-ஊர்வன-நீர்வாழ்வன-தாவரம்-என்பனவாம். (உ)

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு............. *
டந்தம் வினையான் வரும் ....................................... *

(இ-ள்) தம்மக்கள்- தம்முடையபுதல்வனை- தம்பொருள்-தம்முடையபொருள்கள்-என்ப-என்றுசொல்லுவார். (அறிந்தோர்)-அவர் பொருள்-அப்புதல்வர் சம்பாதித்தபொருள்கள் - தந்தம்வினையான் தம்மைக்குறித்து அவர்செய்யும்நல்வினையினாலே-வரும்- தம்மிடத்து)வரும். (ஆதலால்)எ,று.) (கருத்து)தம்புதல்வனைத் தம்பொருளென்றுசொல்லுவர்(ஏனெனில்)பிள்ளைதேடியபொருள் பிதாவிற்கு வருமாகையால்என்பதாம். ❊பொருள்சம்பாதித்த புதல்வனைப்பொருளென வுபசரித்தார்.[இவைஇரண்டுபாட்டாலும் நல்லபுதல்வனைப்பெற்றோர்அடையும் மறுமைப்பயன் சொல்லப்பட்டது. (௫)

அமிழ்தினு மாற்றவினிதேதம்மக்கள் .... .......... ❊
சிறுகையளாவியகூழ் .... ..... ........... ..... ........ ❊

(இ-ள்) தம்மக்கள்-தம்முடையமக்களது-சிறுகை-சிறியகைகளால் அளாவிய-அளையப்பட்ட-கூழ்-சோறானது-அமிழ்தினும்-(சுவையினாலேமிகுந்த) அமிர்தத்தினும்—ஆற்றவினிது - மிகவுமினிமையையுடைத்தாயிருக்கும். எ,று.) (கருத்து) தம்மக்கள் சிறுகையாலளாவிய சோறானது அமிர்தத்தினு மிகவினிய தாம் என்பதாம். ❊சிறுகையளாவல் - தாய்தந்தையரோடு உட னிருந்து உண்ணும் போதுசோற்றைத்துழாவுகை முதலாயின.] (௬)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்..... ....... ❊
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு ............ ........ ❊

(இ-ள்.) உடற்கு (ஒருவனது) உடம்புக்கு-இன்பம் - இன்பமாவது - மக்கள்-மக்களது-மெய்-உடம்பை- தீண்டல்- தொடுதல்-செவிக்கு-(அவனது) காதுக்கு-இன்பம்-இன்பமாவது -அவர்- அவரது-சொல-சொற்களை - கேட்டல்-கேட்குதல். எ-று.)(கருத்து)மக்களுடலைத்தொடுதல் உடற்கின்பம் அவர்சொற்களைக் கேட்டல் செவிக்கின்பம் என்பதாம். ❊ மற்று-அசைநிலை. பிள்ளைகளது மழலைச்சொல்லேயன்றி அவர் கற்றறிந்து பேசுஞ் சொல்லும் இன்பமாகலின்-அவையிரண்டுக்கும் பொதுப்படச்சொல்லென்றார். தீண்டல் கேட்டல்களினால் உண்டாகும் இன்பங்களைத் தீண்டல் கேட்டலெனலால்ஆகுபெயர்கள்.] (௭)

குழலினி தியாழினிதென்பதம்மக்கள் ............... ❊
மழலைச் சொற் கேளாதவர் ......... ..... .......... .... ❊

(இ-ள்) தம்மக்கள் - தம்முடையபுதல்வரது -மழலைச்சொல்-குதலைச்சொற்களை-கேளாதவர் - கேட்காதவர்-குழல்-குழலினிசை-இனி

து-இனியது - யாழ்-வீணையினிசை - இனிது-இனியது- என்ப-என்றுசொலலுவார். எ,று.) (கருத்து) தம்மக்கள்மழலைச் சொற்களைக் கேளாதவர்கள் புள்ளங்குழலிசையினிதென்றும் வீணையிசையினிதென்றுஞ்சொல்லுவர் என்பதாம். ☼ குழல்-யாழ்- அவற்றினிசையைக்காட்டுதலால் ஆகுபெயர்கள். கேட்டவர் அவற்றினும்மழலைச்சொல் இனிதென்று சொல்லுவாரென்றதாயிற்று. இனிமைமிகுதியுற்றி மழலைச்சொல்லைச் சிறப்பு வகையாற்சொல்லினர். [இவைமூன்றுபாட்டாலும் இம்மைப்பயன்சொல்லப்பட்டது.] (௬)

தந்தைமகற்காற்று நன்றியவைபத்து .... ..... ... .. *
முந்தி யிருப்பச் செயல்.................................. *

(இ-ள்.) தந்தை-தகப்பனானவன் - மகற்கு-புதல்வனுக்கு- ஆற்றும்-செய்யத்தகும்-நன்றி-நன்மையாவது- அவையத்து- கற்றவரதுசபையினிடத்து-முந்தியிருப்ப- (அவரினு) மேற்பட்டிருக்க- செயல்-கல்வியையுடையவனாக்குதலாம். எ,று.) (கருத்து) பிதாபிள்ளைக்குச்செய்யும் உதவியானது சபையில்கல்வியில் வல்லவனென முற்பட்டிருக்கச்செயல் என்பதாம்- ☼பொருளுடையவனுக்கல்முதலானவை பின்னே துன்பத்தைத்தரினுந் தருய் ஆதலால்அவைநன்மையாகாவென்பது கருத்து [இதனால் தந்தை கடன் சொல்லப்பட்டது.] (௭)

தம்மிற்றம் மக்களறிவுடைமை மாநிலத்து...... ... *
மன்னுயிர்க் கெல்லா மினிது •••......... ......... *

(இ-ள்.) தம்மக்கள்-தம்மக்கள் - அறிவுடைமை- அறிவுடையராயிருக்கையானது-மாநிலத்து- பெரியநிலத்தில் - மன்-நிலைபெற்ற- உயிர்க்கெல்லாம் - உயிர்களுக்கெல்லாம் - தம்மின்-தமினும்- இனியதாதலின்)-இனிது - இனிதாயிருக்கும். எ,று.) (கருத்து) தம்மக்களறிவுடைமையானது தம்மைவிட உலகத் துயிர்களுக்கெல்லாமினிதாயிருக்கும் என்பதாம். ☼ இங்கேஅறிவென்றது இயற்கையறிவோடுகூடிய கல்வியறிவை அறிவுடைமை கண்டுமகிழ்தற்குரியவர் அறிவுடையோராதலால் இங்கே மன்னுயிரென்றது அவர்மேல்நின்றது [இதனால் தந்தையினும் உலகத்தார் மகிழ்வரென்பது சொல்லப்பட்டது.] (அ)

ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்..... .... *
சான்றோ னெனக்கேட்ட தாய் ................... ........ *

(இ-ள்.) தன்மகனை-தன்புத்திரனை - சான்றோனென- (கல்விகேள்விகளினாலே) நிறைந்தோனென்று (அறிவுடையோர்) சொல்ல கேட்டதாய் - கேட்டதாயானவள் — ஈன்றபொழுதின் - பெற்ற காலத்தினும் பெரிதுவக்கும் - மிகமகிழ்வாள். எ,று.) (கருத்து தன்மகனைக்கல்வியில் வல்லவனெனக் கேட்டதாயானவள் பெற்றகாலத்தினும் பெருமகிழ்ச்சி யடைவாள் என்பதாம். ❁ மடியின்மேலேகண்டதனால் உண்டாகியபொதுவான மகிழ்ச்சியினும் நிறைந்தகல்விகேள்விகளை யுடையவனெனக் கேட்டதனாலுண்டாகிற சிறப்பானமகிழ்ச்சி பெரிதாகலின்பெரிதுவக்குமென்றும்,பெண்மைக்குணத்தினால் தானாக அறியமாட்டாமையால் கேட்டதாயெனவும், சொல்லினார். அறிவுடையோரென்பது வருவிக்கப்பட்டது - சான்றோனென்று அறிந்து சொல்லுதற்கு உரியவர்அவராகையால்.[தாய்மகிழ்ச்சிக்கு அளவில்லாமையால் அது இதனால் வேறெடுத்துச்சொல்லப்பட்டது.] (௯)

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை ..... .....❋
யென்னோற்றான் கொல்லெனுஞ்சொல் ... ........❋

(இ-ள்,) தந்தைக்கு-(தன்னைக்கல்வியுடையவனாக்கிய) தகப்பனுக்கு—மகன்-புத்திரன் - ஆற்றும்-செய்யும் - உதவி-எதிர்நன்றியானது-(தன்னறிவையும் ஒழுக்கத்தையுங்கண்டவர்)—இவன்- இவனது-தந்தை-தகப்பன்-(இவனைப்பெறுதற்கு)என்-என்னதவத்தை-நோற்றான்கொல் - செய்தானோ-என்னும்-என்கிற — சொல்-சொல்லை-(உண்டாக்குதலாம்-) எ,று,) (கருத்து) பிள்ளை பிதாவுக்குச்செய்யுமுதவியாவது இவன்பிதா இவனைப்பெறுதற் கென்ன தவஞ்செய்தானோவென்று பிறர்சொல்லுஞ்சொல்லை யுண்டாக்கல்என்பதாம், ❁ சொல்லென்பது உண்டாக்குதலாகிய தன்காரணத்தைக் குறித்துநின்றது. உண்டாக்குதல்-அப்படிச்சொல்ல நடத்தல்[இதனை புதல்வனது கடன்சொல்லப்பட்டது-] (௰)

## அ-ஆம் அதி; அன்புடைமை.



அஃதாவது-அம்மனைவி புதல்வர் முதலாகிய சம்பந்தமுடையவரிடத்து ஆசையுடையனாயிருக்கை, அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்; இல்லறமினிது நடத்தலும்பிறவுயிர்களி

இம்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயனாதலால் இதுமுன்வைக்கப்பட்டது-

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர் ....✲
புன்கணீர் பூச றரும்.. ......................................✲

(இ-ள்-) அன்பிற்கும் - அன்பினுக்கும்-அடைக்கும் -(பிறரறியாமல் அடைத்துவைக்கும் - தாழ்-தாழுமே—உண்டோ-உண்டோ(தம்மால் அன்புசெய்யப்பெற்றவரது துன்பங்கண்டவிடத்தே பொழிகின்ற)—ஆர்வலர் - அன்புடையாரது-புன்கணீர் - புல்லிய கண்ணீரே-பூசறரும்- (உள்ளேயிருக்கின்றஅன்பினை) எல்லாரும் அறியத் (தூற்றும்) (ஆதலால், எ,று-) (கருத்து) அன்புகொள்ளப்பட்டவரது துன்பங்கண்டபோதே அன்புடையவர் கண்ணீரே உள்ளிருந்தவன்பைக்காட்டும் என்பதாம்- ✲ உம்மை அன்பைச் சிறப்பித்துநின்றது. காட்சியளவையால் அறியப்படாதாயினும் அநுமானவளவையால் வெளிப்படுமென்பதாம். [இதனால் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது.] (௧)

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா.........✲
ரென்பு முரியர்பிறர்க்கு.... ...............................✲

(இ-ள்.) அன்பிலார்- அன்பில்லாதவர்- பிறர்க்குப் பயன்படாமையால்- எல்லாம்- எல்லாப்பொருள்களாலும்- தமக்கு- தமக்கே உரியர்-உரியவராவார்-.—அன்புடையார் - அன்புடையவர் - (அவைகளோலேமாத்திரமல்லாமல்) என்பும்- (தம்)முடம்பாலும்- பிறர்க்கு-பிறருக்கு- உரியர்-உரியவராவார். எ,று.) கருத்து) அன்பில்லாதவர்எல்லாப்பொருளையுந் தமக்கே யுரியவராவர். அன்புடையவர் பிறர்க்கு எலும்பையுங் கொடுக்க வுரியராவர் என்பதாம். ✲ தமக்கேயென்ற பிரிநிலை யேகாரம் வருவிக்கப்பட்டது. என்பு - உடம்பிற்காதலால் ஆகுபெயர். என்புமுரியராகுதற்கு புறவுக்காகத் தலையேறியசிபியும் தன்முதுகெலும்பை இந்திரனுக்குக்கொடுத்த ததீசியுமுதலாயினோரிடத்தேகாண்க.] (௨)

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்.........✲
கென்போ டியைந்த தொடர்பு ..............................✲

(இ-ள்.) ஆருயிர்க்கு - பெறுதற்கரியமனிதருயிர்க்கு - என்போடு உடம்போடு- இயைந்த- உண்டாகிய- தொடர்பு- சம்பந்தத்தை- அன்போடு-அன்போடு-இயைந்த - பொருந்துதற்குவந்த -வழக்கு-வழியின்-பயனாகும்- என்ப-என்று- (அறிந்தோர் )சொல்லுவர் .எ,று.)

(கருத்து)மக்களுமிருக்குடலோடுண்டாகியசம்பந்தத்தைஅன்போ
டுபொருந்தவந்த பயனென்பர் என்பதாம். ※ மனிதப்பிறப்பினரு
மை அதனையடைந்த உயிர்களின்மேல் ஏற்றப்பட்டது. வழக்கென்
பது அதன்பயனை யுணர்த்தலால் ஆகுபெயர். உடம்போடுகூடியல்
லாமல் அன்புசெய்யக்கூடாமையால் அது செய்தற்பொருட்டு இத்
தொடர்ச்சி யுண்டாயிற்றென்பதாம் ஆகவே இத்தொடர்ச்சிக்குப்
பயன் அன்புடைமையென்றாயிற்று.] (௩)

அன்பீனு மார்வ முடைமையது வீனு .............. *
நண்பென்னு நாடாச் சிறப்பு ........................ *

(இ-ள்.)அன்பு-(சம்பந்த முடையவரிடத்தே செய்யப்பட்ட)அ
ன்பானது -(அத்தன்மையினாலே) -ஆர்வமுடைமை-(பிறரிடத்தே)
ஆசையையுடையவனா யிருக்கையை— ஈனும் -(ஒருவனுக்குத்)தரு
ம்.—அது- அவ்விருக்கையானது- நண்பென்னும்- (இவனுக்குயாவ
ரும் நட்பினையொன்று சொல்லப்படுகிற- நாடாச்சிறப்பு. அளவிறந்
த சிறப்பை—ஈனும்- தரும்.எ,று.) (கருத்து) அன்பானது ஆசை
யைத்தரும், அதுசிநேகத்தையுந்தரும் என்பதாம். ※ எல்லாருந
ட்பினராதல் எல்லாப்பொருளையும் அடைதற்குக் காரணமாதலின்
அதனை நாடாச்சிறப்பென்றார்.] (௪)

அன்புற்றமர்ந்த வழக்கென்ப வையகத் .............. *
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு ............................ *

(இ-ள்) வையகத்து-இவ்வுலகத்தில் இன்புற்றார்- (இல்வாழ்க்கையி
லேநின்று) இன்பத்தை யநுபவித்தவராகி - எய்தும் - (அதன்பின்
னேவிண்ணுலகத்திற்சென்று) அடையும்-சிறப்பு -பேரின்பத்தினை
அன்பு-அன்பை-உற்று -உடையவராகி -அமர்ந்த- (இல்லறத்தோடு)
பொருந்திய-வழக்கு வழியின்பயனாம். (எ-று) (கருத்து) விண்ணு
லகத்தையும் பேரின்பத்தை மண்ணுலகில் இல்வாழ்க்கையிற்பொரு
ந்தியவன்பின்பயனென்பர் என்பதாம். ※ இல்வாழ்க்கையிலே நின்
று மனைவியோடும், மக்களோடும், சுற்றத்தோடும், கூடி இன்பமுற்
றவர் தம்மாலே செய்யப்பட்ட வேள்வித்தொழிலினாலே தேவரா
ய்ப்பிறந்து அங்கேயும் இன்பத்தை அநுபவிப்பாராகலின் இன்புற்
றாரெய்துஞ் சிறப்பென்றார். தவத்தினாலே துன்பமுற்று அடையப்
படுவதாகிய விண்ணுலகவின்பத்தை இங்கேயும் இன்பமுற்று அடை
தல் அன்பாலன்றி இல்லையென்பதாம். (௫)

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார் ................*
மறத்திற்கு மஃதே துணை ..................................*

(இ-ள்) அறியார்-அறியாதவர்-(சிலர்) —அன்பு- அன்பானது-சார்பு-துணையாவது-அறத்திற்கே-தருமத்துக்கே-என்ப -என்றுசொல்லுவார்.—மறத்திற்கும்-மறத்தை நீக்குதற்கும்—அஃதே -அவ்வன்பே-துணை-துணையாவது. (எ-று) (கருத்து) அறியாதவர்கள் அறத்திற்கேயன்பு துணையென்பர் மறத்தை நீக்குதற்கும் அவ்வன்பே துணையாம் என்பதாம். ❁ ஒருவனாலேசெய்யப்பட்ட பகைமைபற்றியுள்ளத்திலே மறந்தோன்றிய விடத்தே அவனை நட்பாக நினைத்து அவன்மேல் அன்புசெய்ய அது நீங்குமாதலின் மறத்தை நீக்குதற்குந் துணையாமென்றற்கு மறத்திற்கு மஃதே துணையென்றார். மறத்துற்கு மஃதே துணையென்றதற்குப் பெண்டிர் புதல்வர் முதலாயினோரை நல்வழிப்படுத்தும்பொருட்டு அவரைக்குறித்துச் செய்யப்படும் கோபத்துக்கும் அன்பே துணையாமெனப் பொருளுரைப்பினும் ஆம். [இவையைந்துபாட்டாலும் அன்பினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௬)

என்பி லதனை வெயிற்போலக் காயுமே.................. *
யன்பி லதனை யறம்.................................. ......... *

(இ-ள்) என்பிலதனை-எலும்பில்லாவுடம்பை-வெயிற்போல-வெயிலானதுசுடுதல்போல-அன்பிலதனை-அன்பில்லாதவுயிரை—அறம்-அறக்கடவுள்-காயும்-சுடுவான். (எ-று) (கருத்து) என்பில்லாப்புழுக்களைச் சூரியன் சுடுதல்போல அன்பில்லாவுயிர்களை யறக்கடவுள்சுடும் என்பதாம். ❁ ஏ-அசைநிலை. என்பிலதென்றதனால் உடம்பென்றும், அன்பிலதென்றதனால் உயிரென்றும், கொள்ளப்பட்டன. வெறுப்பில்லாமல் எங்கும் ஒருதன்மைத்தாகிய வெயிலின்முன்னேபுழு முதலானவைகெடுதல்போல் அப்படிப்பட்ட அறத்தின்முன்னே அன்பில்லாதவுயிர் தன்னியல்பாற்சென்று கெடுமென்பதாம். (௭)

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண் ...... *
வற்றன் மரந்தளிர்த் தற்று ...... ........................ *

(இ-ள்.) அன்பகத்தில்லாவுயிர்-மனதிலன்பில்லாதவுயிரானது- வாழ்க்கை-(இல்லறத்தோடுகூடி) வாழ்தலானது — வன்பாற்கண்-வன்பாலென்னுநிலத்திலே-வற்றல்மரம்-உலர்ந்தமரமானது - தளிர்த்தற்று-தளிர்த்தாற்போலும். (எ-று.) (கருத்து) அன்பில்லா வுயிர்வாழ்க்கையானது வன்னிலத்திற்பட்டமரந் தளிர்த்தாற்போலும் என்பதாம். ❁ கூடாதென்பதாம்-வன்பால்-கடினநிலம். (௮)

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை......*
யகத்துறுப்பன்பி லவர்க்கு.................... ..... ......... *

(இ-ள்.) யாக்கையகத்து-உடம்பினகத்திலே நின்று-உறுப்பு-(இல்லறத்துக்கு) அங்கமாகிய-அன்பிலவர்க்கு-அன்பில்லாதவர்க்கு-புறத்து மற்றைப்புறத்திலே நின்ற உறுப்பெல்லாம்-அங்கமானவெல்லாம் எவன்-(அவ்வறஞ்செய்தலிலே) என்னவுதவியைச்செய்யும்-செய்யும். எ,று (கருத்து) உள்ளன்பில்லாதார்க்குப் பிறவுறுப்புக்களிருந்தும் பயனில்லை என்பதாம். ❁ புறத்துறுப்பாவன-இடம்-பொருளேவலாதிகளாம். அன்பாகிய துணையோடு கூடாதவிடத்தே-அவைகளாற்பயனில்லாமையால் எவன்செய்யுமென்றார். உறுப்புப்போலுதலால் உறுப்பெனப்பட்டது. (௯)

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்......... ............*
கென்புதோல் போர்த்த வுடம்பு........................*

(இ-ள்.) அன்பின்வழியது-அன்புமுதலாக அதன்வழி நின்ற உடம்பே உயிர்நிலை-உயிர்நின்ற-உடம்பாகும்-அஃதிலார்க்கு-அவ்வன்பில்லாதார்க்குள்ள-உடம்பு-உடம்புகளானவை என்பு-எலும்பை-தோல்-தோலினாலே-போர்த்த-போர்க்கப்பட்டனவாம். -(உயிர்நின்றவுடம்பாகா.) எ,று.) (கருத்து) அன்பொடு பொருந்தியவுடலேயுயிருள்ளவுடலாகும் அவ்வன்பில்லாவுடலே யுயிரற்றவுடலாகும் என்பதாம். ❁ இல்லறம்பயன்படாமையால் அப்படிப்பட்ட வுடம்புகளாயின [இவை நான்குபாட்டாலும் அன்பில்லாதவிடத்தே உண்டாகுங் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௰)

## ௯-ஆம்-அதி-விருந்தோம்பல்.

அஃதாவது விருந்தினரையுபசரித்தல். தென்புலத்தார்-தெய்வம்-விருந்தினர்-சுற்றத்தார்-தான்-என்கிற ஐவகையோரை உபசரித்தலகளிலே முன்னவை இரண்டும்-கண்ணாற்காணப்படாதவரை நினைந்துச்செயப்படுவனவாதலானும், பின்னவை இரண்டும் பிறர்க்குக் கொடுத்தலல்லாமையானும், நடுநின்ற விருந்தோம்பல்சிறப்புடையதாகி அவ்வில்லறங்களுக்குமுதலாயிற்று. வேறுபாடில்லாத அன்புடையகணவனும் மனையாளுங்கூடியல்லது செய்யக்கூடாமையால் இது அன்புடைமையின் பின் வைக்கப்பட்டது.

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி.......*
வேளாண்மை செய்தற் பொருட்டு......................*

(இ-ள்.) (மனைவியோடுங்காட்டினிடத்தே செல்லாமல்)-இல்- இல்லினிடத்தே-இருந்து- இருந்து- ஓம்பி- (பொருள்களைக்)காப்பாற்றி வாழ்வதெல்லாம்-வாழுஞ்செய்கையெல்லாம்-விருந்து - விருந்தினரை-ஓம்பி-உபசரித்து வேளாண்மை-உபகாரத்தை - செய்தற்பொருட்டு (அவருக்குச்)செய்தற்பொருட்டாம்! எ,று. (கருத்து) இல்வாழ்க்கையில் வாழ்வதெல்லாம் விருந்தினரைக்காப்பாற்றும்பொருட்டு என்பதாம். ❈ எனவே-உபகாரஞ் செய்யாத விடத்தே இல்லிலிருத்தலாலும்; பொருள்காப்பாற்றலாலும், உண்டாகிற துன்பச்செயல்களுக்கெல்லாம் பயனில்லை யென்பதாம். (க)

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா.... ..... .... ❈
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.......... ❈

(இ-ள்.) (உண்ணப்படும்பொருள்)-சாவாமருந்தெனினும் - அமிர்தமாயினும்- விருந்து-(தன்னைநோக்கிவந்த) விருந்தினர்- புறத்ததா-(தன்வீட்டின்) புறத்திருக்க- தானுண்டல் - தானேயுண்ணுதல். வேண்டற்பாற்றன்று- விரும்பப்படுமுறைமையை யுடையதன்றாம். எ,று. (கருத்து) வந்தவிருந்தினரைப் புறம்வைத்துத் தேவாமிர்தமாகினுமுண்ணப்படாது என்பதாம். ❈ சாவாமருந்து - சாவாமைக்குக் காரணமாகியமருந்து. [இவை இரண்டு பாட்டாலும் விருந்தோம்பலின் சிறப்புச்சொல்லப்பட்டது. (உ)

வருவிருந்து வைகலுமோம் புவான் வாழ்க்கை..... ❈
பருவந்து பாழ்படுத லின்று... ....... ........... ..... ❈

(இ-ள்.) வருவிருந்து-(தன்னைநோக்கி) வந்தவிருந்தை-வைகலும் நாடோறும்-ஓம்புவான்- உபசரித்துவருவான் — வாழ்க்கை-இல்வாழ்க்கையானது - பருவந்து -(வறுமையால்) வருந்தி - பாழ்படுதலின்று-கெடுதலில்லை. (எ-று) (கருத்து)வந்தவிருந்தினரைக் காப்பாற்றுபவன் வாழ்க்கை கெடுதலில்லை என்பதாம். ❈ தினந்தோறும் விருந்தோம்புவானுக்கு அதனாலே பொருள்குறையாமல் மேன்மேலும் வளருமென்பதாம். (௩)

அகனமர்ந்து செய்யா ளுறையுமுகனமர்ந்து......... ❈
நல்விருந்தோம்புவானில் ......... ..... .................... ❈

(இ-ள்.) செய்யாள் - திருமாதானவள்- முகனமர்ந்து-முகமினியனாய்-நல்விருந்து-தகுந்த விருந்தினரை- ஓம்புவான் - காப்பவனது- இல்-வீட்டினிடத்தே-அகனமர்ந்து-மனமகிழ்ந்து-உறையும்-வாழ்ந்துகொண்டிருப்பாள். (எ,று.) (கருத்து)விருந்தினரைக்காப்பவன்வீ

ட்டில்-இலக்குமி வாசம்பண்ணுவாள் என்பதாம். ❁ மனமகிழ்தற்கு காரணம் தன்செல்வம் நல்லவழிப்படுதலாம். தகுதியாவது-ஞானத்தினாலும்; ஆசாரத்தினாலும்; உயர்தல். பொருள் வளர்தற்குக்காரணம் சொல்லியபடி. (௪)

வித்துமிடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி ✻
மிச்சின் மிசைவான் புலம் ............................... ✻

(இ-ள்.) விருந்தோம்பி-(முன்னே)விருந்தினரையுண்பித்து-மிச்சில்-மிகுதியை-மிசைவான்- (பின்) னுண்பவனது- புலம்- விளைநிலத்துக்கு-வித்தும்-விதையும்- இடல் - இடுதலும்- வேண்டுங்கொல்-வேண்டுமோ- வேண்டுவதில்லை. (எ-று) (கருத்து) விருந்தினரைக்காப்பவன் விளைநிலந்தானே விளையும் என்பதாம். ❁ ஓ - அசைநிலை. எனவேதானே விளையுமென்பதாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும்விருந்தோம்புவார் இம்மையிலே அடையும் பயன் சொல்லப்பட்டது.] (௫)

செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா ✻
னல்விருந்து வானத் தவர்க்கு ..................... ✻

(இ-ள்.) செல்விருந்து- (தன்னிடத்தே)வந்தவிருந்தை - ஓம்பி-உபசரித்து- வருவிருந்து-(பின்)வரும்விருந்தை-பார்த்து- எதிர்நோக்கி-இருப்பான்-(தான்அதனோடுண்ண)விருப்பவன் - (மறுபிறப்பிலேதேவனாய்)-வானத்தவர்க்கு-வானிலுள்ளவருக்கு - நல்விருந்து-நல்லவிருந்தாவான். (எ,று.) (கருத்து) வந்தவிருந்தாளிகளைக் காப்பாற்றி வரும்விருந்தாளிகளுக் கெதிர்பார்த்திருப்பவன்தேவர்களுக்குவிருந்தாளியாவான் என்பதாம். ❁ நல்விருந்து கிடைத்தற்கரிய விருந்து. [இதனுலேமறுமையில்அடையும்பயன் சொல்லப்பட்டது.

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின் ....... ✻
றுணைத் துணைவேள் விப்பயன் ........... ............... ✻

(இ-ள்.) வேள்விப்பயன்-(விருந்தினரையுபசரித்தலாகிய)வேள்வியினதுபயன்- இனைத்துணைத்தென்பது - இன்னவளவினதென்பதாகிய-ஒன்றில்லை-ஓரளவினையுடையதின்று-விருந்தின் - அவ்விருந்தினரது-துணை-(தகுதியளவே-துணை-(அதற்கு) உளவாம். எ-று. கருத்து. விருந்தினர்க்காக்கு முதலியிவ்வளவென்பதொன் றில்லை விருந்தினர் மகிழ்ச்சியளவேயாம் என்பதாம் ❁ தேவயாகம் - பிதிருயாகம்-மனிதயாகம்-பூதயாகம்-பிரமயாகம்-என்கிற ஐம்பெருவேள்வியில்மனிதயாகம் எனப்பட்ட விருந்தோம்ப லொன்றுமேவின்வேள்

வியென்றும், பொருளளவு சிறிதாயினும் சர்ப்பாத்திரத்திலே சேர்ந்ததாயின் மிகப்பெருதாமாதலின் இனைத்துணைத்தென்பதொன்றில்லையென்று, சொல்லினுர். [இதனுல் இருமையும் பயத்தற்குக்காரணம்சொல்லப்பட்டது.] (எ)

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி *
வேள்வி தலைப்படா தார்... ......... .... .. . . ..... *

(இ-ள்.) விருந்து-விருந்தினரை - ஓம்பி - (நிலையாப் பொருளைக் கொண்டு)உபசரித்து-வேள்வி-அவ்வேள்விப்பயனை - தலைப்படாதார் அடையும் அறிவிலாதவர்-பரிந்தோம்பி - (அப்பொருளை) வருந்துங் காத்து-(பின்பு அதனையிழந்து-)பற்றற்றேம்- (இப்போது)பற்றுக்கோடிலமாயினேம்-என்பர்- என்றிரங்குவார். எ,று- கருத்து. விருந்தாளிகளைக் காப்பாற்றுதார் பொருளைக் காப்பாற்றி யிழந்தோமென்பார் என்பதாம் ❋ சம்பாதிக்கப்பட்ட பொருளைக் காத்தலும்கடுந்துன்பமாதலால் பரிந்தோம்பி யென்றுர். வேள்வி அதன்பயனை உணர்த்தலால் ஆகுபெயர். (அ)

உடைமை யுளின்மை விருந்தோம்ப லோம்பா...... *
மடமை மடவார்க ணுண்டு ......................... ... *

(இ-ள்.) உடைமையுள்-(பொரு)ளுடையராயிருக்குங்காலத்து-இன்மை-வறுமையாவது- விருந்தோம்பல்- விருந்தினராயுபசரித்தலை ஓம்பா-இகழும்-மடமை- பேதைமையாகும். -(அது அறிந்தோரிடத்திராது.)-மடவார்கண்- அறிவிலாதவரிடத்து-உண்டு-உண்டு.எ-று. (கருத்து) செல்வத்துள் வறுமையாவது விருந்தினரா யுபசரியாமை அது அறிவில்லாரிடத்துண்டு என்பதாம். ❋ மடமையானது பொருளாலே கொள்ளும்பயனை இழப்பித்து உடைமையை இல்லாமையாக்கலால் அதைவறுமையாக உபசரித்தார். பேதைமையால்விருந்தோம்பலை இகழ்ந்தால்- பொருளிருந்த விடத்தும் அதனுல்பயனில்லை யென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் விருந்தோம்பாவிடத்து உண்டாம் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௯)

மோப்பக் குழையு மனிச்சமுகந்திரிந்து............ .......*
நோக்கக் குழையும் விருந்து........................ ......... *

(இ-ள்.) அனிச்சம்- அனிச்சப்பூவானது-மோப்ப- மோந்தவிடத்தே-குழையும்-வாடும்-விருந்து - விருந்து - முகந்திரிந்து - முகம்வேறுபட்டு-நோக்க பார்க்க- குழையும் - வாடும். எ,று. (கருத்து) அனிச்சப்பூ மோந்தவிடத்துவாடும். விருந்துமுகம் வேறுபட்டுப்

பார்க்கவாடும் என்பதாம். ❁ தூரத்திலே கண்டவிடத்து முகமலர்ச்சிகாட்டலும், அதுகண்டு சமீபத்திலே வந்தவிடத்து இன்சொற் சொல்லுதலும், அதுகேட்டு உடன்பட்டபோது உபசாரஞ்செய்தலும், ஆகிய-விருந்தோம்புவார்க்கு அவசிய மிருக்கவேண்டியமூன்றனுள்-முதலாகிய முகமலர்ச்சி யில்லாதபோது தூரத்திலிருந்தே வாடிநீங்குதலால் தீண்டியவிடத்தல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியரா யிருப்ப ரென்பதாம். [இதனால்விருந்தோம்புவார்க்கு முதலிலே முகமலர்ச்சி வேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௰)



# ௰ ஆம்-அதி, இனியவைகூறல்.

அஃதாவது - மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிற இனிய சொல்லுகளைச் சொல்லுதலாம்- இதுவும்விருந்தோம்புவார்க்கு அவசியம் வேண்டியதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது.

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ் ........ ❋
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் ........ ❋

(இ-ள்.) இன்சொல்-இனியசொற்களாவன- ஈரமளைஇ - அன்போடு கலந்து- படிறிலவாம்- வஞ்சனையில்லனவாயிருக்கின்ற - செம்பொருள்-அறத்தினை-கண்டார்-அறிந்தவரது-வாய்ச்சொல் - வாய்ச்சொற்களாகும். எ,று. (கருத்து) அறத்தின்வழியையறிந்தவர்வாய்ச்சொற்களே இனியசொற்களாம் என்பதாம். ❁ ஆல்-அசை- அன்போடு கலத்தல்-அன்புடைமையை வெளிப்படுத்தல். வஞ்சனை யில்லாமை மெய்ம்மை. மெய்யுணர்ந்தவர் கருத்துக்கெல்லாம் செம்மைபடையதாய்த் தோன்றலாலே செம்பொருளெனப்பட்டது. இலவாஞ்சொற்களெனக்கூட்டுக, [இதனால் இனியசொல்லுக்கு இலக்கணஞ் சொல்லப்பட்டது] (௧)

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந் ........ ❋
தின்சொல னாகப் பெறின் ........ ❋

(இ-ள்.) முகனமர்ந்து- (கண்டபொழுதே) முகமலர்ந்து - இன்சொலனாக (அதனோடு)-இன்சொல்லையுமுடையவனாக- பெறின்- பெற்றால் (அது)-அகனமர்ந்து-மனமகிழ்ந்து - ஈதலின் - (ஒருவருக்கு

வேண்டியபொருளைக்) கொடுத்தலினும்-நன்றே நல்லதாம்.(எ-று) (கருத்து) முகமலர்ந் தினியசொற்களைச் சொல்லுவானாகில் அகம லர்ந்து கொடுத்தலினு நல்லது என்பதாம். ☼ முகமலர்ச்சியோடு கூடியவின்சொல்- கொடுத்தல்போல் பொருள்வசத்த தாகாமல் தன் வசத்ததா யிருந்தாலும் தருமசிந்தையுடையவர்க்கல்லது கூடாவமை திராதாகையால் அதனினும் அரிதென்னுங் கருத்தால் இன்சொல னாகப்பெறினென்றார். (௨)

முகத்தா னமர்ந் தினிது நோக்கியகத்தானா ✻
மின்சொ லினதே யறம்..... ........................ . ✻

(இ-ள்) அறம் - தருமமானது -முகத்தானமர்ந்து -(கண்டபோதே) முகத்தால்விருப்பி-இனிதுநோக்கி - இனிதாகப்பார்த்து - (பின் சேர்ந்தவிடத்து)-அகத்தானும்-மனத்துடனுகிய- இன்சொலினதே இனியசொற்களைச் சொல்லுவானிடத்தே எ-று.) (கருத்து) தரும மானது இன்சொல்லினிடத்தே என்பதாம். ☼ அறமானது ஈகை யினிடத்தே உள்ளதல்ல வென்பதாம் [இவை இரண்டு பாட்டாலும் முகமலர்ச்சியோடுகூடிய இன்சொல் முன்னுகவே பற்றிக் கொள்ளு தலால் விருந்தோம்பலிலே சிறந்ததென்பதுசொல்லப்பட்டது.]

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு... .... ✻
மின்புறூஉ மின்சொலவர்க்கு.......... ..... ..... .......... ... ✻

(இ-ள்.) யார்மாட்டும் - எல்லாரிடத்தும் - இன்புறூஉம்- இன்பத் தைமிகுவிக்கும் - இன்சொலவர்க்கு-இனியசொற்களை யுடையவர்க்கு-துன்புறூஉம் - துன்பத்தைமிகுவிக்கும் - துவ்வாமை- வறுமை யானது - இல்லாகும்-இல்லை. எ-று.) (கருத்து) இன் சொற்களையு டையவர்க்குத துன்பமில்லை என்பதாம்-☼அப்படிப்பட்ட இன்சொ ல்லையுடையவர்க்கு யாவரும் நட்பினராதலால் எல்லாச் செல்வமும் பெறுவனென்பது கருத்து. (௪)

பணிவுடைய னின்சொ லனாதலொருவற் ............... ✻
கணியல்ல மற்றுப்பிற...... ... ... ................ ...... ....✻

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு - அணி-ஆபரணமாவது - பணிவுடையன்- (பெரியோரிடத்தே) வணக்கமுடையவனுகி. இன்சொல னாதல்- (எல்லாரிடத்தும்) இனியசொல்லையுடையவனு யிருக்கைதாம் பிற-இவ்விரண்டுமல்லாமல் உடம்பில் அணியுமற்றையாபரணங்கள் அல்ல-ஆபரணங்களாகாவாம். எ-று.) (கருத்து) ஒருவனுக் கின்சொ

ல்லே ஆபரணமாம் என்பதாம். ❊ வணக்கமும் இன் சொல்லுக்கு இனமாதலால் உடன்கூறினர். மற்று-அசை.— தன்னின் வேறாயிருக்கையால் அணியும் ஆபரணங்களைப் பிறவென்றும், இவைபோல்பேரழகு செய்யாமையால் அல்லவென்றும், சொல்லினர். [இவையிரண்டு பாட்டாலும் இன்சொல்லுகளைச் சொல்லுவார்களுக்கு இம்மைப்பயன் சொல்லப்பட்டது.] (௫)

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை ...... ...... *
நாடி யினிய சொலின் ...... ...... *

(இ-ள்.) நல்லவை- (பொருளினாலேபிறர்க்கு) நன்மையைத்தருஞ் சொற்களை— நாடி- (மனத்தால்) ஆராய்ந்து- இனிய-இனிமையுள்ளனவாக-சொலின்- (ஒருவன்) சொல்லுவானாயின் — (அவனுக்கு) அல்லவை-பாவங்கள் - தேய-தேய-அறம்-தருமமானது -பெருகும் வளரும். எ,று.) (கருத்து) ஒருவன் இன்சொற்சொல்லுவானாகில்பாவந்தேயப் புண்ணியம் வளரும் என்பதாம். ❊ தேய்தலாவது - பாவந் தன்பகையாகிய அறம்வளர்தலால் தனக்கு இடமில்லாமல்குறைதல். நல்லசொற்களை ஒருவன் நாடிச்சொல்லுமிடத்தும் கடினமாகச்சொல்லின் அறமாகாதென்பதாம். [இதனால்மறுமைப்பயன் சொல்லப்பட்டது.] (௬)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று ...... ...... *
பண்பிற் றலைப் பிரியாச் சொல் ...... *

(இ-ள்.) பயனீன்று-(பொருளினாலேபிறருக்கு)நன்மையைக்கொடுத்து - பண்பின்-(இனிமைக்) குணத்தினின்றும்-தலைப்பிரியா- நீங்காத-சொல் - சொற்களானவை ]-[ஒருவனுக்கு]நயனீன்று (இம்மைக்கு)நீதியையுமுண்டாக்கி—நன்றிபயக்கும்- (மறுமைக்கு)அறத்தையும் தரும். எ,று.) (கருத்து) இனியசொற்களானவை நீதியையுந், தருமத்தையுந் தரும் என்பதாம். ❊ நீதி-உலகத்தோடு பொருந்துதல். (௭)

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு ...... ...... *
மிம்மையு மின்பந் தரும் ...... ...... *

(இ-ள்-) சிறுமையுணீங்கிய- (பொருளினாலேபிறர்க்கு) வருத்தஞ் செய்யாத- இன்சொல் - இனியசொற்களானவை [- ஒருவனுக்கு)மறுமையு மிம்மையும் - வருபிறப்பிலு மிப்பிறப்பிலும்-இன்பம்,இன்பத்தை — தரும்-கொடுக்கும். எ,று-) (கருத்து) இன்சொற்களான

உயிர்வாழ்தலினும் - சாதல்- (அது செய்யாமல்) உயிர்விடுதல்- (அவனுக்கு)-அறங்கூறும்- தருமநூல்களினாலே சொல்லப்பட்ட - ஆக்கம் பயனை - தரும்-கொடுக்கும். (எ-று) (கருத்து) ஒருவன் பிறனைமுன் புகழ்ந்தும் பின்னிகழ்ந்தும் பேசியுயிர்வாழ்தலினு மிறத்தலேநலம் என்பதாம். ※ உயிர்விட்டபின் புறங்கூறிப் பொய்த்தலாகியபாவம் நீங்கலால்-சாதல்-ஆக்கந்தருமென்றார். ஆக்கம்- அப்பாவஞ்செய்யாதவராலே-மறுமையில் அடையப்படும்பயன். அறம் - அதைச்சொல்லு நூலையுணர்த்தலால் ஆகுபெயர். (௩)

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க....... .. ※
முன்னின்று பின்னோக்காச் சொல்....... .. ........... ※

(இ-ள்.) (ஒருவனை)—கண்ணின்று-எதிரேநின்று - கண்ணற- கண்ணோட்டமற-சொல்லினும் - சொன்னாலும்- முன்னின்ற (அவன்) எதிரில்லாமல்- பின்னோக்காச்சொல் - பின்வருங்குற்றத்தை நோக்காத சொல்லை- சொல்லற்க - சொல்லாதிருக்கக்கடவன். (எ-று) (கருத்து) ஒருவனைமுன்னிகழினும் பின்னிகழாதிருக்கக்கடவன் என்பதாம். ※ பின் அதில்வருங்குற்றத்தைக் காட்டலால் ஆகுபெயர். சொல்லானது நோக்குந்தொழில்-சொல்லின்மேல் ஏற்றப்பட்டது. கண்ணோட்டம்-தாட்சிணியம். [இவ்விரண்டுபாட்டாலும்புறங்கூறலின்கொடுமைசொல்லப்பட்டது.] (௪)

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மைபுறஞ் சொல்லும் .... ※
புன்மையாற் காணப் படும்..... ... .......... ................ ※

(இ-ள்) (புறங்கூறுவோனொருவன் - அறம் நன்றென்றுவாயினாலே சொல்லினும்)-அறஞ்சொல்லும்-அறத்தை அப்படிச்சொல்லுதற்குள்ற்ற-நெஞ்சத்தானன்மை - மனத்தையுடையவனல்லாதவனாயிருக்கையானது- புறஞ்சொல்லும்-அப்புறங்கூறுதற்குக்காரணமாகிய புன்மையால்.(மனப்) புன்மையாலே - காணப்படும்- (அறிவுடையோரால்) அறியப்படும். (எ-று) (கருத்து) தருமநன்றென்பவன்மனதிலேதருமமில்லாமையானது புறங்கூறுதலா லறியப்படும் என்பதாம். ※ மனம் தீதாயிருக்கையால் அறம் நன்றென்று சொல்லுகிற சொல் அங்கீகரிக்கப்படாதென்பதாம். (௫)

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந் ....................... ※
திறன்றெரிந்து கூறப் படும்.......................................... ※

(இ-ள்.) பிறன்பழி-பிறனொருவனதுபழியை— கூறுவான்- (அவனைக்காணாதவிடத்தே) சொல்லுவோன் - தன்பழியுள்ளும் - தனது

(பல)பழிகளுள்ளும்-திறன்-(வருத்தும்)விதமுடையவைகளை-தெரிந்து-ஆராய்ந்து-கூறப்படும்-(அவனாலே)சொல்லப்படுவான். (எ,று.) (கருத்து) பிறன்குற்றத்தைச்சொல்லுவோன் தன்குற்றம்பிறனாற்சொல்லப்படுவான் என்பதாம். ☼ திறமுடையவைகளை திறனென்றலால் ஆகுபெயர். காணாதவிடத்துத் தன்னைக்குறித்துப் பிறனாலே சொல்லப்பட்டபழியைக் கேட்டவன் அவன்மிகவும்வருந்தும்படி அதிகமாகியபழிகளை ஆராய்ந்து எதிரேசொல்லுவானாதலால் திறன்றெரிந்து கூறப்படு மென்றார். (௬)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி........ ....*
நட்பாட றேற்றா தவர்.......... ..................................*

(இ-ள்.) நகச்சொல்லி-(கூடி) மகிழும்படி (இனியசொற்களைச்)சொல்லி-நட்பாடல்-(அயலாரோடு) சிநேகஞ்செய்தலை - தேற்றாதவர்-(தமக்குஉறுதியென்று) அறியாதவர் - பகசசொல்லி-(தம்மைவிட்டு) நீங்கும்படிபுறங்கூறி - கேளிர் - (தமதுசுற்றத்தாரையும்-பிரிப்பர்-பிரியப்பண்ணுவர்: (எ,று) (கருத்து) மகிழும்படிசொல்லிச்சிநேகஞ்செய்தலை யறியாதவர்கள் புறங்கூறி யுறவினரைப்பிரிப்பர் என்பதாம். ☼ உம்மை விகாரத்தால் தொக்கது கேளிரையும் பிரிப்பரென்ற கருத்தால் அயலாரோடென்பது வருவிக்கப்பட்டது. தேற்றாதவரென்னும் பிறவினை - தேறாதவ ரென்னுந்தன்வினைப்பொருளில்வந்தது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவ ரென்பதுகருத்து. (எ)

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா...... .........*
ரென்னைகொ லேதிலார் மாட்டு.. ........... ........*

(இ-ள்.) துன்னியார்- தம்மோடு) நெருங்கினவரது - குற்றமும்-குற்றத்தையும் - தூற்றும்- (அவரைக்காணாதவிடத்தே) தூற்றும்-மரபினர்-இயல்பையுடையவர்— ஏதிலார்மாட்டு - அயலாரிடத்துச்(செய்வது)என்னைகொல்-யாதோ. (எ,று.) (கருத்து) உறவினர்குற்றத்தையுந் தூற்றுவோர் அயலார் குற்றத்தை யெப்படித் தூற்றுவரென்பதாம். ☼ தூற்றுதல்-பலரும் அறியப்பரப்புதல். அத் தூற்றுதலினுங் கொடிய செயல்வேறொன்றுங் காணாமையால் என்னைகொலென்றார். செய்வதென்பது- சொல்லெச்சம். (அ)

அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப் ..*
புன்சொ லுரைப்பான் பொறை....................... ..*

(இ-ள்.) புறநோக்கி- பிறர்நீங்கினவளவுபார்த்து - புன்சொல்-(அவரது)பழிப்புச்சொல்லை- உரைப்பான் - சொல்லுவோனது - பொறை-(உடற்) பாரத்தை—வையம்- பூமியானது - அறநோக்கி-(இக்கொடியதைச் சுமத்தலே எனக்கு) அறமாமென்றுநினைத்து - ஆற்றுங்கொல் - சுமக்கின்றதுபோலும். எ, று. கருத்து பூமியானது பொறுமைகூறுவோனுடலைத் தருமத்தைக் குறித்துச் சுமப்பது போலும் என்பதாம். ❊ பூமிக்கு எல்லாப் பொருள்களையும் சுமத்தல்சுபாவமாயினும் புறங்கூறுவானைச் சுமப்பதுதகாதென்னுங்கருத்தால் அறநோக்கியாற்றுங் கொல்லையமென்றார். [இவையைந்துபாட்டாலும்புறங்கூறுவாருக்கு உண்டாகும் குற்றம்சொல்லப்பட்டது.

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற் .... ❊
தீதுண்டோ மன்னு முயிர்க்கு .......................... ❊

(இ-ள்.) (புறங்கூறுவோர் அதுசெய்தற்கு)- ஏதிலார்குற்றம்போல்- அயலோரது குற்றத்தைப்போல் — தங்குற்றம்- (அப்புறங்கூறுதலாகிய தமதுகுற்றத்தையும் - காண்கிற்பின் - காணமாட்டுவாராயின்-மன்னுமுயிர்க்கு- (அவரது) நிலைபெற்றஉயிர்க்கு- தீது- (வருவது)ஒருதுன்பம்- உண்டோ- உண்டாகுமோ. எ, று. (கருத்து) அயலார்குற்றத்தைப்போலத் தங்குற்றத்தையாராய்வாராகிற் குற்றமில்லை என்பதாம். ❊ நடுவுநிலையாயிருந்து ஒப்பக்காணுத லருமையாகலின் காண்கிற்பினென்றும், கண்டவிடத்தே புறங் கூறுமையால் ஒருபிறவிகளிலும் துன்பப்படா ரென்பதைக் குறித்து உயிர்க்குத் தீதுண்டோவென்றும், சொல்லினார். [இதனால் புறங்கூறுதலை விடுதற்கு உபாயம் சொல்லப்பட்டது. (௰)

## ௨௰-ஆம்-அதி-பயனிலசொல்லாமை.

அஃதாவது- தமக்கும் பிறர்க்கும் அறம்பொருளின்பங்களுள் ஒன்றையும் தாராதசொற்களைச் சொல்லாமையாம். பொய்-குறளை- கடுஞ்சொல்- பயனில்சொல்-என வாக்கினிடத்தே உண்டாம் பாவம்நான்கினுள்- பொய்- துறந்தோர்க்குஅல்லதுபற்றறவிடக் கூடாமையால் அதனை ஒழித்து இல்வாழ்வாரால் விடக்கூடுமவை யாகிய மற்றைமூன்றனுள்-கடுஞ்சொல்- இனியவைகூறலாலும், குறளை

புறங்கூறாமையாலும்; விலக்கி நின்ற பயனில்சொல்லை இதனால் விலக்குகின்றாராகலால் இது புறங்கூறாமையின் பின்வைக்கப்பட்டது.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா ............... *
னெல்லாரு மெள்ளப் படும் ............... *

[இ-ள்.] பல்லார்- [அறிவுடையோர்] பலரும்-முனிய-(கேட்டு]வெறுக்க— பயனில பயனில்லாதசொற்களை- சொல்லுவான் - சொல்பவன்-எல்லாரும்-எல்லாராலும் - எள்ளப்படும் - இகழப்படுவான். எ-று.)(கருத்து) பயனில்லாச் சொற்களைச் சொல்பவன் யாவராலுமிகழப்படுவான் என்பதாம். ※ அறிவுடையோர் பலரும் வெறுக்கவேமற்றோரும் இகழ்வாராகலால்எல்லாருமெள்ளப்படுமென்றார்(க)

பயனில பல்லார்முற் சொல்ல னயனில ............... *
நட்டார்கட் செய்தலிற் றீது ............... *

(இ-ள்.) பல்லார்முன் - (அறிவுடையோர்) பலர்முன்னே-பயனில பயனிலாதசொற்களை - சொல்லல்-(ஒருவன்) சொல்லுதலானது- நட்டார்கண் -(தன்)னட்பாளரிடத்தே—நயனில - விருப்பமில்லாதசெயல்களை-செய்தலின்- செய்தலினும்— தீது-குற்றமாம். (எ-று) (கருத்து) பயன்படாச் சொற்களைச் சொல்லுதல் சிநேகரிடத்துநீதியில்லாதவைகளைச்செய்தலினுங் குற்றம் என்பதாம். ※ விருப்பமில்லாதசெயல்கள்-வெறுக்கப்படுசெயலாம். இச்சொல்அச்செயலைக்காட்டிலும் மிகவும் இகழப்படுதலை உண்டாக்குமென்பதாம். (உ)

நயனில னென்பது சொல்லும் பயனில ............... *
பாரித் துரைக்கு முரை ............... *

(இ-ள்.) பயனில-பயனில்லாதபொருள்களை -பாரித்து-விரித்து-உரைக்குமுரை - (ஒருவன்) உரைக்கும்-உரையானது-நயனிலனென்பது இவன் நீதியில்லாதவனென்பதனை-சொல்லும்- அறிவிக்கும்.எ-று-(கருத்து) பயனில்லாப் பொருளைச் சொல்லுஞ் சொல்லானது நீதியில்லாதவனென்பதையறிவிக்கும் என்பதாம். ※ இப்படிப்பட்டவுரையினாலே இவன் நீதியில்லாதவனென்பதை அறியலா மென்றற்கு அதனை உரைமேலேற்றி உரைசொல்லுமென்றார். (ங)

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப் ............... *
பண்பில்சொற் பல்லா ரகத்து ............... *

(இ-ள்.) பயன்சாரா-பயனோடுபொருந்தாத-பண்பில்செ[illegible]-குண

யில்லாதசொற்களை - பல்லாரகத்து-பலரிடத்தே - (ஒருவன் சொல்லுவானாயின்)— அவை - அவரிடத்தே)-நயன்சாரா - நீதியோடுபொருந்தாதவையாகிய — நன்மையின்- நற்குணங்களிலிருந்து - நீக்கும்- (அவனை) நீக்கும். எ,று. (கருத்து) குணமில்லாச் சொற்களையொருவன்சொல்லுவானாகில் அவைநற்குணங்களைவிட்டு நீக்கும் என்பதாம். ※ பண்பு - இனிமை மெய்மை முதலாகிய சொற்குணங்கள் சொல்லுவானாயின்-அவரிடத்தே-என்பவை-சொல்லெச்சங்கள். (௪)

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில ...... ...... ......※
நீர்மை யுடையார் சொலின் ...... ...... ......※

(இ-ள்-) பயனில-பயனில்லாத சொற்களை - நீர்மை யுடையார்-குணத்தன்மையையுடையவர் - சொலின்-சொல்லுவாராயின் - சீர்மை- [அவரது] மேன்பாடானது - சிறப்பொடு- (அதனால்வரும்) நன்குமதிக்கப்படுதலுடனே-நீங்கும். (அவரிடத்திருந்து) நீங்கும் (எ-று-) (கருத்து) நற்குணமுடையோர் பயனில்லாச் சொற்களைச் சொன்னலவர்மேன்மை குறையும் என்பதாம். ※ சொலினென்பது-அவரது சொல்லாமையைக் காட்டிநின்றது. (௫)

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்...... ...... ......※
மக்கட் பதடி யெனல்...... ...... ......※

(இ-ள்.) பயனில்சொல் - பயனில்லாத சொற்களை - பாராட்டுவானை - (பலதரமும்) சொல்லுவோனை - மகனெனல் - மனிதனென்று சொல்லாதே,— மக்கட்பதடியெனல்- மனிதருக்குள்ளே பதரொன்று சொல்லக்கடவாய் எ,று. (கருத்து) பயன்படாச்சொற்களைச்சொல்பவனை மக்களுக்குள்ளே பதரொன்று சொல்லக்கடவாய் என்பதாம். ※எப்படிப்பதருக்கு அரிசியாகிய உள்ளீடு இல்லையோ அப்படியே அவருக்கு அறிவாகிய உள்ளீடு இல்லாமையால் மக்கட்பதடி யென்றார். [இவையாறுபாட்டாலும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றஞ்சொல்லப்பட்டது-] (௬)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர் ...... ......※
பயனில சொல்லாமை நன்று ...... ...... ......※

(இ-ள்.) சான்றோர்-அறிவுடையோர் - நயனில- நீதியோடுபொருந்தாதசொற்களை - சொல்லினும்-சொன்னாலும் - சொல்லுக. சொல்லக்கடவர்.— பயனில-பயனில்லாதசொற்களை - சொல்லாமை - சொல்லாமை (பெறின்)-நன்று-(அது) நன்று - எ-று. (கருத்து) அறிவு

டையோர் நீதியில்லாச்சொற்களைச் சொன்னாலும் பயனிலாச்சொற்களைச் சொல்லாமை நல்லது என்பதாம், ❋ சொல்லினு மெனவே சொல்லாமை பெறப்பட்டது. நயனில்லாத சொல்லினும் பயனில்லாதசொல் தீதென்பதாம். (எ)

அரும்பய னாயு மறிவினர் சொல்லார்................................ *
பெரும்பய னில்லாத சொல்........................................ *

(இ-ள்,) அரும்பயன்-அறிதற்கரியபயன்களை - ஆயும் - ஆராயவல்ல-அறிவினர் - அறிவையுடையார் - பெரும்பயனில்லாதசொல்-மிகுத்தபயனில்லாதசொற்களை - சொல்லார் - சொல்லார்கள். எ,று. (கருத்து) அறிவுடையார் பயன்படாச்சொற்களைச் சொல்லாரென்பதாம். ❋ அறிதற்கரியபயன்களாவன-முத்திப்பேறு- மேற்கதியடைவு முதலானவை. பெரும்பயனில்லாத சொல்லென்றதனால் சிறிதுபயனுடையசொல்லும் தள்ளப்பட்டது. (அ)

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த- *
மாசறு காட்சி யவர்.......................................... *

(இ-ள்.) மருடீர்ந்த-மயக்கத்தினீங்கிய-மாசறு - மாசற்ற-[பரிசுத்தமாகியவென்றபடி]— காட்சியவர் - அறிவையுடையோர்-பொருடீர்ந்த-பயனினீங்கியசொற்களை - பொச்சாந்தும்- மறந்தும்- சொல்லார்-சொல்லார்கள், (எ,று.) (கருத்து) குற்றமற்ற வறிவுடையோர்பயனில்லாதசொற்களை மறந்துஞ்சொல்லாரென்பதாம். ❋ பரிசுத்தமாகியவறிவு-மெய்யறிவு. [இவைமூன்றுபாட்டாலும் பயனில்லாதவை சொல்லாமையின் குணம் சொல்லப்பட்டது. (௯)

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க......... *
சொல்லிற் பயனிலாச் சொல்.......................... *

(இ-ள்.) சொல்லில் சொற்களிலே - பயனுடைய- பிரயோசனமுடையசொற்களை - சொல்லுக-சொல்லக்கடவர் — சொல்லில்- சொற்களிலே-பயனிலாச்சொல் - பிரயோசனமில்லாத சொற்களை - சொல்லற்க-சொல்லாதிருக்கக்கடவர்- எ,று. (கருத்து) பயனுடைய சொற்களைச்சொல்லக்கடவர். பயனில்லாச் சொற்களைச் சொல்லாதிருக்கக்கடவர் என்பதாம்- ❋ [இதனாலேசொல்லத் தகுவனவும் தகாதனவும்நியமிக்கப்பட்டன-] (௰)





# உக-ஆம்—அதி—தீவினையச்சம்.



அஃதாவது-பாவங்களாயுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதலாம். இதனால் காயத்தினிடத்தே விளைகின்ற பாவங்களையெல்லாம் தொகுத்துவிலக்குகின்றாராகலின் இது பயனிலசொல்லாமையின்பின் வைக்கப்பட்டது.

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு

(இ-ள்.) தீவினையென்னுஞ்செருக்கு - தீவினையென்று சொல்லப்படுமயக்கத்திற்கு — தீவினையார் (முன்செய்த தீவினையுடையோர் அஞ்சார் - பயப்படார்-விழுமியார் - (அது இல்லாத) மேலோர்-அஞ்சுவர்-பயப்படுவார். எ-று. [கருத்து] பாவத்துக்குத் தீவினையார் பயப்படார். நல்வினையார்பயப்படுவார் என்பதாம். ❁ தீவினையாகியகாரியம் அதன்காரணமாகிய செருக்கென உபசரிக்கப்பட்டது. முன்னே தொடங்கிச்செய்து பழகிவந்தமையால் அஞ்சாரென்றும், செய்தறியாமையால் அஞ்சுவாரென்றும், சொல்லினார் [க]

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்

(இ-ள். தீயவை- [இன்பத்தின் பொருட்டுச் செய்யுந்] தீவினைகள் [பின்னை] தீய-துன்பங்களை - பயத்தலால்-தருதலால்-தீயவை-[அப்படிப்பட்ட] தீவினைகள்—தீயினும் - தீயினும் அதிகமாக - அஞ்சப்படும்-[ஒருவனால்] அஞ்சப்படும் எ-று- [கருத்து] பாவமானவை துன்பங்களைக் கொடுத்தலால் அப்பாவங்களக்கினியிலுங்கொடியன என்பதாம். ❁ வேறொருகாலத்திலும் வேறோரிடத்திலும் வேறோருடம்பிலும், போய்ச்சுடுதல் தீவினைக்கே அல்லாமல் நெருப்புக்கு இல்லாமையால் தீயினும் அஞ்சப்படுமென்றார். [உ]

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்

(இ-ள்-) செறுவார்க்கும்-(தம்மை)வருத்துவோரிடத்தும்- தீய- தீவினைகளை - செய்யாவிடல்-செய்யாமல்விடுதலை - அறிவினுளெல்லாம்-(தமக்கு உறுதிநாடும்) அறிவுகளெல்லாவற்றிலும் தலை - முதலானவறிவாகும் - என்ப-என்று நல்லோர் - சொல்லுவர் எ-று. (கரு

தீது) தம்மைவருத்துவோரிடத்துந் துன்பங்களைச்செய்யாமல் விடுதல் எல்லாவறிவினுள்ளுந் தலைமை என்பதாம். ※ விடுதற்குக்காரணமாகிய அறிவைவிடலென்றும், செய்யத் தக்கவிடத்தும் செய்யாதிருந்தால் தமக்குத் துன்பம்வாராதென்று ஆலோசித்தறிதலால் அதனை அறிவினுளெல்லாந் தலையென்றும், சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௩)

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி ...................... ..... *
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு..... ........................................ *

(இ-ள்.) (ஒருவன்) பிறன்- பிறனுக்கு-கேடு - கேட்டைத்தரும்வினையை- மறந்தும்-மறவியைப்பொருந்தியும் - சூழற்க - எண்ணாதிருக்கக்கடவன்.— சூழின்-எண்ணுவானாயின் - சூழ்ந்தவன் - அவ்வெண்ணினவனுக்கு- கேடு - கேட்டைத்தரும் வினையை— அறம் - அறக்கடவுள்-சூழும்-எண்ணுவான். எ - று. (கருத்து) ஒருவன் மறந்தும்பிறனுக்குக்கேட்டை நினையாதிருக்கக்கடவன் நினைப்பானாகில் அவனுக்குத்தருமக்கடவுள் கேட்டை நினைக்கும் என்பதாம். ※ கேடிரண்டும் அவற்றைத்தரும் வினைகளையுணர்த்தலால் ஆகுபெயர்கள் எண்ணுகிறபொழுதேதானும் உடனே எண்ணுதலால் இவன் பிற்பட்டாலும் அறக்கடவுள் முற்படுவானென் பதுகொள்ளப் பட்டது. [அறக்கடவுளெண்ணுதலாவது - அவன்கெடத்தான் நீங்கநினைத்தல். தீவினையை எண்ணுதலுமாகா தென்பதாம்.] (௪)

இலனென்று தீயவை செய்யற்க செய்யி.... ................ ..... *
னிலனாகு மற்றும் பெயர்த்து ......... ............ ............ *

(இ-ள்.) இலனென்று - வறுமையையுடையேனென்று நினைத்து- (அதுதீர்தற்பொருட்டு) — தீயவை-தீவினைகளை -செய்யற்க- ஒருவன் பிறர்க்குச்) செய்யாதிருக்கக்கடவன்.—செய்யின்-செய்தால்-பெயர்த்து-பின்னும்-இலனாகும்-வறுமையையுடையவனாவான். எ-று. (கருத்து) வறுமையாலே தீமைசெய்யாதிருக்கக்கடவன் செய்வானாகில் வறுமை யுடையவனாவான் என்பதாம்- மற்றும் - அசைநிலை அத்தீவினையினாலே பிறவிதோறும் வறியவனாவ னென்பதாம். (௫)

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால..... .......... *
தன்னை யடல்வேண்டா தான்.... .. .... .......·............ *

(இ-ள்.) நோய்ப்பால- துன்பஞ்செய்யுங்கூறுடைப்பாவங்கள்—தன்னை-தன்னை- அடல்வேண்டாதான்- (பின்வந்து) வருத்துதலைவே

ண்டாதவன்—தீப்பால-தீமைக்கூறுடையவினைகளை - தான் - தான்-பிறர்கண்-பிறரிடத்தே-செய்யற்க- செய்யாதிருக்கக்கடவன். எ - று. (கருத்து) பாவங்கள் பின்பு தன்னை வருத்துதலை யிச்சியாதவன்பாவங்களைப்பிறரிடத்துச்செய்யாதிருக்கக்கடவன் என்பதாம்- ※ செய்வானாயின் அப்பாவங்கள் அவனை வருத்துவதற்கு ஐயமில்லை யென்பதாம். (அ)

எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை ※
வீயாது பின்சென் றடும் ※

(இ-ள்.) எனைப்பகையுற்றாரும்-எவ்வளவுபெரியபகையையுடையவரும்—உய்வர் -(அதனை ஒருவழியினாலே) தப்புவார்.—(அப்படியல்லாமல்) வினைப்பகை-தீவினையாகியபகையானது- வீயாது - நீங்காமல்-பின் சென்று-போனவிடத்துக்குப்போய்-அடும் - கொல்லும். எ - று. (கருத்து) எவ்வகைப்பகையை யடைந்தவர்களுங் கடைத்தேறுவர். தீவினைப்பகையானது பின்னே தொடர்ந்து கொல்லும் என்பதாம். (எ)

தீயவை செய்தார் கெடுதனிழ றன்னை ※
வீயா தடியுறைந் தற்று ※

(இ-ள்,) தீயவை-தீவினைகளை-செய்தார்-(பிறருக்குச்) செய்தவர்-கெடுதல்-(தாம்)கெடுதல்-(எத்தன்மைத்தென்றால்)-நிழல்-(ஒருவனது)நிழலானது— (நெடுந்தூரம்போயினும்) — தன்னை - அவனை-வீயாது-விடாதுவந்து-அடி-அடியினிடத்தே-உறைந்தற்று-தங்கிய தன்மைத்து. எ-று. (கருத்து) தன்னிழலானது நெடுந்தூரஞ்சென்றாலுந் தன்னடியிலே தங்கியதுபோலத் தீவினைகளுந் தன்னொடு தங்கும் என்பதாம். ※ முன்பாட்டில் வினைப்பகைவீயாது பின்சென்றடுமென்று சொல்லப்பட்டதை இங்கேஉபமானத்தினால் விளக்கினர்.

தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந் ※
துன்னற்க தீவினைப் பால் ※

(இ-ள்.) (ஒருவன்)—தன்னை-தன்னை-தான் - தான் - காதலனாயின் விரும்புதலுடையவனாயிருந்தால்- தீவினைப்பால் - தீவினையாகியபிரிவினுள்-எனைத்தொன்றும் எவ்வளவுசிறியதொன்றையாயினும்-துன்னற்க-(பிறரிடத்தே)செய்யாதிருக்கக்கடவன். எ-று. (கருத்து) தன்னைக்காக்கவிரும்பினாற் பிறனிடத்திலெவ்வளவும் பாவஞ்செய்யாதிருக்கக்கடவன் என்பதாம். ※ நல்வினை தீவினை எனவினைப்பிரிவு இரண்டாகலின் தீவினைப்பாலென்றார். பிறரிடத்தேசெய்ததீவினைதன்

ணிடத்தே துன்பந்தருதலை விளக்கினாராதலால்- தன்னைத்தான் காதல னாயினென்றார். [இவை ஆறுபாட்டாலும் பிறருக்குத் தீவினைசெய் தால் தாம்கெடுவரென்பது சொல்லப்பட்டது.] (கூ)

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித் ..................... *
தீவினை செய்யா னெனின் ............................................ *

(இ-ள்.) (ஒருவன்செல்லவயானவழியைவிட்டு) — மருங்கோடி- கொடியவழியிலேசென்று-தீவின்- தீவினைகளை- செய்யானெனின் (பிறர்டத்தே)செய்யானாயின்- அருங்கேடனென்பது-(அவன்) இல் லாதகேட்டையுடையவனென்பதை - அறிக- அறியக்கடவர் எ-று. (கருத்து) ஒருவன்பாவஞ் செய்யாதிருப்பானாகிற் கேடில்லாதவனெ ன்றறியக்கடவன் என்பதாம். ❁ [இதனாலே தீவினை செய்யாதவன் கேடில்லாதவனென்பது சொல்லப்பட்டது.] (ய)



## உஉ-ஆம்-அதி-ஒப்புரவறிதல்.

அஃதாவது- உலகநடையை அறிந்து செய்தல். மனோவாக்குக்காய ங்களாலே செய்யத்தகாதவை சொல்லினார் இனிச் செய்யத்தகு மவைகளில்முன் சொல்லப்பட்டவற்றுள் அடங்காதவை களைச் சொல்லுகின்றாராகையால் இது தீவினையச் சத்தின் பின் வைக்கப் பட்டது.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் ..................... *
டென்னாற்றுங் கொல்லோ வுலகு ..................... *

(இ-ள்.) உலகு-உயிர்களானவை —மாரிமாட்டு-(தமக்கு நீர்தவுகி ன்ற) மேகங்களிடத்து என் என்னபிரதியுபகாரத்தை - ஆற்றும்-செ ய்துவருகின்றன. [ஒன்றும் செய்கின்றன வில்லையென்றபடி.] (ஆத லால்)-கடப்பாடு - (அம்மேகங்கள்போல்வார்செய்யும்) உபகாரங்க ளும்-கைம்மாறு - பிரதியுபகாரங்களை - வேண்டா - வேண்டுவனவல் ல. எ-று. (கருத்து) மேகங்களுக் கொப்பானவர் செய்யு முபகார ங்கள் பிரதியுபகாரங்களை வேண்டுமவையல்ல என்பதாம் ❁ கொல், ஓ,அசை. கடப்பாடென்னும் பெயரினாலேயே அவசியம்செய்யவே ண்டுவதென்பது பெறப்பட்டது. உபகாரஞ் செய்வாரது வேண் டாமையை உபகாரத்தின்மேல் ஏற்றினார். (க)

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு......... ....*
வேளாண்மை செய்தற் பொருட்டு.. ...............!........*

(இ-ள்.) தக்கார்க்கு-தகுதியுடையவர்க்கு - தாளாற்றி - முயற்சி செய்து-தந்த-சம்பாதிக்கப்பட்ட - பொருளெல்லாம் - பொருளனைத்தும்-வேளாண்மை- உபகாரத்தை-செய்தற்பொருட்டு - செய்தற் பயனுடையனவாம். எ,று, ( கருத்து ) முயற்சிசெய்து சம்பாதித்த பொருளெல்லா முபகாரஞ் செய்யும் பொருட்டு என்பதாம். ❁ தகுதியில்லாத பிறருக்குப்போல் தாம் அநுபவித்தற் பொருட்டும், வைத்து இழத்தற்பொருட்டும், அல்லவென்பதாயிற்று. (உ)

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே.................. ..... ....*
யொப்புரவி னல்ல பிற..... .. ......... ..........................*

(இ-ள்.) புத்தேளுலகத்தும்-தேவருலகதிலும்- ஈண்டும் - இவ்வுலகத்திலும்-ஒப்புரவின்-உபகாரம்போல்-நல்ல- நல்லவையாகிய - பிறவேறுசெயல்களை - பெறல் - பெறுதல் - அரிது- அரிதாம். எ,று (கருத்து) விண்ணுலகத்து மண்ணுலகத்தும் உபகாரத்தைப்போலவே றொன்றில்லை என்பதாம். ❁ கொடுப்பாரும், கொள்வாரும், இல்லாமல எல்லாரும் ஒருதன்மையரா யிருக்கையால் தேவருலகத்தில் அரிதாயிற்றுய வருக்கும் ஒப்ப திதுபோல்வேறொன்று இல்லாமையால் இவ்வுலகத்தில் அரிதாயிற்று. [இவை மூன்று பாட்டாலும் ஒப்புரவினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (ரு)

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்....... .........*
செத்தாருள் வைக்கப் படும் ......................................*

(இ-ள்.) ஒத்ததறிவான்- உலகநடையை அறிந்துசெய்பவன்-உயிர்வாழ்வான்-உயிரோடுகூடிவாழ்பவனுவான்.—மற்றையான் - அதனை அறிந்துசெய்யாதவன்-(உயிருடையவனுயிருந்தாலும் )-செத்தாருள்-இறந்தவர்களுள்- வைக்கப்படும் - (ஒருவனுக) வைக்கப்படுவான், [நினைக்கப்படுவானென்றபடி,] எ-று (கருத்து) உலக வியல்பை யறிந்து நடப்பவ னுயிரோடு வாழ்பவன் அவ்வியல்பை யறியாதவன்செத்தவன் என்பதாம். ❁ உயிருக்குரிய அறிவும், செயலும், அவனிடத்தே காணப்படாமையால் - செத்தாருள் வைக்கப்படுமென்றார்-[இதனுல் உலகநடையிலே தவறுதல் வேத நடையிலே தவறுதல் போல் திரும்வழியை உடையதல்ல வென்பது சொல்லப் பட்டது.

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்..... ....... ....*
பேரறி வாளன் திரு...... ......... ........*

(இ-ள்.) உலகு-உலகநடையை- அவாம்-விரும்பிச்செய்யும்-பேர

றிவாளன் - பெரியவறிவினையுடையவனானவன்—திரு - செல்வத்திரு லே நிறைதல்) ஊருணி ஊரில்வாழ்வார் - நீருண்ணுங் குளமானது- நீர்நிறைந்தற்று - நீரினாலேநிறைந்ததுபோலும் (எ, று-) (கருத்து) அறிவாளர் செல்வமானது ஊராருண்ணுங்குளத்திலே நீர்நிறைந்தாற்போலும் என்பதாம். ❊ அச்செல்வம்பாழ்படாமல் நெடுங்காலம் எல்லாருக்கும் வேண்டுமளவில் உதவுமென்பதாம். (௫)

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ..... ..... ........ *
நயனுடை யான்கட் படின்........... ......... ..... ........*

(இ-ள்-) செல்வம்-செல்வமானது - நயனுடையான்கண்- உபகாரஞ்செய்பவனிடத்தே - படின்-உண்டாகுமானால்— (அவ்வுண்டாதல்) உள்ளூர்-ஊர்நடுவே- மரம்-மரத்தினிடத்தே - பயன்-பழமானது-பழுத்தற்று - பழுத்தல்போலும்- எ,று. (கருத்து) செல்வமுபகாரஞ்செய்பவரிடத்தி லுண்டாகில் நடுவூரிலே மரம்பழுத்தாற் போலும் என்பதாம். ❊ ஆல்-அசை. உலகநீதி பலவகையிலும் ஒப்புரவுசிறந்தமையால் அதனை நயனென்றார். அவன் அம்மரம்போல் எல்லார்க்கும் எளிதிலே பயன்கொடுப்பா னென்பதாம். (௬)

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்...............*
பெருந்தகை யான்கட் படின்.... ..... ..... ..... ..... .....*

(இ-ள்.) செல்வம்-செல்வமானது - பெருந்தகையான்கண் (உபகாரஞ்செய்யும்) பெரியதகைமையை யுடையவனிடத்தே-படின்- உண்டாகுமானால்-(அச்செல்வமானது) மருந்தாகி-எல்லா வுறுப்புக்களும்(பிணிகளுக்கு-மருந்தாய் - தப்பா-தப்பாத-மரத்தற்று- மரத்தை ஒக்கும், எ,று. (கருத்து) செல்வம் பெரியோ ரிடத் துண்டாகி லது மருந்தாகி மரத்துக்கொப்பாகும் என்பதாம்- ❊ ஆல் - அசை-எல்லா வுறுப்பு மென்றது மரத்துக்கு - இலை, பூ,காய், கனி, முதலானவைகளை செல்வத்துக்கு - அநுபவித்தற்குரிய பல பொருள்களை' தப்பாமையாவது - கொள்ளுதற்கரிய விடங்களிலே நின்றாவது, மறைந்துநின்றாவது, காலத்தால்வேறுபட்டாவது, பயன் படாமை. தன்குறைவைநோக்காமல் எல்லாவருத்தமும் தீர்க்கு மென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் உபகாரஞ்செய்பவனது பொருள்பயன்படுமாறு சொல்லப்பட்டது. (௭)

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார் .... ....... ..... ... *
கடனறி காட்சி யவர்..... ..... ..... ..... ..... ........*

(இ-ள்.) கடனறி-(தாம்) செய்பத்தகு மவைகளை அறிந்த-காட்சியவர்-இயற்கையறிவையுடையவர் - இடனில்பருவத்தும் - செல்வஞ்சுருங்கியகாலத்திலும்— ஒப்புரவிற்கு - உபகாரஞ் செய்தற்கு - ஒல்கார்;

தளரார், எ,று. (கருத்து) அறிவுடை யோர் வறுமை யினு முதவி செய்தற்குக் குறைவுபடார் என்பதாம். ❁ மற்றவைகளை யெல்லா ம்விட்டாலும் இதனைவிடா ரென்பதாம். (அ)

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை ....  ........ .. *
செய்யா தமைகலா வாறு ... .... .... .... ..... .....*

(இ-ள்.) நயனுடையான் - உபகாரஞ்செய்தலையுடையவன் - நல்கூ ர்ந்தானாதல் - வறுமைப்பட்டவனாகுதலாவது - செயும்-(ஒழியாமற்) செய்யும்-நீர்மை - குணத்தையுடைய அவ்வுபகாரங்களை - செய்யாது செய்யப்பெறாமல் - அமைகலாவாறு - வருந்து கின்ற வியல்பாம். எ,று. (கருத்து) உபகாரிவறியவனாகுதல் செய்யு முதவி செய்யா மையாலேதான் என்பதாம். ❁ தான் அநுபவிக்கப் படும் பொரு ள்களைப்பெறாமை அவனுக்கு வறுமை அல்லவென்பதாம். [இவை யிரண்டுபாட்டாலும் வறுமையால் ஒப்புரவுசெய்யாது விடத்தக்க தல்லவென்பது சொல்லப்பட்டது.] (கூ)

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன் ..... ........ *
விற்றுக்கோட் டக்க துடைத்து..... ......... ........... *

(இ-ள்.) ஒப்புரவினால் - உபகாரஞ்செய்தலினாலே - வருங்கேடெனி ன் (ஒருவனுக்குப்பொருட்) கேடுவருமென்பவருண்டாயின் - அஃ து - அக்கேடானது - ஒருவன் - ஒருவன் - விற்று - (தன்னை விற்றாயினு ம்) - கொட்டக்கதுடைத்து - வாங்குந்தகுதியையுடையதாகும், எ, று. (கருத்து) உதவிசெய்தலாற் கேடுவருமெனி லவ்வுதவியைத் தன்னை விற்றாகினுஞ் செய்யக்கடவன் என்பதாம்- ❁ தன்னைவிற்று வாங்க ப்படுவதொருபொருள் - இல்லைபாயினும் இக்கேடுபுகழையுண்டா க்கலால் அதுவும் செயப்படுமென்றது. [இதனாலே ஒப்புர வினாலே கெடுவது கேடல்லவென்பது சொல்லப்பட்டது.] (ய)



## உங, ஆம்- அதி- ஈகை.



அஃதாவது-வறியவராய் இரந்தவர்க்கு இல்லை யென்னாமல் கொடுத் தல். இது மறுமையைக் குறித்ததாகலின் இம்மையைக்குறித்த ஒப்புரவறிதலின் பின் வைக்கப்பட்டது.

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்.... ..... ... *
குறியெதிர்ப்பை நீரதுடைத்து..... ........ ..... ... *

(இ-ள்.) வறியார்க்கு- ஒருபொருளுமில்லாதவர்க்கு - ஒன்று-(அவ ர்வேண்டிய) தொன்றை - ஈவதே-கொடுத்தலே- ஈகை - (பிறர்க்குக் கொடுத்தலாகும். — மற்றெல்லாம்- (அதுநீங்கலாகிய) எலலாக்கொ டையும்-குறிமெதிர்ப்பை - குறிக்கப்பட்ட பின்வரும்பயனோடுகூடி ய-நீரது - குணத்தை உடைய தாகும். எ,று. (கருத்து) தரித்தி ரருக்குக் கொடுத்தலே கொடையாகும். மற்றவர் களுக் குக் கொ டுத்தல் பின்வாங்கிக்கொள்ளும் பயனாகும் என்ப தாம். ❁ அதுநீ ங்கலாகிய கொடை- வறியவரல்லாதவர்க்கு ஒருபயனை நோக்கிக்கொ டுத்தல். நீரது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. பின்னுமத ம்மிடத்தே வருதலால் குறியெதிர்ப்பை நீரதுடைத்தென்றார். [இ தனால் ஈகையினது இலக்கணம் அறிவிக்கப்பட்டது. (க)

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக...... ........ ........*
மில்லெனினு மீதலே நன்று........... ........ .... . . *

(இ-ள்.) கொளல்-இரத்தல் - நல்லாறெனினும் - (மேலுல கத்துக் கு)நல்வழியென்பவர் உண்டாயினும்-(அது)தீது-குற்றமாம். (கொ டுத்தவர்க்கு) மேலுலகம்-அந்தமேலுல கத்தையடைதல் - இல் லெனி னும்-இல்லையென்பவர் உண்டாயினும்-ஈதலே-கொடுத்தலே - நன்று நல்லதாம். எ,று. (கருத்து) யாசித்தல்நல்லவழி யென்றாலும் வாங்கு தல்குற்றமே, கொடுத்தலாலே முத்தியில்லை யென்றாலுங் கொடுத்த லேநல்லது என்பதாம். ❁ எனினு மென்பன இரண்டும் அப்படிச் சொல் வாரில்லாமையைக் காட்டிநின்றது. ஏகாரத் தால் பிறவறங்க ளில்ஈகைசிறந்ததென்பது பெறப்பட்டது. நல்லதுசொல்லவந்தவர் தீயதும் உடன் சொல்லினர். (உ)

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்..... ........ .....*
குலனுடையான் கண்ணே யுள ........................ ....... *

(இ-ள்.) இலனென்னும்- வறியேனென்று (இரப்பவன்) சொல்லு ம்-எவ்வம்-இழிவை - உரையாமை- (பிறரிடத்தே) சொல் லாமையும் (அதனைத்தன்னிடத்தேசொன்னவர்க்கு) ஈதல்-(இல்லையென்னமற்) கொடுத்தலும்- (ஆகியவிரண்டும்)- குலனுடையான் கண்ணே - நல்ல குடியிற்பிறந்தவனிடத்தே - உள-உண்டாயிருக்கும். எ,று. (கருத் து) நற்குடியிற் பிறந்தவரிடத்தில் இல்லையென்னுமையுங் கொடுத் தலுமுண்டு என்பதாம். ❁ முன்பாட்டிலே தீதெனப் பட்டதைச் செய்யாமைக்கும், நன்றெனப்பட்டதைச்செய் தற்கும், உரியவனை அறிவித்தபடி. (௩)

இன்னா திரக்கப் படுத லிரந்தவ................. ..........*
ரின்முகங் காணு மளவு................ ......... ........*

(இ-ள்.) (இரந்தலேயல்லாமல்) - இரக்கப்படுதல் - இரக்கப் படுதலும் - இன்னாது - இன்பஞ்செய்வதன்று - இரந்தவர் - (ஒருபொருளை) இரந்தவராது - இன் (அது பெற்றதனால்) இனிதாகிய - முகம் - முகத்தை காணுமளவு - பார்க்குமளவும். எ-று. (கருத்து) இரந்தவரினிய முகத்தைக்காணுமளவுந் துன்பம் என்பதாம். ❋ உம்மையிரண்டும்வருவிக்கப்பட்டன - இரக்கப்படுதல் - இரப்பவர்க்குக் கொடுப்பேனென்றிருத்தல் - எல்லாமிரப்பவர்க்கு ஒன்று கொடுக்கக் கூடாமை நேரிடுமோமென்னும் அச்சத்தைக்குறித்து அதனை இன்னாதென்றார். எனவே எல்லாப்பொருளும் கொடுக்கவேண்டுமென்றதாயிற்று. (௪)

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை ................ ❋
மாற்றுவா ராற்றலிற் பின் .... .... .... ........... ........ ❋

(இ-ள்-) ஆற்றுவார் - (தவத்தால்) வல்லவராவோருக்கு - ஆற்றல் - வல்லமையாவது - பசியாற்றல் - [தம்மை அடைந்த] பசியைப் பொறுத்தலாம் - (அவ்வல்லமைதான்) - அப்பசியை - அப்படிப் பொறுத்தற்கரியபசியை - மாற்றுவார் - (கொடையினாலே) நீக்குவோரது - ஆற்றலிற்பின் - வல்லமைக்குப்பின். எ-று. (கருத்து) தவத்தோர்க்குப் பசியைப்பொறுத்தல் வல்லமையாம். வல்லமையினும் பசியையாற்றுவோர் வல்லமைபெரிதாம் என்பதாம். ❋ தாமும்பசித்துப் பிறருக்கும் அதுதீர்க்க மாட்டாதவரது வல்லமையைக் காட்டிலும் தாமும்பசியாது பிறருக்கும் அதுதீர்ப்பவரது வல்லமைநன்மையென்பதாம்

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன் .................. ❋
பெற்றான் பொருள்வைப் புழி .. ........ ........ ........ ❋

(இ-ள்.) அற்றார் - வறியவரது - அழிபசி - மிகுந்தபசியை - தீர்த்தல் - (அறநோக்கித்) தீர்க்கக்கடவன் - அஃது - அவ்வறம் - பொருள்பெற்றானொருவன் - பொருள்படைத்தவனுக்கு வொருவன் - வைப்புழி - (அப்பொருளைத்தனக்குதவ) வைக்குமிடம். (ஆதலால்.) எ-று. (கருத்து) பொருள்பெற்றவன் வறியவர்பசியைத்தீர்த்தலே யவன்பொருள் வைக்குமிடம் என்பதாம். ❋ எல்லா நன்மைகளும் அழிய வருதலால் அழிபசியென்றார். அற்றாரழிபசி தீர்த்தபொருள் பின் தனக்கேவந்து உதவுமென்பதாம். (௬)

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந் .............. ❋
தீப்பிணி தீண்டலரிது ........ ........ .... .... ......... ❋

(இ-ள்.) பாத்து - எந்நாளும்) பகுத்து ஊண் - உண்ணுதல் - மரீஇயவனை - பழகியவனை - பசியென்னும் - பசியெனப்படும் - தீப்பிணி - தீயநோய் - தீண்டலரிது - தீண்டுதலில்லை. எ-று. (கருத்து) பிறர்க்கிட்டுண்ணுவோனைப் பசிநோய்தீண்டாது என்பதாம். ❋ வெவ்விடம்பி

மேலநின்று ஞானத்தையும், ஆசாரத்தையுங் கெடுத்து- அதனால்பின் வரும் உடம்புகளுக்கும் துன்பஞ்செய்தலால் தீப்பிணியெனப்பட்டது. தனக்குமருந்தவன் தானேயாகையால் பசிப்பிணிசேராதெல்பதாம். [இவ்வஆறுபாட்டாலும் ஈதலின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (ரு)

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை ......... *
வைத்திழக்கு வன்க ணவர் ......... *

(இ-ள்) தாமுடைமை - தாமுடையபொருளை—வைத்து-(கொடாது)வைத்து-(பின்னே)-இழக்கும்- இழந்துவிடும் - வன்கணவர் அருளிலாதவர்- ஈத்து- (வறியவர்க்கு) வேண்டிய (பொருள்களைக்) கொடுத்து-உவக்கும்-(அவர்) மகிழ்தலினால் (அருளுடையாரடையும்)-இன்பம்-மகிழ்ச்சியை- அறியார்கொல் - கண்டறியாரோ. எ-று. (கருத்து) பொருளைத்தேடிவைத் திழப்பவர் கொடுத்துமகிழுமின்பத்தை யறியார் என்பதாம். ✻ ஈந்தென்பது எதுகைநோக்கி ஈத்தென்றாயிற்று. அறிந்தாராயின் தாமும் அவ் வின்பத்தை அநுபவிப்பாரேயல்லாமல் வைத்திழவாரென்பது கருத்து. (அ)

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய ......... *
தாமே தமிய ருணல் ......... *

(இ-ள்.) நிரப்பிய - (பொருளின்குறைவை) நிறைக்கவேண்டி-(இரந்தவர்க்குக்கொடாமல்)-தாமே-தாமே- தமியர் - தனித்தவராகி- உணல்-உண்ணுதலானது-(ஒருவருக்கு)- மன்ற-நிச்சயமாக- இரத்தலின்-(பிறரிடத்தேபோய்)இரத்தலினும்-இன்னாது-துன்பஞ்செய்வதாம். எ, று. (கருத்து) பிறர்க்குக்கொடாமல் தாமேயுண்ணுதல் யாசிப்பதினுந் துன்பம் என்பதாம். ✻ பொருளின் குறையைநிறைத்தலாவது. ஒவ்வொரு தொகையைக் குறித்து அவ்வளவுசம்பாதிப்போமென்று அத்தொழிலையே மேற்கொண்டு உலோபஞ் செய்து சேர்த்தல் தனித்தல்-பிறரைச்சேராமை. இரத்தலுக்கு உள்ளது அப்போதையிழிவே - பின்னேவறுமையில்லை - தனித்துண்ணுதலுக்கு அவ்விரண்டும்உண்டாகுமாதலால் இரத்தலின்னாதென்றார். (கூ)

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ ......... *
மீத லியையாக் கடை ......... *

(இ-ள்.) (ஒருவனுக்கு) சாதலின் - இறத்தல்போல் - இன்னாதது- துன்பஞ்செய்வதொன்று-இல்லை-இல்லை- அதூஉம்- அப்படிப்பட்ட இறத்தலும் - ஈதல் - (வறியவர்க்குக்) கொடுத்தல் இயையாக்கடை-முடியாதவிடத்து-இனிது இன்பஞ்செய்வதாகும்- எ, று. (கருத்து)

இறத்தலைவிடத் துன்பமில்லை. இறந்தவர்க்குக் கொடாவிடத் திறத்தலேயின்பம் என்பதாம். ❁ பிறருக்குப் பயன்படாத உடற்சுமை நீங்குதலால்-இனிதென்றார். [இவைமூன்றுபாட்டாலும் ஈயாமையின் குற்றம்சொல்லப்பட்டது.] (ய)



## உச—ஆம்—அதி—புகழ்.



அஃதாவது-இல்வாழ்க்கைமுதல் ஈகை ஈறுகச் சொல்லப்பட்ட இல்லறத்தில் தவறாதவர்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகத்திலே செய்தபடியே நிற்பதாகியகீர்த்தியாம். இதுபெரும்பாலும் ஈகைபற்றிவருதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

ஈதலிசைபட வாழ்த லதுவல்ல................ ❁

தூதிய மில்லை யுயிர்க்கு.............................. ❁

(இ-ள்.) ஈதல்-(வறியவர்க்குக்)கொடுத்தலினாலே-இசைபட-புகழுண்டாக-வாழ்தல்-வாழ்க்கடவர்- அதுவல்லது - அப்புகழல்லாமல்-உயிர்க்கு-(மக்க)ளுயிர்க்கு-ஊதியம் - வேறுபயன் - இல்லை-இல்லை-(ஆகலால்.) எ - று. (கருத்து) கொடுத்தலாற் கீர்த்தியுண்டாக வாழக்கடவர்- அக்கீர்த்தியையல்லாமல் மக்களுயிர்க்கு இலாபமில்லை என்பதாம். ❁ இசைபடவாழுதற்குக் கல்வி ஆண்மை முதலாகியவேறு காரணங்களும் இருக்கினும் ஈகை சிறந்ததாதலால் எடுத்துச்சொல்லப்பட்டது. (க)

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்....... ❁

றீவார் மேனிற்கும் புகழ்.................................... ❁

(இ-ள்.) உரைப்பார்- (உலகத்திலேஒன்றை)உரைப்பவரால்-உரைப்பவையெல்லாம்- உரைக்கப்படுமவைகளெல்லாம் - இரப்பார்க்கு (வறுமையால்)இரப்பவர்க்கு—ஒன்று - (அவர்வேண்டிய) தொன்றை-ஈவார்மேல்-கொடுப்பவரிடத்தே-நிற்கும்- நிற்கும் - புகழ்-கீர்த்திகளாம். எ-று. (கருத்து) கொடுப்பவரிடத்தே கீர்த்தி நிற்கும் என்பதாம். ❁ புகழ்தான் உரையும், பாட்டும்; என இருவகைப் படும். அவற்றுள்-உரைப்பாருரைப்பவையென எல்லார்க்கும் உரியவழக்கத்தையே எடுத்தாராகினும் இனம்பற்றிப் புலவர்க்கே உரியவழக்கத்தையே எடுத்தாராகினும் இனம்பற்றிப் புலவர்க்கே உரியபாட்டும் கொள்ளப்படும் படவே- பாடுவார் பாடுவவெல்லா மிரப்பார்க் கொன் றீவார் மேனிற்கும் புகழ். என்பதும் பெற்றும். புகழின் காரணங்களிலீதல் சிறந்தமை இதனுள்ளுங்காண்க. (உ)

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற் ............ ... .........*
பொன்றாது நிற்பதொன் றில் ............ ... .............*

(இ-ள்.) ஒன்றா-தனக்கு இணையில்லையாக - உயர்ந்த-ஓங்கிய-புகழல்லால்-கீர்த்தியல்லாமல்-உலகத்து-உலகத்திலே-பொன்றாது-அழியாமல்-நிற்பது-நிலைபெறுவது-ஒன்று-வேறொன்று-இல்-இல்லை. எ-று. (கருத்து) உலகத்திற் புகழையல்லாது நிற்பதொன்றில்லை என்பதாம். ❀ தனக்கு இணையில்லையாக வோங்குதலாவது:- கொடுத்தற்கரிய-உயிரையும், உறுப்பையும், பொருளையும், கொடுத்தமைபற்றிவருதலால் தன்னோடு ஒப்பது இல்லாமல் தானே உயர்தல். அப்படிப்பட்ட புகழையே மனிதராய்ப் பிறந்தவன் சம்பாதிக்க வேண்டுமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் புகழதுசிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப் ............ ......*
போற்றாது புத்தே ளுலகு ............ ... ............ *

(இ-ள்.) (ஒருவன்)-நிலவரை-பூமியினெல்லையில்-நீள்புகழ்-அழியாது நிற்கும்புகழை-ஆற்றின்-செய்வானாயின்-புத்தேளுலகு-தெய்வலோகமானது-(அவனையல்லாமல்)-புலவரை-(தன்னை அடைந்திருக்கிற) ஞானிகளை-போற்றாது-பேணாது. எ-று. (கருத்து) உலகிலழியாது நிற்கும்புகழை யொருவன் செய்வானாகில் தேவலோகந் தேவர்களைத் துதியாது என்பதாம். ❀ இவன்போல் அவர் புகழ்வடிவால் இவ்வுலகத்தையும், தேவவடிவால் அவ்வுலகத்தையும், ஒருசேர அடையாமல்புலவரைப்போற்றாதுபுத்தேளுலகென்றார். (௪)

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்... ........ ......*
வித்தகர்க் கல்லா லரிது............ ............ . .........*

(இ-ள்.) வித்தகர்க்கல்லால் - திறமையையுடையவர்க்கு அல்லாமல்-(மற்றவர்க்கு)-நத்தம்-ஆகும்-(புகழுடம்பிற்கு) பெருக்கமாகும்-கேடும்-வறுமையும்-அரிது-இல்லை - உளதாங்கு-(அப்புகழுடம்பு) நிலைபெறுவதாகும்-சாக்காடும்-மரணமும் - அரிது-இல்லை. எ-று. (கருத்து) அறிவில்லார்க்குப் புகழுடம்பிற்குப் பெருக்கமாகும் வறுமையும் அவ்வுடம்பு நிலைபெறுவதாகு மரணமுமில்லையென்பதாம். ❀ நந்து என்னு முதனிலைத் தொழிற்பெயர் - நத்து என விகாரப்பட்டு அம்விகுதி பெற்றுவந்தது-போல்- உரையசை. ஆகும்- அரிது- இவற்றைமுன்னுங் கூட்டப்பட்டன. பெருக்கமாகுங் கேடாவது-புகழுடம்பு செல்வத்தை அடைதற்குப் பூதவுடம்பு வறுமைப்படல். நிலைபெறுவதாகு மரணமாவது; புகழுடம்பு நிலைபெறற்குப் பூதவுட

ம்புஇறத்தல். நிலையில்லாத வுடம்பை வருத்தியும் விட்டும் நிலையான புகழை வளர்த்தலும் நிறுத்தலும் பிறர்க்கு முடியாமையால் வித்தகர்க்கல்லாலரிதென்றார் [இவை யிரண்டு பாட்டாலும் புகழுடையாரதுமேன்மைசொல்லப்பட்டது.] (௫)

தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார் .... *
தோன்றலிற் றோன்றாமை நன்று ......... ..... *

(இ-ள்.) தோன்றின்-(மனிதராய்ப்) பிறந்தால்-புகழொடு- புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு - தோன்றுக-பிறக்கக்கடவர்.—அஃதிலார்-அக்குணமில்லாதவர் - தோன்றலின்(மனிதராய்ப்)பிறத்தலினும்-தோன்றாமை - பிறவாமையானது- [விலங்குகளாய்ப்பிறத்தலன்றபடி] - நன்று-நல்லது. எ,று. (கருத்து)பிறந்தாற் புகழோடுபிறக்கக்கடவர். அவ்வாறில்லாதவர்கள் பிறவாமையே நல்லது என்பதாம். ❋ புகழுக்கு ஏதுவைப்புகழென்றலால் ஆகுபெயர். இலாரென்றதனால் மனிதரா யென்பதும், மனிதராய்ப் பிறவாமை யென்ற அருத்தாபத்தியினாலே விலங்காய்ப் பிறத்தலென்பதும், கொள்ளப்பட்டன. இகழ்வாரில்லாமையால் நன்றென்றார். (௬)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை ......... ......... *
யிகழ்வாரை நோவ தெவன் ..... .... ......... ..... .... *

(இ-ள்.) புகழ்பட-(தமக்குப்) புகழுண்டாக - வாழாதார் - வாழ்மாட்டாதவர்- (அதுபற்றிப் பிறரிகழ்ந்தவிடத்தே) - தந்நோவார்- (இவ்விகழ்ச்சி நமது மாட்டாமையால் வந்ததென்று) தம்மைநோவாதவராகி-தம்மை-தம்மை - இகழ்வாரை- நிந்திப்பவரை - நோவது-நொந்துகொள்வது - எவன்-என்னநினைத்து - எ,று. (கருத்து) புகழுண்டாகவாழாதவர் தம்மையிகழ்ந்தவரை நொந்துகொள்வதென்ன என்பதாம். ❋ புகழ்பட வாழவேண்டியதாயிருக்க அப்படி வாழமாட்டாத குற்றம்பற்றிப் பிறர் இகழ்வது ஒருபக்ஷமாகலால்- இகழ்வாரை நோவதெவனென்றார். (௭)

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு ..*
மெச்சம்பெறா விடின் ..... ....... ..... ..... ....... *

(இ-ள்.) இசையென்னுமெச்சம் - புகழென்னும் எச்சத்தை-(பெறவேண்டியிருக்க)- பெறாவிடின்- (அதனை) பெறாது-விடுவாராயின்- வையத்தார்க்கெல்லாம் - பூமியிலுள்ளார்க் கெல்லாம் - வசை-(அதுதானே) வசையாகும்-என்ப-என்று (நல்லோர்) சொல்லுவர். எ,று.) (கருத்து) ஒருவன் கீர்த்தியென்னும் பிள்ளையைப் பெறாமலிருப்பானாகில் உலகிற்குவசையாய்என்பதாம். ❋ செய்தவர் இறந்துபோகத்

தான் இறவாமல் நிற்கையால் புகழை எச்சமென்றார். இகழப்படுதற்கு மற்றொருகுற்றம் வேண்டா மென்பது கருத்து. (அ)

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா............ *
யாக்கை பொறுத்த நிலம்..... ..... ..... ..... ..... ..... *

(இ-ள்.) இசையிலா-புகழில்லாத - யாக்கை - உடம்பை-பொறுத்த-சுமந்த-நிலம்-நிலத்தில் - வசையிலா-பழிப்பில்லாத - வண்பயன்-வளப்பத்தையுடையவிளைவு - குன்றும்-குறையும். எ-று. (கருத்து) கீர்த்தியில்லா வுடலைச்சுமந்த நிலத்தில் விளைவுகுறையும் என்பதாம். *உயிருண்டாயினும் அதனாலே பயன்கொள்ளாமையால்- யாக்கையென்றும்; அதுநிலத்துக்குப் பாரமாதலின் பொறுத்த லென்றும் சொல்லினர். விளைவுகுறைத்தற்கு ஏதுபாப சரீரத்தைச் சுமக்கின்ற வெறுப்பு. [இவை நான்குபாட்டாலும் புகழில்லோரது தாழ்வு சொல்லப்பட்டது.] (கூ)

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய ..... .......*
வாழ்வாரே வாழா தவர்......... ..... .... ..... .........*

(இ-ள்.) வசையொழிய- (தம்மிடத்து) வசையுண்டாகாமல் [புகழுண்டாகவென்றபடி] வாழ்வாரே-வாழ்பவரே -வாழ்வார்(உயிர்)வாழ்வோராவார்.— இசையொழிய - புகழுண்டாகாமல் [வசையுண்டாகவென்றபடி] - வாழ்வாரே-வாழ்பவரே - வாழாதவர் - இறந்தோராவார் எ-று. (கருத்து) கீர்த்தியுடன் வாழ்பவ ருயிரோடுவாழ்பவர். அகீர்த்தியோடு வாழ்பவ ரிறந்தவர் என்பதாம். * வசையென்பவென்னும்பாட்டில் - வசையொழிதல் புகழ்பெறுதலானதால்- இங்கே இசையொழிதல் - வசைபெறுத லாயிற்று, முன்பாட்டிலே புகழில்லாதவுடம்பென்றதனை விளக்கியவாறு. [இதனால் அம்மேன்மையுந்தாழ்வும் உடன்சொல்லப்பட்டன.] மறுமைப்பயன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படுமென முன்னே சொல்லப்பட்டமையால் இல்லறத்துக்கு இவ்வுலகத்திலே புகழும் தேவருலகத்திலே போகமும் பயனென்பது கொள்ளப்பட்டது. (ய)

இனி மனுமுதலிய அறநூல்களால் பொதுவாகக் கூறப்பட்ட
இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக் கூறிய இவற்று
ள்ளே அடங்கும்அஃது அறிந் தடக்கிக்கொள்க,
இல்லறவியல் முற்றுப்பெற்றது. அஉ-குறள் - உாசய.



# துறவறவியல்.

இனிமுறைப்படித்துறவறம் சொல்லத் தொடங்கினார்.

துறவறமாவது - முன்சொல்லப் பட்ட இல்லறத்தின் வழுவாது நடந்து அறிவுடையாராய்ப் - பிறப்பினை அஞ்சி- முத்திபெறுதற் பொருட்டுத் துறந்தவர்க்கு உரித்தாகிய அறமாம்.
அதுவிரதமும், ஞானமும், எனவிரு வகைப்படும்.

## விரதம்.

அதாவது-வினைமாசுதீர்ந்து - அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு- இன்ன அறங்களைச்செய்வேனென்றும், இன்ன பாவங்களைவிடுவேனென்றும், தமது வல்லமைக்கு ஏற்க அளவுசெய்து கொண்டு துறந்தோராலே காப்பாற்றப்படுவது. அவ்விரதங்கள் அளவில்லாதவையாயிருக்கினும் அவை பலவற்றையும் தம்முள்ளே அடங்கிநிற்குஞ் சிறப்புடைய சிலவற்றை இங்கே சொல்லத் தொடங்கி முதலிலே அருளுடைமையை அருளிச்செய்கிறார்.

## ௨௫-ஆம்-அதி-அருளுடைமை.

அஃதாவது-தொடர்புபற்றாமல் இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணையையுடையராதலாம். இல்லறத்துக்கு அன்புடைமைபோல் இது துறவறத்துக்குச் சிறத்தலால் முன் சொல்லப் பட்டது.

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.... ..... ..... ..... ..........*

(இ-ள்.) பொருட்செல்வம் - பொருளால் வருஞ் செல்வங்கள், — பூரியார்கண்ணும்-இழிந்தவரிடத்தும் - உள-இருக்கின்றன- (ஆதலால்).செல்வத்துள்-செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்து எடுக்கப்பட்ட-செல்வம் - செல்வமானது-அருட்செல்வம் -அருளால்வருஞ் செல்வமாம் எ, று. (கருத்து) கிருபையால் வருஞ்செல்வமேசெல்வமாகும்பொருளால் வருஞ்செல்வுங் கீழோரிடத்து முண்டென்பதாம்

*அருளால் வருஞ்செல்வமாவது -உயிர்களைக்காப்பாற்றி அவ்வறத்தால் மேன்படுதலாம். இழிந்தோரிடத்து இல்லாமல் உயர்ந்தோரி

டத்துமாத்திரம் உள்ள அருட்செல்வமே சிறப்புடைய செல்வமென்றும், இழிந்தோரிடத்தும் உள்ள மற்றைப் பொருட் செல்வங்கள்சிறப்புடையன அல்லவென்றும், சொல்லியதாம். (௧)

நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றற் ...... ...... *
றேரினு மஃதே துணை ...... ...... *

(இ-ள்-) (நல்லாற்றால்)-நல்வழியிலேநின்று-நாடி- (அளவைகளாலும் யுத்தியாலும் நமக்குத் துணையாகும் அறம் யாதென்று ஆராய்ந்து-அருளாள்க- அருளுடையாராகக்கடவர்;— பல்லாற்றால் -(ஒன்றுக்குஒன்று ஒத்திராத) பலசமயவழிகளால்- தேரினும்- ஆராய்ந்தாலும்-துணை-துணையாவது- அஃதே-அவ்வருளே [வேறொன்றில்லையென்றபடி] எ-று. (கருத்து) நல்வழியிலேநின்று அருடையை யாளக்கடவர்- பலவழியில்லாராயினு மவ்வருளே துணை என்ப தாம். ஐ அளவைகளாவன-பொறிகளாலே காணும் காட்சியும், குறிகளாலே ஆலோசித்து அறியும் அனுமானமும், * கருத்தா மொழியாகிய ஆகமமும், என மூன்று வகைப்படும். ஒப்புமைபற்றி அறிகிற உவமானமும், இப்படியல்லாமற்போனால் இது கூடாதென்று அறியும் அருத்தாபத்தியும், ஐ உண்மைக்கு எதிராகிய இல்லாமையும், எனவிவையுங் கூட்டி ஆறென்பாரும் உண்டு. இவையும் அம்மூன்றுள் அடங்கிக்கொள்ளப்படும் யுத்தியாவது இதுகூடும் இதுகூடாதுஎனத்தன்னிடத்தே தோன்றுவது.— ஒன்றுக்கு ஒன்று ஒத்திராமை யாவது-மதவேறுபாட்டால் அளவைகளும், பொருள்களும், தம்முள்ளே மாறுகொள்ளுதலாம். அப்படியிருந்தாலும் - அருள் துணையென்பது எல்லாருக்கும் ஒத்திருக்குமென்பதாம். உயிரைவிட்டு நீங்காமல்இருமையிலும் உதவலால் துணையென்றார். [இவை யிரண்டு பாட்டாலும் அருளது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௨)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த ...... *
வின்னா வுலகம் புகல் ...... ...... *

(இ-ள்-) இருள்சேர்ந்த-அந்தகாரந்தங்கிய - இன்னாவுலகம்- துன்பவுலகத்திலே-புகல்-(போய்ப்) புகுதல், அருள்சேர்ந்த - அருளைச்சேர்ந்த-நெஞ்சினார்க்கு - நெஞ்சையுடையவர்க்கு-இல்லை- இல்லை-(எ-று- (கருத்து) அருளைபொருந்திய மனமுடையோர்க்கு நரகத்திற்புகுதலில்லை என்பதாம். ஐ இருள்சேர்ந்த வின்னாவுலக மென்றது. நெருங்கிய விருளையுடையதாய்த் தன்னை அடைந்தவர்க்குத் துன்ப

---

ஐ புகையினாலே நெருப்பை அறிவது முதலானவை.
* பகலுண்ணான் பருத்திருக்கை நோக்கி இரவிலுண்பானென வறிவதுபோல்வன.

ஞ்செய்வ தொருநரகத்தை அதுகீழுலகத்துள் ஓரிடமாகலின்உலக மெனப்பட்டது. (௩)

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப........................ *
தன்னுயி ரஞ்சும் வினை................................................ *

(இ-ள்.) மன்னுயிர்-நிலைபேறுடைய உயிர்களை- ஓம்பி- காப்பாற்றி-அருளாள்வாற்கு (அவைகளிடத்தே) அருளுடையனாயிருப்பவனுக்கு-தன்னுயிர்-தன்னுடையவுயிர் - அஞ்சும்-அஞ்சுதற்கு ஏதுவாகிய வினை-பாவங்களானவை - இல் உண்டாகா.— என்ப-என்று. (அறிந்தோர்)-சொல்லுவர். எ,று- (கருத்து) பிறவுயிர்களிடத்துக் கிருபையுடையவனுக்குத் தன்னுயிர் பயப்படும் பாவமில்லை என்பதாம். ※ உயிர்களெல்லாம் - நித்தியமாதலின் மன்னுயிரென்றார். அஞ்சுதல் துன்பநோக்கி அஞ்சுதல். அப்படிப்பட்ட அறமுடையவன் கொலை முதலாகிய பாவங்களைச் செய்யானெனவே மறுமையிலே நரகத்தை அடையாமைக்கு ஏதுசொல்லப்பட்டதாயிற்று. (௪)

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு.. ........................ *
மல்லன்மா ஞாலங் கரி.................................................. *

(இ,ள்-) அருளாள்வார்க்கு- அருளுடையவருக்கு-( இம்மையிலும்) அல்லல்-ஒருதுன்பமானது-இல்லை - உண்டாகாது.— (அதற்கு) வளிவழங்கும் காற்றுலாவுகின்ற - மல்லல்- வளப்பத்தையுடைய- மா பெரிய-ஞாலம் - பூமியில்வாழ்வோர்- கரி- சாக்ஷியாவர். எ,று. (கருத்து) கிருபையுடையவர்களுக்குத் துன்பமில்லை என்பதாம். ※சாக்ஷியாவார்-தாம்கண்டு தெளிந்த பொருளைக் காணாதார்க்குத் தெளிவித்தற்கு உரியவர். அருளாள்வார்க்கு அல்லலுண்டாக ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் ஒருவருங்கண்டறிவாரில்லாமையால்-உலகத்தாரனைவரும் சாட்சியாமென்றற்கு ஞாலங்கரியென்றார். எனவே இம்மையிலென்பது பெற்றாம். ஞாலத்தாரை ஞாலமெனலால் ஆகுபெயர். [இவைமூன்றுபாட்டாலும் அருளுடையவர்க்கு இருமையிலும் துன்பமில்லாமை சொல்லப்பட்டது.] (௫)

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி..... *
யல்லவை செய்தொழுகு வார்.......................... *

(இ-ள்.) அருணீங்கி(உயிர்களிடத்துச்செய்யவேண்டும்) அருளை விட்டு-அல்லவை - விடவேண்டுங் கொடுமைகளை - செய்து-செய்து-ஒழுகுவார்-நடப்பாரை-பொருணீங்கி- (முன்பிறப்பிலேயும்) உறுதிப்பொருளைத்தேடாமல் - பொச்சாந்தார் தாம் துன்பப்படுகின்றமையை) மறந்தவர்-என்ப - (நல்லோர்) - சொல்லுவார். எ,று. (க

ருத்து) அருளைவிட்டுப் பாவஞ்செய்பவரை மறுமைப் பொருளை மறந்தவரென்பர் என்பதாம். ❁ உறுதிப்பொருள்-அறம்- துன்பப் படுதல்-தன்னைபற்றிவருவது முதலாகிய பிறவித்துன்ப மூன்றையும் அனுபவித்தலாம். மறவாதிருந்தாராயின் அப்படி நடவாரென்பது கருத்து. (௬)

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க் …………… ❋
இவ்வுலக மில்லா கியாங்கு …………………………… ❋

(இ-ள்.] பொருளில்லார்க்கு - பொருளில்லாதவருக்கு-இவ்வுலகம் இவ்வுலகத்தினின்பம் - இல்லாகியாங்கு-இல்லாதமைபோல் - அருளில்லார்க்கு-(உயிர்களின்மேல்) அருளில்லாதவர்க்கு - அவ்வுலகம்-அவ்வுலகத்தினின்பம் - இல்லை-இல்லை. எ,று. (கருத்து)(பொருளில்லாதவர்க் கிவ்வுலகத்தின்ப மில்லாமைபோல் அருளில்லாதவர்க் கவ்வுலகத்தின்பமில்லை என்பதாம். ❁ உலகமிரண்டும் அவற்றின்பங்களுக்குஆகுதலால்- ஆகுபெயர்கள். எப்படி இந்தவுலக வின்பத் துக்குப் பொருளோ அப்படியே அந்த வுலகவின்பத்துக்கு அருள் காரணமென்பதாயிற்று. (௭)

பொருளற்றார் பூப்பரொருகா லருளற்றா …………… ❋
ரற்றார்மற் றாத லரிது ……………………………… ❋

(இ-ள்.)பொருளற்றார் - (ஊழினாலே) வறுமைஅடைந்தவர்) (அது நீங்கி)ஒருகால்-(பின்) னொருகாலத்தில்-பூப்பர் - (செல்வத்தினால்) பொலிவார்.— (அப்படியல்லாமல்) - அருளற்றார்- அருளில்லாதவர்-(பாவம்நீங்காமையால்)— அற்றார்-அழிந்தவரோ- மற்று-பின்னொருகாலத்திலும் - ஆதலரிது- ஆகுதலில்லை. எ,று. (கருத்து) பொருளற்றவர் ஒருகாலத்திற் செல்வம்பெறுவர் அருளற்றவர் அழிந் தவரோஎன்பதாம். ❁ முன்பாட்டில் ஒருவிதத்தால் பொருளில்லாமையோடு அருளில்லாமையை ஒப்பாக்கிச் சொன்னாராதலால் இப்பாட்டில் மற்றொருவிதத்தினாலே அதனைமறுத்து அதிலும் கொடிதென்பது சொல்லியபடி. (௮)

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி …❋
னருளாதான் செய்யு மறம் ……………………… ❋

(இ-ள்.)அருளாதான்-(உயிர்களிடத்தே) அருள்செய்யாதவன்-செய்யும்-செய்யும்-அறம்-அறத்தை - தேரின்-ஆராயின் தெருளாதான்-ஞானமில்லாதவன் - மெய்ப்பொருள்-மெய்ந்நூலிற் சொல்லப்பட்ட பொருளை-கண்டற்றால்-(ஒருகால்) கண்டதுபோலும் எ,று. (கருத்து)அருளில்லாதவன் செய்யுந் தருமத்தை யாராய்ந்துபார்க்கில்மெய்ஞ்ஞானமில்லாதவ னுண்மைப் பொருளைக் கண்டாற் போலும்

என்பதாம். ❋ ஆல்-அசை. எப்படி நிலைபெற்ற ஞானமில்லாதவன் நடுவேமெய்ப்பொருளை உணர்ந்தால் அதனைத்தனது ஞானமில்லாமையாற்றானே அழித்துவிடுவானோ அப்படியே அருளில்லாதவன் நடுவே அறஞ்செய்தால் அதனைத் தன்னருளில்லாமையாற்றானே அழித்துவிடுவா னென்பதாயிற்று. ஆகவே மற்றெல்லா வறங்களுக்கும் அருளுடைமை மூலமென்பது பெறப்பட்டது. [இவை நான்குபாட்டாலும் அருளில்லாதவர்க்குவரும் குற்றம் சொல்லப்பட்டது.]

வலியார்முற்றன்னை நினைக்கதான் றன்னின் ................ ❋
மெலியார்மேற் செல்லு மிடத்து ................ ❋

(இ-ள்.) (அருளில்லாதவன்) - தன்னின்மெலியார்மேல்-தன்னினுமெலியவர்கள்மேல்-தான்-தான்-செல்லுமிடத்து-(வருத்துதற்குச்) செல்லுமிடத்து - வலியார்-(தன்னின்)வலியவர்-(தன்னைவருத்துதற்குவரும்போது)-முன்-(அவர்) முன்-தன்னை(அஞ்சிநிற்கும்) தனது நிலைமை-நினைக்க-நினைக்கக்கடவன் எ,று. (கருத்து)வலியவன் மெலியவனை வருத்தச்செல்லும்போது தன்னிலும்வலியவன்தன்னை வருத்தியதை நினைக்கக்கடவன் என்பதாம். ❋ மெலியாரெனினும் - அஃறிணைக்கும்கொள்க. அதனை நினைக்கவே இந்தவுயிருக்கும்அப்படியே அச்சமுண்டாகுமென்று அறிந்து அதன்மேல் அருளுடையவனாவா னென்பது கருத்து. [இதனாலே அருள்பிறத்தற்கு உபாயஞ்சொல்லப்பட்டது.] (௰)

❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋ ❋

## ௨௬-ஆம்-அதி-புலான்மறுத்தல்

அஃதாவது- ஊனுண்ணுதலை ஒழித்தலாம். கொலைப்பாவத்தைப்பின் உண்டாக்கலால் அதற்குக்காரணமாதலையும், முன்னும் அதனால்வருதலால் அதன்காரியமாதலையும், ஒருசேரவுடைத்தாகிய ஊனுண்ணுதல் அருளுடையார்க்கு இயைவது அன்றாகலின் அதனைவிலக்குதற்கு இது அருளுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தன்னூன்பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா ................ ❋
னெங்ஙன மாளு மருள் ................ ❋

(இ-ள்.) தன்னூன்-தன்னுடம்பை - பெருக்கற்கு- வளர்த்தற்பொருட்டு-தான்-தான்-பிறிதூன்-மற்றொன்றினுடம்பை- உண்பான்-தின்பவன்-எங்ஙனம் - எவ்வகையால்-அருள்-அருளை - ஆளும் - ஆளுவான் எ,று. (கருத்து) தன்னுடல் பெருக்கற்குப் பிறவுடலைத்தின்பவ

னெவ்வகையா லருளையுடையவனாவான் என்பதாம். ☼ பயனில்லாததன்னூன் வளர்த்தலைப்பயனென நினைத்து இக்கொடுமைசெய்வோனே அறிவில்லாத கொடியோனென்றதாயிற்று. எங்ஙனமாளுமருளென்பது ஆளானென்பது படநின்ற இகழ்ச்சிக்குறிப்பு. (௧)

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி...... *
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு ...... ......... ......... *

(இ-ள்-) பொருளாட்சி-பொருளினாலே பயன்கொள்ளுதல்-போற்றாதார்க்கு-(அதனைக் காப்பாற்றாதவருக்கு - இல்லை-இல்லையாம்-ஆங்கு-அதுபோல்- அருளாட்சி - அருளினாலே பயன்கொள்ளுதல்-ஊன்றின்பவர்க்கு-புல் லுண்டவர்க்கு - இல்லை-இல்லை, எ-று. (கருத்து) பொருளைக் காப்பாற்றா தவர்க்குப் பொருளின்ப மில்லாமைபோல அருளைக் காப்பாற்றாதார்க் கருளின்ப மில்லை என்பதாம்-☼ எப்படிப் பொருட்பயனை இழத்தற்கு அதனைக்காப்பாற்றாமையோ அப்படியே அருட்பயனை இழத்தற்கு ஊன்றினல் காரணமென்றதாயிற்று. [ஊன்றின்றாராயினும்உயிர்களுக்குஒருதீங்குநினையாராயின் அருளாளுதற்குக் குறைவில்லை யென்பாரை மறுத்து அது உண்டென்பது இவ்விரண்டுபாட்டாலும் சொல்லப் பட்டது] (எடுத்துக்காட்டுவமையணி.) (௨)

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற.. *
னுடல்சுவை யுண்டார் மனம்.... ........................ .... *

(இ-ள்.) ஒன்றன்-பிறிதோருயிரினது-உடல்- உடலை - சுவையுண்டார்-சுவைபடவுண்டவரது-மனம்-மனமானது - படைகொண்டார் கொலைக்கருவியைத் (தங்கையிலே) கொண்டவரது - நெஞ்சம்போல்-மனம்போல்-நன்றூக்காது - (கொலையைநோக்குவதல்லது) அருளைநோக்காது. எ-று. (கருத்து) ஊன்றின்பவர்களது மனமானது நன்மையை விரும்பாது என்பதாம். ☼ சுவைபடவுண்டல் - காயங்களால் இனியசுவைபடச் சமைத்து உண்டல்.—படை- வாள்முதலானவை. [இதனால் ஊன்றின்பாரதுமனம் தீங்குநினைத்தல் உபமான பிரமாணத்தினாலே சாதித்து முன்பாட்டிலே சொல்லியது உறுதி செய்யப்பட்டது.] (௩)

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்...... ..... *
பொருளல்ல தவ்வூன் றினல் ........ ............................ *

(இ-ள்.) அருள்- அருளானது-யாதெனின்-எதுவென்றால் - கொல்லாமை-கொலைசெய்யாமையாம்-அல்லது- அவ்வருளல்லாததானது யாதெனின்-எதுவென்றால்- கோறல் - கொல்லுதல்—(ஆதலால்)-அ

வீழூன்-அக்கொல்லுதலால்வந்தவூனை- தினல்-தின்னுதல் - பொருள
ல்லது-அறனல்லாததாம்-[பாவம்] எ, று. (கருத்து) கொல்லாமை
யேகிருபையாம். கொல்லுதலேபாவமாம் என்பதாம். ❋ கொல்லா
மையை அருளென்றும் - கொல்லுதலை அல்லதென்றும் - காரியங்க
ளைக் காரணங்களாகவும், ஊனின்கையாகிய காரணத்தைப் பாவ
மாகிய காரியமாகவும்; உபசரித்தார்.—அருளல்லது - கொடுமை.—
சிறப்புப்பற்றி - அறம்பொருளெனப்படுதலால் - பாவம் பொருளல்
லது எனப்பட்டது. (ச)

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண........................ ❋

வண்ணாத்தல் செய்யா தளறு.......................................... ❋

(இ-ள்.) உயிர்- சிலவகை யுயிர்கள்-நிலை-(உடம்புகளிலே) நிற்கை
ஊன்-ஊனை- உண்ணாமையுள்ளது - உண்ணாமை யென்னும்-அறத்
தினிடத்தது-(ஆதலால்)-உண்ண - (அந்நிலைகுலைய ஒருவன் அதனை)
உண்பானாயின்- அளறு- அவனை (விழுங்கிய)நரகமானது - அண்ணா
த்தல்செய்யாது-(பின் உமிழ்தற்கு) வாய்திறவாது. எ-று. (கருத்து)
ஒருவனூனுண்பானாயி னவனை நரகம் விழுங்கிவிடும் என்பதாம்.❋
உண்ணப்படுகிற விலங்குகள் இதனாலே குறைந்துபோக மற்றவை
பல்குதலால் - உண்ணாமையுள்ளதுயிர் நிலையென்றார்.—உண்ணவெ
ன்பது உண்ணினென்னும் பொருளில்வந்தது. [ஊனுண்டவன் அ
ப்பாவத்தினாலே நெடுங்காலம்நரகத்துள் அழுந்துவானென்பதாம்.
[கொலைப்பாவம் கொன்றவர்மேல் நிற்றலால் பின் ஊனுண்பார்க்கு
ப்பாவமில்லையென்பாரை மறுத்து அது உண்டென்பது இவையிர
ண்டியாட்டானும் சொல்லப்பட்டது.] (ரு)

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்...... .... ❋

விலைப்பொருட்டா லூன்றருவா ரில் .... ......................❋

(இ-ள்.) தினற்பொருட்டால்- தின்னுதல்காரணமாக-உலகு-உலக
த்தார்-கொள்ளாதெனின்-(ஊனைக்)கொள்ளாராயின் - விலைப்பொ
ருட்டால்-விலைப்பொருள்காரணமாக - ஊன்றருவார் - ஊனைவிற்பவ
ர்-யாரும்-எவரும்- இல் - இல்லை. எ-று. (கருத்து)ஊனைவாங்கு வாரி
ல்லாயினதை விற்பாரில்லை என்பதாம். ❋ [பின்னேஉண்டாவ தாகி
யஊனைத்தின்னுதல் அதற்குமுன்னேஉண்டாவதாகிய கொலைக்குக்கா
ரணமாகாமையால் தின்பார்க்குக் காரணத்தால் வரும்பாவம் இல்லை
யென்ற வாதியைநோக்கி அருத்தாபத்தி பிரமாணத்தினாலே காரண
மாகுதல் சாதித்தலின் இதனால் முன்பாட்டிலே சொல்லியது உறுதி
செய்யப்பட்டது.] (சா)

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்........ ......❋

புண்ண துணர்வார்ப் பெறின்.......................................❋

(இ-ள்.) புலால்-புலாலானது-பிறிதொன்றன் - வேறோருடம்பினது-புண்-புண்ணாகும்.—அது-அப்புலால்- அசுத்தமாயிருக்கையை-உணர்வார்- அறிவோரை-பெறின்-பெற்றால்- உண்ணாமைவேண்டும். (அப்புலாலை) உண்ணாதொழிய வேண்டும். எ-று. (கருத்து) பிறவுயிரின் புண்ணென்றறிந்தவர்களைப் பெற்றால் ஊனையுண்ணாதிருக்கவேண்டும் என்பதாம். ❁ அந்தமெய்ம்மையை அறியாமையால் அதனை உண்கின்றார் என்பதாம். [இதனால் யுத்தியினாலும் ஊனுண்ணல் இழிந்ததென்பது சொல்லப்பட்டது.] (எ)

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா ........................ *
ருயிரிற் றலைப்பிரிந்த வூன் ........................ *

(இ-ள்.) செயிரின்-(மயக்கமாகிய) குற்றத்தினின்றும்- தலைப்பிரிந்த-நீங்கிய-காட்சியார்- அறிவினையுடையவர்- உயிரின் - ஒருயிரினின்றும-தலைப்பிரிந்த-நீங்கிவந்த-ஊன்-ஊனை- உண்ணார் - தின்னார். எ-று.) (கருத்து) அறிவுடையோர் ஊன்தின்னார் என்பதாம். ❁ தலைப்பிரிவு-ஒருசொல்- பிணமென்று ஊனின் மெய்ம்மை தாமே அறிதலால் உண்ணாரென்றார். (அ)

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற ........................ *
னுயிர்செகுத் துண்ணாமை நன்று ........................ *

(இ-ள்.) அவி-(நெய்முதலாகிய) அவிகளை - சொரிந்து-(தீயினிடத்தே)பெய்து-ஆயிரம்வேட்டலின்- ஆயிரம்யாகஞ்செய்தலினும்-ஒன்றன்-ஒருவிலங்கினது - உயிர்-உயிரை-செகுத்து-போக்கி - உண்ணாமை-(அவ்வுயிர்நின்றவுடலை) உண்ணாமை நன்று-நல்லது. (எ-று.) (கருத்து) ஆயிரம்யாகஞ்செய்தலினும் புலாலைத்தின்னாமை நல்லது என்பதாம். ❁ அந்தயாகங்களால் வரும்பயனிலும் இந்தவிரதத்தால்வரும்பயன் பெரிதென்பதாம். (கூ)

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி ........................ *
யெல்லா வுயிருந் தொழும் ........................ *

(இ-ள்.) கொல்லான்-(ஒருயிரையுங் கொல்லாதவனுமாய்-புலாலை மறுத்தானை-புலாலையுமுண்ணாதவனை - எல்லாவுயிரும் - எல்லாவுயிர்களும்-கைகூப்பி - கைகுவித்து - தொழும்-வணங்கும் எ-று. (கருத்து ஊனைத்தின்னாதவனை யெல்லாவுயிரும்வணங்கும் என்பதாம் ❁ இவ்விரண்டறங்களையும் ஒருமிக்கவுடையவர்க்கு அல்லாமல் ஒன்றைமாத்திரம் உடையவர்க்கு அதனாற்பயனில்லை யாகலின் கொல்லாமையும் உடன்சொல்லினார். இப்பேரருளுடையவன் மறுமையிலேதேவரினும் உயர்ந்தவனாவனென அப்பயனது பெருமை சொல்லிய

டீ [இவைமூன்றுபாட்டாலும் ஊனுண்ணாமையினது உயர்ச்சி சொல்லப்பட்டது.] (௰



# உஎ—ஆம்—அதி—தவம்.



அஃதாவது-மனம் பொறிவழிபோகாமல் நிற்கையின் பொருட்டுவிரதங்களினாலே உண்டி சுருக்குதல் முதலான செயல்களைமேற்கொண்டு-அவைகளால் தம்முயிர்க்குவருந் துன்பங்களைப்பொறுத்துப் பிறவுயிர்களைக் காப்பாற்ற லாம். புலாலைமறுத்து உயிர்களின்மேல் அருள்முதிர்ந்தவிடத்தே செயப்படுவ தாகலின் இதுபுலான் மறுத்தலின் பின் வைக்கப் பட்டது.

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை..... .....*
யற்றே தவத்திற் குரு.................................*

(இ-ள்) தவத்திற்கு- தவத்தினுக்கு- உரு - வடிவமானது—உற்றநோய்- உண்டிசுருக்குதல் முதலானவைகளால்) தம்முயிர்க்குவரும் துன்பங்களை —நோன்றல்-பொறுத்தலும்- உயிர்க்கு - பிறவுயிர்க்கு உறுகண்செய்யாமை-(தாம்) துன்பஞ்செய்யாமையும் ஆகிய - அற்றே - அவ்வளவினதேயாகும். எ,று. (கருத்து) தவத்திற் கழகானது பசிபொறுத்தலுந் துன்பஞ்செய்யாமையுமாம். என்டதாம். ※ மற்றையவிரதங்களெல்லாம் இவ்விரண்டிலே அடங்குமாதலின் - அற்றேயெனத் தேற்றேகாரங்கொடுத்தார். [இதனால்தவத்தினது இலக்சணம்சொல்லப்பட்டது.] (க)

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை ..................*
யஃதிலார் மேற்கொள் வது ..................................*

(இ ள்.) தவமும்-(பயனேயல்லாமல்) தவம்உண்டாவதும் - தவமுடையார்க்கு- (முன்னைத்)தவத்தை-உடையவர்க்கே-ஆகும் - உண்டாகும்—(ஆதலால்)-அதனை- அத்தவத்தை - அஃதிலார் - அம்முன்னைத்தவமில்லாதவர்- மேற்கொள்வது - செயத்தொடங்குவது-அவம்-வீணாம்- எ - று. (கருத்து) முற்பிறப்பிற் றவஞ்செய்தவருக்குத்தவம்பலிக்கும் என்பதாம், ※ முன்பழக்கத்தால் அறிவும்வல்லமையும்உடையராய் முடித்தலாற் தவமுடையார்க்காகுமென்றும், பழக்கமில்லாதவர்க்கு அவ்விரண்டும்இல்லாமையினாலே முடியாமையால் அவமென்றும் கூறினர் (உ)

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்..... ..... *
மற்றை யவர்க டவம்..... ........ ....... ........ *

இ-ள்- மற்றையவர்கள்- இல்லறத்தையே பற்றி நிற்பவர்கள்-துறந்தார்க்கு-இருவகைப்பற்றையுந் துறந்தவர்களுக்கு-துப்புரவு-உண்டியும் மருந்தும் இருப்பிடமும் - வேண்டி- (உதவுதலை) வேண்டி-தவம்-(தாம்) தவஞ்செய்தலை - மறந்தார்கொல் -மறந்தாரபோலும்-எ,று. (கருத்து) இல்வாழ்வோர் துறவிகளுக்கு உண்டியுமருந்துமிடமும் வேண்டித்தவத்தை மறந்தார்போலும் என்பதாம். ※ துப்புரவு-அநுபவிக்கப்படும் பொருள்கள்,— தவமானது - வேண்டியவைகளை வேண்டியபடியே பெறத்தருவதாதலால் யாவராலும் செய்யத்தகுவதாகிய அதைத் தம்மாலே செயப்படுகிற தானத்தின்மேல்விருப்பமிகுதியால் மறந்தார்போலுமெனவே தானத்தினும்தவம் உயர்ந்தது என்றதாயிற்று. (௩)

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு......... ....... *
மெண்ணிற் றவத்தான் வரும்......... ....... ..... ..*

இ-ள். ஒன்னார்-(தமது அறத்துக்கு இடையூறுசெய்த (பகைவரை-தெறலும் - கெடச்செய்தலையும்-உவந்தாரை - (அதனை) விரும்பினவரை-ஆக்கலும் - உயரச்செய்தலையும்- எண்ணின்- (தவஞ்செய்வோர்) நினைப்பாராயின்-தவத்தான்- [அவரது] தவவலிமையினால்-வரும்-[அவை அவருக்கு] உண்டாகும், எ,று. [கருத்து] சத்துருக்களைக்கெடுத்தலும், மித்துருக்களைக்காத்தலுந் தவவலிமையால்வரும் என்பதாம். ※ முழுதுந்துறந்தவருக்கு- பகைவரும், நட்பினரும், இருப்பது கூடாமையால் தவத்திற்கு ஏற்றிச்சொல்லப் பட்டது,— எண்ணினென்றதனால் அவர்க்கு அவை எண்ணுமையே இயல்பென்பதுதோன்றுகின்றது,— பகைவர்-பெரியராயினும் அவருக்குக்கேடும், விரும்பினவர் சிறியராயினும் அவருக்கு உயர்வும், நினைத்தவளவில் வந்துநிற்குமெனத் தவஞ்செய்வார் மேல்வைத்துத்தவத்தின் வல்லமை சொல்லியபடி. [௪]

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ..... ... ...*
ஈண்டு முயலப் படும்........ ...... ...... ..... ..*

இ,ள்- வேண்டிய-(முயன்றால்) பெறவேண்டியபயன்களை- வேண்டியாங்கு-வேண்டியபடியே - எய்தலால்-[மறுமையிலேதாம்] பெறலாமாதலால்-செய்தவம் - செய்யத்தகுவதாகிய தவமானது- ஈண்டு இம்மையில்-முயலப்படும் - [அறிவுடையோராலே] முயலப்படும் எ,று. [கருத்து] மறுமையில் வேண்டியபயன்களை யடைதலாலிம்மையிலே தவமானதுமுயற்சிசெய்யப்படும் என்பதாம், ※ ஈண்

டென்றதனல் மறுமை வருவிக்கப்பட்டது,— மேலேகதியும், மோக்ஷமும், தவத்தாலல்லாமல் அடைதல்கூடாதென்பதாம். [இவைநான்குபாட்டாலும்தவத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது-] (௫)

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்றல்லா ......... ✻
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு... ............ ..... ........ ✻

(இ-ள்.) தவஞ்செய்வார் - தவத்தைச்செய்பவர் - தங்கருமஞ்செய்வார்-தமதுகருமத்தைச்செய்பவராவார் - மற்றல்லார்,மற்றைப்பொருளின்பங்களைச்செய்வார் - ஆசையுட்பட்டு-(அவைகளி) னாசை யாகியவலையில் அகப்பட்டு - அவஞ்செய்வார்- (தமக்குக்)கேடு செய்பவராவார், எ,று. (கருத்து) தவத்தோர் தவகாரியங் களைச் செய்வர். மற்றவர் அவகாரியங்களைச் செய்வர் என்பதாம். ✻ அநித்தியமாய் மூவகைத்துன்பத்துக்கு இடமாய் உயிரின் வேறாய்உள்ளஉடம்புக்குவருத்தம்வருமென்று விடாமல் தவத்தைச்செய்தால்- பிறப்பு-பிணி-மூப்பு-இறப்பு - இவைகளால் அநாதியாகத்துன்பப் பட்டுக்கொண்டுவருகிற உயிரானது ஞானம்பெற்று மோக்ஷத்தை அடையுமாதலால் தவஞ்செய் வாரைத்தங்கருமஞ் செய்வாரென்றும், க்ஷணத்தில்அருவதாகிய சிற்றின்பத்தின் பொருட்டுப் பலபிறவிகளிலும்துன்பப்படத்தக்க பாவஞ்செய்து கொள்ளுதலால் அல்லாதாரை அவஞ்செய்வா ரென்றும், சொல்லினர். நித்தியமின்மை-அநித்தியம். (௬)

சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ் ......... ✻
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு ............ ........ ✻

(இ-ள்-) சுடச்சுட-(புடத்தீயானது)சுடச்சுட-பொன்போல்-பொன்னுக்குக்குற்றம்நீங்கல்போல் - நோற்கிற்பவர்க்கு- தவஞ்செய்யவல்லவர்க்கு-துன்பம் - (அதினால்வருகிற) துன்பம்-சுடச்சுட- சுடச்சுட ஒளிவிடும்-ஒளிமிகும் எ,று. (கருத்து) பொன்னைப் புடமிடப்பொன்பிரகாசிப்பதுபோலத் தவஞ்செய்வோர்தவம் பிரகாசிக்குமென்பதாம். ✻ ஒளி-பொன்னுக்கு-காந்தியும் - தவஞ்செய்வோர்க்கு-ஞானமும்;ஆம், -- காந்திமிகுந்தோறும் பொன்னுக்குக் குற்றம்நீங்கல்போல் ஞானமிகுந்தோறும் அவர்க்குப்பாவம் நீங்கல் கொள்க,— ஒளிபோற் பொருளைவிளக்கலால்-ஞானம் ஒளியெனப்பட்டது. (௭)

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய ......... ✻
மன்னுயி ரெல்லாந் தொழும் ......... ✻

(இ-ள்.) தன்னுயிர்-தனதுஉயிரை - தானற-தனக்கு உரித்தாகப்பெற்றானை -பெற்றவனை-ஏனைய- அதுபெறாதவையாகிய - மன்னுயிரெல்லாம்- நிலைபேறுடைய உயிர்களெல்லாம்-தொழும்- வணங்கும் எ,று. (கருத்து) தவத்தா லுயிர்பெற்றவனை யெல்லாவுயிரும் வணங்கு

ட்ஏன்பதாம். ❋ தனக்குரித்தாதல்-தவமாகியதன் கருமஞ்செய்தல் அதைக்காட்டிலும் பெறுதற்கு உரியது இல்லாமையால்- பெற்றுனையென்றார், அதுபெறுதவையென்றது-ஆசையிற்பட்டு அவஞ்செய்புமுயிர்களை- சாபானுக்கிரக வல்லமையைப் பெற்றிருக்கையினாலே எல்லாவுயிருந் தொழுமென்றார்- (அ)

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி............... *
னாற்ற றலைப்பட் டவர்க்கு .................. *

(இ-ள்) கூற்றம்-இயமனை-குதித்தலும்-கடத்தலும் - கைகூடும்-உண்டாகும்-நோற்றலின் -தவஞ்செய்தலால் வருவதாகிய- ஆற்றல்-வல்லமையை-தலைப்பட்டவர்க்கு - கூடியவர்க்கு. எ,று- (கருத்து) தவவலிமையையடைந்தவர்களுக்கு இயமனைவெல்லுதல் பொருந்தும் னன்பதாம் ❋ குதித்தலுமென்னும் உம்மை அது கூடாமையை விளக்கியது. ஆற்றல்-சாபானுக்கிரகம். [இவைநான்கு பாட்டாலும் தவஞ்செய்வோரது உயர்ச்சி சொல்லப்பட்டது] (௯)

இலர்பல ராகிய காரண நோற்பார் ..................... *
சிலர்பலர் நோலா தவர் ........................ *

(இ,ள்) (உலகத்திலே செல்வர்சிலராக)-இலர் - வறியவர் பலராகிய காரணம்-பலராதற்குக்காரணம்-(யாதென்றால்)- (அது)- நோற்பார்-தவஞ்செய்வோர்-சிலர்-சிலராக-நோலாதவர்- தவஞ்செய்யாதவர்-பலர்-பலராதல், எ,று. (கருத்து) பாக்கியர்சிலரும், நிர்ப்பாக்கியர்பலருமாக விருத்தற்குக்காரணந் தவஞ்செய்வார் சிலருமத்தவமில்லார்பலருமாக விருத்தலாலென்க என்பதாம்- ❋ இங்கே செல்வம்ஞானத்தையும், வறுமை அஞ்ஞானத்தையும், குறித்தும் நின்றன- நோற்பார்சிலரெனக் காரணத்தைச் சொல்லலால் அதன்காரியமாகியசெல்வர் சிலராதல் வருவிக்கப்பட்டது [இதனால் தவஞ் செய்யார்க்கு இம்மையின்பமும் இல்லையென்று இதனால் அதனது தாழ்வுசொல்லப்பட்டது] (௰)

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# உ௲-ஆம்-அதி-கூடாவொழுக்கம்.

அஃதாவது.

தாம்விட்ட காமவின்பத்தை உறுதியில்லாமை யினாலே மின்னும் விரும்பும் வழிதோன்ற அவ்வழியே கொண்டுநின்று தவத்தோடு பொருந்தாததாகியதீயவொழுக்கம். அதுவிலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க…………… *
ளைந்து மகத்தே நகும்…………………… *

(இ-ள்.) வஞ்சமனத்தான்-வஞ்சம்பொருந்திய மனத்தையுடையவனது-படிற்றொழுக்கம் - மறைந்தஒழுக்கத்தை - பூதங்களைந்தும்-(உடம்பாய் அதனோடுகலந்துநிற்கின்ற) பஞ்சபூதங்களும் - (கண்டு) அகத்தே-(தம்)முள்ளே - நகும் சிரிக்கும் -(எ-று) (கருத்து) வஞ்சகன்பொய்யொழுக்கத்தை யவனைம்பூதங்களுஞ் சிரிக்கும் என்பதாம். ☼ காமம்தன்னுள்ளே வருத்திக்கொண் டிருக்கவும் காமமில்லாமையைச்சொல்லிப்புறத்தாரைவஞ்சித்தலால்-வஞ்சமனமென்றும், அவ்வருத்தம் பொறுக்கமாட்டாமற் செய்யும் கள்ளச் செய்கையைப்படிற்றொழுக்கமென்றும்; உலகத்திலே களவுடையவர் பிறர் அறியாமற்செய்யும் காரியங்களுக்கு ஐம்பெரும் பூதங்களே சாட்சியாகலின் அச்செய்கையையும், அவன்மறைக்கின்ற வித்தையையும், அறிந்துஅவன் அறியாமல் தம்முள்ளே சிரித்தலால் அகத்தேநகுமென்றும், சொல்லினர். செய்தகுற்றமறையாதாகலின் தவஞ்செய்வானுக்கு அவ்வொழுக்கம் ஆகாதென்பது கருத்து. (௧)

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்…… …*
தானறி குற்றப் படின்…………………… *

(இ-ள்.) தான்-தான்-அறி-அறிந்த-குற்றம்-குற்றத்திலே- தன்னெஞ்சம்-தனதுமனம்-படின்-தாழுமாயின்-(ஒருவனுக்கு)- வானுயர்-வான்போலுயர்ந்த- தோற்றம்- தவவேடமானது-எவன்- என்னபயனை- செய்யும் - செய்யும். எ-று. (கருத்து) தன்னுள்ளங் குற்றப்படிலுயர்வானதவவேட மென்னபயனைச் செய்யும் என்பதாம். ☼ அறியாதுசெய்த குற்றத்துக்கு அல்லாமல் அறிந்துசெய்த குற்றத்துக்குப் பிராய்ச்சித்தம் இல்லாமையால் நெஞ்சு குற்றமுடைய தாகிவிடும் விடவேநின்ற வேஷமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலே அல்லது வேறுபயன் இல்லையென்பதாம். (௨)

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்…… …… …*
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று … … …… *

(இ-ள்.) வலி-(மனத்தைஅடக்கும்)வல்லமையை-இல்- இல்லாதநிலைமையான்-இயல்புடையவன்-வல்லுருவம் - அவ்வல்லமையையுடையவரது வேடத்தைக் கொண்டு (மனம்போன வழிபோகுதல்)- பெற்றம்-பசுவானது-(காவற்காரர் தூரத்திருக்கும்படி) - புலியின்றோல்-புலியினதுதோலை - போர்த்து- போர்த்துக்கொண்டு-மேய்ந்தற்று-பயிரைமேய்ந்த அச்செய்கைபோலும். எ-று. (கருத்து) தவவலிமையில்லாதவனது பொய்வேடமானது பசுவானது புலித்

தோலைப் போர்த்துக்கொண்டு பயிரை மேய்ந்தாற்போலும் என்பதாம். ☼ மேய்தலுக்கு ஏற்க மனம்போனவழிபோகுதல் வருவிக்கப்பட்டது. காவற்காரர் துரத்தாமை - புலிபசித்தாற் புல்லைத்தின்னுமென்பதனாலும், அச்சத்தாலும், ஆம். ஆகவே- அவ்வல்லுருவங்கொண்டுநுகர்தற்பயன் அப்படிப்பட்ட காரணங்களால்- உலகத்தார் சந்தேகப்படாமையாயிற்று. பசுதனக்கு உரியபுல்லைவிட்டுப்புலித்தோல்போர்த்துப் பிறர்க்கு உரியபயிரை மேய்தல்போல் அக்கூடாவொழுக்கத்தான் தனக்குஉரிய மனைவியைவிட்டுத் தவவேடங் கொண்டு பிறருக்கு உரியபெண்டிரை அனுபவித்தலென்க. [அப்படிச்செய்கிறபசு இல்லாமையால் இல்பொருளுவமையணி] (௩)

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து......... *
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று............................*

(இ-ள்.) (அவ்வல்லமையில்லாதநிலைமையான்)- தவம்-தவவேடத்திலே-மறைந்து-மறைந்து-அல்லவை - தவமல்லாதவைகளை- செய்தல்-செய்தல்-வேட்டுவன் -வேடன்-புதல் - புதலிலே—மறைந்து-மறைந்து- புள் - பறவைகளை சிமிழ்த்தற்று—பிடித்தல்போலும். எ- று. (கருத்து) தவவேடங்கொண்டொருவன் பாவஞ்செய்தல்வேடன்புதரில்மறைந்து பறவைகளைப் பிடித்தல் போலும் என்பதாம். ☼ தவம் அதன்வேடத்துக்கு ஆகுதலால் ஆகுபெயர். தவமல்லவற்றைச் செய்தலாவது- பிறர்க்கு உரியமகளிரைத் தன்வசத்தராக்குதல்- இப்படிச் செய்தலென்பது இத்தொழி லுவமையினாலே தோன்றுதல் அறிக. (௪)

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்..... *
றேதம் பலவுந் தரும்.......................................*

(இ-ள்.) (பிறர்தம்மை நன்குமதித்தற் பொருட்டு)-பற்றற்றேமென்பார்-பற்றற்றேமென்று சொல்லுவாரது—படிற்றொழுக்கம்-மறைந்தவொழுக்கமானது- (அப்பொழுது இனிதுபோல் தோன்றுமாயினும்)-எற்றெற்றென்று- பின்) என்செய்தோம் - என்செய்தோமென்று-(தாமேஇரங்கும்படி) ஏதம்பலவும்—பலதுன்பங்களையும் தரும் - (அவருக்குக்)கொடுக்கும். எ-று. (கருத்து) பற்றுவிட்டோமென்பவர் பொய்யொழுக்கமானது பின்புதுன்பந்தரும் என்பதாம். ☼ சொல்லினளவிலல்லது பற்றுநீங்காமையால்பற்றற்றேமென்பாரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாகிய இன்பத்தின்பொருட்டுப் - பெரிதாய்நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச்செய்வோர் அது துன்பத்தைத் தரும்போது ஐயோ பாவமேயென்று

அழுவாராதலின் எத்றெற்றென்றும், சொல்லினர், [இவைஐந்துபா ட்டாலும் கூடாவொழுக்கத்தினது இழுக்கம்சொல்லப்பட்டது, (௫)

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து........*
வாழ்வாரின் வன்கணா ரில்.........................*

(இ-ள்.) நெஞ்சின்-மனதினால்- துறவார் (பற்றுக்களைத்துறவாரா கி-துறந்தார்போல்- பாசநீங்கினவர்போல்— வஞ்சித்து-தானஞ்செ ய்வாரை) வஞ்சித்து - வாழ்வாரின்- வாழுமவர்போல் - வன்கணார்- இரக்கமில்லாதவர் இல்- இல்லை. (எ-று.) (கருத்து) துறந்தவர்போல வஞ்சித்து வாழ்பவரிலுங் கொடியவரில்லை என்பதாம். ※ தானஞ் செய்வாரை வஞ்சித்தலாவது- யாம் மறுமையிலே நற்கதி அடைத ற்பொருட்டு இந்த அரியதவத்தோர்க்கு இன்னது கொடுப்போமெ ன்று அறியாமற் கொடுத்தவரை அதை வாங்கிக் கொண்டு தாழ்ந்தக தியை அடைவித்தலாம், தமக்கு ஆமவைகளைச் செய்தார்க்கு ஆகா தவைகளைச்செய்தலால்-வன்கணாரில்லென்றார். (௬)

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி............*
மூக்கிற் கரியா ருடைத்து..........................*

(இ-ள்.) புறம்-மேலே - குன்றி - குன்றிமணியானது—கண்டனை யரேனும் - காணப்படுதல்போற் காணப்படுகிற செம்மையையுடை யவராயினும்—அகம்-உள்ளே-குன்றிமூக்கின்- அக்குன்றிமணியின் மூக்குப்போல் - கரியார் - கறுத்திருப்பவரையும் - உடைத்து(உலக மானது)உடையதாயிருக்கின்றது. (எ-று.) (கருத்து) புறத்திற்குன் றிமணிபோற் சுத்தமும் அகத்திலக்குன்றிமணி மூக்குப்போற்களங் கமுமுடையவரை யுலகமுடைத்து என்பதாம். ※ குன்றியாகிய உப மானத்தினும்ல நிறத்தைக்காட்டுகிற செம்மைகருமைகள் உபமேய த்திலே செவ்வையாயிருக்கையையும் அறிவில்லாமையையும் காட்டு கின்றன. (எ)

மனத்தது மாசாக மாண்டார் நீராடி.....................*
மறைந்தொழுகு மாந்தர் பலர்........................*

(இ-ள்.) மாசு - அழுக்கானது - மனத்ததாக-(தம்)மனத்திலுள்ள தாக - மாண்டார்-(பிறர்க்குத்தவத்தால்) மாட்சிமையுடையவராக-நீ ராடி- நீரிலேமுழுகிக் (காட்டி) - மறைந்து - (தாம்அதனிடத்தே)ம றைந்து-ஒழுகும்-நடக்கும்-மாந்தர்- மனிதர் - பலர்-(உலகத்திலே) பலர். (எ-று.) (கருத்து) களங்க முள்ளத்திருக்க வுடற்புறஞ்சுத்தமா கநீராடிக்காட்டுவார்பலர் என்பதாம். ※ மாசு- காமவெகுளிமயக்க ங்கள். அவைபோதற்காக வல்லாமல்- மாட்சிமைப்பட்டவரென்றுபி றர்நினைத்தற்காகநீராடுதலால் அத்தொழிலை அவர்மறைதற்குஇடமாத

க்கினர். [இவைமூன்றுபாட்டாலும் கூடாவொழுக்கத்தாரது குற்றமும், அவரை அறிந்துநீக்கவேண்டுமென்பதும், சொல்லப்பட்டன.]

கணைகொடிதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன ... ... ... ... *
வினைபடு பாலாற் கொளல் ... ... ... ... ... *

(இ-ள்.) கணை - அம்பானது-(வடிவினாலே செவ்விதாயிருந்தாலும்)கொடிது - (செயலினாலே) கொடியதா யிருக்கின்றது. யாழ்- வீணையானது-கோடு (வடிவினாலே) வளைவினதா யிருந்தாலும் - செவ்விது- செயலினாலே)செவ்விதாயிருக்கின்றது. —ஆங்கு - அவ்வகையே- அன்ன - தவஞ்செய்வார் கொடியர் செவ்வியரா யிருக்கைகளை-(அவரது வடிவினாலேகொள்ளாமல்) - வினைபடுபாலால் - (அவரது) செயல் பட்டபகுப்பினாலே- கொளல் - அறிந்துகொள்ளக்கடவர். எ,று.) (கருத்து) அம்பு ஒழுங்காயிருந்தும் கொடுமைசெய்யும் வீணை வளைந்திருந்து மினிமைசெய்யு மதுபோலத் தவத்தோரை நடக்கையிற்கண்டுகொள்க என்பதாம். ✻ அம்புக்குச்செயல் - கொல்லுதல். வீணைக்குச்செயல் - இசையினாலே இன்பத்தைத்தருதல். அவ்வகையே -அவர்பாவத்தைச் செய்தால்- கொடியரென்றும், அறத்தைச்செய்தால்- செவ்வியரென்றும், கொள்ளவேண்டுமென்பதாம். [இதனால் அவரை அறியும் வழி சொல்லப்பட்டது.] (௯)

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம் ... ... ... ... *
பழித்த தொழித்து விடின் ... ... ... ... *

(இ-ள்.) (தவஞ்செய்வோர்க்கு) மழித்தலும்- (தலைமயிரை)மழித்தலும்-நீட்டலும்-(அதனைச்) சடையாக்கலும் அல்லது வளர்த்தலும்- —வேண்டா-வேண்டுவனவல்ல.-உலகம்-உயர்ந்தோரால்-பழித்தது- (தவத்திற்கு ஆகாதென்று) குற்றஞ்சொல்லப்பட்ட ஒழுக்கத்தை- ஒழித்துவிடின்- நீக்கிவிடுவாராயின். (எ-று.) (கருத்து) உலகம்பழித்ததையொழித்துவிட்டால் முண்டிதஞ்செய்தலுஞ் சடைவளர்த்தலும்வேண்டாம் என்பதாம். ✻ மழித்தலென்பதே தலைமயிரைக் காட்டலால் அதைச்சொல்லினரில்லை. [இதனாலே கூடாவொழுக்கத்தைவிட்டுத் தவஞ்செய்வோர்க்கு வேஷமும் வேண்டாமென அவரதுசிறப்புச்சொல்லப்பட்டது.] (௰)



# ௨௯-ஆம் அதி-கள்ளாமை.



அஃதாவது - பிறருடைமையா யுள்ளவைகளில் யாதொருபொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ள நினையாமையாம். நினைத்தலும்செய்தற்குச் சமானமாதலால் - கள்ளாமை யென்றார்.

இல்லறத்தாருக்குத் தம்மவரோடு விளையாட்டாகவாவது செய்யக்கூடும் துறவறத்தாருக்கு நினைத்தவிடத்தும் பெரியதவறும் ஆதலின் இது துறவறமயாயிற்று புறத்திலே போகாமல்மடங்கி ஓரிடத்தையுற்று உயிரைநோக்க வேண்டியதாகிய அவரதுமனம் அதை விட்டுப் புறத்திலேபோய்ப் பலவிடத்தையுற்று உடம்பின்பொருட்டுப் பொருளைநோக்குதலல்லாமலும் அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ள நினைத்தல் அவருக்குப் பெரிய குற்றமாதல் அறிக. இவ்விதம்வாய்மை முதற்கொல்லாமை முடிவாகிய நான்கதிகாரத்துக்குமொக்கும் இது பொருளைப்பற்றியுண்டாங்குற்றத்தை விலக்குவதாகலின் காமம்பற்றியுண்டாங் கூடாவொழுக்கத்தின் பின்வைக்கப்பட்டது.

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்... ❋
கள்ளாமை காக்கதன் னெஞ்சு ........................ ❋

(இ-ள்.) எள்ளாமை - (முத்தியை)இகழாமல் - வேண்டுவானென்பான் - விரும்புவோன் இவனென்று(தவத்தோராலே) நன்குமதிக்கப்படுவோன் - எனைத்தொன்றும் - யாதொருபொருளையும் - கள்ளாமை-பிறரைவஞ்சித்துக்கொள்ள நினையாதபடி - தன்னெஞ்சு-தனது நெஞ்சை-காக்க- காக்கக்கடவன். (எ-று.) (கருத்து) முத்தியையிகழாமல் வேண்டுபவன் களவுசெய்யாமை தன்னெஞ்சைக் காக்கக்கடவன் என்பதாம். ❀ முத்தியை இகழ்தலாவது-காட்சியே பிரமாணமென்றும்,—நிலம்-நீர்-நெருப்பு-காற்று - எனப்பூதம் நான்கேயென்றும்;—அவைகள் கூடுதலின் சிறப்பினாலே தோன்றிப் பிரிவினாலே அழிவதாகிய உடம்பினிடத்தே அறிவு மதுவினிடத்தே களிப்புப்போல் வெளிப்பட்டு அழியுமென்றும்,— இறந்தவுயிர் பின்னேபிறவாதென்றும்,— இன்பமும்பொருளும் முயற்சியால் வருவதென்றும்,— சொல்லும் - உலோகாயுத மதமுதலாகிய மயக்கநூல்களைத் தெளிந்து அவற்றுக்கு ஏற்க நடத்தலாம். ஞான நூற்பொருளாயினும் ஆசாரியனுக்கு வழிபாடு செய்யாமல் வஞ்சித்துக்கொள்ளின் அதுவும் களவாமாகலின் எனைத்தொன்றுமென்றார். நெஞ்சு கள்ளாமை காக்கவென்றலால் - துறந்தோர்க்கு விலக்கப்பட்ட கள்ளுதலாவது - களவுசெய்ய நினைத்தலென்பது பெற்றாம். (௧)

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் ............. *
கள்ளத்தாற் கள்வே மெனல் ............................. *

(இ-ள்.) குற்றங்களை)- உள்ளத்தால்- (தமது) நெஞ்சினாலே - உள்ளலும்- நினைத்தலும் - தீதே-(துறந்தார்க்குப்)பாவமேயாகும்.—(ஆதலால்)-பிறன்-பிறனது-பொருளை-பொருளை - கள்ளத்தால்-அவனறியாதவகையினாலே-கள்வேம்- வஞ்சித்துக்கொள்வோம் - எனல்-என்றுநினையாதிருக்கக்கடவர். (எ-று.) (கருத்து) குற்றங்களைநினைத்தலுந்தப்புப் பிறன்பொருளைக் களவுசெய்வோ மெண்ணு திருக்கக்கடவர் என்பதாம். ❊ அவருள்ளம் சிறந்ததென்பது தோன்றுதற்குஉள்ளத்தாலென்பது அதிகமாகச் சொல்லப்பட்டது. [இவையிரண்டுபாட்டாலும் துறந்தோர்க்குக் களவாவது இதுவென்பதும், அதைநீக்கவேண்டு மென்பதும், சொல்லப்பட்டன.] (உ)

களவினா லாகிய வாக்க மளவிறந் ............................ *
தாவது போலக் கெடும் . ................................. *

(இ-ள்.) களவினல்-களவுசெய்தலினால்-ஆகிய- உண்டாகிய - ஆக்கம்-பொருளானது - ஆவதுபோல - வளர்வதுபோலே(தோன்றி)-அளவிறந்து-(தனது) எல்லையைக்கடந்து - கெடும் - அழியும். (எ-று.) (கருத்து) களவாலாகிய செல்வம் வளர்வதுபோலக் கெடும் என்பதாம். ❊ ஆக்கத்துக்கு ஏதுவாகலால் ஆக்கமெனப்பட்டது. எல்லையைக்கடந்து கெடுதலாவது - போங்கால் பாவத்தையும், பழியையும்; நிறுத்திச்செய்த அறத்தையும் உடன்கொண்டு போகுதல். (ங)

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண் ................... *
வீயா விழுமந் தரும் ................................... *

(இ-ள்.) களவின்கண்-பிறர்பொருளைவஞ்சித்துக்கொள்ளுதலிலே, கன்றிய-மிகுந்த- காதல் - ஆசையானது - (அப்போது இனிதுபோல்தோன்றி)விளைவின்கண்- தான்பயனைக்கொடுக்கும்போது - வீயா விழுமம்- தொலையாத துன்பத்தை- தரும் - கொடுக்கும். (எ-று.)(கருத்து) களவையிச்சிக்கு மிச்சையானது துன்பத்தைத் தரும் என்பதாம். ❊ மிகுதலால்-எந்நாளும் அக்களவையே கற்பித்துப் பாவமும் பழியும் கொடுத்தே வருதலால் வீயாவிழுமந் தருமென்றார். [இவையிரண்டுபாட்டாலும் அதை நீக்குதற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (ச)

அருள் கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப் ............ *
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில் ......................... *

(இ-ள்.) அருள்-அருளினது உயர்ச்சியை-கருதி-அறிந்து- அன்பு

லுடையராதல்-(அதன்மேல்) அன்புடையராய் நடத்தல் - பொருள்-(பிறர்)பொருளை-கருதி-(வஞ்சித்துக்கொள்ள)நினைத்து -பொச்சாப்பு-(அவரது சோர்வை- பார்ப்பார்கண் - பார்ப்போரிடத்து-இல்- உண்டாகாது. (எ-று.) (கருத்து) பிறர்பொருளை யிச்சிப்பவரிடத்து அருளுமன்புமில்லை என்பதாம். ❁ தமக்குஉரியபொருளையுந்தீதென்று வெறுத்துத் துறந்தவர் பின்னே பிறர்க்கு உரியபொருளை நன்றென்றுவிரும்பி அதனை வஞ்சித்துக் கொள்ளுதற்கு அவரதுசோர்வைப் பார்ப்பாராயின் அவரிடத்தே பிறவுயிர்களின்மேலே செய்தற்குஉரிய அருளினாலே தவறாது நடத்தல் கூடாதென்பதாம். (௫)

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்... ...*
கன்றிய காதலவர்...............................*

(இ-ள்.) களவின்கண்-களவினிடத்தே-கன்றிய- மிகுந்த-காதலவர் ஆசையையுடையவர் - அளவின்கண்-(உயிர்முதலானவைகளை) அளவுசெய்தலாகியவழியிலே - நின்று-நிலைபெற்று - ஒழுகலாற்றார்-(அதற்குத்தக) நடக்கமாட்டார். (எ-று.) (கருத்து) களவிலிச்சையுடையவர்கள் இருமைவழியிலே நடவார் என்பதாம். ❁ உயிர்முதலானவைகளை யளவுசெய்தலாவது - காட்சிமுதலாகிய பிரமாணங்களைக் கொண்டு-உயிர்ப்பொருளையும்,—அதற்கு அநாதியாய் வருகிற குற்றவினைவிளைவுகளையும்,— அவற்றால் அவ்வுயிர் ஐ நாற்கதியிலே பிறந்திறந்து வருதலையும்,— அதனை ஒழித்தற்கு உபாயமான யோகஞானங்களையும்,— அவற்றால் அவ்வுயிர் அடையு முத்தியையும்,— அளவுசெய்து உள்ளவாறு அறிதல். அதற்குத்தக நடத்தலாவது-அளவுசெய்யப்பட்டவைகளில் தீயவைகளினீங்கி நல்லவைகளின்வழிநிற்கை.

களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு... .........*
மாற்றல் புரிந்தார் கணில்...............................*

(இ-ள்.) களவென்னும் - களவென்றுசொல்லப்படும்- கார்-இருண்ட-அறிவாண்மை - அறிவினையுடையராயிருக்கையானது- அளவென்னும்(உயிர்முதலானவைகளை) அளத்தலென்றுசொல்லப்படும்-ஆற்றல்-பெருமையை-புரிந்தார்கண் - விரும்பினவரிடத்து - இல்- இல்லை எ-று. (கருத்து) களவுசெய்வோமென்னு மறிவுடைமையானது பெருமையுடையோரிடத்தில்லை என்பதாம். ❁ இருள்-மயக்கம் - களவென்னுங் காரறிவாண்மை எனக் காரியத்தைக் காரணமாகவும், அளவென்னுமாற்றல் எனக் காரணத்தைக் காரியமாகவும், உபசரித்தார். [களவும் துறவறமும், இருளும் ஒளியும்போல் ஒன்றுக்கொன்று பகையாகலின் கூடிநிற்பனவல்லவென்பது இவை மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (௭)

ஐ நாற்கதி, தேவகதி, மக்கட்கதி, நரககதி, விலங்குகதி.

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்...........*
களவறிந்தார் நெஞ்சிற்கரவு..........................*

(இ-ள்.) களவறிந்தார்-களவை அறிந்தவரது - நெஞ்சில்- மனதில் கரவு-வஞ்சனையானது - அளவறிந்தார்-அவ்வளத்தலை - அறிந்தவரது நெஞ்சத்து-நெஞ்சில்-அறம்போல - அறமானதுபோல்- நிற்கும்-நிலைபெறும். எ, று. (கருத்து) களவுசெய்வோரிடத்து வஞ்சனைவளருமென்பதாம். ※ உயிர்முதலானவைகளை அளந்து அறிந்தவர்களுக்குத் துறவறமானது அசையாது நிற்குமென்பது- இவ்வுபமானத்தினுள்ளே கொள்ளப் பட்டது. [களவோடு நீங்காது நிற்பது இதனாற் சொல்லப்பட்டது.] (௮)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல.......... .........*
மற்றைய தேற்றா தவர்.............................*

(இ-ள்.) களவல்ல-களவல்லாத - மற்றைய-மற்றவைகளை - தேற்றாதவர்-அறியாதவர் - களவொன்றையே அறிந்தவொன்றபடி]- அளவல்ல-அவ்வளவல்லாத தீயநினைவுகளை - செய்து-நினைந்து - ஆங்கே-அப்போதே-வீவர்-கெடுவார். எ, று. (கருத்து) களவல்லாத மற்றையறியாதவர்கள் பாவங்களைச்செய்து கெடுவர் என்பதாம். ※ தீயநினைவுகளாவன-பொருளுடையானை வஞ்சிக்கும்விதமும், — அவ்வஞ்சனையால் அதைக்கொள்ளும் விதமும், — கொள்ளப்பட்ட அப்பொருளினாலே தாம்போகங்களை அனுபவிக்கும் விதமும், — முதலானவை. நினைத்தலுஞ் செய்தலோ டொக்குமாகலின் - செய்தென்றும் அந்நினைப்பு உள்ள அறங்களைப்போக்கி-மறைப்பானசொல்லையுஞ்செயலையும் புதுவித்து-அப்போதே கெடுக்குமாதலால் ஆங்கே வீவரென்றும், சொல்லினார். மற்றவையாவன-துறந்தார்க்கு உணவாகச்சொல்லப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலானவையும், இல்லறத்தோரால் தானஞ்செய்யப்பட்டவையும், ஆம். அறியாமையாவது - அவைகளையே உண்டு போதுமென்றிருக்க அறியாமை. [இதனால் களவினாலே கெடுமாறு சொல்லப்பட்டது.] (௯)

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்.........*
தள்ளாது புத்தே ளுலகு................................*

(இ-ள்.) கள்வார்க்கு-களவிலே பழகுவோர்க்கு-உயிர்நிலை - (தம்மின்வேறல்லாத) உடம்பும்-தள்ளும் - தவறும்-கள்ளார்க்கு - களவிலே பழகாதவர்க்கு - புத்தேளுலகு-(நெடுந்தூரமாகிய)- தேவருலகமும் —தள்ளாது-தவறாது. எ, று. (கருத்து) களவு செய்வோர்க்கு நரகமும், களவுசெய்யார்க்குச் சுவர்க்கமுமுண்டாம் என்பதாம். ※ தொ

க்குநின்ற சிறப்புமிமை யிரண்டும் வருவிக்கப்பட்டன. இம்மையிலு ம் அரசனால் ஒறுக்கப்படுதலால்- உடம்பும் தள்ளுமென்றும், மறு மை யிலும் தேவராகுதல் கூடுமாதலால்-தேவருலகும் தள்ளா தெ ன்றும், சொல்லப்பட்டன. [இதனால் இருவர் பயன் களும் சேர்த்து ச்சொல்லப்பட்டன.] (௰)

# ௩௰ - ஆம் அதி-வாய்மை.

அஃதாவது - மெய்யினது தன்மையாம். பெரும்பாலும் காமமும் பொருளும்பற்றி உண்டாவதாகிய பொய்மையையிலக்க லால் இது கூடாவொழுக்கங் கள்ளாமைகளின் பின் வைக்கப்பட்டது.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்....*
தீமை யிலாத சொலல்.................. ............*

(இ-ள்.) வாய்மையெனப்படுவது- மெய்ம்மையென்றுசிறப்பித்து ச்சொல்லப்படுவது - யாதெனின்- யாதென்றுவினுவினால்- (அது)- (பிறிதோருயிர்க்கு)-யாதொன்றும்-சிறிதாயினும்- தீமையிலாத-தீ மையைத்தராதசொல்லுகளை - சொலல் - சொல்லுதல், எ-று. (கருத் து)சத்தியமென்றுசொல்லப்படுவது யாதொருதீமையுஞ் சொல்லா துநன்மைசொல்லுதல் என்பதாம். * இதனால் நடந்ததைச் சொல் லுதல் வாய்மை அல்லவென்று நீக்கப்பட்டது. அந்நடந்ததைச்சொ ல்லுதலும் தீங்கைத் தராதிருக்குமாயின் மெய்மையாம் - தருமா யின் பொய்மையாமென்பது கருத்து. (௧)

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த ... ...*
நன்மை பயக்கு மெனின்..............................*

(இ-ள்.) பொய்மையும் - பொய்ம்மைச்சொற்களும்- புரைதீர்ந்த குற்றத்தினின்றுநீங்கிய- நன்மை - நன்மையை - பயக்குமெனின்- (பிறர்க்குத்) தருமாயின்-வாய்மையிடத்த- மெய்மைச் சொற் களினி டத்தனவாம், எ-று. (கருத்து) குற்றமற்ற நன்மையைத்தருமாகில் பொய்ம்மொழிகளு மெய்ம்மொழிகளுக்கொப்பாமென்பதாம். * குற்றந்தீர்ந்த நன்மை-அறம். அதனைத்தருதலாவது-கேட்டையாவ துமரணத்தையாவது அடைய நின்றதோருயிர் அச் சொற் களின் பொய்மையினாலே அது நீங்கி இன்புறுதல். நடவாததைச் சொல்லு தலும் நன்மையைத் தாராதாயின் பொய்மையாம்- தருமாயின் மெ

ய்மையாமென்பது கருத்து. [இவையிரண்டுபாட்டாலும் - தீங்கைத் தாராத நடந்ததைச் சொல்லுதலும், நன்மையைத் தரும் நடவாத தைச்சொல்லுதலும், மெய்மையாம் - எனவும், தீங்கைத்தரும் நட ந்ததைச்சொல்லுதலும், நன்மையைத்தாராத நடவாததைச் சொல் லுதலும். பொய்மையாம் - எனவும், அவைகளி னிலக்கணம் சொல் லப்பட்டது.] (உ)

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்...........*
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.................................*

(இ-ள்.) (ஒருவன்) தன்னெஞ்சு- தனது நெஞ்சினாலே - அறிவது அறியப்படுவதொன்றை - பொய்யற்க - (பிறர் அறிந்திலரென்று) பொய்யாதொழியக்கடவன். பொய்த்தபின்-பொய்த்தானாயின்-தன் னெஞ்சே- (அதனை அறிந்த) தனது நெஞ்சே - அப்பாவத்துக் குச் சாக்ஷியாய்நின்று)-தன்னை-தன்னை - சுடும்-தபிக்கும். [அதன்பயனா கிய துன்பத்தை அடைவிக்கும்.] எ,று. (கருத்து) தன்னெஞ் சறி வதைப் பொய்சொல்லாதிருக்கக்கடவன். பொய்சொன்னால் தன்னெ ஞ்சே தன்னைச்சுடும் என்பதாம். ❁ [பொய்மறையாததாயிருக்கை யால் அதைச்சொல்லலாகாதென்பது இதனாற்சொல்லப்பட்டது.]

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா... ... ......*
ருள்ளத்து ளெல்லா முளன்.....................................*

(இ-ள்.) (ஒருவன்)-உள்ளத்தால்- (தன்) மனதுக்கேற்ப- பொய்யா து-பொய்பேசாமல் - ஒழுகின் - நடப்பானாயின் - (அவன்) உலகத் தார்-உயர்ந்தோரது - உள்ளத்துளெல்லாம் - மனங்களிளெல்லாம்-உ ளன்-இருப்பான். எ,று. (கருத்து) மனதிற்கேற்கப் பொய்யாதுநட ப்பானாகிலவன் எல்லாருள்ளத்து மிருப்பான் என்பதாம். ❁ உள்ள த்துக்கு என்பது உள்ளத்தாலென வருதலால்- வேற்றுமை மயக்கம் பொய்பேசாமல் நடத்தலாவது-மெய்பேசி நடத்தல். அவனதுஅ வ்வறத்தி னருமையை நோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனை யே நினைப்பாரென்பதாம். [இதனால் இம்மைப் பயன் சொல்லப்ப ட்டது.] (௩)

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு.........*
தானஞ்செய் வாரிற் றலை.............. ...................*

(இ-ள்.) (ஒருவன்)-மனத்தொடு (தன்) மனத்தோடு பொருந்த-வா ய்மை-உண்மையை - மொழியின்-சொல்லுவானாயின்-(அவன்) தவ த்தொடு-தவத்துடனே- தானம்-தானத்தை - செய்வாரின்-(ஒருமிக் கச்) செய்வாரினும் - தலை-சிறப்புடையவனாவான். எ,று. (கருத்து) உண்மைசொல்லுவானாகிலவன் தவந் தானஞ் செய்பவரினுந்தலையா

வன் என்பதாம். ❁ புறமாகிய மெய்யினாலே செய்யப்படும் அவைகளினும் அகமாகிய மனோவாக்குக்களாலே செய்யப் படும் இது மிகப்பயனுடைய தென்பதாம். (௫)

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை... ......*
யெல்லா வறமுந் தரும்..........................*

(இ-ள்.) (ஒருவனுக்கு)- பொய்யாமையன்ன - பொய்பேசாமைக்கு ஒப்பாகிய புகழ் - புகழ்க்காரணம்- இல்லை- (இம்மைக்கு) இல்லை- (அது அவனுக்கு) எய்யாமை- (உடம்பு) வருந்தாமல் - எல்லாவறமும்-எல்லாவறங்களையும் - தரும்-(மறுமைக்குந்தானே)தரும். (எ.று.) (கருத்து) பொய்சொல்லாமைக் கொப்பாகிய புகழ்ச்சியில்லை. அது எல்லாத்தருமமுங் கொடுக்கும் என்பதாம். ❁ புகழ்- அதன்காரணத்தைக்காட்டலாலாகுபெயர். இல்லறத்திற்குப்பொருள் சம்பாதிக்கை முதலானவைகளாலும், துறவறத்துக்கு உண்ணாமை முதலானவைகளாலும்,வருத்தப்படவேண்டுமல்லவா அவ்வருத்தங்கள் அடையாமல் அவ்விருவகை அறங்களும் கொடுக்கும் பயன்களைப் பொய்யாமை தானே கொடுக்குமென்றற்கு - எய்யாமை யெல்லாவறமுந் தருமென்றார். (௬)

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற........*
செய்யாமை செய்யாமை நன்று ...............*

(இ-ள்) (ஒருவன்) - பொய்யாமை பொய்யாமை - பொய்பேசாமையையே பொய்பேசாமையையே- ஆற்றின்- செய்யவல்லவனாயின்-(அவன்) அறம்பிற-பிறவறங்களை - செய்யாமைசெய்யாமை-செய்யாமையே செய்யாமையே- நன்று-நல்லது.எ-று)(கருத்து)பொய்சொல்லாது நடக்கில்வேறுதருமஞ் செய்யாமையேநல்லது என்பதாம். ❁ பொய்யாமை பொய்யாமை யென்னும் அடுக்கு இடைவிடாமைபற்றி வந்தது. செய்யாமை செய்யாமை என்னும் அடுக்குத் துணிவுபற்றிவந்தது. பலவறங்களையும் மேற்கொண்டு செய்தலது அருமையாகலால் சிலதவறினால் குற்றப்படுமின் அவ்வெல்லாவறங்களின் பயன்களையும் தானேதரவல்லதாகிய இப்பொய்ப்பேசாமையொன்றையே மேறகொண்டு தவறுமற செய்தல் நல்லதென்றற்குச்செய்யாமை செய்யாமை நன்றென்றார். [பிறவறங்களெல்லாம் தரும்பயனைத்தானே தரவல்லதென்று மறுமைப்பயனது மிகுதி இவைமூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது. (௭)

புறந் தூய்மை நீரா னமையு மகந்தூய்மை..............*
வாய்மையாற் காணப்படும்................................*

(இ-ள்) (ஒருவனுக்கு)-புறம்- உடம்பு- தூய்மை- பரிசுத்தமாத்து

ன்மை)-நீரான்-நீரினாலே-அமையும்- உண்டாகும்.—(அதுபோல்), அகம்-மனது- தூய்மை-பரிசுத்தமாந்தன்மை-வாய்மையான்-உண்மையால் காணப்படும்-உண்டாகும். (எ-று.) (கருத்து) உடம்பு நீராறசுத்தமாகும். உள்ளஞ் சத்தியத்தாற சுத்தமாகும் என்பதாம். ※ புறந்தூயதாதல் - அழுக்குநீங்குதல். அகந்தூயதாதல் - மெய்யுணர்தல். எப்படிப்புறஞ்சுத்தமாதறகு நீரல்லாமற காரணம் இல்லையோ அப்படியே அகம் சுத்தமாதறகு வாய்மையல்லாமற காரணமில்லை என்றதாயிறறு- (அ)

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்கு................ *
பொய்யா விளக்கே விளக்கு............................................ *

(இ-ள்) சான்றோர்க்கு- (துறவினாலே) நிறைந்தோருக்கு- எல்லா விளக்கும்-(புறத்திருளை நீக்குகிற உலகத்தோரது)விளக்குக்களெல்லாம்- விளக்கல்ல-விளக்குக்களாவனவல்ல - பொய்யாவிளக்கே-(அகத்திருளை நீக்குகிற (பொய்யாமையாகிய விளக்கே- விளக்கு விளக்காம். (எ-று) (கருத்து) உலகவிளக்குக்களெல்லாம் விளக்குக்களல்ல, பெரியோர்க்குப் பொய்சொல்லாமையே விளக்காம் என்பதாம் ※ உலகத்தோரது விளக்குக்களாவன சந்திரன் சூரியன் அக்கினி அகத்திருள் அஞ்ஞானம். இவ்விளக்குக்களுக்குப்போகாத அகத்திருள் போகலால்-பொய்யா விளக்கே விளக்கென்றார். (௯)

யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும் *
வாய்மையி னல்ல பிற ........................................ *

(இ-ள்,) யாம்-எம்மால்-மெய்யா-மெய்ந்நூல்களாக- கண்டவற்றுள்-காணப்பட்ட நூல்களுள்- எனைத்தொன்றும் - யாதொருதன்மையாலும்- வாய்மையின்-உண்மையினும் - நல்ல-மேறபட்டவையாகிய- பிற-பிறவறங்கள்- இல்லை- கண்டதில்லை. (எ-று.) (கருத்து) மெய்போலும் பிறதருமங்களை யாங்கண்டதில்லை என்பதாம். ※ மெய்மைஅறிவிக்கிற நூல்களை மெய்யென்றதால் ஆகுபெயர். அந்நூல்களாவன-கடவுளாலும் அவரருள்வழிப்பட்டுப்பொருள்களை உள்ளவண்ணம் அறிந்து அறிந்தவண்ணம் சொல்லவல்லவராலும்உலகத்தார்பிழைக்கும்பொருட்டு அருளிச்செய்யப்பட்ட ஆகமங்கள். அவையெல்லாவ்றறிலும் இது ஒப்பமுடிந்ததென்பதாம். [இவைமூன்று பாட்டாலும் இவ்வறத்தினது தலைமைசொல்லப்பட்டது.] (ல)





# ௩௧-ஆம், அதி-வெகுளாமை.



அஃதாவது-கோபஞ்செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்தே உண்டாகிய விடத்தும் கோபஞ் செய்யாமை யாம். இதுபொய்ம்மையற்றிஉண்டாம்கோபத்தைவிலக்கலால் வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக் *
காக்கினென் காவாக்கா லென்..... ...... . ............... *

(இ-ள்) சினம்-(தன்)கோபத்தை- செல்லிடத்து- (அது பலிக்குமிடத்து)-காப்பான் - (எழும்பாமல்) தடுப்பவனே - காப்பான்-(அருளினாலே) தடுப்பவனாவான். அல்லிடத்து - மற்றைப்பலியாதவிடத்து- காக்கின்- (அதனைத்)தடுத்தால்-என்-என்ன -காவாக்கால் -தடுக்காவிட்டால்- என்-என்ன.எ,று.) (கருத்து) கோபஞ்செல்லுமிடத்துக்காப்பவனே கோபத்தைக்காப்பவனக்கோபஞ் செல்லா விடத்துக்கோபத்தைக் காத்தாலென் காவாக்காலென் என்பதாம். ❋ தவத்தினாலே தன்னின் மெலியவனைச்செல்லிட மென்றும்,வலியவனை அல்லிடமென்றும், சொல்லினார்; வலியவர்மேலே கோபஞ்செய்தவிடத்தும் அதனால் அவர்க்கு ஒருதீங்குஉண்டாகாமையால் அடக்கியவிடத்தும் அறம் இல்லையென்றதற்குக்காக்கினென் காவாக்காலென்னென்றார். [இதனால் கோபியாமைக்கு இடம்சொல்லப்பட்டது.] (௧)

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து......... ... *
மில்லதனிற் றீய பிற......... ........... ...... ...*

(இ-ள்.) சினம் - (ஒருவனது) கோபமானது- செல்லாவிடத்து-தன்னின்வலியவர்மேல் (உண்டாயின்)- தீது - (தனக்கே) தீதாம்.— செல்லிடத்தும்- தன்னெளியவர்மேல்- (உண்டாயினும்)- அதனின்- அக்கோபத்தினும் - தீயபிற - தீமையுடையவை வேறே- இல்- இல்லை.எ,று.) (கருத்து) வலியவர்மேற் கோபஞ்செலுத்திற் றனக்கேகுற்றமாம்.எளியவர்மேற் கோபஞ்செலுத்தி லதனினுங் குற்றமாம் என்பதாம். ❋ வலியவர்மேலே செய்யுங்கோபத்தால் உண்டாவது இம்மையிலே அவரால்வருந் துன்பமொன்றே- எளியவர்மேலேசெய்யுங்கோபம் இம்மையிலே பழியையும்மறுமையிலேபாவத்தையும் தருதலால்-இல்லதனிற் றீயபிறவென்றார்.கோபம்வலியவர் -எளியவர்-யாரிடத்தும்-ஆகாதென்பதாம். (௨)

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய...... ...... ...... *
பிறத்த லதனான் வரும்..... ..... ........ ........ ....*

(இ-ள்.) யார்மாட்டும் -யாவரிடத்திலும்-வெகுளியை-கோபத்தை-மறத்தல்- மறக்கக்கடவர்.— (ஒருவருக்கு)- தீய- தீமையுடையவையெல்லாம்- பிறத்தல்- உண்டாகுதல்- அதனான்- அக்கோபத்தினாலே வரும்-வரும்-(ஆதலால்).(எ,று.) (கருத்து) கோபத்தைமறக்கக்கடவர். அக்கோபத்தாற் பாவங்களுண்டாம் என்பதாம். ❋ வலியவர்-ஒப்பானவர்- எளியவர் -என்னுமூவரிடத்தும் ஆகாமையால் - யார்மாட்டுமென்றும்,மனத்தினாலே துறந்தவர்க்கு ஆகாதவையாகிய தீய சிந்தைகளையெல்லாம் உண்டாக்கலால்- தீயபிறத்தலதனான்வருமென்றும்,சொல்லினார். (ரு)

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்.... ..... ..... *
பகையு முளவோ பிற... ... ... ... ... ... *

(இ-ள்.) (துறந்தோர்க்கு அருளினாலேஉண்டாகிய) -நகையும்-(முகத்தினிடத்து) மலர்ச்சியையும்- உவகையும்-(மனத்தினிடத்து)மகிழ்ச்சியையும்- கொல்லும் - கெடுத்துஎழுகின்ற - சினத்தின்-கோபத்தின்-பிற - வேறாகிய -பகையும் - பகைகளும்-உளவோ -உண்டோ [இல்லை.] எ;று.) கருத்து) முகமலர்ச்சியையு முள்ள மகிழ்ச்சியையுங்கோபங்கெடுக்கு மக்கோபத்தைவிட பகையில்லை என்பதாம். ❋ துறந்தோர்க்கும் புறப்பகை இல்லையாயினும் உட்பகையாய் நின்று அவருக்கு நட்பாகிய அருள்முதலானவகையும் நீக்கிப் பிறவித்துன்பத்தை அடைவித்தலால் அவர்க்குக்கோபத்தின் மிகுந்தடகை இல்லையாயிற்று. [இவைமூன்றுபாட்டாலும் கோபத்தினது தீங்குசொல்லப்பட்டது.] (சு)

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்.......... *
றன்னையே கொல்லுஞ் சினம்... ... ...... ....... ...*

(இ-ள்.) தன்னை-தன்னை- தரன்-தான்- காக்கின் -(துன்பம் அடையாமல்)காக்கநினைத்தானாகில் - சினம்- (தன்மனதிலே) கோபம்வாராமல்- காக்க - காக்கக்கடவன்.— காவாக்கால்- காவானாயின்- சினம்-அக்கோபமானது - தன்னையே - தன்னையே - கொல்லும் - கெடுத்துக்டுந் துன்பங்களை அடைவிக்கும் .எ,று.) (கருத்து) தன்னைக்காக்கநினைத்தாற் கோபத்தைக்காக்கக்கடவன். காக்காவிடிலக்கோபந்தன்னையேகொல்லும் என்பதாம். ❋ வேண்டிய நன்மையைத் தருவதாகியதவத்தைப்பிறர்பேலே சாடமிடுதற்காக இழந்ததுன்பத்தோடு பழையபிறவித்துன்பமும் ஒருமிக்க அடைதலால் - தன்னையேகொல்லுமென்றார். (எ)

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு ......
மேமப் புணையைச் சுடும்........................................

(இ-ள்.) சினமென்னும்-கோபமாகிய - சேர்ந்தாரைக்கொல்லி-நெருப்பானது-(தனக்கு இடமானவரை மாத்திரமல்லாமல்) -இனமென்னும்- (அவருக்கு) இனமாகிய- ஏமம்-இதோபகாரஞ்செய்கிற- புணையை-மரக்கலத்தையும் - சுடும்-சுடும், எ-று. (கருத்து) கோபத்தீயானது தன்னையுந் தன்னினத்தையுஞ் சுடும் என்பதாம். ☼ இஃது-உருவகமொழிபோதிப்பவர். இனத்தைப் புணையாக உருவகஞ் செய்ததால் பிறவிக்கடலைக் கடப்பித்து முத்திக்கரையைச் சேர்க்கின்ற வென்னவருவித்து அப்புணைக்கு முன்கூட்டுக. புணையையுமென்னு மெச்சவும்மை-தொக்குநிற்கையால் வருவிக்கப்பட்டது. சுடுமென்றதற்குத் தனக்கு இடமானவரைவிட்டு நீங்கச்செய்யு மென்பது கருத்து- தன்னையும் பிறவிக்கடலில் வீழ்வித்து எடுப்பாரையும் நீக்குமென்பதாம். [நெருப்பிற்குச் சேராதவிடத்தையும் சுடுதலையும், மரக்கலத்திற்கு இதோபதேசஞ் செய்தலையும், அதுகமாகச் சொல்லுதலால் மிகையொற்றுமையுருவகவணி.] (௬)

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு ..........
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று..... ..........

(இ-ள்.) சினத்தை-கோபத்தை - பொருளென்று - (தனது வல்லமையைக்காட்டுகிற) ஒருகுணமென்று- கொண்டவன் - (தன்னிடத்தே) கொண்டவனது - கேடு-அவ்வல்லமையிழப்பு — நிலத்து - பூமியினிடத்து-அறைந்தான் - அறைந்தவனது-கை-கையானது - பிழையாதற்று - (அந்நிலத்திலே படுதல்) தப்பாதவிதம்போல் தப்பாது. எ-று (கருத்து) கோபத்தைப்பொருளாகக் கொண்டவனழிவானது தரையிலறைந்தகை தப்பாதுபடுதல்போலாம் என்பதாம். ☼ தர்க்கநூலினது நடைபற்றி - குணம் பொருளெனப்பட்டது. பிழையாதவற்றென்பது குறைந்து நின்றது. [இவை மூன்று பாட்டாலும் கோபஞ்செய்தோர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.] (௭)

இணரெரிதோய் வன்ன வின்னா செயினு....... ... ..... ......
புணரின் வெகுளாமை நன்று...............................

(இ-ள்.) இணர்-பலசுடர்களையுடைய - எரி-பெருநெருப்பானது- தோய்வன்ன- (வந்து) தழுவினாற்போலும்-இன்னா - துன்பந்தருமவைகளை-செயினும் - (ஒருவன்) செய்தானாயினும் - வெகுளாமை- (அவன்மேலே) கோபஞ்செய்யாமை- புணரின்-கூடுமாயின்-நன்று- (அது) நன்று, எ-று. (கருத்து) ஒருவன் துன்பஞ்செய்யினு மவன்

மேற் கோபியாமை நல்லது என்பதாம். ※ இன்னாமையின் மிகுதி தோன்ற-இணரெரியென்றும், அதனைமேலுமேலுஞ் செய்தல்தோன்ற-இன்னாவென்றும், அச்செய்கை முனியவாயும் கோபிக்கச் செய்யுமென்பதுதோன்ற - புணரினென்றும், சொல்லினார். [இதனால் கோபஞ் செய்யாமையினது நன்மைசொல்லப்பட்டது.] (அ)

உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா ......... ......... *
லுள்ளான் வெகுளி யெனின் ......... ......... *

(இ-ள்.) (தவஞ்செய்வோன்) —உள்ளத்தால் - (தன்) மனத்தால்-வெகுளி-கோபத்தை - உள்ளானெனின் - (ஒருபோதும்) நினையானாயின்-உள்ளியவெல்லாம் - நினைக்கப்பட்ட பேறெல்லாம்- உடன்-ஒருமிக்க-எய்தும் - பெறுவான், எ-று. (கருத்து) கோபத்தை நினையானாகி லவனினைத்தவெல்லாமடைவான் என்பதாம். ※ அருளுடையுள்ளமென்பது தோன்றற்கு - உள்ளத்தாலென்பது அதிகமாகச்சொல்லப்பட்டது. இம்மை-மறுமை-வீடு - இவை யெல்லாம் இவ்வொன்றினாலேயே கிடைக்குமென்றற்கு - உள்ளியவெல்லா முடனெய்துமென்றார். [இதனால் கோபஞ்செய்யாதவர்க்குவரு நன்மைசொல்லப்பட்டது.] (௯)

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத் ......... ......... *
துறந்தார் துறந்தார் துணை ......... ......... *

(இ-ள்.) இறந்தார்-(கோபத்திலே) மிகுந்தவர்— (உயிருடையவராயிருக்கினும்) - இறந்தாரனையர்-செத்தாரோடொப்பாவார்- சினத்தை-அக்கோபத்தை - துறந்தார்— (சாந் தன்மையை யுடையவராயிருக்கினும்)-துறந்தார்துணை - அதனை யொழிந்தவரோ டொப்பாவார், எ-று. (கருத்து) கோபங்கொண்டவர் செத்தவரோடொப்பாவர் கோபங்கொள்ளாதவரிறப்பவராயினு மிறவாதவரோ டொப்பாவரென்பதாம். ※ அதிகோபமுடையவர்க்கு ஞானம்பெறுதற்கு உரிய உயிர் இருக்கினும் கலக்கத்தினாலே அதனை அடையாமை நிச்சயமாதலால் இறந்தாரனையரென்றும்; கோபத்தை விட்டவர்க்கு நிலையில்லாத வுடம்பு இருந்தாலு ஞானத்தினால் முத்தியை அடைவது நிச்சயமாதலால் முத்திபெற்றாரோ டொப்பவென்றும், சொல்லினார். [இதனால் அவ்விருவர் பயன்களும் சேர்த்துச் சொல்லப்பட்டன.] (௰)





## ௩௨-ஆம்-அதி-இன்னாசெய்யாமை.



அஃதாவது-தனக்கு ஒருபயனைக் குறித்தாவது வைரம்பற்றியாவது சோர்வினாலாவது ஒருயிர்க்குத் துன்பந்தருமவைகளைச்செய்யாமை. அவைகளைச்செய்தல்வெகுளிஒழியவும் உண்டாமென்பதை அறிவித்தற்கு இது வெகுளாமையின் பின்வைக்கப்பட்டது.

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா ※
செய்யாமை மாசற்றார் கோள் ※

(இ-ள்.) சிறப்பு-யோகமாகியசிறப்பினாலே - ஈனும்- தரப்படுவனவாகிய-செல்வம் - அணிமாமுதலாகிய செல்வங்களை - பெறினும்- பெறலாமாயினும் - பிறர்க்கு-அயலாருக்கு-இன்னா - துன்பந்தருமவைகளை-செய்யாமை - செய்யாமை - மாசற்றார்- (ஆகமவழியினாலே) குற்றமற்றோர் (யாவருக்கும்)- கோள்-துணிவாம் எ-று. (கருத்து) பிறர்க்குத் தீமைசெய்யாமையே பெரியோர் கொள்கையாம் என்பதாம். ※ சிறப்புடையயோகத்தைச் சிறப்பென்றும், அதனாற்பெறப்படுதலால் எண்சித்திகளையும் சிறப்பீனுஞ் செல்வமென்றும், காமம் வெகுளி மயக்கம் என்னு மூக்குற்றங்கள் அற்றமையால் மாசற்றாரென்றும், சொல்லினார். [இதனாலேதமக்குஒருபயனைக்குறித்துச் செய்தல் விலக்கப்பட்டது.] (௧)

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா ※
செய்யாமை மாசற்றார் கோள் ※

(இ-ள்.) (ஒருவன்) - கறுத்து-(தம்மேல்) வைரங்கொண்டு-இன்னா துன்பந்தருமவைகளை,— செய்தவக்கண்ணு - செய்த விடத்தும்-மறுத்து- மீண்டு- இன்னா-அத்துன்பந்தருமவைகளை - செய்யாமை-(தாம்) செய்யாமையும்-மாசற்றார் - அக்குற்றமற்றவரது - கோள்-துணிவு எ-று. (கருத்து) ஒருவன் துன்பங்களைச்செய்தாலு மவனுக்கு மறுபடிதுன்பங்களைச் செய்யாமையே பெரியோர் கொள்கையாம் என்பதாம், ※ தொக்குநின்ற செய்யாமையுமென்னும்மும்மை முன்பாட்டின் பொருளைத்தழுவிய எச்சவும்மை வருவிக்கப்பட்டது. அவன்செய்தவைகளை மனதிலே வையாமல் விடுவது செயத்தக்கதென்பதாம். (௨)

செய்யாமற் செற்றார்க்கு மின்னாதசெய்தபி ※
னுய்யா விழுமந் தரும் ※

(இ-ள்.) செய்யாமல்-(தான்முன்புதுன்பந்தருவதொன்றைச்(செ ய்யாதிருக்க-செற்றார்க்கும் (தன்மேலே) வைரங்கொண்டவர்க்கும் இன்னாத-துன்பந்தருமவைகளை-செய்தபின்- (துறந்தவன்)செய்தா னாயின்பின்பு- (அச்செயலானது) உய்யா-கடக்கமுடியாத - விழு மம்-இடும்பையை - தரும்- (அவனுக்குக்) கொடுக்கும், எ-று. (கரு த்து)தனக்குத் துன்பஞ் செய்தவர்க்குத் தான் துன்பஞ்செய்தல்கேட் டைத்தரும்.என்பதாம். ஃ இடும்பையாவது - தவமிழந்துபழியும பாவமும் அடைதல். (௩)

இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண............ ..........*
நன்னயஞ் செய்து விடல்..... ............................... ..... .........*

(இ-ள்.) (தமக்கு- இன்னா- துன்பந்தருமவைகளை - செய் தாரை- செய்தவரை - ஒறுத்தல்-(துறந்தோர்) தண்டித்தலாவது - அவர்-அ வர்-நாண-(தாமே) நாணும்படி-(அவருக்கு) நன்னயம்- இனிமையா னமகிழ்ச்சிகளை - செய்து-செய்து-விடல் - (அவ்விரண்டையும்) மற த்தலாம், எ-று. (கருத்து) துன்பஞ்செய்தவரைத் தண்டித்தலாவது அவருக்கின்பஞ்செய்தலாமென்பதாம். ஃ மறவாதவிடத்துப் பின் னும்வந்து கிளைக்குமாதலின் மறக்கவேண்டியவையாயின அவரை வெல்லுமுபாயஞ்சொல்லியபடி. [இவைமூன்றுபாட்டாலும் வைர ங்கொண்டு செய்தல் விலக்கப்பட்டது.] (௪)

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய் ............ .........*
தந்நோய்போற் போற்றாக் கடை ... ..............................*

(இ-ள்.) (துறந்தார்க்கு) அறிவினான்-(உயிர்முதலானவைகளை உள் ளவண்ணம் அறிந்த) அறிவினால் - ஆகுவது - ஆகுமொரு பயன்— உண்டோ-உண்டோ(இல்லை) - பிறிதின்- வேறோருயிருக்குவந்த— நோய்-துன்பந்தருமவையை - தந்நோய்போல்- தமக்குவந்ததுன்ப ந்தருமவைபோல் - போற்றாக்கடை-(குறிக்கொண்டு) காப்பாற்றாத விடத்து எ-று. (கருத்து) மன்னுயிர்க்குவந்த துன்பத்தைத்தன்னு யிர்க்குவந்தாற்போற் பாராவிடத்து அறிவினாலுண்டாவதென்னெ ன்பதாம். ஃ குறிக்கொண்டு காப்பாற்றலாவது- நடத்தல் இருத்தல் கிடத்தல் நிற்றல் உண்டல்முதலாகிய தமது தொழில்களாலும், மற் றைவழிகளாலும் உயிர்களுக்குவரும்துன்பங்களை முன்னே அறிந்து அவைவாராமற் காத்தல். இத்துன்பம் பெரும்பாலும் அஃறிணையி லே எறும்புமுதலாகிய சிறியவுடம்புடைய பிராணிகளைப் பற்றிவ ருதலாலே பொதுப்பட-பிறிதினோயென்றும்,மறப்பினாலே அவை துன்பத்தை அடையினும் நமக்குப் பாவமென்று அறிந்து காக்க வேண்டுமாகலின் அதுசெய்யாதவிடத்து அறிவினாலே பயனில்லை

யென்றும், சொல்லினர். [இதனால் சோர்வினாலே செய்தல் விலக்கப்பட்டது.] (௫)

இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை............ *
வேண்டும் பிறன்கட் செயல்............................. *

(இ-ள்.) இன்னாவென- (இவைமனிதருக்குத்) துன்பந்தருமவையென்று-தானுணர்ந்தவை-(அநுமானப்பிரமாணத்தினாலே)தன்னால் அறியப்பட்டவைகளை-பிறன்கண் - பிறனிடத்தே - செயல்- செய்தலை-துன்னாமை-பொருந்தாமை-வேண்டும்-(அறந்தவனுக்கு) வேண்டும். (எ-று.) (கருத்து) துன்பமென்றறிந்தவற்றைப்பிறனிடத்துச்செய்யாமைவேண்டும் என்பதாம். ※ இன்பத் துன்பங்கள் உயிர்க்குணமாகலால் அவைபிரத்தியக்ஷ பிரமாணத்தினாலே அறியக்கூடாமைஅறிக. அறமும் பாவமும் உண்டாவது மனமறிந்து செய்தவிடத்தே ஆகலின் உணர்ந்தவையென்றார். (௬)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா......... *
மாணாசெய் யாமை தலை........................................ *

(இ-ள்.) மனத்தானும் - மனத்தோடு உண்டாகின்ற -மாணா- துன்பந்தருமவைகளை-எஞ்ஞான்றும் - யாதொருகாலத்திலும் - யார்க்கும்-யாவரொருவருக்கும்-எனைத்தானும்- எவ்வளவுசிறிதாயினும்-செய்யாமை-செய்யாமை-தலை- முதன்மையான அறம். (எ-று) (கருத்து) யாருக்குந் துன்பஞ் செய்பவற்றைச் செய்யாமையே தலைமையானதருமம் என்பதாம். ※ மனமறிந்து செய்யாதவிடத்தே பாவம்இல்லை என்பதுபெற்றும். வல்லமை யுண்டான காலத்திலும் செய்யலாகாமையால் - எஞ்ஞான்றுமென்றும். எளியவருக்கும் ஆகாமையால் யார்க்குமென்றும், செயல் சிறிதாயினும் பாவம் பெரிதாகலால்-எனைத்தானுமென்றும், சொல்லினார் (௭)

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ....... *
மன்னுயிர்க் கின்னா செயல் ..................................... *

(இ-ள்.) (பிறர்செய்யும்துன்பந்தருமவை)-தன்னுயிர்க்கு-தனதுயிர்க்கு-இன்னாமை-துன்பந்தருமவையாந்தன்மையை - அறிவான் (அநுபவித்து) அறிபவன் - மன்னுயிர்க்கு - நிலையுள்ளபிறவுயிர்களுக்கு-இன்னா-அத்துன்பந்தருமவைகளை-தான்- தான் - செயல்- செய்தல்-என்-என்னகாரணத்தால். (எ-று.) (கருத்து) தன்னுயிர்க்குத்துன்பந்தருமவற்றை மன்னுயிர்க்குச் செய்வதென்ன காரணம் என்பதாம். ※ கொல்-ஓ- அசைகள், இப்படியே இவை பிறவுயிர்க்கும் துன்பந்தரு மவைக ளென்பது அநு மானத்தால் அறிந் திருந்தும்

செய்கின்றபாவம் பரிகரிக்கக்கூடாமையால் - துன்பந்தருமவைகள் பின்னேவந்து தன்னைவருத்துமென்பது ஆகமத்தாலும் அறிந்துவிடக்கடவனென்பது தோன்ற-தானென்றும், அத்தன்மையால் ஒழியாமைக்குக்காரணம் மயக்கமென்பதுதோன்ற - என்னென்றும், சொல்லினார். [இவைமூன்றுபாட்டாலும் பொதுவகையால் இன்னாசெயல் விலக்கப்பட்டது. (அ)

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா………… ………*
பிற்பகற் றாமே வரும் ……………… ……………………………………*

(இ-ள்.) (ஒருவர்) பிறர்க்கு-பிறர்களுக்கு-இன்னா- துன்பந்தருமவைகளை-முற்பகல்- ஒருமுகூர்த்தத்தினது முன்பங்கிலே - செய்யின்-செய்தால் -தமக்கு- தமக்கு-இன்னா - துன்பந்தருமவைகள்-பிற்பகல் அம்முகூர்த்தத்தினதுபின்பங்கிலே —(அவர்செய்யாதிருக்க)-தாமேவரும்-தாமேவரும். (எ - று.) (கருத்து) முன்பு ஒருவருக்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமை தனக்கேவரும் என்பதாம்.❊தவமிழத்தல் -இப்படிக்கடிதிலும் எளிதிலும் வரும்அதனால் அவை செய்யாதிருக்கக் கடவனென்பதாம். முகூர்த்தம்- மூன்றே முக்கால் நாழிகை. (௯)

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர் ………………………………*

(இ-ள்.) நோயெல்லாம்-துன்பந் தருமவையெல்லாம் - நோய்செய்தார்மேலவாம் (ஒன்றனுயிருக்குத்) துன்பந்தருமவைகளைச் செய்தவர்மேலனவாய்.- (அதனால்)- நோயின்மைவேண்டுபவர்- தம்முயிர்க்குத் துன்பந்தருமவை யில்லாமையை வேண்டுவோர் - நோய் (ஒன்றனுயிர்க்குத்)துன்பந்தருமவைகளை-செய்யார்- செய்யார். (எ, று.) (கருத்து) துன்பமெல்லாந் துன்பஞ்செய்தவர்மேலாகும் துன்பமில்லாமையை விரும்புவோர்துன்பஞ்செய்யார் என்பதாம்.❊உவர்நிலத்திலே விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவே யாகலால் நோயெல்லா நோய்செய்தார்மேலவாமென்றார். [சொற்பொருட்பின்வருநிலையணி.] (இவையிரண்டுபாட்டாலும் அது செய்தவர்க்கு வரும் தீங்குசொல்லப்பட்டது.) (௰)



# ௩௩-ஆம் அதி-கொல்லாமை.

அஃதாவது-* ஐயறிவுடையவை முதல் ஓரறிவுடையவைகடையாகிய உயிர்களைச் சோர்வினாலும் கொல்லுதல் செய்யாமை. இது முன்சொல்லப்பட்ட அறங்களெல்லா வற்றினும் சிறப்புடையதாய்ச் சொல்லாதொழிந்த மற்றைய வறங்களையெல்லாம் தன்னுள் அடக்கிநிற்கை யால் இறுதியில் வைக்கப் பட்டது.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்........ ..... .. *
பிறவினை யெல்லாந் தரும் ......... ......... ......... ..... ... *

(இ-ள்,) அறவினை-அறங்களெல்லாமாகிய செய்கை - யாதெனின்-எதுவென்றால்-(அது)-கொல்லாமை - (ஓருயிரையும்) கொல்லாமையாம்.—கோறல் - (அவற்றைக்) கொல்லுதல் - பிறவினை யெல்லாம்-பாவச்செய்கைகளெல்லாவற்றையும்- தரும் - (தானே) தரும்- (ஆதலால்.) (எ-று) (கருத்து) தருமச்செய்கை யாதென்றால்கொலைசெய்யாமையாம். கொலைசெய்தல்பாவமெல்லாவற்றையுந் தரும்.என்பதாம். * விலக்கப்பட்டதைச் செய்யாமையும் அறஞ்செய்தலாம் ஆதலால்-கொல்லாமையை அறவினையென்றார். இங்கேபிறவினை யென்றது-அவ்வினைகளின்விளைவை.—கொலைப்பாவம் விளைக்குந் துன்பத்தை மற்றைப் பாவங்களெல்லாம் கூடியும்விளைக்க மாட்டாவென்பதாம். கொல்லாமை தானே பிறவறங்களின் பயனெல்லாந் தருமென்றமேறகோள் சொல்லி அதற்கு ஏது எதிர்மறை முகத்தாற் சொல்லியபடி யாயிற்று. (௧)

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர் ......... ..... .. *
தொகுத்தவற்று ளெல்லாந் தலை ..... ......... ......... ..... *

(இ-ள்) பகுத்து-(உணப்பட்டதைப்பசித்த உயிர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்து-உண்டு-உண்டு-பல்லுயிர் - ஐவகையுயிர்களையும்-ஓம்புதல்-காப்பாற்றல்-நூலோர்-அறநூலுடையோரால் - தொகுத்தவற்றுளெல்லாம் - (துறந்தவர்க்குத்)தொகுத்து வைக்கப்பட்ட அறங்களெல்லாவற்றினும்- தலை-முதன்மையான அறமாம். (எ-று.)(கருத்து) கிடைத்தவற்றைப் பங்கிட்டுண்டு பலவுயிர்களைக் காப்பாற்ற

* புல்-மரம்-இவைமுதலானவை பரிசத்தை யறியும் ஓரறிவுயிர்கள். சிப்பி சங்கு முதலானவை- அதனோடு, ரசத்தையும் அறியும் ஈரறிவுயிர்கள். கறையான் எறும்பு- இவைமுதலானவை அவ்விரண்டோடு, கந்தத்தையும் அறியும் மூவறிவுயிர்கள். தும்பி வண்டு இவைமுதலானவை அம்மூன்றோடு ரூபத்தையும் அறியும் நாலறிவுயிர்கள், மிருகங்கள், பறவைகள் - மனிதர் இவைமுதலானவை அந்நான்கோடு, சப்தத்தையும் அறியும், ஐயறிவுயிர்கள்.

லெல்லாத்தருமத்திலுந் தலையானதருமம் என்பதாம். ※ பல்லுயி ரும் என்கிற முற்றும்மை வருவிக்கப்பட்டது. ஓம்புதல் மறந்தும் கொலைவாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப்பகுத்துண்ணுத ல்அவசியம் இருக்கவேண்டிய அங்கமாதலால் அச்சிறப்புத்தோன் ற-பகுத்துண்டு என்றார். எல்லா அறநூல்களிலும் நல்லவைகளை எடுத் துஎல்லாருக்கும்பொதுப்படச்சொல்லுதல்இந்நூலாசிரியருக்கு இ யல்பாதலால் இங்கேயும் பொதுப்பட நூலோரென்றும், அவ்வெல் லாருக்கும் ஒப்பமுடிதலால்- தலையென்றும், சொல்லினார். (௨)

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்...... ............... ※
பின்சாரப் பொய்யாமை நன்று .... .................. ..... ※

(இ-ள்.) (நூலோராலே தொகுக்கப்பட்ட அறங்களுள்)-ஒன்றாக-(தன்னோடுஇணைப்பதுஇல்லாமல்)தானேயாக-கொல்லாமை-கொலை செய்யாமை- நல்லது- நல்லது.(அதுநீங்கினால்)பொய்யாமை-பொ ய்சொல்லாமை-பின்சார-(அதன்)பின்னேநிற்க-நன்று-நல்லது.(எ, று.) (கருத்து) கொல்லாமைநல்லது அதிலும் பொய் சொல்லாமைந ல்லது என்பதாம். ※ அதிகாரங் கொல்லாமையாயினும்- முன்பொ ய்யாமை பொய்யாமையாற்றினென்றும், யாமெய்யாக்கண்டவற்று ளில்லையென்றும், சொல்லுதலால் - பொய்யாமை கொல்லாமைகளி லேசிறந்தது எதுவென்று சந்தேகம் உண்டாமென்றே அது உண் டாகாமற்பொருட்டு இங்கே - பின்சாரப்பொய்யாமை நன்றென்றா ர். முன்சொன்னதினும் பின்சொன்னது உறுதியுடையதாமாகலால். [இவைமூன்றுபாட்டாலும் கொல்லாமையினது சிறப்புச்சொல்லப் பட்டது.] (௩)

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்.........※
கொல்லாமை சூழு நெறி........................................ ※

(இ-ள்.) (மேற்கதியும் முத்தியும் பெறுதற்கு) - நல்லாறெனப்படு வது-நல்வழியென்று சொல்லப்படுவது-யாதெனின்- எதுவென்றா ல்-(அது)யாதொன்றும்-யாதோருயிரையும் - கொல்லாமை - கொல் லாமையாகிய அறத்தினை-சூழும்-(காக்க)நினைக்கும்-நெறி- வழியாம் (எ - று.)( கருத்து ) நல்லவழியென்று சொல்லப் படுவது யாதென் றால்யாதோருயிரையுங் கொல்லாமையாம் என்பதாம். ※ புல்முத லாகிய ஓரறிவுயிரையும் உள்ளாக்குதற்கு யாதொன்று மென்றார். காத்தல்-தவறாமற்காத்தல். [இதனால் கொல்லாமையை யுடையதே நல்வழியென்பது சொல்லப்பட்டது.] (௪)

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்...........※
கொல்லாமை சூழ்வான் றலை..................... .... ..... ....※

(இ-ள்.) நிலை-(பிறப்புநின்ற) நிலைக்கு-அஞ்சி-பயந்து-(பிறவாமைப்பொருட்டு)-நீத்தாருளெல்லாம் - (மனைவாழ்க்கையைத்) துறந்தவரெல்லாருள்ளும் - கொலை - கொலைப்பாவத்திற்கு- அஞ்சி- பயந்து- கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தை - சூழ்வான்- மறவாதவன்-தலை-உயர்ந்தோன். (எ-று.)(கருத்து) கொலைக்கஞ்சிக்கொல்லாமையை மறவாதவனே யெல்லாருள்ளுந் தலையாவான் என்பதாம். ❊ பிறப்புநின்ற நிலையாவது - மனிதர்முதலாகிய சரமும், மரமுதலாகிய அசரமும், ஆகிய இருவகைப் பிறப்புக்களிலும் இன்பமெய்யதொன்று இல்லாமல் உள்ளவையெல்லாம் துன்பமேயாகியநிலைமை துறவு - ஒன்றேயாயினும் சமயவேறுபாட்டால்பலவாமாதலால்- நீத்தாருளெல்லாமென்றார். [இதனால் கொல்லாமையை மறவாதவனது உயர்ச்சிசொல்லப்பட்டது.] (௩)

கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று ............................ ❊

(இ-ள்.) உயிருண்ணுங்கூற்று - உயிரைக்கொண்டுபோம்இயமனானவன்-கொல்லாமை - கொலைசெய்யாமையாகியவிரதத்தை - மேற்கொண்டு-மேலாகக்கொண்டு-ஒழுகுவான் - நடப்பனவது - வாழ்நாண்மேல்-ஆயுளின்மேல்-செல்லாது - செல்லான். (எ-று.) (கருத்து) கொலைசெய்யாதவன் வாழ்நாளின்மேல் இயமன்செல்ல மாட்டான் என்பதாம். ❊ மிகவும் பெரிய அறஞ்செய்தவரும்; மிகவும் பெரிய பாவஞ்செய்தவரும், இம்மையிலேதானே அவைகளின்பயன்களை அனுபவிப்பாரென்னும் அறநூலினது துணிவுபற்றி- இப்பெரியஅறஞ்செய்தவன் தானும் கொல்லப்படானாகவே அவன்தருவுறும் ... துவியமிக்கப்பட்ட ஆயுட்காலம் குறைவுபடாதென்றதற்கு- வாழ்நாண்மேல் கூற்றுச்செல்லாதென்றார். செல்லாதாகவே காலநீடித்திருந்து ஞானத்தைச் சம்பாதித்து மோட்சத்தை அடைவானென்பது கருத்து. [இதனால் கொல்லாவிரதத் தோர்க்குவரும் நன்மைசொல்லப்பட்டது. (௫)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி ............................ ❊
தின்னுயிர் நீக்கும் வினை .................... ........................ ❊

(இ-ள்.) தான் - தான்-பிறிது-வேறொன்றனது - இன்னுயிர் - இனிதாகியவுயிரை-நீக்கும்-(அதனுடம்பிலிருந்து) நீக்குதலாகிய - வினை தொழிலை-(அதுசெய்யாவிடத்து)- தன்னுயிர் - தனதுஉயிரானது- நீப்பினும்-(உடம்பைவிட்டு) நீங்கிப்போமாயினும் - செய்யற்க-செய்யாதிருக்கக்கடவன். (எ-று.) (கருத்து) தானோருயிரை நீக்குந்தொழிலைச் செய்யா திருக்கக்கடவன் என்பதாம். ❊ பாவம் தான் கொ

லையுண்டவிடத்தே தேய்தலும், ஒல்லறைக் கொன்றவிடத்தே வளர்த லும், நோக்கி- தன்னை ஒன்று கொன்றாலும் தான் அதனைக் கொல்ல லாகாதென்றதென்க. (௭)

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்......*
கொன்றாகு மாக்கங் கடை........................................ .........*

(இ-ள்.) (யாகத்திலேகொன்றால்)- நன்றாகும்-இன்பமிகுவதாகிய ஆக்கம்-செல்வமானது-பெரிது-பெரிதாகும் எனினும் என்றுசொல்லப்பட்டதாயினும் சான்றோர்க்கு- (துறவினாலே) நிலைநின்றார்க்கு-கொன்று- (ஓருயிரைக்)கொன்று-ஆகும்-(அதனால் உண்டாவதாகிய ஆக்கம்-செல்வமானது கடை-இழிந்ததாம். (எ-று.) (கருத்து) பெரியோர்க்குக் கொலைசெய்துவருஞ் செல்வங்கடை என்பதாம். ✽ இன்பமிகுஞ் செல்வமாவது - தாமும்தேவராய்ச் சுவர்க்கத்திலேசென்று அடையும் செல்வம். அது சிறிதாகையாலும், பின்னும் பிறத்தற்கு ஏதுவாகலாலும், மோட்சமாகிய அழிவில்லாத சுகத்தை அடைவோருக்கு-கடையெனப்பட்டது. சுவர்க்கபோகத்தை விரும்பினவருக்குஆகுமாயினும் மோட்சத்தை விரும்பினவருக்கு ஆகாதென்றதனால் விதிவிலக்குகள் தங்களிலே விரோதப் படாமல் விளக்கியவாறாயிற்று. [இவையிரண்டுபாட்டாலும் கொலையினது குற்றம் சொல்லப்பட்டது. (௮)

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்..................*
புன்மை தெரிவா ரகத்து ............................................ *

(இ-ள்.) கொலைவினையராகிய- கொலைத்தொழிலையுடையவராகிய- மாக்கள் - மனிதர்-(அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினராயிருந்தாலும்)-புன்மைதெரிவாரகத்து-அவ்விழிவை அறிவோரது நெஞ்சிலே-புலைவினையர்-புலைத்தொழிலாராய்த்தோன்றுவர்.(எ, று) (கருத்து) கொலைத்தொழில்செய்வோர் அத்தொழில் செய்யாதவர்மனதில்புலைத்தொழிலாராய்க் காணப்படுவர் என்பதாம். ✽ கொலைவினையென்றபடியினாலே யாகக் கொலையல்லாமை யறிக. புலைவினையரென்றது- தொழிலாலே புலையராவரென்றபடி. அவர்இம்மையிலே தாழ்வை அடைவரென்பதாம். (௯)

உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்..........*
செல்லாத்தீ வாழ்க்கை யவர் ....... ................................ *

(இ-ள்.) செயிருடம்பின் - பார்க்கக் கூடாத நோயுடம்புடனே- செல்லாத்தீ வாழ்க்கையவர் - வறுமையோடுகூடிய இழிதொழில்வாழ்க்கையுடையவரை— (இவர்முற்பிறப்பிலே) - உயிர் - உயிர்களை—

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன் *
கவிகைக் கீழ்த் தங்கு முலகு ......................... *

(இ-ள்.) சொல் - (கண்டித்துப்புத்திசொல்லுந் துணையாயினவரது) சொற்களை - செவிகைப்ப - (தன்) செவிபொறுதாகவும் - பொறுக்கும் - (அவைகளின் பயனைக்குறித்துப்) பொறுக்கும் — பண்புடை - குணமுடைய - வேந்தன் - அரசனது - கவிகைக்கீழ் - குடைநிழலின்கீழ் - உலகு - உலகம் - தங்கும் - பொருந்தும். (எ-று.) (கருத்து) மந்திரி முதலானவர்கள் கடிந்துத்திசொல்லுஞ் சொற்களைப் பொறுக்குமரசன் குடைநிழற்கீ முலகந்தங்கும் என்பதாம். ❀ நாவின் கைப்பு - செவியிலேற்றப் பட்டது. பண்புடைமை - சிறப்பறிவுடையவனுகுங்கை. அறநூல் நீதிநூல்களிலே தவறுமையால் பூமிமுழுதும்தானே ஆள்வானென்பதாம். (௯)

கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு ......... *
முடையானாம் வேந்தர்க் கொளி ................ *

(இ-ள்.) கொடை - (வேண்டுவோர்க்கு வேண்டுமவைகளைக்) கொடுத்தலும் - அளி (யாவரிடத்தும்) - முகமலர்ந்து இன்சொற் சொல்லுதலும் - செங்கோல் - முறைசெய்தலும் - குடியோம்பல் - (தளர்ந்த) குடிகளைப்பேணலும் ஆகிய — நான்கும் - இந்நான்கு செயல்களையும் - உடையான் - உடையவன் - வேந்தர்க்கு - அரசர்க்கெல்லாம் - ஒளியாம் - விளக்காம். (எ-று.) (கருத்து) கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலும், செங்கோல்செலுத்துதலும், குடிகளைக்காத்தலும், இந்நான்கு செயல்களையுமுடையவனரசருக்குள் விளக்கமாவான் என்பதாம் ❀ செவ்விய கோல்போலுதலால் முறையைச் செங்கோலென்றார். குடியோம்பல் - வறுமையுற்றவிடத்தே ஆறிலொன்றாகிய பொருளையும்வாங்காமை முதலானவைசெய்தல். தன்சாதிமுழுதும் விளக்கலால்விளக்கென்றார். [இவை ஐந்துபாட்டாலும் மாட்சியும் பயனும்உடன் சொல்லப்பட்டன.] (௰)





# ௪௰-ஆம்-அதி-கல்வி.

---

அஃதாவது-அவ்வரசன் தான்கற்றற்குரிய நூல்களைக்கற்றல். அவையாவன - அறநூலும், நீதிநூலும்; தேர்யானை குதிரை படைக்கலம் எனப்பட்ட இவற்றினூல்களும், முதலானவையாம். அரசன் அறிவுடையவனாயிருந்தால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் குறித்து இது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும் யாவர்க்கும் உறுதியைத்தருவதாகிய சிறப்புடைமையினாலே பொதுப்படச்சொல்லுகின்றார். முன்னதிகாரத்திலே தூங்காமையென்னும் பாட்டிலே தோற்றுவாய் செய்யப்பட்ட மாட்சியைவிரித்துச்சொல்லுதலால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

கற்க கசடறக் கற்பவை கற்றபி ........................ ............ ....... *
னிற்க வதற்குத் தக ........................................................ *

(இ-ள்) (ஒருவன்) கற்பவை - கற்கப்படு நூல்களை - கசடற - பழுதற - கற்க - கற்கக்கடவன்.—கற்றபின் - (அப்படிக்)கற்றபின்னை - அதற்கு - அக்கல்விக்கு - தக - தகுதியாக - நிற்க - (அவைகளாலே சொல்லப்பட்டவழியிலே) நிற்கக்கடவன். (எ-று.) (கருத்து) ஒருவன் கற்கப்படு நூற்களைக் குற்றமறக் கற்கக்கடவன். கற்றபின் கல்வி யறிவிற்குத்தக்கபடி நிற்கக்கடவன் என்பதாம். ❋ கற்பவையென்றதனால் அறம்பொருள் இன்பம் வீடு என்கிற உறுதிப்பொருள்களை உணர்த்துகிற நூல்களென்பது பெற்றாம். கசடறக்கற்றலாவது- விபரீதசந்தேகங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனேயும் பலதரமும் பழகுதல்.—நிற்றலாவது - இல்வாழ்க்கையிலே கருமங்களைச் செய்து-போக்கியருக்குக்கொடுத்துத் தானனுபவித்தலிலும், துறவிலே தவத்தால் மெய்யுணர்ந்து அவாவறுத்தலிலும், தவறாமை. [இதனால் சிறப்புடையவனுக்குக் கற்கவேண்டுமென்பதும், கற்கத் தகுநூல்களும், அவைகளைக்கற்குவிதமும், கற்றதனாற்பயனும், சொல்லப்பட்டன.] (க)

எண்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் ...... *
கண்ணென்ப வாழு முயிர்க்கு ............................ *

(இ-ள்.) (அறியாதவராலே)-எண்ணென்ப-எண்ணென்றுசொல்லப்படுமவையும் - ஏனையெழுத்தென்ப- மற்றை யெழுத்தென்றுசொல்லப்படுமவையும்- ஆகிய - இவ்விரண்டும் - இக்கலைகளிரண்டையும் (அறிந்தோர்)—வாழுமுயிர்க்கு - வாழ்தற்குரியமனிதர்க்கு - கண் - கண்களாகும்-என்ப-என்றுசொல்லுவார். (எ-று.) (கருத்து) கணிதநூற்

களுமிலக்கண நூற்களும் மனிதர்களுக்குக் கண்களாகும் என்பதாம். ❁ எண்-கணிதம்-எழுத்து-இலக்கணம். இவ்விருவிரு நூல்களும்-அறமுதலாகிய பொருள்களைக்காணுதற்குக் கருவியாகலால்- கண்ணெனப்பட்டன. [இதனால் கற்கப்படு நூல்களுக்குக் கருவியாவனவும், அவைகள் அவசியம் வேண்டியவை யென்பதும், சொல்லப்பட்டன.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு ............ ❋
புண்ணுடையர் கல்லா தவர் ........ ........ ........ ..... ........ ❋

(இ-ள்.) கற்றோர்-கற்றவரே-கண்ணுடையர்- கண்களுடையவர்-என்பவர்-என்று- உயர்த்திச்சொல்லப்படுவர்-கல்லாதவர்- கற்றிலாதவரே-முகத்து- முகத்தினிடத்து - இரண்டுபுண்ணுடையர் - இரண்டுபுண்களுடையவர்- (கண்ணிலார்) (எ-று.) (கருத்து) கற்றோரே கண்களுடையவரென்று சொல்லப்படுவோர் மற்றோரே கண்களில்லாதவரென்று சொல்லப்படுவர் என்பதாம். ❁ தூரமானகாலதேசங்களில் உள்ளவைகளையும் காணும்ஞானக் கண்ணுடைமையால் கற்றோரை கண்ணுடையரென்றும், அஃதில்லாமல் நோய்முதலானவைகளாலே துன்பஞ்செய்யும் ஊனக்கண்ணேயுடைமையால் கல்லாதவரைப் புண்ணுடையரென்றும், சொல்லினர். [முன்பாட்டிலே கண்ணெல்லாமை குறிக்கப்பட்ட ஊனக்கண்ணினது மெய்ம்மையாகியசொரூபத்தைச்சொல்லியவிதத்தினாலேபொருணூல்களையுங்கருவிநூல்களையுங் கற்றோரது உயர்வும், கல்லாரது இழிவும், இதனாலேசொல்லப்பட்டன.

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித ........ ........ ..... ........ ❋
லனைத்தே புலவர் தொழில் ........ ..... ........ ........ ❋

(இ-ள்.) புலவர்- கற்றறிந்தவரது - தொழில் - தொழில் - உவப்ப- (யாவரும்) மகிழும்படி- தலைக்கூடி-(அவரைச்)சேர்ந்து-உள்ள (இனி இவரை நாம் எப்போது காணபோமென்று) நினைக்கும்படி - பிரிதல்- நீங்குதலாகிய- அனைத்து-அத்தன்மையையுடையதாம். (எ-று.) (கருத்து) கற்றவர்தொழிலாவது கற்றவரைச்சேர்ந்தினி யெப்பொழுது காண்போமென்று நினைத்துவருந்தலாம் என்பதாம். ❁ தாம் நல்வழிநடத்தலும், பிறருக்கு உறுதிசொல்லுதலும், தொழிலெனவொன்றாய்அடங்குதலால் அத்தன்மைத்தென்றார். அத்தன்மை-அப்பயனைத்தருந் தன்மை.— காணுதலாலே நல்லொழுக்கமும், மதுரமானவுறுதிச்சொற்களைக் கேட்கையால் இன்பமும், உண்டாதலால் கற்றவரிடத்தே எல்லாரும் அன்புடையவராவ ரென்பதாம். [இதனால் கற்றோரது உயர்வு வகுத்துச் சொல்லப்பட்டது.] (௪)

உடையார்முனில்லார்போலேக்கற்றுங் கற்றார் ... ........ ❋
கடையரே கல்லா தவர் ........ ........ ........ ..... ........ ❋

(இ-ள்.) உடையார்முன்- செல்வர்முன்னே - இல்லார்போல்- வறியவர்போல் ஏக்கற்றும்-(தம்மாசிரியர்முன்)ஏக்கற்று நின்றும் - கற்றார்-கற்றவர் - (உயர்ந்தவராவார்.) கல்லாதவர் - (அந்நிலைக்கு நாணிக்கல்லாதவர்-) கடையரே- (எப்போதும்) இழிந்தவரேயாவர். (எ-று.) (கருத்து) கற்றோருயர்ந்தோரு மற்றோரிழிந்தோருமாவர் என்பதாம். ☼ ஏக்கறுதல்-ஆசையினாலேதாழ்தல். கடையரென்றதனால் அதற்கெதிராகிய உயர்ந்தோரென்பது வருவிக்கப்பட்டது. பொய்யாகியமானத்தை நோக்கி மெய்யாகிய கல்வியையிழந்தவர் பின்னொருநாளும் அறிவுடையவராகாமையால் - கடையரேயென்றார். [இதனாலே கல்லாதவரது இழிவுசொல்லப்பட்டது.] (௫)

தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக் ........*
கற்றனைத் தூறு மறிவு ... .. ....... ........ ...... .. *

(இ-ள்.) மணல்-மணலினிடத்தே-கேணி-கேணியானது- தொட்டனைத்து-தோண்டிய அளவினதாக-ஊறும்-சுரக்கும்.- (அதுபோல்)- அறிவு-(மனிதருக்கு) அறிவானது- கற்றனைத்து - கற்ற அளவினதாக ஊறும்-சுரக்கும். (எ-று.) (கருத்து) மணற்கேணி தோண்டியவளவாகவூறுமதுபோல மனிதருக்கறிவு கற்றவளவாகும் என்பதாம். ☼ இங்கேகேணியென்றது - அதனீரை. சிறிது கற்றவளவினாலே போதுமென்று விடாமல் மேன்மேலுங் கற்றல் வேண்டுமென்பதாம். இக்கல்வியறிவு மிகுதல் ஊழ் மாறுகொள்ளாவிடத்தேயாகலான்முன்னே உண்மையறிவே மிகுமென்றதனோடு இப்பாடல் விரோதப்படாமை அறிக. (௬)

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்...... ...*
சாந்துணையுங் கல்லாத வாறு......... ...........*

(இ-ள்) (கற்றவனுக்குத் தன்னாடும் ஊருமேயல்லாமல்) - யாதானும்-யாதாயினுமொருநாடும் - நாடாம்-தன்னாடாம் (யாதானும்) யாதாயினுமோரூரும் - ஊராம்-தன்னூராம்.— (அப்படியிருக்க) ஒருவன்-ஒருவன் - சாந்துணையும்-இறக்குமளவும்-கல்லாதவாறு-கல்லாமற்கழிக்கின்றது - என்-என்னநினைத்து. (எ-று.)(கருத்து)கற்றவர்க்கெந்நாடுந் தன்னாடாம். அப்படியிருக்கவொருவன் மரணபரியந்தமுங்கற்காமலிருப்பதென்ன என்பதாம். ☼ ஆல்-அசைகள்பின்னும் உயிரோடுசெல்லுதலால் - சாந்துணையுமென்றார். பிறநாடுகளும் ஊர்களுந் தம்முடையனவபோலிருந்து மகிழ்ந்து பொருள்கொடுத்துப் பூசைசெய்தற்கு ஏதுவாகலால்- கல்வியைப்போற் சிறந்ததுவேறொன்று இல்லையாகலின் அதனையே எப்போதும் கற்கவேண்டுமென்பதாம். (௭)

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்.................*
கெழுமையு மேமாப் புடைத்து..........................*

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு-தான்-தான் - ஒருமைக்கண் ஒரு பிறப்பினிடத்து - கற்றகல்வி-கற்றவித்தை யானது - எழுமையும்-எழு பிறப்புக்களிலும் - ஏமாப்பு-போயுதவுதலை - உடைத்து-உடையதாகும் (எ,று.) (கருத்து) ஒருவன் றான்கற்ற கல்வியானது தனக்கெழுபிறப்பிலு முதவுதலுடைத்தாம் எனபதாம். ✻வினைகள்போல் உயிரிடத்தேதங்கி அதுசென்றவிடத்தே செல்லுமாகலால்-எழுமையுமேமாப்புடைத்தென்றார் உதவுதல்-நல்வழிபிலேசேர்தல். (அ)

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு.............................*
காமுறுவர் கற்றறிந் தார்...........................*

(இ-ள்.)தாம்- தாங்கள்- இன்புறுவது- இன்பமடைதற்குகாரணமாகியகல்விக்கு-உலகு-உலகமானது- இன்புற- இன்பமடைய- கண்டு-(அச்சிறப்பு)நோக்கி -கற்றறிந்தார்- கற்றறிந்தவர்கள் -காமுறுவர்-(பின்னும் அதனையே) விரும்புவார். (எ,று.) (கருத்து) கற்றவர்தாங்களின்பமடையுங்கல்விக் குலகத்தா ரின்பமடைதல்கண்டு மற்றுங்கற்பார் என்பதாம். ✻தாமின்புறுதலாவது - கற்கிறபோது சொற்பொருள்களின் சுவையை அநுபவித்தலாலும்; புகழும்பொருளும்பூசையும் பெறுதலாலும், பின்னே அறத்தையும் வீட்டையும் அடைதலாலும், அச்சுவை இடையறாத இன்பத்தை அநுபவித்தல். உலகின்புறுவதாவது - இப்பெரியவரைச்சேர்ந்து அறியா தவைகளையெல்லாம் அறிந்தோமென்று மகிழ்தல்.—சம்பாதித்தல்-காப்பாற்றல்-இழத்தல்-இவைகளாலே துன்பஞ்செய்து பலரையும் பகையாக்கலுமற்றி செல்வத்தை விரும்பாமையால் கற்றறிந்தாரென்றும், கரும்பதின்னுதற்குக் கூலிபோல் தாமின்புறுதற்கு உலகமின்புறுதல் மற்றொருவழியால் இல்லாமையால்- அதனையே காமுறுவ ரென்றும், சொல்லினார். (௯)

கேடில் விழுச்செல்வங் கல்வியொருவற்கு...............*
மாடல்ல மற்றை யவை............................*

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு - கேடில்-அழிவில்லாத-விழு சீராகிய-செல்வம் - செல்வமாவது-கல்வி-வித்தையாகும் - மற்றையவை-அதுநீங்கலாகிய மணியும பொன்னும்முதலான செல்வம்-மாடல்ல-செல்வமல்ல. (எ,று) (கருத்து) ஒருவனுக்கு அழிவில்லாதசெல்வங் கல்வியாம். பொன்மணி முதலானவை செல்வமல்லவாம் என்பதாம் ✻அழிவில்லாமையாவது - பங்காளிகள்-கள்வர்- வலியவர்- அரசர்;

இவர்களாலே கொள்ளப்படாமையும் - வழிப்பட்டவர்க்குக்கொடுத்தவிடத்தே குறையாமையும், ஆம்.—சீர்மையோக்கியரிடத்தேநிற்கை. மணிபொன் முதலானவைகளுக்கு இவ்விரண்டும் இல்லாமையால் அவற்றை மாடல்லவென்றார். [இவைஐந்துபாட்டாலும் கல்வியதுசிறப்புச்சொல்லப்பட்டது.] (௰)



## ௪௧-ஆம் - அதி, கல்லாமை.



அஃதாவது- கற்றலைச்செய்யாமையினிழிவாம். கல்வியதுசிறப்பை முன்னேசொல்லிய வளவால் முடிவுபெறாமைநோக்கி எதிர்மறையினாலேயுஞ் சொல்லுதலால் இது அதன்பின்வைக்கப்பட்டது.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய ........ ........... *
நூலின்றிக் கோட்டி கொளல் ........................... *

(இ-ள்.) நிரம்பிய- (தான்) நிரம்புதற்கு ஏதுவாகிய- நூல்- நூல்களை- இன்றி- இல்லாமல்- (ஒருவன்) கோட்டிகொளல் - சபையினிடத்தே (தானொன்றைச்சொல்லுதல்-) அரங்கு- வகுப்பிடத்தை - இன்றி -இல்லாமல்-வட்டாடியற்று-உண்டை உருட்டியதுபோலும். (எ,று.) (கருத்து) ஒருவன் கல்வியைக்கற்காமல் சபையிலொன்றைச் சொல்லல் வகுப்பறையில்லாமல் சூதாடியதுபோலும் என்பதாம். ❋நிரம்புதல்-அறியவேண்டுமவைகளை யெல்லாம் அறிதல். அப்படிச்செய்தலால்-சொல்லும் பொருளும்வழிப்படாமற்போமென்பதாம். (௧)

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு.......*
மில்லாதாள் பெண்கா முற்றற்று....................... *

(இ-ள்.) கல்லாதான்- கல்வியில்லாதவனொருவன்- சொல்-(சபையினிடத்தேஒன்று)சொல்லுதலை-காமுறுதல்-வேண்டுதல்- முலையிரண்டும்- இரண்டுமுலைகளும்-இல்லாதாள்-இல்லாதவளொருத்தி—பெண்- பெண்மையை - காமுற்றற்று வேண்டுவது போலும். (எ-று) (கருத்து) கல்லாதவன் சபையிற்பேச விச்சித்தல் இரண்டு முலைகளுமில்லாதவள் பெண்டன்மையையிச்சித்தல்போலும் என்பதாம்❋ முலை யிரண்டுமில்லாதாள்-முலைசிறிதுமில்லாதவளென்பதாம் அவாவிய விடத்து முடிவுபெறாது முடிவு பெற்றாலும்நகைவிளக்குமென்பதாம். (௨)

※ கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்............................ ※

சொல்லா திருக்கப் பெறின்........................................ ※

(இ-ள்) கல்லாதவரும் - கற்றிலாதவரும் - நனிநல்லர் மிகவும்நல்லவராவார்- (தாமே தம்மை அறிந்து) கற்றார்முன் - கற்றோர்சபையிடத்து-சொல்லாதிருக்கப்பெறின்-(யாதொன்றையும்)சொல்லாதிருக்கப்பெறுவாராயின். (எ-று) (கருத்து) கற்றார்முன்பு யாதொன்றையுஞ் சொல்லாதிருப்பாராகில் கல்லாதவரு மிகவு நல்லவராவார் என்பதாம். ※ தம்மைத்தாமறியாமையின் அதுகூடாதென்றற்கு-பெறினென்றும், பெற்றால்-அங்கேதம்மை வெளிப்படுத்தாமையாலும்-பின்கல்வியைவிரும்புவாராகலாலும்நனிநல்லரென்றும், சொல்லினார். [இவைமூன்றுபாட்டாலும் கல்லாதவர் சபையிலே பேசுதற்குஉரியரல்லரென்பது சொல்லப்பட்டது.] (௫)

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்.................... ※

கொள்ளா ரறிவுடை யார்........................................ ※

(இ-ள்) கல்லாதான்-கல்லாதவனது- ஒட்பம்-அறிவுடைமையானது- கழியநன்றாயினும் - (ஒரோவிடத்தே) மிகநன்றாயிருப்பினும்-அறிவுடையார்- விவேகமுடையவர்கள்—-கொள்ளார்-(அதனை)அறிவுடைமையாகக்) கொள்ளார் .எ-று.) (கருத்து) கல்லாதானறிவு ஒருவேளை நன்றாயிருப்பினுங்கற்றோர்கொள்ளார் என்பதாம். ※ கல்லாதவனது அறிவுடைமை- நன்றாகாது நன்றாயிற்றாயினும்நீர்மேலெழுத்துப்போல் நிலைபெறாதாகலால் நிலைபெற்ற நூலறிவினையுடையவர் அவ்வறிவுடைமையை மதியாரென்பதாம். (௬)

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து................ ※

சொல்லாடச் சோர்வு படும்........................................ ※

(இ-ள்.) கல்லாவொருவன் -(நூல்களைக்)கல்லாதவொருவன்-தகைமை-(அறிவுடையேனென்று தன்னைமதிக்கும்)மதிப்பானது- தலைப்பெய்து-(அவைகளைக்கற்றவன்) கண்டு-சொல்லாட - பேச- சோர்வுபடும்-கெடும்.(எ,று.) (கருத்து) கல்லாதவன் தன்னைமதிக்குமதிப்பானது கற்றவன் முன்பேசக்கெடும்என்பதாம். ※ கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. யாதாயினும் ஒருவார்த்தை சொல்லு மட்டுமே நிற்பது சொல்லியவிடத்து எதிருத்தரம்தரும்போதே வழுப்படுதலால் தன்னைமதித்தமதிப்பு அழிந்துவிடு மென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் கல்லாதவரது இயற்கையறிவின் குற்றம் சொல்லப்பட்டது.] (௭)

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக் ...... ...... ::
களரனையர் கல்லா தவர் ...... ...... ...... ...... ...... *

(இ-ள்.) கல்லாதவர்-கல்லாதவர்கள் (காணப்பட்டுக் கொண்டிருக்கையால்) உளரென்னு மாத்திரையரல்லால்-உளரென்று - (சிலராலே) சொல்லப்படும் அளவினராதலன்றி - (தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால்) பயவாக்களரனையர்-விளையாதகளர் நிலத்தோடொப்பாவார். (எ,-று.) (கருத்து) கல்லாதவர் விளைவில்லாக் களர் நிலத்தை யொப்பாவர் என்பதாம். ※ எப்படிக்களர் நிலம் தானும் விரும்பப் படுதலை இழந்து உயிர்களுக்கும் உணவு முதலானவைகளை உதவுவதில்லையோ அப்படியே கல்லாதவர் தாமும் நன்கு மதிக்கப் படுதலை இழந்து பிறர்க்கும் அறிவு முதலானவைகளை உதவாரென்பதாம். [இதனாலே கல்லாதவரது பயன்படாமை சொல்லப்பட்டது.] (௬)

நுண்மா ணுழைபுல மில்லா னெழினல ...... ...... ...... *
மண்மாண் புனைபாவை யற்று ...... ...... ...... ...... *

(இ-ள்.) நுண்-நுட்பமாகிய-மாண்- மாட்சிமைப்பட்ட - நுழை-(பலநூல்களிலும்) சென்ற-புலம்-அறிவை - இல்லான் - இல்லாதவனது-எழில்-எழுச்சியும்-நலம்-அழகும்-மண் - சுண்ணச்சாந்தினாலே-மாண்-மாட்சிமைப்பட- புனை - அலங்கரிக்கப்பட்ட - பாவையற்று-பாவையினது எழுச்சியும் அழகும்போலும். (எ-று.) (கருத்து) நூலறிவில்லா னெழுச்சியுமழகும் சுண்ணம்புச்சாந்தா லலங்கரிக்கப்பட்ட பாவையினெழுச்சியு மழகும்போலுமாம் என்பதாம். ※ அறிவுக்குமாட்சிமையாவது-பொருள்களைக் கடிதிலே காணலும், மறவாமையும், முதலானவை;—பாவை அதன் எழுச்சி யழகுகளைக் காட்டலால் ஆகுபெயர். உருவின்மிகுந்ததோருடம்பு கிடைத்தலும் அரிதாகலால் எழினலங்களும் ஒருபயனேயாயினும் நூலறிவில்லாவிடத்தே சிறப்பில்லனவா மென்பதாம். [இதனால் அவர் வடிவழகினாலே பயனில்லாமை சொல்லப்பட்டது.] (௭)

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே ...... ...... *
கல்லார்கட் பட்ட திரு ...... ...... ...... ...... *

(இ-ள்.) கல்லார்கண்- கல்லாதவரிடத்து-பட்ட-உண்டாகிய- திரு-செல்வமானது-நல்லார்கண்-கற்றவரிடத்து - பட்ட - உண்டாகிய-வறுமையின்-வறுமையினும்-இன்னாதே- துன்பஞ் செய்வதேயாகும் (எ-று.) (கருத்து) கல்லாதவரிடத்துண்டாகிய செல்வமானது கற்றவரிடத்துண்டாகிய வறுமையைப்பார்க்கிலுந் துன்பஞ் செய்யும் என்பதாம். ※ செல்வம்-தனக்குரிய கற்றவனாயும், வறுமை- தனக்கு

றியகல்லாதவனையும், விட்டு மாறிநிற்கையால் - அவ்விரண்டும் தாம் இடுக்கப்பட்டு உலகிற்கும் துன்பஞ்செய்தலால் ஒக்குமாயினும் செல்வம் கல்லாதவனைக்கெடுக்கும். வறுமை - கற்றோனைக் கெடுக்காது. ஆதலால் அவ்வறுமையினும் இச்செல்வம் இன்னாதென்றார். [இதனால் அவர் செல்வத்தின் குற்றம் சொல்லப்பட்டது.] (அ)

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங் ....✻

கற்றா ரனைத்திலர் பாடு .... ... ..........✻

(இ-ள்.) கல்லாதார் - கல்லாதவர்கள்-மேற்பிறந்தாராயினும்- உயர்ந்தசாதியிலே பிறந்தாராயினும் - கீழ்ப்பிறந்தும் - தாழ்ந்தசாதியிலேபிறந்திருந்தும்- கற்றாரனைத்து- கற்றவரதுபெருமை யளவினதாகிய-பாடு-பெருமையை-இலர்-இல்லாதவர்களாவார்கள். (எ-று.) (கருத்து) கல்லாதவர் மேற்குலத்திற் பிறந்தாராகிலுங் கீழ்க்குலத்திற்பிறந்து கற்றவனை யொப்பாகார் என்பதாம். ❋ உடம்போடு அழியுஞ்சாதியுயர்ச்சியினும் உயிரோடுசெல்லும் கல்வியுயர்ச்சிசிறப்புடையதென்பதாம். [இதனால் கல்லாதவரது சாதியுயர்ச்சியால் பயனில்லாமை சொல்லப்பட்டது.] (௯)

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்............✻

கற்றாரோ டேனை யவர் .......... ....... ......✻

(இ-ள்.) இலங்குநூல்- விளங்கிய நூலை கற்றாரோடு- கற்றவருடன்- ஏனையவர்- கல்லாதவர் - விலங்கொடு - மிருகங்களோடு - மக்களனையர்-மனிதர்எவ்வளவு நன்மை யுடையவரோ அவ்வளவு தீமையுடையவராவர். (எ-று.) (கருத்து) கற்றவர்மக்களையுங் கல்லாதவர்மிருகங்களையுமொப்பாவர் என்பதாம். ❋ விளங்கல் - மேன்படுதல்.—விலங்கைக்காட்டிலும் மனிதர்க்குமேலான அறிவுமிகுதி - கற்றவரிடத்தே காணப்படுதலால் கல்லாதவரும் அவரும் சமானமான பிறப்பின ரல்லரென்பதாம். [இதனால் கல்லாதவர் மனிதப் பிறப்பினாலே பயனடையாமை சொல்லப்பட்டது. (௰)

# ௪௪-ஆம்-அதி-கேள்வி.

அஃதாவது -கேட்கத்தகுநூலின் பொருள்களைக் கற்றறிந்தவர்சொல்லக்கேட்குதல். கற்றவிடத்தே அதனாலாகிய அறிவை உறுதிப்படுத்தலாலும், கல்லாதவிடத்தும் அதனை உண்டாக்கலாலும், இது கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்.... ❊
செல்வத்து ளெல்லாந் தலை ........................ ❊

(இ-ள்.) (ஒருவனுக்கு)-செல்வத்துட்செல்வம்-சிறப்புடையசெல்வமாவது- செவிச்செல்வம் - செவியால்வருஞ்செல்வமாம்.- அச்செல்வம்- அந்தச்செல்வம் - செல்வத்துளெல்லாம் - பிறசெல்வங்களெல்லாவற்றினும்- தலை-தலைமையாம். (எ-று.)(கருத்து) ஒருவனுக்குச்சிறப்புடையசெல்வமாவது கேள்விச்செல்வமாம். இச்செல்வமெல்லாச்செல்வங்களினுந் தலைமையாம் என்பதாம். ❊ செவியால்வருஞ் செல்வம்- கேள்வியால் எல்லாப்பொருளையும் அறிதல். பிறசெல்வங்கள்-பொருளால் வருவன அவை நிலைபெறாமையாலும், துன்பந்தருதலாலும், இது தலையாயிற்று. அவற்றைவிட்டு இவற்றையே தேடுகவென்பது கருத்து.] (௧)

செவிக்குண வில்லாத போழ்து சிறிது.................. ❊
வயிற்றுக்கு மீயப் படும்............................ ❊

(இ-ள்.) செவிக்கு-காதுக்கு-உணவு-உணவாகிய கேள்வியானது- இல்லாதபோழ்து-இல்லாதகாலத்தே- வயிற்றுக்கும்- வயிற்றினுக்கும்-சிறிது-சிறிதுணவு ஈயப்படும்-கொடுக்கப்படும்.(எ-று) (கருத்து) காதுக்குக் கேள்வியுணவில்லாத காலத்துவயிற்றுக் குணவுகொடுக்க வேண்டும்என்பதாம். ❊ கேட்கிறபோது மிகுந்தசுவையையும் பின்னேபயனையும் தருவதாகிய கேள்வி உள்ளபோது வயிற்றுணவு வெறுக்கப்படுதலால்- இல்லாதபோழ்தென்றும், அதிகமானவிடத்தேசம்பாதிக்குந் துன்பமாத்திரம் அல்லாமல்நோயும் காமமும் பெருகுதலால்-சிறிதென்றும், அச்சிறிது கொடுத்தலும் பின்னே பிழைத்திருந்து கேட்குதற்பொருட்டாகலால்-ஈயப்படுமென்றும், சொல்லினார். [இவையிரண்டுபாட்டாலும் கேள்வியது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௨)

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி.... ..... ❊
னான்றாரோ டொப்பர் நிலத்து ........................ ❊

(இ-ள்.) செவியுணவின்-செவியுணவாகிய- கேள்வி - கேள்வியை- உடையார்- உடையவர்-நிலத்து-பூமியிலிருக்கினும் - அவியுணவின்- அவியாகிய வுணவினையுடைய-ஆன்றாரோடு-தேவரோடு- ஒப்பர்-ஒப்பாவார். (எ-று.) (கருத்து) கல்விகேள்வியையுடையவர்பூமியிலிருப்பினுந் தேவரையொப்பாவார் என்பதாம். ❊ செவியுணவி னென்பதன்இன்சாரியை னகரம்-ஒவித்தல் விகாரம்பெற்றது. அவி யுணவு தேவர்க்கு யாகத்திலே கொடுக்கப்படுவது.- அறிவால் நிறைந்தமை

யால் ஆன்றாரொன்றும், துன்பமறியாமையால்- தேவரோ டொப்ப மொன்றும், சொல்லினார். [இதனாலே கேள்வியை யுடையவரது சிறப்புச்சொல்லப்பட்டது. (௫)

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற் ...........................※
கொற்கத்தி னூற்றாந் துணை ...........................※

(இ-ள்.) கற்றிலனாயினும்-(உறுதி நூல்களைத்தான்) கற்றிலனாயினும்-கேட்க-(அவைகளின் பொருள்களைக்கற்றோர்சொல்லக்) கேட்கக்கடவன்—அஃது-அக்கேள்வியானது- ஒருவற்கு - ஒருவனுக்கு - ஒற்கத்தின்-தளர்ச்சிவந்தவிடத்து-ஊற்றாந்துணை - பற்றுக்கோடாந்துணையாம். (எ-று.) (கருத்து) கல்லாதவனாலுங் கற்றவர்சொல்லு நூற்களைக்கேட்கக்கடவன். அக்கேள்வியொருவனுக்குத் தளர்ச்சிவந்தவிடத்துத் துணையாம் என்பதாம் ※ உம்மை கற்கவேண்டு மென்பது தோன்றநின்றது — தளர்ச்சி - வறுமையாலாவது அறிவில்லாமையாலாவது இடுக்கணுற்று மனந்தளர்தல். அத்தளர்ச்சியைக்கேள்வியாலாகிய அறிவு நீக்குமாதலால்- ஊற்றாந்துணையென்றார். (௬)

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே ...........................※
யொழுக்க முடையார்வாய்ச் சொல் ...........................※

(இ-ள்.) (ஒருவருக்கு ஆபத்திலே) - ஒழுக்கமுடையார்-நல்லநடையுடையவரது - வாய்ச்சொல் - வாயிற் பிறக்கின்றசொல் - இழுக்கலுடையுழி- வழுக்குதலையுடையசேற்றுநிலத்திலே-ஊற்றுக்கோலற்றே ஊன்றுகோல்போலுதவும். (எ-று.) (கருத்து) நல்லவர்கள் வாயிற்பிறக்குஞ்சொல் ஒருவர்க்காபத்து வந்தவிடத்திற் சேற்றுநிலத்திற் கூன்றுகோல்போலுதவியாம் என்பதாம். ※ ஊன்றுகோல் போலுதவுதல்-தளர்ந்தவிடத்து அதனை நீக்குதல். ஒழுக்கமில்லாதவர் கல்வியுடையவராயினும் அறிவில்லாராகலால்அவர்வாய்ச்சொல்கேட்கலாகாதென்பதுதோன்ற ஒழுக்கமுடையார் வாய்ச்சொலென்றார். தீச்சொலறியாமையாகிய சிறப்புத்தோன்றற்கு வாயென்பது அதிகமாகச்சொல்லப்பட்டது-அச்சொல்லைக்கேட்கக்கடவனென்பதுகருத்து

எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு ...........................※
மான்ற பெருமை தரும் ...........................※

(இ-ள்.)(ஒருவன்)-நல்லவை-நல்லவை-(உறுதிப்பொருள்களிலே) எனைத்தானும்-எவ்வளவுசிறிதாயினும் - கேட்க - கேட்கக்கடவன்.— (அக்கேள்வியானது)அனைத்தானும் - அவ்வளவினாலும் - ஆன்றபெருமை-நிறைந்தபெருமையை-தரும்-கொடுக்கும். (எ-று.)(கருத்து) ஒருவனல்லவைகளைக் கேட்கக்கடவன். அவைமிகுந்த பெருமையை

த்தரும் என்பதாம். ❊ அச்சிறியகேள்விகளும் மழைத்துளிகள்போ ல்வந்து உள்ளநிறைத்து எல்லாவறிவுகளையும் உண்டாக்கலால்-சிறி தென்று இகழலாகா தென்பதாம். (௬)

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந் தீண்டிய கேள்வி யவர்.............................❊

(இ-ள்.) இழைத்துணர்ந்து-(பொருள்களை) நுட்பமாக ஆராய்ந்து அறிந்து-ஈண்டிய-(அதன்மேலும்) நிறைந்த-கேள்வியவர்-கேள்வியையுடையவர்-பிழைத்துணர்ந்தும்-பிழை அறிந்தவிடத்தும் பேதைமை-(தமக்குப்) பேதைமையை உண்டாக்குஞ் சொற்களை சொல்லார்-சொல்லார். (எ-று.) (கருத்து) கற்றவர்கள் அறிவீனமான சொற்களைச் சொல்லார் என்பதாம். ❊ பிழைப்பு என்பது பிழைத்தெனத்திரிந்தது பேதைமை-அதை உண்டாக்குஞ்சொல்லுக்கு ஆகுதலால்-ஆகுபெயர். ஈண்டுதல்-பலவழியாலும் வந்துநிறைதல்.— பொருள்களின் மெய்ம்மையைத் தாமும் அறிந்து அறிந்தவரிடத்தேயும் அவர்சொல்லக்கேட்டு ஒப்புப்பார்த்து இருப்பவர்-தமோகுணத்தால் மயங்கினராயினும் அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். [இவைநான்குபாட்டாலும் கேள்வியினாலே திடப்பட்டவர்க்குவருமதன்மைசொல்லப்பட்டது.] (எ)

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்...........❊
றோட்கப் படாத செவி..............................❊

(இ-ள்.) கேள்வியால்-கேள்வியினாலே-தோட்கப்படாத-தொளைக்கப்படாத செவி-காதுகள்-கேட்பினும்-(தமக்குரிய(ஓசையைக்) கேட்குமாயினும்-கேளாத்தகையவே-செவிடாந்தன்மையினவேயாம். (எ-று.) (கருத்து) கேள்வியாலே தொளைக்கப்படாதசெவிகள் ஓசையைக் கேட்குமாறாலும் கேளாததன்மையுடையனவாம் என்பதாம். ❊ ஓசைமாத்திரத்தால் உறுதி அடையாமையால்-கேளாத்தகையவென்றும், மனத்திலே நூற்பொருள் நுழைதற்கு வழியாகலால்-கேள்வியைக் காரணமாக்கியும், சொல்லினர். பழைய தொளை தொளையன்றென்பதாம். (அ)

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய..... ........❊

வாயின ராத லரிது...................................❊

(இ-ள்.) நுணங்கிய-நுட்பமாகிய-கேள்வியரல்லார்-கேள்வியையுடையவரல்லாதவர்-வணங்கிய-வணக்கத்தைக்காட்டுகிற-வாயினராதல்-சொல்லையுடையவராகுதல்-அரிது-கூடாது-(எ-று.) (கருத்து) நுணுக்கமான கல்விகேள்வியில்லாதவர்கள் வணக்கமுள்ள வாயினையுடையவராகுதலரிது என்பதாம். ❊ கேட்கப் படுகின்ற பொருளி

னது நுட்பம் கேள்விமேல் ஏற்றப்பட்டது. வாய்-அதன் சொல்லுக்கு ஆகுதலால் ஆகுபெயர். கேளாதார் அறிவில்லாமையால் தம்மைத் தாமே வியந்து சொல்லுவாரென்பதாம். (௯)

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க... ...... .... *
ளவியினும் வாழினு மென் .... ...... .... ....... ........ *

(இ-ள்.) செவியிற்சுவை-காதுகளால் அறியப்படுஞ்சுவைகளை-உணரா-அறியாமல்-வாயுணர்வின் - வாயால்-உண்ணப்பட்டசுவையை அறியும் அறிவினையுடைய - மாக்கள்-மனிதர்-அவியினும் - இறந்தாலும்-வாழினும்-வாழ்ந்தாலும் - என்-(உலகத்துக்கு வருவது) யாது. (எ, று.) (கருத்து) காதுகளா லறியப்படுங் கல்விமதுரத்தை யறியாமல்வாயா லறியப்படு மதுரத்தை யறியுமனிதர்கள் இறந்தாலென்ன வாழ்ந்தாலென்ன என்பதாம். ❊ செவியா லுணரப்படுஞ்சுவைகள். சொற்சுவையும், பொருட்சுவையும், ஆம். இவைகளிலே சொற்சுவை குணாலங்காரங்கள். பொருட்சுவை - சிங்கார முதலாகிய நவரசங்கள். வாய்ச்சுவை- தித்திப்புமுதல் அறுவகைப்படும்.— அவர் செத்தால் இழப்பதும், வாழ்ந்தால் பெறுவதும், இல்லாமையால் இரண்டும்சமானந்தானென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் கேளாதவிடத்துஉண்டாகும் குற்றம்சொல்லப்பட்டது.] (௰)

# ௪௩-ஆம்-அதி-அறிவுடைமை.

அஃதாவது - கல்விகேள்விகளினாலாகிய அறிவோடு உண்மையறிவுடையனாதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு...... .........*
முள்ளழிக்க லாகா வரண்........ ...................*

(இ-ள்.) அறிவு-(அரசர்க்கு) அறிவென்பது - அற்றம் - முடிவு வாராமல்-காக்கும் - காக்கின்ற-கருவி-படையாம்.— (அதுவல்லாமல்) செறுவார்க்கும்-பகைவர்க்கும்- அழிக்கலாகா-அழிக்கக் கூடாத-உள் உள்ளாகிய-அரண் - காவலிடமுமாம். (எ, று.)(கருத்து) அரசர்க்கறிவானது அவ்வரசனைக்காக்கும் படையாம். அவ்வறிவுபகைவர் அழிக்கக்கூடாத அரணும் என்பதாம். ❊ காத்தல்-முன்னறிந்து பரிகரித்தல். [இதனால் அறிவினது சிறப்புச்சொல்லப்பட்டது. (௧)

சென்றவிடத்தாற் செலவிடாதீதொரீஇ..... .....................*
நன்றின்பா லுய்ப்ப தறிவு .................... ....................*

(இ-ள்.) (மனத்தை)—சென்றவிடத்தால்-(அது) போனவிஷயத்திலே-செலவிடா-போகவிடாமல்-(அவ்விஷயங்களினன்மைதீமைகளை ஆராய்ந்து)-தீது-தீயதிலிருந்து-ஒரீஇ-நீக்கி-நன்றின்பால்-நல்லதனிடத்து-உய்ப்பது-போகவிடுவது-அறிவு-விவேகம். (எ, று) (கருத்து) அறிவானது மனம்போனவழியிற் போகவிடாமல் நன்மையிடத்துவிடுவதே யறிவாம் என்பதாம். ❁ குதிரையைநிலமறிந்துசெலுத்தும் வாதுவன்போல் வேறுக்கி மனத்தைப் புலமறிந்துசெலுத்துவது அறிவென்றார் அது உயிர்க்குண மாகலால். (௨)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்..... *
மெய்ப்பொருள் காண்ப தறிவு .................... .........*

(இ-ள்.) எப்பொருள்-யாதொருபொருளை - யார்யார்வாய்-எவரெவர்வாயில்-கேட்பினும் - கேட்டாலும்-அப்பொருள் - அப்பொருளினது-மெய்ப்பொருள் - மெய்யாகியபயனை - காண்பது- காணவல்லது-அறிவு-விவேகம். (எ, று.) (கருத்து) எந்தப்பொருளை யெவர்வாயிற்கேட்பினும் அந்தப்பொருளைக்காண்பதேயறிவாம் என்பதாம் ❁ முக்குணங்களும் மாறிமாறிவருதல் யாவர்க்கும் உண்டாதலால் உயர்ந்தபொருளை இழிந்தார்வாயிலும், இழிந்த பொருளை உயர்ந்தார்வாயிலும், உறுதிப்பொருளை பகைவர்வாயிலும், கெடு பொருளைச்சினேகர் வாயிலும், ஒரோவிடத்தேகேட்கப்படுதலால்-எப்பொருள்யார்யார்வாய்க் கேட்பினுமென்றார். சொல்லுவாரியல்பு நோக்காமல் அப்பொருளின்பயனோக்கி நல்லதைக்கொண்டு தீயதைவிடுவதுஅறிவென்பதாம். (௩)

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய் ....*
நுண்பொருள் காண்ப தறிவு ................................ .........*

(இ-ள்.) (தன்னாலேசொல்லப்படும் சொற்கள் அரியபொருளினவாயிருந்தாலும்) - எண்பொருளவாக - (கேட்பவர்க்கு) எளியபொருளினவாம்படி - செல-மனங்கொள்ள-சொல்லி-சொல்லி-தான்-தான்-பிறர்வாய் - பிறர்வாயிற்(கேட்கப்படுஞ்சொற்களில்)நுண்பொருள்-(காணுதற்கரிய) நுட்பப்பொருளையும் - காண்பது - காணவல்லது-அறிவு-விவேகம். (எ; று.) (கருத்து) தன்னாற்சொல்பொருளையெளிதாகச்சொல்லிப் பிறர்சொல்பொருளை யறிவதே யறிவாமென்பதாம். ❁ அறிவுடையவனது தொழில்அறிவின்மேலேற்றப்பட்டது. தான்சொல்பவைகளை வழுவில்லாமல் நன்றாகவிளங்கச் சொல்லவே

ண்டுமென்பதற்குச் சொல்லின்மேல்வைத்தும், பிறர்சொல்லக்கேட்கப்படும்வைகள் வழுவினாலும் நன்றாகவிளங்காமற் போனாலும் அவைகளின் பயனைக்கொண்டு விடவேண்டுமென்பதற்குப் பொருளின்மேல் வைத்துஞ்சொல்லினர். (௪)

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங் ............ *
கூம்பலு மில்ல தறிவு .............. *

(இ-ள்.) (ஒருவனுக்கு) - உலகம்-உயர்ந்தோரை-தழீஇயது நட்பாக்குவது - ஒட்பம்-அறிவுடைமையாம்.— மலர்தலும்- (முன்னே) விரிதலும்-கூம்பலும் - (பின்னே) குவிதலும்-இல்லது - (அந்நட்பினிடத்தே) இல்லாதது-அறிவு - அறிவு. (எ,று.)(கருத்து) ஒருவனுயர்ந்தோரைச்சிநேகிப்பதறிவாம். நட்பினிடத்து முன்முக மலர்தலும்பின்முகங்குவித்தலு மில்லாமையு மறிவாம் என்பதாம். ❋ உயர்ந்தோரோடு நீர்ப்பூப்போல் வேறுபடாமல்கோட்டுப்பூப்போல்ஒருநிலையே நட்பாயினால் எல்லாவின்பங்களும்உண்டாகலால்அதனை அறிவென்றார். (௫)

எவ்வ துறைவ துலக முலகத்தோ ............ *
டவ்வ துறைவ தறிவு .............. *

(இ-ள்.) உலகம்-உலகமானது - எவ்வது-எவ்விதத்தினால்- உறைவது-நடப்பதாயிருக்கின்றது.- உலகத்தோடு- அவ்வுலகத்துடன் பொருந்தி-அவ்வது - அவ்விதத்தால்-உறைவது-(தானும்)நடப்பது-அறிவு-(அரசனுக்கு)அறிவாம். (எ,று.) (கருத்து) உலகமானதெவ்வகையினாலே நடப்பதாயிருக்கின்றது அவ்வுலகத்துடன் பொருந்தி அவ்வகையினாலே தானடப்பதறிவாம் என்பதாம். ❋ உலகத்தையெல்லாம் யானியமித்தலால் என்னை நியமிப்பார் இல்லையென்று நினைத்துத் தான்நினைத்தபடி நடந்தால் பழியும் பாவமும் ஆம், ஆதலால் அப்படிநடத்தல் அரசனுக்கு அறிவன்றென்று விலக்கிய படியாயிற்று.[இவைஐந்துபாட்டாலும் அறிவுடைமையி னிலக்கணம் சொல்லப்பட்டது.] (௬)

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா .............. *
ரஃதறி கல்லா தவர் .............. *

(இ-ள்.) ஆவது-வரக்கடவதை)-அறிவார்-(முன்னே) அறியவல்லவர்-அறிவுடையார்-அறிவையுடையவராவர். —அஃது - அவ்வரக்கடவதை- அறிகல்லாதவர்- (முன்னே) அறியமாட்டாதவர் - அறிவிலார் - அறிவில்லாதவராவர் .எ,று.) (கருத்து) முன்வரக்கடவதையு

றியவல்லவர் அறிவுடையவராவர். அறியமாட்டாதவர் அறிவில்லாத வராவார் என்பதாம். ※ முன்னறிதலாவது-முன்னேஎண்ணியறிதல்.

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ.................... .....*
தஞ்ச லறிவார் தொழில்............ ..... ............. ........*

(இ-ள்.) அஞ்சுவது-அஞ்சத்தகுவதற்கு-அஞ்சாமை-பயப்படாமை-பேதைமை-அறிவில்லாமைஆம்- அஞ்சுவது-அஞ்சத்தகுவதற்கு-அஞ்சல்- பயப்படுதல்!-அறிவார்தொழில்- விவேகிகள்துதொழில் ஆம் (எ-று.) (கருத்து) அஞ்சத்தகுவதற் கஞ்சாமை அறிவில்லாமையாம் அஞ்சத்தகுவதற் கஞ்சுதலறிவுடைமையாம் என்பதாம். ※ அஞ்சத்தகுவன- பாவம்பழிகேடு முதலாகிய பலவாயினும் சாதிபற்றி அஞ்சுவதென்று ஒருமையாகக்கூறினர். அஞ்சாமை- எண்ணாதுசெய்துநிற்றல். அஞ்சுதல் - எண்ணிச்செய்யாது விடுதல்.—அஞ்சாமையை இறைமாட்சியாக முன்னேசொல்லுதலால் இங்கே அஞ்சவேண்டுமிடம் சொல்லியபடி. [இவை இரண்டுபாட்டாலும் அறிவுடையவரது இலக்கணம் சொல்லப்பட்டது. (அ)

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை.................. .....*
யதிர வருவதோர் நோய்........................................ ..*

(இ-ள்.) (வரக்கடவதாகியஅதனை)- எதிரதாக்காக்கும் - முன்னே அறிந்துகாக்கவல்ல-அறிவினர்க்கு-விவேகமுள்ளவர்க்கு- அதிர-(அவர் நடுங்கும்படி-வருவதோர்நோய் வருவதாகிய ஒருதுன்பமும்— இல்லை-இல்லை. (எ-று.) (கருத்து) வருந்துன்பங்களை முன்னமே யறிந்து காத்துக்கொள்ளும் விவேகிகளுக்குத் துன்பமில்லை என்பதாம். ※ இதனாலே வரக்கடவதாகிய துன்பத்தைக்காத்தற்குரிய காலம் அறிவிக்கப்பட்டது. காத்தல்- அத்துன்பத்தின்காரணத்தைவிலக்குதல்.[அவர்க்குத்துன்பமில்லாமை இதனாலேசொல்லப் பட்டது.

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா...............*
ரென்னுடைய ரேனு மிலர்..... .................... ........*

(இ-ள்.) அறிவுடையார் - விவேகமுடையவர்கள்-எல்லாமுடையார்-(வேறொன்றும்இல்லாதவராயிருந்தாலும்) எல்லாமுடையவராவார்,—அறிவிலார்-விவேகமில்லாதவர்கள்- என்னுடையரேனும்.எல்லாமுடையவராயிருந்தாலும்-இலர்-(ஒன்றும்)இல்லாதவராவார்.(எ-று) (கருத்து)அறிவுடையவரில்லாதவராயினுமெல்லாமுடையவராவார் அறிவில்லா ரெல்லா முடையவராயினு மொன்றுமில்லாதவ ராவார் என்பதாம். ※ செல்வங்களெல்லாம் அறிவினாலேசம்பாதிக்கவும்காக்கவும்படுதலால் அதனையுடையவனர- எல்லாமுடையாரென்றும்,அவையெல்லாம் முன்னாகவேஅமைந்துகிடந்தாலும் அழியாமற் காத்

தற்கும்அழிந்தவிடத்தே சம்பாதித்தற்குங்கருவியாகிய அறிவில்லாமையால் அறிவில்லாதவரை-என்னுடையரேனுமிலரென்றும், சொல்லினர். [இதனால் அறிவுடையவரது உடைமையும்,மற்றவரதுஇல்லாமையும், சொல்லப்பட்டன.] (௰)



## ௪௪-ஆம் - அதி - குற்றங்கடிதல்.



அஃதாவது- காமம்-குரோதம்-உலோபம்-மானம்-உவகை-மதம்-என்னப்பட்ட ஆறுகுற்றங்களையும் அரசன் தன்னிடத்தே தோன்றாமல்கடிதல். இவைகளைக் குற்றமென்று அறிதலும், கடிதலும், அறிவுடையார்க்கல்லதுமற்றவர்க்குக் கூடாமையால்-அதன்பின்வைக்கப்பட்டது.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்.................*
பெருக்கம் பெருமித நீர்த்து.................*

(இ-ள்.) செருக்கும்-மதமும்-சினமும்-குரோதமும்-சிறுமையும் காமமும்ஆகிய(குற்றங்களை)— இல்லார் - இல்லாதஅரசனது - பெருக்கம்-செல்வமானது-பெருமிதநீர்த்து- மேன்பாட்டுக்குணத்தையுடையதாம்.(எ-று.) (கருத்து) மதமுங்கோபமுங் காமமுமில்லாதவரசன்-செல்வமானது மேலானதாகும் என்பதாம்.❁மதம்-செல்வக்களிப்பு-சிறியவாதுசெயலாதலால்- அளவிறந்தகாமம் சிறுமையெனப்பட்டது.இக்குற்றங்கள்-அநீதிகளைச்செய்வித்தலால் இவைகளை நீக்கினவரது-செல்வம்நல்வழிப்படுதலும் நிலைபெறுதலுமுடைமையால்-மதிப்புடைத்தாகுமென்பதாம். மிகுதிபற்றி இக்குற்றங்கள்முன்சொல்லப்பட்டன. (௧)

இவறலு மாண்பிறந்த மானமு மாணா.................*
வுவகையு மேத மிறைக்கு.................*

(இ-ள்.) இவறலும்- வேண்டுமிடத்துப் பொருள் கொடாமையும்-மாண்பிறந்தமானமும் - நன்மையினீங்கியமானமும் — மாணாவுவகையும்-அளவிறந்தமகிழ்ச்சியும்-இறைக்கு - அரசனுக்கு - ஏதம்-குற்றங்களாம். (எ-று.) (கருத்து)கொடாமையும்நன்மானமும்அளவில்லாமகிழ்ச்சியும் அரசனுக்குக்குற்றங்களாம் என்பதாம். ❁ மாட்சியானமானத்தை நீக்குதற்குமாண்பிறந்தமானமென்றார்.- அம்மானமாவது-அந்தணர்-சான்றோர்-அருந்தவர்-தன்முன்னோர்- தந்தைதாய்-என்றிவரை-வணங்காமையும்- முடிக்கத்தகாததாயினும்-நினை

த்ததுமுடித்தேவிடுதலும், முதலானவை- அளவிறந்தவுவகை- மிகுந்தமகிழ்ச்சி. [இவை இரண்டுபாட்டாலும் குற்றங்கள்இவையெனச்சொல்லப்பட்டன. (௨)

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக் .... .. *
கொள்வர் பழி நாணுவார் ................................ *

(இ-ள்.) பழிநாணுவார்- பழிக்கு அஞ்சுவோர் - தினைத்துணையாங் குற்றம்-தினையளவு சிறியகுற்றமானது-வரினும்- (தம்மிடத்து)வந்ததயினும்—(அதனை அவ்வளவாகவல்லாமல்)- பனைத்துணையா - பனையினளவுபெரிதாக - கொள்வர்-கொள்வார்கள். (எ-று.) (கருத்து) பாவத்துக்குப்பயப்படுவோர் தினையளவுகுற்றம்வரினும்பனையளவாகவெண்ணுவார் என்பதாம். ※ குற்றம்- சாதியொருமைப்பெயர்-சிறுகுற்றமும் தமக்கு ஏற்காமையால் சிறிதென்று பொருர்பெரிதாகக்கொண்டு வருந்திப்பின்னும் அதுவாராமல் காப்பரென்பதாம்.()

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே ...................... *
யற்றந் தருஉம் பகை.......................................... *

(இ-ள்.) அற்றம்-முடிவை-தருஉம்பகை - (தனக்குத்) தரும்பகை - குற்றமே-குற்றமேயாம்-(ஆதலால்)-குற்றமே - அக்குற்றம்(தன்னிடத்துவாராமையையே)-பொருளாக- பயனாகக்கொண்டு - காக்க -காக்கவேண்டும். (எ-று.) (கருத்து) தனக்குமுடிவைத்தரும்பகைகுற்றமாம் ஆகலால் அக்குற்றத்தைக்காக்ககடவன் என்பதாம். ※இக்குற்றங்களிலே ஒன்றைப்பற்றியல்லாமல் பகைவர்தனக்குமுடிவைச்செய்யாமையால் இவையே அரசனுக்குப்பகையாவனவென்றும், இவைகளி னில்லாமையையே குணங்களினிருப்பாகக்கொண்டென்றற்கு-பொருளாகவென்றும்,சொல்லினார். (௪)

வருமுன்னர்க் காவா தான் வாழ்க்கை யெரிமுன்னர்... ...*
வைத்தூறு போலக் கெடும்..... ... .... ... ................ *

(இ-ள்.) வருமுன்னர்-(குற்றம்)வருவதன்முன்னே - காவாதான்-(அதனைவாராமல்) காவாத அரசனது-வாழ்க்கை- வாழ்வானது-(அதுவந்தால்)-எரிமுன்னர்-தீமுகத்துநின்ற- வைத்தூறுபோல - வைக்கோலின்கூட்டம்போல- கெடும்-அழிந்துவிடும். (எ-று.) (கருத்து) குற்றம்வருமுன்னே காத்துக்கொள்ளாவரசன் வாழ்வு அக்கினிமுன்னின்றவைக்கோல் போலக்கெடும்.என்பதாம். ※குற்றமென்பது-அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. முன்னரென்றதனால் - காத்தலாங்காலம்பெறப்பட்டது. குற்றம் சிறிதாயினும் அதனாலே பெரியசெல்வம்அழிந்தேவிடுமென்பது உபமானத்தினாலே கொள்ளப்பட்டது.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி ...... ...... ...... ...... ※
னென்குற்ற மாகு மிறைக்கு ...... ...... ...... ...... ...... ※

(இ-ள்.) தன்குற்றம் - தனதுகுற்றத்தை - நீக்கி-(முன்னேகண்டு) கடிந்து-பிறர்குற்றம்-பிறரதுகுற்றத்தை - காண்கிற்பின்-(பின்னை) காணவல்லவனாயின் - இறைக்கு - அரசனுக்கு - ஆகும் - ஆகக்கடவதாகிய-குற்றம்-குற்றம் - என்-யாது. (எ-று.) (கருத்து) தன் குற்றத்தை முன்கடிந்து பிறர்குற்றத்தைப்பின்கடிவானாகில் அவ்வரசனுக்குக்குற்றமில்லை என்பதாம். ※ அரசனுக்குத் தன்குற்றங்கடியாதவிடத்தே பிறர்குற்றங்கடிதல் குற்றமாம் அதுகடிந்த விடத்தே முறைசெய்தலாம் என்றற்கு-என்குற்றமாகுமென்றார். எனவே தன்குற்றங்கடிந்தவனே முறைசெய்தற்கு உரியவனென்றதாயிற்று. [இவை நான்குபாட்டாலும் குற்றங்கடிதல் பொதுவகையினாலே சொல்லப் பட்டது] இனிச்சிறப்புவகையாற்கூறுகிறார். (௬)

செயற்பால செய்யா திவறியான் செல்வ ...... ...... ※
முயற்பால தன்றிக் கெடும் ...... ...... ...... ※

(இ-ள்.) செயற்பால-(பொருளினாலே தனக்குச்) செய்துகொள்ளப்படுமவைகளை - செய்யாது-செய்துகொள்ளாமல் - இவறியான்-(அதனிடத்து) லோபஞ்செய்தவனது - செல்வம் - செல்வமானது-உயற்பாலதன்றி - பின்னுள்ளதாகும்பகுப்பினதன்றி-கெடும்,(வீணாகக்)கெடும். (எ,று.) (கருத்து) செய்யப்படுமவற்றைச் செய்துகொள்ளாமல் உலோபஞ்செய்யுமரசன் செல்வங்கெடும் என்பதாம். ※ செய்துகொள்ளப்படுமவை - அறம்பொருளின்பங்கள். பொருளால் இம்மூன்றிலே ஒன்றாகிய பொருள்செய்தலாவது- அதனைப்பெருக்குதல். செல்வமானது-அறஞ்செய்யாமையாலும் - பொருள்பெருக்காமையாலும் - பின்னுளதாகாதென்றும், இன்பப்பயன் கொள்ளாமையால்-கெடுமென்றும், அறிக. (௭)

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு ...... ...... ※
மெண்ணப் படுவதொன் றன்று ...... ...... ...... ...... ※

(இ-ள்.) பற்றுள்ளமென்னும்-(பொருளைவிடத் தகுமிடத்துவிடாது) பற்றுகின்றவுள்ளமாகிய - இவறன்மை-உலோபத்தன்மையானது-எற்றுள்ளும் - எல்லாக்குற்றத்தன்மைகளுள்ளும் - எண்ணப்படுவது-(வைத்து) நினைக்கப்படுவது-ஒன்றன்று - ஒன்றல்ல- மிகுந்ததாம். (எ,று.) (கருத்து)பொருளைப்பற்றுமுலோபத்தன்மையானது எல்லாக்குற்றத்திலு மிகுந்ததாம். என்பதாம். ※ இவறன்மை-குணங்களெல்லாஞ் சேர்ந்திருந்தாலும் அவைகளைக் கெடுப்படுத்தித்தா

ன்மேற்பட வல்லவியல்பு. மற்றவை அதுசெய்யா மாட்டாமையால் எற்றுள்ளுமெண்ணப்படுவ தொன்றென்றார்.எவற்றுள்ளுமென்பது இடைக்குறைவிகாரம்.[இவையிரண்டுபாட்டாலும்உலோபத்தின தீமைசொல்லப்பட்டது.] (அ)

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க.................*
நன்றி பயவா வினை...................... ......... ........*

(இ-ள்.) எஞ்ஞான்றும்-எக்காலத்திலும் [தான்மிகவும் உயர்ந்த காலத்திலுமென்றபடி] - தன்னை - தன்னை -வியவற்க-(மனத்தினாலே) நன்குமதியாதிருக்கக்கடவன்.— நன்றி நன்மையை-பயவா-(தனக்குத்)தாராத-வினை - தொழில்களை-நயவற்க-(மானத்தால்) விரும்பாதிருக்கக்கடவன். (எ,று.) (கருத்து) எக்காலத்துமொருவன் தன்னை மதியாதிருக்கக்கடவன் நன்மையைத்தராததொழிலை யிச்சியாதிருக்கக்கடவன் என்பதாம். ❋ தன்னை நன்குமதித்தவிடத்தே இடமும் காலமும் வலியும் அறியப்படாமையாலும், அறமும் பொருளும இகழப்படுதலாலும், எஞ்ஞான்றும் வியவற்கவென்றும், நினைத்ததுமுடித்தே விடுவேனென்று அறப்பொருளின்பங்களைத்தாராததொழில்களை விரும்பினால் - அவைகளால் பாவமும் பழியும் கேடும்வருமாகலால் - அவற்றைநயவற்க வென்றும், சொல்லினார். [இதனால்மதமானங்களினது தீமைசொல்லப்பட்டது.] (கூ)

காதல காத லறியாமை யுய்க்கிற்பி............................*
னேதில வேதிலார் நூல்..................................*

(இ-ள்.) காதல-(தன்னாலே) விரும்பப்பட்ட பொருள்களை- காதல்-அவ்விருப்பத்தை - அறியாமல்-(அவர்) அறியாதிருக்கும்படி-உய்க்கிற்பின் - அனுபவிக்கவல்லவனாயின் - ஏதிலார்-பகைவர்-நூல்,(தன்னை வஞ்சித்தற்குஎண்ணும்) எண்ணமானது-இல்-பழுதாம். எ,று. (கருத்து) தன்னாலிச்சிக்கப்பட்ட பொருள்களையுந் தன்னிச்சையையும்பகைவரறியாம லநுபவிக்க வல்லவனானா லப்பகைவ ரெண்ணம் பழுதாம் என்பதாம். ❋ அறிந்தவிடத்தே அவைவழியாகப் புகுந்து வஞ்சிப்பாராதலால் அறியாமல் அனுபவிக்கவேண்டு மென்பதாம். [இதனாலே முழுதும்விடலாகாத காமத்தைஅனுபவிக்கும் விதம்சொல்லப்பட்டது.] (ம)





# ௪௫-ஆம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல்.



அஃதாவது - அவ்வறுவகைக்குற்றங்களையும் கடிந்த அரசன்தன்னை த்தீயவழியில் விலக்கி நல்வழியிலேசெலுத்தும்பேரறிவுடையவரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல். அதிகாரமுறைமை இதனால் விளங்கும். பேரறிவுடையவராவார்- அரசாட்சிக்குக்குற்றம் வாராமற் காத்தற்குரிய அமைச்சர்புரோகிதர்.

அறனறிந்துமூத்த வறிவுடையார் கேண்மை.........※
திறனறிந்து தேர்ந்து கொளல்.......... ..................... ※

(இ-ள்.) அறனறிந்து-அறத்தினது நுட்பத்தை அறிந்து-மூத்த (தன்னின்)மூத்த - அறிவுடையார்-அறிவுடையவரது - கேண்மை-நட்பை-தேர்ந்து - (அதனது அருமையைத்) தெரிந்து- திறனறிந்து-(கொள்ளுந்) திறமறிந்து-கொளல் - )அரசன்) கொள்ளக் கடவன். (எ,று.) (கருத்து) அரசனறிவுடையோர் சிநேகத்தைக் கொள்ளக்கடவன் என்பதாம். ❊ மூத்தல்-அறிவாலும், சீலத்தாலும், காலத்தாலும், முதிர்தல். அறிவுடையார்-நீதியையும், உலகியலையும்; அறிதலையுடையவர். திறனறிதலாவது-நன்குமதித்தல்- உபசரச்செய்தல்-அவர்சொல்வழிநடத்தல் - இவைமுதலாக அவர் தனக்கு உள்ளராந்திறமறிந்துசெய்தல். (௧)

உற்றநோய் நீக்கியுறாஅமை முற்காக்கும்...... .........※
பெற்றியார்ப் பேணிக் கொளல்........................ ........ ※

(இ-ள்.) உற்ற-தெய்வத்தாலாவது மனிதராலாவதுதனக்குவந்த-நோய்-துன்பங்களை - நீக்கி-(நீக்கும்விதம் அறிந்து)நீக்கி- உறாமை (பின்அப்படிப்பட்டவை) வாராதபடி - முற்காக்கும்-முன் (னறிந்து)காக்கவல்ல - பெற்றியார்-தன்மையுடையவரை - பேணி-அவர் ※ மகிழத்தக்கவைகளைச்செய்து - கொளல்-(அரசன் துணையாகக்)கொள்ளக்கடவன். (எ,று.) (கருத்து) துன்பங்களை நீக்கும்விதமறிந்துநீக்கி அத்துன்பங்கள்வாராமற் காக்கவல்லவரை யரசன் சிநேகிக்கக்கடவன் என்பதாம். ❊ தெய்வத்தால் வருந்துன்பங்களாவன-மழையில்லாமையாலும், அதிகமழையாலும், காற்றுத்தீப்பிணிஇவைகளாலும்வருவன. அவை-கடவுளரையும், தக்கோரையும், நோக்கிச் செய்யப்படுஞ் சாந்திகளால் நீக்கப்படும்.— மக்களால் வருந்துன்பங்களாவன. பகைவர்-கள்வர்-சுற்றத்தார் - தொழில்செய்வார் - இவர்களால்வருவன. அவை சாம பேத தான தண்டங்களாகியநால்வகையுபாயங்களுள் ஏற்றதனால்நீக்கப்படும்.—முற்காத்தலாவது - தெய்வ

---

※ மகிழத்தக்கவை - நன்குமதிக்குமுதலானவை.

த்தால்வருமவைகளை உற்பாதங்களால் அறிந்து அச்சாந்திகளாலே காத்தலும், மனிதரால் வருமவைகளை அவரதுகுணம் ஐ இங்கிதம் * ஆசாரம்செயல்-என்பவைகளால் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாலே காத்தலும் ஆம். ஆகவேபுரோகிதனையும்- மந்திரிகளையும், சொல்லியபடியராயிற்று. [இவ்விரண்டுபாட்டானும் பெரியோரது இலக்கணமும், அவரைத்துணையாகக் கொள்ளவேண்டுமென்பதும், கொள்ளும்விதமும், சொல்லப்பட்டன.] (௨)

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்……… ………*
பேணித் தமராக் கொளல் ……… ………………………*

(இ-ள்.) பெரியாரை-பேரறிவுடையவர்களை - பேணி- அவர்மகிழத்தக்கவைகளைச்செய்து - தமரா-தமக்குச் சிறந்தவராக - கொளல்- கொள்ளுதல் - (அரசர்க்கு)- அரியவற்றுளெல்லாம்-அரியபேறுகள் பலவினும் அரிதே - அரிது. (எ,று.)(கருத்து) பெரியோரைச்சிநேகித்தலரசன்பெறும்பேறுகள் பலவினு மிதுபெரியதாம் என்பதாம். ※உலகத்திலே அரியவையெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்குஇப்பேறு சிறந்ததென்றது இதனால் அவையெல்லாம் உண்டாதலைக்குறித்தென்க. (௩)

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்…… …… ……………*
வன்மையு ளெல்லாந் தலை……………, …… ………………*

(இ-ள்.) தம்மிற்பெரியார்- (அறிவுமுதலானவைகளாலே) தம்மின்மிகுந்தவர் - தமரா-தமக்குச்சிறந்தவராக-ஒழுகுதல்-(தாம்அவர்வழியிலேநின்று) நடத்தல்- (அரசர்க்கு) வன்மையுளெல்லாம்- வலியுடைமைபலவினும்-தலை-முதன்மையாம். (எ,று.)(கருத்து) தம்மைவிடப்பெரியோரைச்சிநேகித்துநடத்தலரசன்வல்லமைபலவினுள்ளுந் தலைமையாம் என்பதாம். ※ இப்பெரியார்பொருள்படையரணகளால் நீக்கக்கூடாதவையாகியதெய்வத்தால்வருந்துன்பமுதலானவைகளையும் நீக்குதற்கு உரியவராகலால் அவைகளாலாகியவலியினும் இத்துணைவலி சிறந்ததெனப்பட்டது. (௪)

சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன்………………*
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்……………… ………*

(இ-ள்.) சூழ்வார்-மந்திரிகளை கண்ணாக- கண்ணாகக் கொண்டு ஒழுகலால்-(தன்பாரம்) நடத்தலால்-மன்னவன்-அரசன் - சூழ்வாரை அப்படிப்பட்டமந்திரிகளை - சூழ்ந்து-ஆராய்ந்து - கொளல் -(தன

---

ஐ இங்கிதம் குறிப்பால் நிகழும் உறுப்பினதொழில்.
* ஆசாரம்-குறிப்பின்றி நிகழும்வேறுபாடு.

க்குத்துணையாகக்) கொள்ளக்கடவன். (எ,று.) (கருத்து) மந்திரிகளை க்கொண்டு பூமிபாரநடத்தலா லம்மந்திரிகளை யரசன் துணையாகக் கொள்ளவேண்டும் என்பதாம். ❋ தானே ஆராயவல்லவனாயிருந்தா லும் அளவில்லாத தொழில்களால் வருத்தமடையு மரச னது பார ம் அவ்வாராய்தலொன்றே தொழிலாகிய மந்திரிகளால் அல்லாமல்இ னிது நடவாமைபற்றி அவரைக்கண்ணாக்கிச்சொல்லினார். ஆராய்தல் அமைச்சியலிலே சொல்லப்படுகிற இலக்கணமுள்ளவ ரென்பதனை ஆராய்தல். [இவைமூன்றுபாட்டாலும் பெரியாரைத்துணைக்கொள் ளுதலின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௫)

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்................ ❋
செற்றார் செயக்கிடந்த தில்.... ................ ❋

(இ-ள்.) தக்காரினத்தனாய்-யோக்கியராகிய இனத்தினை யுடையவ னாகி-தானொழுக-தானும் (அறிந்து) நடக்க-வல்லானை- வல்லவரசனை செற்றார் - பகைவர் செயக்கிடந்தது-செய்யக்கிடந்த ஒரு துன்பமு ம்-இல்-இல்லை. (எ,று-) (கருத்து) பெரியோரினத்தையுடையவனாய த்தானடக்கவல்ல வரசனைப் பகைவர் செயிக்கக் கூடாதென்பதாம். ❋தக்கார் - அறிவொழுக்கங்களாலே தகுதியுடையவர். ஒழுகுதல்-அ றநீதிகளின்வழி தவறாது நடத்தல். வஞ்சித்தல் - கூடினவரைப்பிரித் தல்-வேறுபகைவிளைத்தல் - என்கிறஇவைகளாலும், வலிமையாலும் பகைவர்செய்யுந் துன்பங்கள் பலவகைப்பட்டிருப்பினும் - தானும் அறிந்து அறிந்தோரது சொல்லையும்கேட்டு நடக்கையால் - அத்து ன்பங்களிலே ஒன்றும் வாராதென்றற்கு-செற்றார் செயக்கிடந்ததில் லெனறார். (௬)

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே...... ... ......❋
கெடுக்குந் தகைமை யவர்................ ... .........❋

(இ-ள்.) (தீயவைகளைக்கண்டால்)-இடிக்கும் - கோபித்துப் புத்தி சொல்லும்-துணையாரை - துணையாந்தன்மையையுடையவரை-ஆள் வாரை-(இவர்நமக்குச்சிறந்தவரென்றுகொண்டு) ஆளுகிறஅரசரை- கெடுக்குந்தகைமையவர் - கெடுக்கும்பெருமையையுடைய பகைவ ர்-யார்-(உலகத்தில்)யாவர்.(எ,று.)(கருத்து)நன்மந்திரிகளைத்துணை யாகக்கொண்டு அரசாளுமரசரைக் கெடுக்கும் பகைவரில்லை என்ப தாம். ❋ தீயவை- பாவங்களும், நீதியல்லாதவையும், துணையாந்த ன்மையாவது - தமக்கு அவாவில்லாமையும், அரசனிடத்துஅன்பு டையவராயிருக்கையும், ஆம். அப்படிப்பட்டவர் -நல்வழியினீங்கவி டாமையால்-அவரையாளு மரசர் - ஒருவராலும் கெடுக்கப்படாரெ

ன்பதாம். ஏ-அசை [இவையிரண்டு பாட்டாலும் அதன் பயன்சொல்லப்பட்டது.]

(௭)

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்...... ...... ...... *
கெடுப்பா ரிலானுங் கெடும் ...... ...... ...... *

(இ-ள்.) இடிப்பாரை-கண்டித்துப் புத்திசொல்வாரை- இல்லாத-(தனக்குத்துணையாகக்) கொள்ளாத-ஏமரா-காவலற்ற - மன்னன்-இராசன்-கெடுப்பாரிலானும் - (பகையாகக்)கெடுப்பவர் இல்லா திருந்தாலும்-கெடும்-(தானே) கெடுவான். (எ,று.)(கருத்து) புத்தி சொல்லுமந்திரிகளைப் பெற்றிலாவரசன் கெடுக்கும்பகைவ ரில்லாமற்கெடுவான் என்பதாம். ❊ கெடுப்பார் உண்டாயிருப்பாரென்பது தோன்ற-இலானுமென்றார். தானேகெடுதலாவது - பாகனில்லாத யானைபோல்-வழியல்லாத வழியிலேசென்று கெடுதல்.

(அ)

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்...... ...... ...... *
சார்பிலார்க் கில்லை நிலை. ...... ...... ...... *

(இ-ள்.) முதலிலார்க்கு-முதற்பொருளில்லாதசெட்டிகளுக்கு-ஊதியம்-(அதனுல்வருகிற) லாபமானது - இல்லை-இல்லை. (அதுபோல்) மதலையாம்-(தம்மைத்) தாங்குவதாகிய- சார்பிலார்க்கு - துணையில்லாதஅரசர்க்கு - நிலை-(அதனுல்வருகிற) நிலையானது- இல்லை-இல்லை. (எ,று)(கருத்து) முதற்பொரு ளில்லாதாவர்க்குஇலாபமில்லை. அதுபோல மந்திரிக ளில்லாதவரசனுக்குத் துணையில்லை என்பதாம். ❊ எப்படிமுதலைக்கொண்டே இலாபம் பெற வேண்டுமோ அப்படியே தாங்குவாரைக்கொண்டே நிலைபெற வேண்டுமென்பதாம். நிலை-அரசர் தமது அரசாட்சியின் பாரத்தோடு அசையாதுநிற்கை.

(௯)

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே...... ...... *
நல்லார் தொடர்கை விடல் ...... ...... ...... *

(இ-ள்.) (அரசன்)-நல்லார்-பெரியவரோடு - தொடர்கை விடல்-நட்புக்கொள்ளாதுவிடுதல் - (தான்தனியனு) யிருந்துகொண்டு - பல்லார்-பலரோடு - பகைகொளலின்-விரோதங் கொள்ளுதலிலும்-பத்தடுத்த-பத்துப்பங்கு அடுத்த-தீமைத்தே-தீமையை யுடையதேயாம். (எ;று.) (கருத்து) அரசன்பெரியோர் சிநேகத்தை விடுதல்பலபேர்பகைகொள்ளுதலிலும் பத்துப்பங்கு தீமையுடையதாம் என்பதாம். ❊ பலர்பகையாய் ஒருமுகமாயெதிர்த்தகாலத்து ஒருவிதத்தாலே பிழைத்தல் கூடினுங் கூடும்பெரியோர் நட்பை விட்டால் ஒருவிதத்தாலும் பிழைத்தல்-கூடாமையால் இதுசெய்தல் அதனினும் தீதென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும்அது செய்யாதவிடத்து உண்டாகுங் குற்றம் சொல்லப்பட்டது.]

(௰)



# சசு-ஆம்-அதி,சிற்றினஞ்சேராமை.



அஃதாவது-சிறியவினத்தைப் பொருந்தாமை. சிறியவினமாவது-நல்லதிலே தன்மையும் தீயதிலே தீமையும் இல்லையென்போரும்,விடரரும்,தூர்த்தரும்,முதலாயினகூட்டம். அறிவைவேறுபடுத்திஇருமையும்கெடுக்குமியல்பினதாகிய இதனைப்பொருந்தினால் பெரியாரைத்துணைக்கோடல் பயனில்லையென்பது அறிவித்தற்கு இது அதன்பின் வைக்கப்பட்டது.

சிற்றின மஞ்சும்பெருமை சிறுமைதான்........................ ※
சுற்றமாச் சூழ்ந்து விடும்........................................ ※

(இ-ள்.) பெருமை-பெரியோரியல்பு -சிற்றினம்-சிறியவினத்தை -அஞ்சும்-அஞ்சுதல்செய்யும்-சிறுமைதான்-மற்றைச் சிறியோரியல்பு-(அதுசேர்ந்தபொழுதே)-சுற்றமா-(தனக்கு) உறவாக சூழ்ந்துவிடும்-எண்ணித்துணியும். எ-று.) (கருத்து)பெரியோரியல்புசிறியவினத்திற்கஞ்சும். சிறியோரியல்பு சிறியவினத்தைச் சுற்றமாகக்கொள்ளும் என்பதாம். ※ தம்மறிவு வேறுபடும்விதமும் அதனாலதமக்கு வரும் துன்பமும் நோக்கலால்- அறிவுடையார் அஞ்சுவரென்றும், அறிவு ஒற்றுமைப்பட்டு நிற்கையால் வேறுநோக்காமையால் அறிவில்லாதவர் தமக்குச் சுற்றமாகத் துணிவரென்றும், சொல்லினர். பெரியோரும் சிறியோரும் ஆனகுணத்தோராது அஞ்சுதலும் அஞ்சாமையுமாகிய தொழில்கள் பெருமையுஞ் சிறுமையும்ஆகிய குணங்களின்மேல் ஏற்றிச்சொல்லப்பட்டன. [இதனால்சிற்றினம்பெரியோர்க்கு ஆகாதென்பதுசொல்லப்பட்டது.] (க)

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்........................ ※
கினத்தியல்ப தாகு மறிவு........................................ ※

(இ-ள்.) நீர்-நீரானது-நிலத்து-(தான்சேர்ந்த)நிலத்தினது-இயல்பான்-இயல்பினாலே-திரிந்து-(தனது) தன்மைவேறுபட்டு- அற்றாகும்-அந்நிலத்தினது தன்மையதாகும். (அதுபோல்)- மாந்தர்க்கு-மனிதர்க்கு - அறிவு-அறிவானது-இனத்து-(தாம்சேர்ந்த)இனத்தினது-இயல்பு-இயல்பினாலே - (திரிந்து)-தனதுதன்மைவேறுபட்டு —அதாகும்-அவ்வினத்தினது தன்மையதாகும். (எ-று.) (கருத்து) நிலத்தினியல்பினாலே நீர்திரிந்தாற்போலும் அவரவர் சேர்ந்தவினத்தினாலே அறிவுதிரியும் என்பதாம். ※ [ஆகாயத்திலே தன்றன்மையதாயிருந்த நீருக்கு நிலத்தோடுசேர்ந்தவிடத்துநிறஞ்சுவை முதலாகிய குணங்கள்போல்தனித்திருக்கையிலே தன்றன்மையதாயிரு

ந்த அறிவுக்குப் பிறவினத்தோடு சேர்ந்தவிடத்துக் காட்சிமுதலா கிய தொழில்கள் வேறுபடுமென்று இதனால் அதனது காரணம் சொல்லப்பட்டது. (௨)

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா.................*
மின்னா னெனப்படுஞ் சொல்...............................*

(இ-ள்.) மாந்தர்க்கு-மனிதர்க்கு-உணர்ச்சி - பொதுவறிவானது - மனத்தான்- (தம்) மனத்தினாலே-ஆம்-உண்டாகும் - இன்னானென ப்படும்-(இவன்) இப்படிப்பட்டவனென்று (உலகத்தாரால) சொல்லப்படுகிற-சொல்- சொல்லானது - இனத்தான்-இனத்தினாலே-ஆம்-உண்டாகும். (எ,று)(கருத்து)மனத்தினாலேயறிவுண்டாம். அது போல ஒருவன்-சேர்ந்தவினத்தினாலே யின்னானென் றெண்ணப்படுவான் என்பதாம். ❋ இயற்கையாகிய ஐம்புலவறிவு மாத்திரத்திற்கு இனம் வேண்டாமையால் - அதனை மனத்தானுமென்றும், செயற்கையாகியசிறப்பறிவுபற்றி - நல்லவனென்றுவதூஉ தீயவனென்றுவதூஉ ண்டாகுஞ் சொல்லுக்கு இனம்வேண்டுதலால் - அதனை இனத்தானு மென்றும், சொல்லினர். உபமான பிரமாணத்தை அங்கீகரியாமல் அவ்வறிவு வேறுபாடும் மனத்தாலா மென்பாரை நோக்கி இதனால் அது மறுத்துக்கூறப்பட்டது. (௩)

மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்.........................*
கினத்துள தாகு மறிவு.......................................*

(இ-ள்.) அறிவு-அச்சிறப்பறிவு - ஒருவற்கு ஒருவனுக்கு-மனத்து மனத்தினிடத்து - உளதுபோல-(அப்போதே) உண்டாவதுபோல்-காட்டி-(தன்னைக்) காட்டி-இனத்து- (அவன்சேர்ந்த) இனத்தினிடத்தே-உளதாகும்-உண்டாகும்.(எ,று.) (கருத்து) ஒருவனுக்கறிவானதவன்சேர்ந்த வினத்தினாலாகும் என்பதாம். ❋ மெய்ம்மை நோக்குதற்கு முன்னே மனத்துள்ளதுபோலக்காட்டியும், பின்னோக்கிய விடத்தே பழகிய இனத்துள்ளதாகியும் இருக்கையால் - காட்டி என விறந்தகாலத்தினாலேசொல்லினார். [சிறப்பறிவும்மனத்தினிடத்து அப்போதே உண்டாவதென்பவரைநோக்கி அங்கே வெளிப்படுமளவேயுள்ளது அதற்கு மூலம் இன மென்பது இதனாலே சொல்லப்பட்டது.] (௪)

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு........................*
மினந்தூய்மை தூவா வரும்...................................*

(இ-ள்)மனம்- (அச்சிறப்பறிவு வெளிப்படுதற்கு இடமாகிய)மனம்-தூய்மை- பரிசுத்தனாகைத்தன்மையும் - செய்வினை -செய்தொழில்-தூய்மை-பரிசுத்தனாகைத்தன்மையும்ஆகிய - இரண்டும்- இவ்வி

ஈண்டும்-இனம்-(சேர்ந்த) வினம் - தூய்மை - பரிசுத்தனாகைத்தன்மை-தூவா-பற்றுக்கோடாக-வரும்-உண்டாகும். (எ-று.)(கருத்து) மனப்பரிசுத்தமுஞ், செய்வினைப்பரிசுத்தமும், சேர்ந்தவினத்தாலாகும் என்பதாம். ※ மனந்தூயனாதலாவது - சிறப்பறிவுவெளிப்படும்படிஇயற்கையாகிய அறியாமையி னீங்குதல். செய்வினை தூயனாதலாவது மனோவாக்குக்களாலேசெய்யப்படுகிறநல்லதொழிலையுடையவனாகுதல். [ஒருவன் பரிசுத்தவினத்தனாகவே அவ் வினத்தோடுபழக்கவசத்தால் பரிசுத்தமனத்தனாகி அம்மனதினிடத்தே சிறப்பறிவுதோன்ற அதனால் பரிசுத்தமான சொல்லும்,செயலும், உடையனாவனென்று இதனால் இனத்தில் உள்ளதாம்இதம்சொல்லப்பட்டது.]

மனந்தூயார்க் கெச்ச நன்றாகு மினந்தூயார்க் ………… ※
கில்லைநன் றாகா வினை ………… ※

(இ-ள்.) மனந்தூயார்க்கு-மனதுபரிசுத்தமானவர்க்கு- எச்சம்-மக்கட்பேறு-நன்றாகும்-நன்றாகவிளங்கும் - இனந்தூயார்க்கு - இனம்பரிசுத்தமானவர்க்கு-நன்றாகாவினை - நன்றாகாதசெயல் — இல்லை-(யாதும்)இல்லை. (எ-று.) (கருத்து) மனஞ்சுத்தமுள்ளவர்க்குமக்கட்பேறுநன்றாகும். இனம்பரிசுத்தமுள்ளவர்க்குநன்மையில்லாச்செயலில்லை என்பதாம். ※ காரணத்திலே எந்தக்குணம் உள்ளது அதுகாரியத்தினிடத்தும் உண்டாமாதலால் தந்தைகுணம் மைந்தனிடத்திலும்உண்டாமென்பதுபற்றி - எச்ச நன்றாகுமென்றும். நல்லினத்தோடெண்ணிச்செய்யப்படுதலால்-இல்லை-நன்றாகாவினையென்றும், சொல்லினார். (௫)

மனநல மன்னுயிர்க் காக்க மினநல ………… ※
மெல்லாப் புகழுந் தரும் ………… ※

(இ-ள்.) மன்னுயிர்க்கு-நிலைபெற்றவுயிர்களுக்கு - மனநலம்-மனத்தினது நன்மையானது-ஆக்கம் - செல்வத்தை - (தரும்) - இனநலம்- இனத்தினது நன்மையானது - எல்லாப்புகழும்-(அதனோடு),எல்லாப்புகழ்களையும்-தரும்- கொடுக்கும், (எ-று.) (கருத்து) மனத்தினன்மைசெல்வத்தைத்தரும். இனத்தினன்மை புகழைத்தரும் என்பதாம். ※ மனதுநன்றாகுகைதானே அறமாகலால் அதனை ஆக்கந்தருமென்றும், புகழ்கொடுத்தற்குரிய நல்லோர்தாமே இனமாகலால்-இனநலமெல்லாப் புகழுந்தருமென்றும், சொல்லினார். [முன்னே மனநன்மை இனநன்மைபற்றி வருமென்பதனை உட்கொண்டு அதை இயல்பாகவே யுடையார்க்கு இவ்வினநன்மை வேண்டா மென்பாரைநோக்கி அதுவேயல்லாமல் அப்படிப்பட்டபலவும் தருமென்று

அவர்க்கும் இதுவேண்டுமென்பது இவ்விரண்டுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (௭)

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க் ........ *
கினநல மேமாப் புடைத்து ........ *

(இ-ள்.) மனநலம்-மனநன்மையை-நன்கு-(முன்னை) நல்வினையிஞலே-உடையராயினும்-(தாமே) உடையவராயிருந்தாலும் - சான்றோர்க்கு-நிறைந்தோர்க்கு-இனநலம்-இனநன்மையானது - ஏமாப்பு-(அதற்கு)வலிமையாதலை உடைத்து-உடையது.(எ-று.)(கருத்து) மன நன்மை யுடையவ ராஞலும் பெரியோர்க்கு இனநன்மை யுறுதியுடையதாம். என்பதாம். ❁ அந்நல்வினை உள்ளவிடத்தும் மனநலத்தை வளர்த்துவருதலால் அதற்குவலியாத லுடைத்தா யிற்று,

மனநலத்தி ஞகு மறுமைமற் றஃது ........ *
மினநலத்தி னேமாப் புடைத்து ........ *

(இ-ள்.)(ஒருவனுக்கு)-மனநலத்தின்-மனநன்மையால்-மறுமை-வருபிறப்பின்பம்-ஆகும்-உண்டாம்- மற்றஃதும் - அதற்கு அச்சிறப்புத்தானும்-இனநலத்தின்-இனநன்மையால் - ஏமாப்பு - வலிமைபெறுதலை-உடைத்து- உடையது. (எ-று.) (கருத்து) ஒருவனுக்குமனநன்மையால்வருபிறப்பின்பமுண்டாம். இனநன்மையால்வலிமையுண்டாம் என்பதாம். ❁ மனநலத்திஞகு மறுமையென்பது- மறுமையைத்தருவது மனநன்மையே வேறொன்று அன்று என்கிறமதத்தைஉடன்பட்டுச் சொல்லியபடி. [சில வேளை களிலே தமோகுணத்திஞலே மனநலம் வேறுபட்டாலும் நல்லினம் திருத்தி மறுமையினின்பத்தைத் தருவிக்குமென்று- அதுநிலைபெறச்செய்யுமாறு இதஞலே சொல்லப்பட்டது.] இவைஐந்துபாட்டாலும் சிற்றினஞ் சேராமையினது சிறப்பு நல்லினம் சேர்தலாகிய எதிர்மறைமுகத்திலேசொல்லியபடி அறிக. (௯)

நல்லினத்தி ஞங்குந் துணையில்லை தீயினத்தி ........ *
னல்லற் படுப்பதூஉ மில் ........ *

(இ-ள்.) (ஒருவனுக்கு)- நல்லினத்திஞங்கு-நல்லவினத்தின்மிகுந்த-துணையும்-சகாயமும்-இல்லை-இல்லை.- தீயினத்தி(ஞங்கு)- தீயவினத்தின்மிகுந்த- அல்லற்படுப்பதூஉம் - துன்பந்தரும்பகையும்— இல்-இல்லை. (எ-று.) (கருத்து) ஒருவனுக்கு நல்லவினத்தின்மிகுந்த துணையில்லை. தீயவினத்தின் மிகுந்தகேடில்லை என்பதாம். ❁ ஊங்

செல்வமானது-அமைந்தக்கண்ணும்- (தானேவந்து)சேர்ந்தவிடத்தும்-(அதனால்)-மடியுடையார் - சோம்பலுடையவர்-மாண்பயன் - பெரும்பயனை - எய்தலரிது - அடைதலில்லை. (எ,று.) (கருத்து)உலகொருங்குடைய அரசர்செல்வம் வலியவந்தாலும் சோம்பலுடையவர் பயனடைத லில்லை என்பதாம். ☼ உம்மை-அமையாமைவிளக்கிநின்றது.—பயன்-இன்பம். அச்செல்வம்காக்குமுயற்சியில்லாமையால் அழிதலாலே தந்துன்பம் நீங்காதென்பதாம். (சா)

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து..........☼
மாண்ட வுஞற்றி லவர்...........................☼

(இ-ள்.) மடிபுரிந்து-சோம்பலைவிரும்புதலால் - மாண்ட - பெருமைபொருந்திய-உஞற்றிலவர் முயற்சியில்லாதவர்,— இடிபுரிந்து-(நட்பானர்)கண்டித்துப் புத்திசொல்லி- (அதனாற்பயன் காணாமையினாலே) எள்ளுஞ்சொல்- (பின்) இகழுஞ்சொல்லை — கேட்பர்-கேட்பார். (எ,று.) (கருத்து)சோம்பலுடையவர் பிறரிகழுஞ்சொல்லைக் கேட்பர் என்பதாம் ☼ அவரிகழ்தல் சொல்லவே பிறரிகழ்தல் சொல்லவேண்டுவ தில்லையாயிற்று. அவ்வசனுக்கெல்லாம் எதிர்பேசமாட்டாமையால் கேட்பரென்றார். (எ)

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்..........☼
கடிமை புகுத்தி விடும்...........................☼

(இ-ள்.) மடிமை-சோம்பற்றன்மையானது- குடிமைக்கண்-குடிமையுடைய அரசனிடத்தே-தங்கின்-தங்குமாயின் -(அது)-தன்னொன்னார்க்கு-தன்பகைவர்க்கு - அடிமை-அடியனுந் தன்மையை -புகுத்திவிடும்-(அவனை) அடைவித்துவிடும். (எ,று.)(கருத்து) சோம்பலரசனிடத்ததாகுமானாலது அரசன் தன்னைப் பகை வருக்கடிமையாக்கும் என்பதாம். ☼ சோம்பலினது தன்மை-காரியக்கேடு. குடிமை-குடிசெய்தற்றன்மை அது அதனையுடைய அரசனுக்காதல் தன்னொன்னார்க் கென்றதனால் அறிக. அடியனுந் தன்மை தாழ்ந்து பின்றேவல் கேட்டல். [இவை நான்குபாட்டாலும் சோம்பற்குற்றங்கள் சொல்லப்பட்டன.] (அ)

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்...... ......☼
மடியாண்மை மாற்றக் கெடும்.........................☼

(இ-ள்.) ஒருவன்-ஒருவன்-மடியாண்மை - சோம்பலை ஆளுந்தன்மையை-மாற்ற - ஒழிக்கவே-குடி - (அவனது) குடியுள்ளும்- ஆண்மையுள்-ஆண்மையுள்ளும் [வந்த]-குற்றம்-குற்றங்கள்-கெடும்- அழியும். (எ-று.) (கருத்து) ஒருவன்சோம்பலையொழிக்கஅவன்- குடியி

லும் ஆண்மையிலும், வந்த குற்றங்களழியும் என்பதாம் ✻ சோம்பலே ஆளுந்தன்மையாவது - சோம்பலுடைமைக்கு ஏதுவாகியதமோகுணம்.— அவற்றுள் வந்தகுற்றமென்றது-சோம்பலாலன்றிமுன்னே வேறுகாரணங்களால் நிகழ்ந்தவைகளே.— அவையும்சோம்பலுடைமையை ஒழித்து முயற்சியுடையவனுக்குநீங்குமென்பதாம்(௯)

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான் ✻
றாஅய தெல்லா மொருங்கு ✻

(இ-ள்.) மடியிலா-சோம்பலில்லாத - மன்னவன்- அரசன்- அடி-(தன்)னடியளவினாலே - அளந்தான்-(எல்லாவுலகத்தையும்) அளந்தகடவுள்-தாஅயதெல்லாம் - கடந்தபரப்புமுழுதையும் - ஒருங்கு-ஒருசேர-எய்தும் - அடைவான். (எ-று.) (கருத்து) சோம்பலில்லாவரசன் உலகெல்லா மடைவான் என்பதாம். ✻ எப்போதும் தொழிலினிடத்தே முயன்றால் இடையிடில்லாமல் அடைவானென்பதாம்.[இவையிரண்டுபாட்டாலும் சோம்பலில்லாதவன் அடையும் பயன்சொல்லப்பட்டது.] (௰)

## ௬௨-ஆம், அதி-ஆள்வினையுடைமை.

அஃதாவது-இடைவிடாத மெய்ம்முயற்சியை யுடையனாதல்.அது ஆளும்வினையென்க் காரியத்தாற் சொல்லப்பட்டது. சோம்பலைக் கெடுத்தாலும் தொழிலை முயற்சியா லல்லாமல் ஆளக் கூடாமையினாலே இது மடியின்மையின் பின்வைக்கப்பட்டது.

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும் ✻
பெருமை முயற்சி தரும் ✻

(இ-ள்.) (தமதுசிறுமையைநோக்கி)- அருமையுடைத்தென்று-(நாம் இத்தொழிலை முடித்தல்) அருமையையுடைத்தென்றுநினைத்து-அசாவாமைவேண்டும் - தளராதிருக்க வேண்டும்.— பெருமை-(அத்தொழிலை முடித்தற்கேற்ற) பெருமையை - முயற்சி- முயற்சியானது-தரும்-(தமக்கு)-உண்டாக்கும்.(எ-று.) (கருத்து) தொழிலைக்குறித்தருமையென்று தளராதிருக்கவேண்டும் தளராமுயற்சிபெருமைதரும் என்பதாம். ✻ சிறுமையையநோக்கியென்றது- பெருமை

தருமென்றதனாலும், தொழிலை முடித்தலென்றது - அதிகாரத்தாலு ம், வருவிக்கப்பட்டன.— விடாதமுயற்சிசெய்தால் தாம்பெருமை யை யுடையவராவராதலால் அரியதொழில்களும் எளிதிலே முடியு மென்பதாம். (கு)

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை.............*
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு ....................................*

(இ-ள்.) உலகு-உலகம்-வினைக்குறை - தொழிலாகிய குறையை-தீர்ந்தாரின்-செய்யாதுவிட்டவரை-தீர்ந்தன்று-விட்டது-(அதனால்) வினைக்கண்-(செய்யத்தகுந்) தொழிலினிடத்தே- வினைகெடல்- செயலற்றிருக்கையை - ஓம்பல்- ஒழியக்கடவன். (எ,று.)(கருத்து)தொழிலின் குறையைச் செய்யாது விட்டவரை யுலகம்விட்டது ஆகையால் தொழிலிற்செய்கை யற்றிருக்கையை விடக்கடவன் என்பதாம். ※ குறை-அவசியம்வேண்டியபொருள். (உ)

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே... ...*
வேளாண்மை யென்னுஞ் செருக்கு . .........................*

(இ-ள்.) வேளாண்மை யென்னுஞ்செருக்கு-(எல்லார்க்கும்) உபகாரஞ்செய்தலென்னு மேன்பாடானது,— தாளாண்மையென்னுந் தகைமைக்கண்-முயற்சியென்னும் உயர்ந்த குணத்தி னிடத்தே-தங்கிற்றே-நிலைபெற்றதே. (எ,று.) (கருத்து)உபகாரமேன்மைமுயற்சியினிடத்து நிலைபெற்றது என்பதாம். ※ பொருள்கைகூடுதலால்உபகாரஞ்செய்தற்கு உரியவர் முயற்சியை யுடையவரே யென்றற்கு அதன்தன் குணத்தின்மேல்வைத்தும், அம்மேன்பாடானதுபிறரிடத்தே இல்லையென்றற்குத் தங்கிற்றேயென்றும்,சொல்லினர்.[இவை மூன்றுபாட்டாலும்முயற்சியது சிறப்புச்சொல்லப்பட்டது.] (ங)

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை..... ...*
வாளாண்மை போலக் கெடும்........................*

(இ-ள்.) தாளாண்மையில்லாதான் - முயற்சியில்லாதவன்-வேளாண்மை-உபகாரியாந்தன்மையானது- பேடி- (சேனையைக்கண்டால் அஞ்சும்)பேடியானவள்—கைவாளாண்மைபோல-(அச்சேனையிடத்தே)கையில்வாளை ஆளுகைத்தன்மைபோல - கெடும்-இல்லையாம்.(எ,று.) (கருத்து) முயற்சியில்லாதவ னுபகாரத்தன்மை பேடிகை வாள்போலாம் என்பதாம். ※ எப்படிப்பேடியானவள் வாளால் வெட்டுதற்குக் கருத்துடையவ ளாயினும் அது அவ்வச்சத்தால் முடியாதோ அப்படியே முயற்சியில்லாதவன் பலருக்கும் உபகாரஞ்செய்தற்குக் கருத்துடையவனாயினும் அது அவன்வறுமையால் முடியாது

தென்பதாம். [இதனால் முயற்சியில்லாதவனது குற்றஞ்சொல்லப்பட்டது.] (௪)

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்..... .....*
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.... ......... . ..........*

(இ-ள்.) இன்பம்விழையான்-(தனக்கு) இன்பத்தை விரும்பாதவனாகி-வினைவிழையான் - தொழில்முடித்தலையேவிரும்புவோன்-தன்கேளிர்-தன்சுற்றத்தாரும் நட்பாளருமாகிய கேளிரது,— துன்பம்-(பாரத்தின்) துன்பத்தை-துடைத்து - ஒழித்து- ஊன்றும் - அதனைத்தாங்கும்-தூண்-தூணும். (எ,று.)(கருத்து)தனக்கின்பம்விரும்பாதவனாகி முயற்சியைவிரும்புவோன் தன்னுறவினர் துன்பத்தைத்தாங்குந் தூணென்பதாம். ※ கேளிரதுவறுமையுந்தீர்த்துஅவராக்காத்தலுஞ்செய்ய வல்லவனுமெனவேதனக்கு அவைசெய்துகொள்ளுதல் சொல்லவேண்டுவதில்லையாயிற்று.— காரியமாகியஇன்பத்தைவிரும்பாமல் காரணமாகிய முயற்சியை விரும்புவோன் எல்லாப்பயன்களும் அடைவானென்றதனால்அக்காரணத்தைவிட்டு அக்காரியத்தை விரும்புவோன் ஒருபயனும் அடையானென்பது பெறப் பட்டது. (ஏகதேசவுருவகம்) [இதனால் அதனை யுடையவனதுநன்மை சொல்லப்பட்டது.] (௫)

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை..... ..........*
யின்மை புகுத்தி விடும்......... .......................*

(இ-ள்.) முயற்சி-(அரசரிடத்தே உண்டாகிய) முயற்சி யானது-திருவினை-(அவரது) செல்வத்தை-ஆக்கும்-வளர்க்கும்.— முயற்றின்மை-அம்முயற்சியில்லாமையானது - இன்மை-வறுமையை - புகுத்திவிடும்-அடைத்துவிடும். (எ,று.) கருத்து) முயற்சி செல் வத்தை வளர்க்கும் அம்முயற்சி யில்லாமை தரித்திரத்தைக்கொடுக்கும் என்பதாம். ※ இங்கேசெல்வம்-மந்திரிமுதலாகிய அறுவகை அங்கங்கள்.— வறுமை அவையில்லாதவராதல்.— அதனை அடைவித்துவிடவே பகைவரால் அழிவரொன்பது கருத்து. (௬)

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்....... ..........*
றாளுளா டாமரையி னாள்.................... ......*

(இ-ள்.) மாமுகடி-கரிய மூதேவியானவள்- மடி-(ஒருவனது)சோம்பலினிடத்தே-உளாள்-இருப்பாள்.— தாமரையினாள்-சீதேவியானவள்-மடியிலான் - சோம்பலில்லாதவனது - தாள்-முயற்சியினிடத்தே-உளாள்-இருப்பாள்.— என்ப-என்று(அறிந்தோர்)சொல்லுவர்.(எ,று.) (கருத்து) மூதேவிசோம்ப லுடையவனிடத் திருப்பாள், சீ

தேவி சோம்பலில்லாதவனிடத் திருப்பாள்என்பதாம். ❊ பாவத்தி ன்கருமை அதன்பயனாகிய முகடிமேலேற்றப்பட்டது. சோம்பலை யும் முயற்சியையும் உடையவரிடத்தே அவர்களிருத்தலை அவைகளின் மேலே ஏற்றினர். [இவையிரண்டு பாட்டாலும் அவ்விரண்டுக்கும் ஏதுக்கள் சொல்லப்பட்டன.] (எ)

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் ...... ... *
தாள்வினை யின்மை பழி ......... ......... ......... *

(இ-ள்.) பொறியின்மை-(பயனைத்தருவதாகிய) விதியில்லாமை. யார்க்கும்-யாவர்க்கும் - பழியன்று-பழியாகாது- அறிவறிந்து-அறி டவேண்டுமவைகளை அறிந்து - ஆள்வினையின்மை-தொழில் செய்யா மையே-பழி-பழியாகும். (எ,று.) (கருத்து) யாவர்க்கும் விதியில்லா மை பழியாகாது முயற்சியில்லாமை பழியாகும்என்பதாம். ❊ அ றியவேண்டுமவை- வலிமுதலானவையாம் ஊழ்பொருந்தாத விடத் தே தொழில்செய்தலாலேபயன் இல்லையென்பானை நோக்கி உலக ம்பழையவினைபற்றிப் பழியாது இவ்விடத்தே தொழில் செய்யாத குற்றமுடைமைபற்றியே பழிப்பென்றார். அதனால் விடாது முயல் கவென்பது கருத்து. (அ)

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்...... .........*
மெய்வருத்தக் கூலி தரும்.........................*

(இ-ள்.) (முயற்சிசெய்தொழில்)-தெய்வத்தான்- ஊழ்வகையா ல்,—ஆகாதெனினும்-(நினைக்கப்பட்டபயனைத்)தாராதாயினும்-முய ற்சி-முயற்சி-தன்மெய் - தனக்கிடமாகியஉடம்பு- வருத்தக்கூலி-(வ ருந்திய)வருத்தத்தின் கூலியளவு- தரும்- கொடுக்கும்— [பாழாகா து] (எ,று.) (கருத்து)ஊழில்லாவிடினு முயற்சிபலனைத்தருமென் பதாம். ❊ ஊழினால் ஆகியவிடத்துத் தன்னளவின் மிகுந்த பயனை த்தருமென்பது உம்மையால் பெற்றாம்.— ஆன விடத்தும் ஆகாவி டத்தும் பாழாகாமையால் ஊழைநோக்கி இராமல்முயல்கவென்ப து கருத்து. (கூ)

உஞற்றிப் ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்......... .......*
தாழா துஞற்று பவர்.........................*

(இ-ள்.) ஊழையும்.(பயனைவிலக்குவதாகிய) ஊழையும்-உப்பக் கங்காண்பர்-புறங்காண்பார் - உலைவின்றி -(அவ்விலக்குதற்கு) இளை யாமல்-தாழாது-தாழ்வற - உஞற்றுபவர்-(தொழிலை) முயல்வோர். (எ,று.) (கருத்து) இடைவிடாது முயற்சிசெய்வோர் விதியையும் வி லக்குவார் என்பதாம். ❊ தாழ்வறுதல்- ஆலோசனையிலும், வலிமு

தலானவை யறிதலிலும் செயலிலும், குற்றமறுதல்.— ஊழான து-தொழிலைஒருகால் இருகாலஅல்லாமல் விலக்காமையாலேபலகாலும் முயற்சிசெய்வோர் பயனை அடைவாரென்றற்கு - உப்பக்கங் காண்பரென்றார். [ஊழினாலே இடுக்கண் வரினும்முயற்சிவிடத்தக்கதல்லவென்பது இம்மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது.] (௰)



## ௬௩—ஆம்—அதி-இடுக்கணழியாமை.



அஃதாவது-தொழிலிலே முயல்பவன் ஊழினாலாவது, பொருளில்லாமையினாலாவது, மெய்வருத்தத்தாலாவது, தனக்குத்துன்பம்வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

இடுக்கண் வருங்கா னகுக வதனை.................. *
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.................. *

(இ-ள்.) (ஒருவன்)-இடுக்கண் - துன்பமானது-வருங்கால் - (வினையினாலே தனக்கு) வருமிடத்து-நகுக- (அதற்குஅழியாமல்) உள்ளமகிழக்கடவன்.— அதனை-அத்துன்பத்தை - அடுத்து-மேலுமேலுமாய்-ஊர்வது-நெருக்கவல்லது.— அஃதொப்பது- அம்மகிழ்ச்சிபோல்வது-இல்- (வேறே) யில்லை. (ஆதலால்) (எ,று.) கருத்து) ஒருவன் துன்பம்வரும்போது மகிழக்கடவன் அத்துன்பத்தைநெருக்கக்கடவன் என்பதாம். ❁ தொழில்நன்றாக முடிந்தவிடத்தே உண்டாவதான மகிழ்ச்சியை அதற்குநடுவிலே துன்பம் வருமிடத்துஉட்கொண்டால் அவன் அழிவின்றி மனவெழுச்சியால் அதனைத் தள்ளிஅக்குறைமுடிக்க வல்லவனாவா னாதலின்-அதனை யடுத்தூர்வ தஃதொப்பதில்லென்றார். (௧)

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா.................. *
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.................. *

(இ-ள்.) வெள்ளத்தனைய-வெள்ளப்போலேகரையில்லாத— இடும்பை-துன்பமெல்லாம்-அறிவுடையான்- புத்தியுள்ளவன்-உள்ளத்தின் உள்ளத்தினாலே-உள்ள(ஒன்றை) நினைத்தளவிலே- கெடும் - அழியும்.(எ,று.) (கருத்து) அறிவுள்ளவனொன்றை நினைக்கத் துன்பமெல்

லாங்கெடும் என்பதாம். ❀ துன்பமாவது-உள்ளத்து ஒருகோட்பாடேயென்பதும்-அதுமாறுபாடாகக் கொண்டால் நீங்குமென்பதும்-அறியவேண்டுதலால் அறிவுடையானென்றும், அவ்வுபாயத்தினெளிமைதோன்ற - உள்ளத்தினுள்ளவென்றும், சொல்லினார். [இவ்விரண்டுபாட்டாலும் ஊழினாலாகிய இடுக்கணால் அழியாமைக்கு உபாயஞ்சொல்லப்பட்டது.] (௨)

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக் ……………… ❋
கிடும்பை படாஅ தவர் ……………… ❋

(இ-ள்.) இடும்பைக்கு-(தொழில்செய்யும்போது அதற்குநடுவிலேவந்த) துன்பத்திற்கு-இடும்பை படாஅதவர்- வருந்தாதவர்-இடும்பைக்கு- அத்துன்பத்திற்கு-இடும்பை- துன்பத்தை படுப்பர்-உண்டாக்குவார். (எ-று.) (கருத்து) துன்பத்திற்குத் துன்பப்படாதவர் துன்பத்திற்குத் துன்பத்தைக் கொடுப்பர் என்பதாம். ❀ வருந்துதல்-இளைத்துச் செய்யாமல்விட நினைத்தல்,—மனத்திடமுடையவராய்விடாதுமுயன்றால்தொழில்முடிவுபெற்றுப் பயன்படுமாதலால்எல்லாத்துன்பங்களும் நீங்குமென்பதுபற்றி - இடும்பைக் கிடும்பை படுப்பரென்றார்.—வருகின்றபாட்டிரண்டிலும் இதற்கு இப்படியே பொருள் கொள்க. (௩)

மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற ……………… ❋
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து ……………… ❋

(இ-ள்.) மடுத்தவாயெல்லாம்-தடைபட்டவிடங்களிலெல்லாம் - பகடன்னான்-(பண்டியை இழுத்துச் செல்லும்) கடாப்போலேதொழிலைமேற்கொண்டுசெலுத்தவல்லவனை-உற்ற-அடைந்த-இடுக்கண்-துன்பமானது- இடர்ப்பாடு- (தானே) துன்பப்படுதலை - உடைத்து-உடைத்தாம். (எ-று.) (கருத்து) தொழில்செய்யவல்லவனையடைந்த துன்பமானது தானேதுன்பப்படும் என்பதாம். ❀ தடைபடுமிடங்கள்-பண்டிக்குச்சேற்று நிலமுதலானவையும்,தொழிலுக்குஇடையூறுகளும், ஆம்.—கடா - பக்கத்திலொற்றியும்,மூச்சுப்பிடித்தும், கால்மடக்கியும், அரிதிலே செலுத்தும் விதம்போல் தன்மெய்வருத்தம் நோக்காமல் முயன்று செலுத்துவானென்றற்கு - பகடன்னானென்றார். (௪)

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற ……………… ❋
விடுக்க ணிடுக்கப் படும் ……………… ❋

(இ-ள்.) அடுக்கிவரினும்- இடைவிடாதுமேலுமேலும்வந்தனவாயினும் - அழிவிலான்- (தன்னுள்ளக்கோட்பாடு)விடாதவனை - உற்ற

துடைந்த-இடுக்கண்- துன்பமானது - இடுக்கட்படும்-(தான்) துன்பத்திலேபடும். (எ-று.)(கருத்து) தைரியம்விடாதவனையடைந்த துன்பமானது துன்பப்படும் என்பதாம். ❁ ஒன்றே பலகால்வருதலும், வேறுபலகலந்துவருதலும், அடங்க-அடுக்கி வரினுமென்றார். அழிவென்னுங் காரணப்பெயர்-காரியத்தின்மேல்நின்றது. [இவையிரண்டுபாட்டாலும் ஊழாலாகிய துன்பத்துக்கு அழியாமை சொல்லப்பட்டது. (௫

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்…… …*
றோம்புத றேற்றா தவர் …… …… …… …… ……*

(இ-ள்.) பெற்றேமென்று-(செல்வக்காலத்திலிது) பெற்றேமென்று ஓம்புதல்-உலோபஞ்செய்தலை-தேற்றாதவர்- அறியாதவர்-அற்றேமென்று-(வறுமைக்காலத்திலே) வறியேமானோமென்று — அல்லற்படுபவோ-(மனத்தினாலே துன்பப்படுவாரோ.)(எ-று.)(கருத்து) செல்வத்திலுலோபஞ்செய்யாதவர் வறுமையில் விசனப்படார் என்பதாம். ❁ பெற்றவிடத்து உலோபஞ் செய்யாமையை நோக்கி அற்றவிடத்தும் மந்திரிமுதலானவர்கள் விட்டு நீங்காமையால் - அல்லற்படுதலில்லையாயிற்று. [இதனாலேபொருளில்லாமையால்வந்த துன்பத்துக்கு அழியாமையும், அதற்குஉபாயமும், சொல்லப்பட்டன. (௬)

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக் …… ..*
கையாறாக் கொள்ளாதா மேல் …… …… …… ……*

(இ-ள்.) மேல்-அறிவுடையவன்-உடம்பு-தேகமானது - இடும்பைக்கு-துன்பமாகியவாளுக்கு- இலக்கமென்று - குறியிடமென்று தெளிந்து-கலக்கத்தை-(தன்மேல்வந்த) துன்பத்தை — கையாறு- துன்பமாக-கொள்ளாதாம்-கொள்ளான். (எ-று.) (கருத்து) அறிவுடையவன் துன்பத்தைத் துன்பமாகக்கொள்ளான் என்பதாம். ❁ (இடும்பையைவாளென்னாமல் உடம்பை இலக்கமென்றதனால் ஏகதேசவுருவகம்.) இயல்பாகக் கொள்வனென்றறிக். (௭)

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான் ……*
றுன்ப முறுத லிலன் …… …… ……*

(இ-ள்.) இன்பம்-(தன்னுடம்பிற்கு) இன்பமானவைகளை - விழையான்-விரும்பானாகி-இடும்பை-(வினையால்) துன்பமடைதல் - இயல்பென்பான்-இயல்பென்று தெளிந்திருப்பவன் - துன்பமுறுதலிலன் (தன்முயற்சியால்) துன்பமடையான். (எ-று.) (கருத்து) இன்பத்தை இச்சியாதவனாகித் துன்பத்தை யியல்பென்று நினைப்பவன் துன்பமடையான் என்பதாம். ❁ இன்பம் விரும்பினாலும், இயல்பென்று

துவாராமல் காக்கக்கருதினாலும், துன்பம் விளைதலால் இவ்விரண்டும் செய்யாதவனை- துன்பமுறுத லிலனென்றார் (அ)

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட் ………… ✻

டுன்ப முறுத லிலன் ………………………………………… ✻

(இ-ள்.) இன்பத்துள்-(வினையினாலே) இன்பம் வந்தவிடத்து-இன்பம்-அவ்வின்பத்தை - விழையாதான்-(அனுபவித்துக்கொண்டேமனத்தால்) விரும்பாதவன்- துன்பத்துள்- துன்பம்வந்தவிடத்தும்-துன்பம் - அத்துன்பத்தை—உறுதலிலன் - (அனுபவித்துக்கொண்டேமனத்தால்) அடையான். (எ-று.) (கருத்து) இன்பத்தையிச்சியாதவன் துன்பத்தில் விசனப்படான் என்பதாம். ❋ துன்ப முற்சியால்வரும். இடுக்கண் இரண்டும் ஒரு தன்மையாக் கொள்ளலால் பயன்களும் இலவாயின. (௯)

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன் ………… ✻

னொன்னார் விழையுஞ் சிறப்பு ………………………………… ✻

(இ-ள்.) (ஒருவன் தொழில் செய்யுமிடத்து)-இன்னாமை-(முயற்சியால்வருந்) துன்பத்தையே- இன்பமெனக்கொளின்-(தனக்கு) இன்பமாக நினைத்துக்கொள்ளுவானாயின்-(அதனால்)- தன்னொன்னார்-தன் பகைவர்-விழையும்-நன்குமதித்தற்கு ஏதுவாகிய-சிறப்பு- உயர்ச்சியானது—ஆகும்- உண்டாகும்- (எ-று.) (கருத்து) துன்பத்தையின்பமாகக் கொள்வானாகி லவன்பகைவராலே மதிக்கப்படு முயர்ச்சியடைவான் என்பதாம். ❋ துன்பந்தானும் உயிர்க்கு இயல்பன்றிக் கணிதமாய் மனத்தினிடத்தே நிகழ்வதோர் கோட்பாடாகலின் அதனைமாறுபடக் கொண்டால் அதற்கு அழியாமல் மனமகிழ்ச்சியுடையனாகி அதனாலே தொடங்கிய தொழிலை முடிக்கவல்லவனாகுமென்பது கருத்து. [இவைநான்குபாட்டாலும்மெய்வருத்தத்தாலாகிய துன்பத்துக்கு அழியாமையும், அதற்கு உபாயமும், சொல்லப்பட்டது. (௰)



அரசியல் - முற்றுப் பெற்றது.





# அங்கவியல்.



இனிமுறையானே அரசியலை நடத்துதலிலே ஒன்றற்கொன்றுதுணை
யாகிய அங்கங்களது இயல்பைமுப்பத்திரண்டு அதிகாரத்தாலே
சொல்லத்தொடங்கி அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆக்கி
னாசக்கரத்தைச்செலுத்துதலிலே அவ்வரசனுக்குச்
சமானமாகிய அமைச்சனது இயல்புபத்ததி
காரத்தினாலே சொல்லத்தொடங்கிமுத
லிலே அமைச்சுச்சொல்லுகின்றார்.

## ௬௪-ஆம் - அதி - அமைச்சு.



அஃதாவது - அமைச்சனது தன்மை அத்தன்மை அவன்
குணங்களும் செய்கைகளும் ஆம்.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு.................. *
மருவினையு மாண்ட தமைச்சு.................................. *

(இ-ள்.) (தொழில்செய்யும்போது) - கருவியும்-(அதற்குவேண்டுஞ்)சாதனங்களும் - காலமும்-(அதற்குவற்ற)காலமும் - செய்கையும்-(அது)செய்யும்விதமும் - செய்யுமருவினையும்-(அவ்விதத்திலே) செயப்படும் அரிய தொழில்களும் - மாண்டது - பொருந்தவெண்ணவல்லவனே— அமைச்சு-மந்திரியாவான். (எ-று.) (கருத்து)கருவியும் காலமும் செய்கையும் தொழிலும் இவற்றையெண்ண வல்லவன்மந்திரி என்பதாம். ❋ சாதனங்கள்- சேனையும், பொருளும்.- காலம்-அத்தொழிலைத் தொடங்குங்காலம். — செய்கையெனவே அது தொடங்குமுபாயமும், இடையூறுநீக்கி முடிக்கும் விதமும், அடங்கின.— சிறிய முயற்சியினாலே பெரியபயன் தருமென்றதற்கு அருவினையென்றார். இவ்வைந்தையும் வடநூலார் மந்திரத்துக்கு அங்கமென்பார். (௧)

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ............ *
டைந்துடன் மாண்ட தமைச்சு.................................. *

(இ-ள்.) வன்கண் - (தொழில்செய்தலிலே) அசைவில்லாமையும்- குடிகாத்தல்- குடிகளைக்காத்தலும் - கற்றறிதல்-(நீதிநூல்களைக்)கற்று(விதிவிலக்குகளை)அறிதலும்-ஆள்வினை- முயற்சியும் - ஐந்துடன்

(முன்சொல்லப்பட்ட) அங்கங்களைந்துடனே - மாண்டது - திருந்தவுடையவனே — அமைச்சு - மந்திரியாவான். (எ-று.) (கருத்து) அசைவில்லாமையும் குடிகளைக்காத்தலும் கற்றறிதலும் முயற்சியும் உடையவன்மந்திரி என்பதாம். ❁ இந்நான்கினையும் முன்னையவைகளோடு சேர்த்துச் சொல்லியது - அவைகளும் இவைகளோடு கூடியேமாட்சிமைப்பட வேண்டுமென்பதை அறிவித்தற்கும், அவைஐந்தென்னுந் தொகைபெறுதற்கும், என்க. (௨)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப் ................ *
பொருத்தலும் வல்ல தமைச்சு........................ *

(இ-ள்.) (போர்வந்தவிடத்து)-பிரித்தலும்- (பகைவர்க்குத்துணையாயினவரை அவரைவிட்டுப் பிரிக்கவேண்டினால்) பிரித்தலும்-பேணிக்கொளலும்-(தம்மிடத்தோரை அவர் பிரியாமற் கொடையினாலும் இன்சொல்லினாலும்) காத்துக்கொள்ளுதலும் - பிரிந்தார்-(தம்மைவிட்டும் தம்மவரைவிட்டும்)பிரிந்தவரை - பொருத்தலும்- (மறுபடிபொருத்தவேண்டினால்) பொருத்தலும்- வல்லது - வல்லவனே- அமைச்சு-மந்திரியாவான். (எ-று.) (கருத்து) பிரித்தலும்காத்தலும் பிரிந்தவரைப் பொருந்தச்செய்தலும் வல்லமையுடையவன் மந்திரி என்பதாம். ❁ இவைகளுள் அப்பொழுதை நிலைக்கு ஏற்றசெயலறிதலும், அதனை அவரறியாமல் அதற்கு ஏற்ற உபாயத்தால் முடிவுறப்பிடித்தலும், அருமையாதல்நோக்கி வல்லதென்றார்.— பொருத்தலுக்குச் சந்தியென்றும், பிரித்தலுக்குவிக்கிரகமென்றும், பெயர்கள்.

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச் ........... *
சொல்லலும் வல்ல தமைச்சு .................. ....... *

(இ-ள்.) (ஒருகாரியச்செய்கை பலவிதமாகத் தோன்றினால்) - தெரிதலும்-( அவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும் - தேர்ந்துசெயலும்- (அதுசெய்யும்போது பலிக்கும்விதம்) நாடிச்செய்தலும்- (சிலரைப்பிரித்தல் பொருத்தல்செய்தலிலே) ஒருதலையாச் சொல்லலும்-(அவர்க்குஇதுவேநம்பத்தக்கதென்று) துணிவுபிறக்கும் வகைசொல்லலும்-வல்லது-வல்லவனே— அமைச்சு - மந்திரியாவான். (எ-று.) (கருத்து) ஆராய்தலும் ஆராய்ந்துசெய்தலும் ஒருதலையாகச்சொல்லலும் வல்லவன் மந்திரி என்பதாம். ❁ தெரிதல்செயலின் மேலாயிற்று-வருகின்ற ததுவாகலின். (௪)

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்.... *
திறனறிந்தான் றேர்ச்சித் துணை ........................ *

(இ-ள்,) அறன் - (அரசனாலேசெய்யப்படும்)அறங்களை — அறி

ந்து - ஆன்றமைந்த - (தனக்குஏற்றகல்வியாலே) நிறைந்தமைந்த-சொல்லான்-சொல்லையுடையவனுகி-என்ஞான்றும் - எந்நாளிலும்-திறன்-(தொழில்செய்யுந்)திறங்களை-அறிந்தான் - தேர்ச்சி - ஆலோசனைக்கு-துணை-(அவனுக்குத்) துணையாவான்.(எ-று.) (கருத்து) தருமங்களையறிந்து தொழில்செய்யுந் திறங்களைத் தெரிந்தவன் மந்திரி என்பதாம். ※ தன்னரசன் சுருங்கியகாலத்திலும் பெருகிய காலத்திலும் நடுவானகாலத்திலும் என்றற்கு - என்ஞான்றுமென்றார். [இவ்வைந்துபாட்டாலும்மந்திரிகளது குணத்தன்மைசொல்லப்பட்டது.

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்................. ※
யாவுள முன்னிற் பவை....................... ※

(இ-ள்.) மதிநுட்பம்-(இயற்கையாகிய) புத்தி - நுட்பத்தை—நூலோடு-(செயற்கையாகிய) நூலறிவோடு-உடையார்க்கு - உடையமந்திரிகளுக்கு- அதிநுட்பம் - அதிக நுட்பத்தை யுடையஆலோசனைகளாய்முன்னிற்பவை- எதிர்நிற்பவை- யாவுள-எவையுள. (எ-று.) (கருத்து) புத்திநுட்பத்தையுடைய மந்திரிகளுக்கு முன்னிற்குமாலோசனைகளெவையுள என்பதாம். ※ நூல்- அதனறிவுக்கும், அதிநுட்பம் அதனையுடைய ஆலோசனைக்கும், ஆகுதலால் ஆகுபெயர்கள்.- முன்னிற்றல்-பகைவராலோசனையால் தம்மாலோசனை அழியாது நிற்றல் பகைவ ராலோசனையை தாம் அறிந்து அழித்து அவரறிந்து அழியாதவைகளைத்தாம் ஆலோசிப்பவனென்பது கருத்து [இதனால் அவரதுசிறப்புச் சொல்லப்பட்டது.] (௬)

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்.................. ※
தியற்கை யறிந்து செயல்.......................... ※

(இ-ள்.) செயற்கை-(நூல்வழியினால்தொழில்) செய்யுந் திறத்தை அறிந்தக்கடைத்தும்- அறிந்தவிடத்தும் - உலகத்து - உலகத்திலே-இயற்கை-(அப்போது நடக்கின்ற)இயற்கையை- அறிந்து - தெரிந்து—செயல்-(அதனோடுபொருந்தச்)செய்யக்கடவன். (எ-று.) (கருத்து)தொழில்செய்யுந் திறங்களை யறிந்தாலும் உலகநடக்கை யறிந்துசெய்யக்கடவன் என்பதாம். ※ நூல்வழியே யாயினும் உலகவழியோடு பொருந்தாதவைகளைச் செய்தால் அவ்வுலகம் பழிக்குமென்று உலகியற்கையினறிவினுல் பயன் சொல்லியபடி. (௭)

அறிகொன் றறியா னெனினு முறுதி..................... ※
யுழையிருந்தான் கூறல் கடன்....................... ※

(இ-ள்.) அறிகொன்று-(அறிந்துசொல்லினவரது)அறிவையும் அழித்து-அறியானெனினும்-(தானும்)அறியானேயாயினும்- (அக்குற்றநோக்கிக் கைவிடாமல்)- உறுதி- (அரசனுக்கு) உறுதியானவைக

ளை-கூறல்-சொல்லுதல்— உழையிருந்தான் - மந்திரியினது - கடன் முறையாகும். (எ-று.) (கருத்து) சொன்னவரறிவை யழித்துத்தானறியானாகினும் அரசனுக் குறுதியானவைகளைச் சொல்லுதல்மந்திரியின் கடமையாம் என்பதாம். ❁ அழித்தல் - தானகொள்ளாமல்மேலும்இகழ்ந்துசொல்லல். உறுதி சொல்லாதபோது அவன் முடிவெய்தும் குற்றத்தை உலகந்தன்மேல் ஏற்றுமென்றற்கு- கூறல்கடனென்றார். [இவைஇரண்டுபாட்டாலும் அவர்செயல் சொல்லப்பட்டது.

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ ............... *
ரெழுபது கோடி யுறும் ........................................... *

(இ-ள்.) பக்கத்துள் - பக்கத்திலிருந்து - பழுதெண்ணும் - தீங்குசெய்யவெண்ணும் - மந்திரியின் - மந்திரியொருவனில் - தெவ் - அரசனுக்கு - எதிர்நிற்பவர் - ஓரெழுபதுகோடி - ஓரெழுபதுகோடி பகைவர் - உறும் - உறுவர். (எ-று.) (கருத்து) அரசனுக்குத் தீங்குசெய்யுமந்திரியொருவனே எழுபதுகோடி பகைவரிலுங் கொடியன் என்பதாம். ❁ எழுபதுகோடி யென்றது - மிகவும் பலவாகிய எண்ணிக்கைக்கு ஒன்று காட்டியபடி அவர்வெளிப்பட்டு நிற்கையால் அவருக்குத்தப்பலாம் உட்பகையாய் நிற்றலால் இவனுக்குத் தப்புதல் கூடாதென்பது பற்றி இப்படிச்சொல்லினர். (௯)

முறைபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர் ............... *
திறப்பா டிலாஅ தவர் ........................................... *

(இ-ள்.) (செய்யப்படுந்தொழில்களை) - திறப்பாடு - (முடித்தற்குவேற்ற) கூறுபாடு - இலாஅதவர் - இல்லாதவர் - முறைபடச்சூழ்ந்தும் - (அவைகளைமுன்னே) அடைவுபட ஆலோசித்திருந்தும் - முடிவிலவே செய்வர் - (செய்யும்போது அவைகள்) முடிவில்லனவாகவேசெய்யாநிற்பர். (எ-று.) (கருத்து) செய்தொழிலிலேதிறமில்லாமந்திரிகள்முன்பாலோசித்தும் பின்பு முடிவில்லாமற் செய்வார்கள் என்பதாம். ❁ அக்கூறுபாடாவன - வந்தவந்த இடையூறுகளுக்கு ஏற்ற ஏற்பகாரம் அறிந்துசெய்தலும், தாம்திடமுடையவராதலும், ஆம்.— தப்பாமல் ஆலோசிக்க வல்லவரா யிருந்தும் செய்துமுடிக்க மாட்டாதவரும் உண்டென்பதாம். [இவை யிரண்டு பாட்டாலும் மந்திரிகளுள் விடப்படுவாரது குற்றம் சொல்லப்பட்டது.] (௰)





# ௬௰௫ - ஆம் அதி - சொல்வன்மை.



அஃதாவது - தான் நினைத்த தொழில்முடியும் வழியால் வார்த்தை சொல்லவல்லவனாகுதல். முன்னதிகாரத்திலேயொருதலையாச்சொல்லுமென்றதையே சிறப்புப்பற்றி விரித்துச்சொல்லுதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

நாநல மென்னு நலனுடைமை யந்நலம் ...................... ※
யாநலத் துள்ளதூஉ மன்று ...................... ※

(இ-ள்.) (மந்திரிகளுக்கு அவசியம் வேண்டிய குணமாவது)-நாநலமென்னும்-நாநலமென்று சிறப்பித்துச்சொல்லப்படும் - நலனுடைமை- நலத்தினையுடையராதல்.—அந்நலம் - அந்த நலமானது-(பிறர்க்கும்)-யாநலத்து-பிறநலங்களிலெல்லாம்- உள்ளதூஉமன்று- அடங்குவதன்று [மிகுந்தது.] (ஆதலால்.) (எ-று.) (கருத்து)மந்திரிகளுக்கு நாநலம்போல வேறுநலமில்லை என்பதாம். ※ நாநலம்-நாவானுளதாகிய நலமெனவிரியும்.—இந்நலம்-உலகத்தைத்தம்வசமாக்கும் மந்திரிகளுக்கு வேறாயிருக்க வேண்டுமென்னும் நீதிநூல் வழக்கம்பற்றி-நாநலமென்றும். பிறருக்கும் இதுபோற் சிறந்தது வேறில்லாமையால் - அந்நலம் யாநலத்துள்ளதூஉ மன்றென்றும், சொல்லினர்.—பிரித்தல்பொருத்தல் முதலாகியதொழி லில்லார்க்கும் இது அவசியம் வேண்டுவதானால் அத்தொழிலுடைய மந்திரிகளுக்குச்சொல்லவேண்டுமோ வென்பது கருத்து. (௧)

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற் ...................... ※
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு ...................... ※

(இ-ள்.) (மந்திரிகள்)சொல்லின்கண்-சொல்லினிடத்து - சோர்வு-சோர்தலை-காத்தோம்பல் - (தம்மிடத்தே உண்டாகாமல்) காக்கக்கடவர்.—(தம்மரசனுக்கும் அங்கங்களுக்கும்)-ஆக்கமும் - பெருக்கமும்-கேடும்-அழிவும் - அதனால்-அச்சோர்வினாலே வருதலால்-வருகையால்.(எ-று.)(கருத்து) செல்வமுங், கேடுஞ், சொல்லால்வருதலால்மந்திரிகள் சொற்சோர்வு வாராமற் காக்கக்கடவர் என்பதாம். ※ ஆக்கத்துக்கு ஏதுவாகிய நல்லசொல்லையும், கேட்டுக்கு ஏதுவாகிய தீயசொல்லையுஞ், சொல்லென்கிற ஒப்புமைபற்றி- அதனாலென்றார் இவர் சொற்சோர்வு மற்றைச்சோர்வுபோலாகாமல்உயிர்களுக்கெல்லாம் ஒருசேரவருதலால்-காத்தோம்பலென்றார். [இவையிரண்டு பாட்டாலும் சொல்வல்லமை மந்திரிகளுக்கு அவசியம் வேண்டுவதென்பது சொல்லப்பட்டது.] (௨)

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்......*
வேட்ப மொழிவதாஞ் சொல்......... ...... ......*

(இ-ள்.) கேட்டார்-(நட்பா) யேற்றுக்கொண்டவரை- பிணிக்கும்-(பின்வேறுபடாமற்) கட்டும்-தகை - குணங்களை - அவாய்- அவாவி-கேளாரும்-(மற்றப்பகையா) யேற்றுக் கொள்ளாதவரும்- வேட்ப-(பின் அப்பகைமை யொழிந்து நட்பினை) விரும்பும் வண்ணம்-மொழிவது-சொல்லப்படுவதே—சொல்- சொல்லாம். (எ,று.)(கருத்து) கேட்டாரும், கேளாதவரும், இச்சிக்கச் சொல்வதேசொல்லாம் என்பதாம். ※ அக்குணங்களாவன- வழுவில்லாமை - சொற் சுருங்குதல்-பொருள் விளக்குதல் - இனிதாதல்-மேலானபயனைத்தருதல்-இவை முதலானவை.— அவைகளை அவாவுதலாவது- அச்சொல்சொல்லுவான்குறித்த பொருளையேயன்றி வேறேபுத்திநுட்பமுடையவராலே கொள்ளப்பட்டவைகளின் மேலும் நோக்குடைத்தாதல். [இதனுல் சொல்லினது இலக்கணம்சொல்லப்பட்டது.] (ரு)

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்.................*
பொருளு மதனினூஉங் கில்..............................*

(இ-ள்.) (மந்திரிகள்) -சொல்லை-(அப்படிப் பட்ட) சொல்லை- திறன்-(தம்முடையவும் கேட்பாருடையவுமான) திறங்களை - அறிந்து-தெரிந்து-சொல்லுக-சொல்லக்கடவர்.— அதனினூஉங்கு - அப்படிச்சொல்லுதற்குமேற்பட்ட-அறனும் பொருளும்-தருமமும்பொருளும்,—இல்- இல்லை. (ஆதலால்) (எ-று.) (கருத்து) மந்திரிகள் சொற்றிறங்களையறிந்து சொல்லக்கடவர் என்பதாம். ※ அத்திறங்களாவன-குடிப்பிறப்பு - கல்வி-ஒழுக்கம்-செல்வம்-உருவம்-பருவம்-என்பவைகளால் வரும் தகுதிவேறுபாடுகள். அவைகளை அறிந்துசொல்லுதலாவது - அவைகளாலே தமக்கும் அவர்க்கும் உண்டாகிய உயர்வுதாழ்வுகளை அறிந்து அவரவர்க்குத் தகுந்தமாபிலுலே சொல்லுதல். அது உயர்ந்தோர் நடையோடு பொருந்தலையும், இனிமையையும், தருதலால் அறனுயிற்று. தமதுகாரியமுடிதலாலேபொருளாயிற்று. அறனும் பொருளும் எனக்காரணத்தைக் காரியமாக்கிச் சொல்லினார்.] (சு)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை ...*
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து......... ......*

(இ ள்.) சொல்லை- (தாம்சொல்லக்கருதிய) சொல்லை - வெல்லுஞ்சொல்-வெல்லவல்ல சொல்லாகிய- பிறிதோர்சொல் - பிறிதோர்சொல்-இன்மை-இல்லாமையை- அறிந்து-தெரிந்து-அச்சொல்லை-அந்தச்சொல்லை—சொல்லுக - சொல்லக்கடவர். (எ,று.) (கருத்து) பிறர்

சொல்லுஞ்சொல் வெல்லுஞ்சொல் லில்லாமையைக்கண்டு சொல்லக்கடவர் என்பதாம். ❊ பிறிதோர்சொல்லாவது- பகைவராது எதிரான சொல். வெல்லுதல்-குணங்களாலே மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுகவென்பதாம். (௫)

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்...*
மாட்சியின் மாசற்றார் கோள்......................*

(இ-ள்.) வேட்ப-(பிறர் பின்னுங்கேட்க) விரும்பும்படி-தாஞ்சொல்லி-தாங்கள்சொல்லி - பிறர்சொல்-பிறர்(தமக்குச்சொல்லுஞ்)(சொல்லினது-பயன்கோடல் - பயனைக்கொண்டு விடுதல் — மாட்சியில்-(மந்திரி) யிலக்கணத்திலே-மாசற்றார்-குற்றமற்றவரது- கோள்-துணிவு. (எ,று.) (கருத்து)பிறரிச்சிக்கும்படிசொல்லிப்பிறர் சொற்பயனைக்கொள்ளுதல் மந்திரிகள் கொள்கையாம் என்பதாம். ❊ பிறர் சொற்களிலே குற்றமுளவாயினும் அவைநோக்கி இகழாரென்பதாம். வல்லமையில்லாதவரை யிகழ்தல்-வல்லவர்க்குத்தகுதியல்லாமையால் இதுவும் உடன்சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் அதனைச்சொல்லும் விதம் சொல்லப்பட்டது.] (௬)

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை...........*
யிகல்வெல்லல் யார்க்கு மரிது....................*

(இ-ள்.) (தானெண்ணியகாரியங்களை)-சொலல்வல்லன்- (பிறர்க்கேற்கச்) சொல்லுதல்வல்லவனாகி-(அவைமிகவும் பலவானவிடத்தே) சோர்விலன்-(ஒன்றினுஞ்) சோர்வில்லாதவனாகி - அஞ்சான் -(சபைக்கு)அஞ்சாதவன் (யாவன்)-அவனை-அவனை-இகல் - மாறுபாட்டிலே-வெல்லல்-வெல்லுதல் — யார்க்கும்,எவர்க்கும்-அரிது- அருமை- (எ-று.) (கருத்து) சொல்லில் வல்லவனும்; சோர்வில்லாதவனும், அஞ்சாதவனுமாகியவனை வெல்லலரிது என்பதாம். ❊ ஏற்கச் சொல்லுதல்-அவருக்கு அவை காரியமல்லாதவையா யிருந்தாலும் ஆமென்று நம்பும்படி சொல்லுதல்,சோர்வு-சொல்லவேண்டுவதனைமறந்தாயினும் மறவாமலொழிதல். இம்மூன்றுகுணமுமுடையவனைப்பகைவராய்ப்பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வார் இல்லையென்பதாம். (௭)

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது..............*
சொல்லுதல் வல்லார்ப் பெறின் .......................*

(இ-ள்.) தொழில்-(சொல்லப்படுங்) காரியங்களை-நிரந்து-ஒழுங்குபடக்கோத்து - இனிது-இனிதாக - சொல்லுதல்- சொல்லுதலில்-வல்லார்-வல்லவரை-பெறின்- பெற்றால்-ஞாலம்-உலகமானது,—விரைந்து-விரைவாகி - கேட்கும்-(அவைகளை) ஏற்றுக்கொள்ளும்(எ,று.)

(கருத்து) சொல்காரியங்களை யினிதாகச் சொல்லுதலில்வல்ல மந்திரிகளைப்பெற்றால் உலகமேற்றுக்கொள்ளும் என்பதாம். ❋ ஒழுங்குபடக்கோத்தல்-முன்னேசொல்ல வேண்டியவையும் பின்னே சொல்லவேண்டியவையுந் அறிந்து அம்முறையேவைத்தல். இனிதாதல் கேட்பார்க்கு இன்பந்தருதல்.— சொல்லுதல் வல்லவன் நூறாயிரம் பேருளொருவன் என்னும் வடமொழிபற்றி- வல்லார்ப் பெறினென்றார். [இவையிரண்டுபாட்டாலும் அவ்விதங்களாலேசொல்லுதல்வல்லாரது சிறப்புச்சொல்லப்பட்டது.] (அ)

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற ........ ............... ❋
சிலசொல்ல றேற்றா தவர் ........ ........ ... ... ... ............ ❋

(இ-ள்.) மாசற்ற-குற்றமற்றவையாய் - சில-சிலவாகிய வார்த்தைகளை-சொல்ல- அப்படிச் சொல்லுதலை-தேற்றாதவர் - அறியாதவர்,— பல-பலவாகிய வார்த்தைகளை-சொல்ல- பேச- காமுறுவர்- விரும்புவார். (எ,று.) (கருத்து)குற்றமற்ற வார்த்தைகளைப் பேச அறியாதவர்கள் பலவார்த்தைகளைப்பேச விரும்புவார்கள். வார்த்தை- வசனமென்பதாம். ❋ குற்றம்-முன்சொல்லப்பட்ட குணங்களுக்குள்திரானவை. இடைவிடாமற்பலசொல்லுதலையும் சொல்வன்மையென்று விரும்புவாரும் உண்டு. அவர் அப்படிச்சொல்லமாட்டாதவரே-வல்லவர் அறிஞ்செய்யாமையை உறுதிப்படுத்துதற்கு-மன்றவென்றார். (௯)

இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற....................❋
துணர விரித்துரையா தார்.................... ......❋

(இ-ள்.) கற்ற- கற்றநூல்களை-உணர - (பிறர்)அறியும் விதமாக-விரித்துரையாதார்-விரித்து உரைக்கமாட்டாதவர்— இணர் - கொத்திலேடத்தே-ஊழ்த்தும் - மலர்ந்திருந்தும்-நாறா - மணக்காத - மலரனையர்-பூப்போல்வர். (எ,று.) (கருத்து) கற்றநூல்களை விரித்துச்சொல்லாதவர்கள் வாசனையில்லா மலருக் கொப்பாவார் என்பதாம்.❋ எப்படிச் செவிபெற மலர்ந்திருந்தும் வாசனைசெய்யாதமலர்சூடப்படாதோ அப்படியே நூலைக்கற்றிருந்தும் சொல்ல மாட்டாதவர்நன்கு மதிக்கப்படாரென்பதாம் [இவை யிரண்டுபாட்டாலும் அதுமாட்டாரது இழிவு சொல்லப்பட்டது.] (௰)





## ௬௬-ஆம்-அதி-வினைத்தூய்மை.

அஃதாவது-செயப்படுந் தொழில்கள் பொருளை மாத்திர மல்லாமல்அறமும் புகழுந்தரத்தநல்லவையாதல். சொல்லேயல் லாமல் செயலும் நன்றாக வேண்டுமென் கின் றமையால் இது அதன்பின்வைக்கப்பட்டது

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம் ........ ..............*
வேண்டிய வெல்லாந் தரும்..............................*

(இ-ள்.) (ஒருவனுக்கு)-துணைநலம்-துணையினது நன்மையானது-ஆக்கம்-செல்வமொன்றையே-தரூஉம் - கொடுக்கும்.— வினைநலம்-தொழிலினது நன்மையானது -வேண்டிய வெல்லாம்-(அவன்) வேண்டியவைகளையெல்லாம்தரும் - கொடுக்கும். (எ,று.) (கருத்து) ஒருவனுக்குத் துணைநன்மை செல்வமொன்றைத் தருந்தொழிலின் நன்மை வேண்டியவற்றைத்தரும்என்பதாம். ✻ வேண்டியவெல்லா மென்றது - இம்மையில் அறம்பொருளின்ப முதலானவைகளையும், மறுமையில் தான்விரும்பியபதங்களையும். [இதனால் காணப்படுந்துணைநன்மையினும் கருதப்படுந் தொழினன்மை சிறந்ததெனவினைத்தூய்மையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௧)

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு..............*
நன்றி பயவா வினை.............................. ......*

(இ-ள்.) (தம்மரசனுக்கு)- புகழொடு- (இம்மைக்கு) புகழையும் நன்றி (மறுமைக்கு) அறத்தையும் - பயவா-தாராத-வினை - தொழில்களை-என்றும்- எக்காலத்திலும் - ஒருவுதல்வேண்டும்- (மந்திரிகளுக்கு)ஒழிதல் வேண்டும். (எ,று.)(கருத்து) அரசனுக்குப் புகழையுந் தருமத்தையுந் தாராத்தொழில்களை மந்திரிகள் விடவேண்டும்என்பதாம். ✻ பெருகல்-சுருங்கல் நடுநிற்றல்-என்கிற நிலை வேறுபாடுகள் காலத்தினால் வருதலால்-என்றுமென்றார். (௨)

ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை............*
ஆஅது மென்னு மவர்...................... ... ............*

(இ-ள்,) ஆஅதும்-மேலாகக்கடவோம் - என்னுமவர்- என்றுநினைப்பவர்-ஒளி-(தம்) மொளி- மாழ்கும - கெடுதற்குக் காரணமாகிய-வினை-தொழிலை - செய்-செய்தலை - ஓஒதல்வேண்டும் - ஒழியக்கடவர்.எ,று.) (கருத்து) மேலாவோமென்றெண்ணுவோர் கெடுதற்குக் காரணமானதொழிலை விடக்கடவர் என்பதாம். ✻ஒளியாவது-தா

ம்இருக்கின்ற காலத்திலே எல்லாராலும் நன்குமதிக்கப்படுதேல்.ஒளி கெடவருமாக்கம்-ஆக்கமன் றென்பதாம். (ரு)

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்.......... .... ........*
நடுக்கற்ற காட்சி யவர்.......... ................ .......*

(இ-ள்) நடுக்கற்ற-அசைவற்ற - காட்சியவர்-தெளிவையுடையவர் இடுக்கட்படினும் - (தாம்) துன்பத்திலேப்படவரினும் - (அதுதீர்தற் பொருட்டு) இளிவந்த-(முன்செய்தவர்க்கு)இழிவுவந்ததொழில்களை செய்யார்-செய்யார். (எ,று.) (கருத்து)அசைவில்லாவறிவினையுடையவர் துன்பம் வரினும் இழி தொழிலைச் செய்யார் என்பதாம். ❋ சிறிதுபோதிலே நீங்குவதாகிய துன்பத்தைநோக்கி எப்போதும் நீங்காத இழிவைஅடையலாகாதென்பதும், அவ்விழிவைஅடைந்தா லும் வருவதாயுள்ள அத்துன்பமானது வருமென்பதும், தெளி வாராதலால் - செய்யாரென்றார். (சு)

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்........... ..*
மற்றன்ன செய்யாமை நன்று......................*

(இ-ள்.) எற்றென்று-(நான்செய்தது) எப்படிப் பட்டதென்று- இரங்குவ-(பின்தானே) இரங்குந்தொழில்களை - செய்யற்க- (ஒருகா லும்)செய்யாதிருக்கக் கடவன்.— செய்வானேல் - (ஒருகால்மயங்கி அவைகளைச்)செய்வானாயின் - மற்று-பின்பு-அன்ன- அவ்விரங்கல்க ளை-செய்யாமை - செய்யாமை-நன்று-நல்லது. (எ-று.) (கருத்து) தான்வருந்துந் தொழில்களைச்செய்யாதிருக்கக்கடவன் அவற்றைச் செய்வானாகிலும் பின்செய்யாமை நல்லது என்பதாம். ❋ தொழி ல்-பலவாதலால்இரக்கமும் பலவாயிற்று. செய்துவிட்டபின்பு,இரங் குவானாயின் அது தீரும்வழி அறிந்திலனென்றும், தைரியமிலனெ ன்றும், தன்பழியைத்தானே தூற்றுகின்றானென்றும், எல்லாரும். இகழுவாராதலால்பின்பு இரங்காமைநன்றென்றார்.— இரங்காமையு ம்நல்லதொழில்செய்வோர் செயலாதலால்உடன்சொல்லப்பட்டது.

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க................*
சான்றோர் பழிக்கும் வினை................. ............ *

(இ-ள்.) (ஒருவன்)ஈன்றாள்-(தன்னைப்பெற்றதாயினது - பசி-பசி யை-காண்பானாயினும் - (வறுமையாலே) கண்டிருக்குந் தன்மைய னாயினானெனினும் (அதைக்குறித்து)- சான்றோர்- (அறிவினாலே) நிறைந்தோர்-பழிக்கும் - நிந்திக்கின்ற-வினை - தொழில்களை-செய்ய ற்க-செய்யாதிருக்கக்கடவன். (எ-று.) (கருத்து) தாய்பசியைக் கண் டானாயினு மதைக்குறித்துப் பழிக்குந் தொழிலைச்செய்யா திருக்க

க்கடவன் என்பதாம். ❁ வயதுமுதிர்ந்த தாய் தந்தையரும், கற்புடையமனைவியும், குழந்தையும் பசியால் வருந்துமளவிலே தீயவை பலவும் செய்தாயினும் காப்பாற்றுகவென்று அறநூலிற் சொல்லப்பட்ட பொதுவிதி - பொருணூலின் வழிநடத்தலும், அரசர்தொழிற்கு உரியராகலும், நன்மதிக்கப்படுதலும், உடைய மந்திரிகளுக்கு ஆகாமைபற்றி இப்படிச்சொல்லினர். [இவை ஐந்துபாட்டாலு மபாவமும் பழியும் தரும் தொழிலைச்செய்யலாகா தென்பதுசொல்லப்பட்டது. (௬)

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்...... .........*
கழிநல் குரவே தலை.......................... .............*

(இ-ள்,) (சான்றோரல்லாதவர்- தீயதொழில்களைச்செய்து) பழிமலைந்து-(அதனாற்)பழியைத்தம்மேற்கொண்டு எய்திய-பெற்ற- ஆக்கத்தின்-செல்வத்தைக் காட்டிலும்-சான்றோர் - (அது மேற்கொள்ளாத)சான்றோரனுபவிக்கும் - கழிநல்குரவே-மிகுந்த வறுமையே-தலை-உயர்ந்தது. (எ-று.) (கருத்து) பழிபாலடைந்த செல்வத்திலும் பெரியோரநுபவிக்கும் வறுமையேமேலாம்என்பதாம். ❁ நிலையில்லாத செல்வத்தின்பொருட்டு நிலையுள்ள பழியை மேற்கொள்ளல் சான்றோர் தன்மையோடு பொருந்தாமையால் சான்றோர் கழிநல்குரவே தலையென்றார். (௭)

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா.......... ..........*
முடிந்தாலும் பீழை தரும்....... .................. ..... ... *

(இ-ள்.) கடிந்த-(நூலோர்) தள்ளியதொழில்களை-கடிந்தொரார்-(தாமும்)தள்ளிவிடாராகி - செய்தார்க்கு- (பொருளைக் குறித்துச்) செய்தமந்திரிகளுக்கு - அவைதாம்-அவைதாம்— (தூயவையல்லாமையால் முடியாவாம்) முடிந்தாலும்-(ஒருவழியால்) முடிந்தாலும் (பின்)-பீழை-துன்பத்தை - தரும்-கொடுக்கும். (எ-று.) (கருத்து) பெரியோர் தள்ளப்பட்ட தொழிலைக் கொள்ளப்பட்ட மந்திரிகளுக்கு அத்தொழில் முன்முடியினும் பின் துன்பந்தரும் என்பதாம் ❁ முடிதல்-நினைத்தபொருளைத் தருதல். (௮)

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்...... ...*
பிற்பயக்கு நற்பா லவை...... ......... ..... ... ......... *

(இ-ள்.) (ஒருவன்)-அழக்கொண்டவெல்லாம் - (தீயதொழில்களைச்செய்து)-(பிறர்) இரங்க கொண்ட பொருளெல்லாம் - அழப்போம்-(இம்மையிலே அவன்) இரங்கப்போகாநிற்கும். — நற்பாலவை-மற்ற நல்லதொழில்களால் வந்தபொருள்கள் - இழப்பினும்-(முன்) இழந்தானாயினும் - பிற்பயக்கும்-பின்வந்துபயன் கொடுக்கும். (எ,

று.) (கருத்து) பிறனழக்கொண்ட பொருள்யாவுந் தானழப்போகும் நல்வழியால் வந்தபொருள்கள் முன்னிழந்தாலும் பின்பயன்கொடுக்கும் என்பதாம். ❁ பின்னெனவே மறுமையும் அடங்கிற்று-பொருள்களால் அவைகளுக்குக் காரண மாகிய தொழில்களது இயல்பு சொல்லியபடி. (கூ)

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட் ...... *
கலத்துணீர் பெய்திரீஇ யற்று ...... *

(இ-ள்.) (மந்திரியானவன்)-சலத்தால் - தீயதொழில்களால்-பொருள்செய்து-பொருளைச்சம்பாதித்து - ஏமார்த்தல்-(அரசனல் அரசனுக்குக்) காப்புச்செய்தல்-பசுமட்கலத்துள் - பசியமண்ணின்பாத்திரத்துள்-நீர்பெய்து- நீரைவார்த்து - இரீஇயற்று-(அதற்குக் காப்புச்செய்ததனோடொக்கும். (எ-று.)(கருத்து) மந்திரியரசனுக்குவஞ்சிப்பால் பொருளைத்தேடிக்காத்தல் பசியமண்பாத்திரத்துள்ளே நீரைவார்த்துக் காத்தல்போலாம் என்பதாம். ❁ இருத்துதல் - நெடுங்காலம் இருப்பாகச்செய்தல் - அரசனும் பொருளும் ஒருசேரப் போமென்பதாம். [இவை நான்கு பாட்டாலும் அதற்குக் காரணம் சொல்லப்பட்டது ] (ய)

## சுஎ-ஆம், அதி-வினைத்திட்பம்.

அஃதாவது- அப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்கு வேண்டுவதாகிய மனவலிமையாம். அதிகாரமுறைமையும் இதனாலேயே விளங்கும்.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப ...... *
மற்றைய வெல்லாம் பிற ...... *

(இ-ள்.) வினைத்திட்பமென்பது - தொழில் செய்யுமிடத்து வலிமையென்று சொல்லப்படுவது-ஒருவன்- (அதனைமுடித்தற்குரிய) ஒருவனது-மனத்திட்பம்- மனத்தினதுவலிமையாம்.- மற்றையவெல்லாம்-அது நீங்கலானவல்லமைகளெல்லாம்- பிற(அதற்கு) வலிமையென்று சொல்லப்படுவன வல்ல.(எ,று,) (கருத்து) தொழில்வலிமையென்று சொல்லப்படுவது ஒருவன் மனவலிமையாம் மற்றவலிமையிதற்கு நிகரல்லவாம் என்பதாம். ❁ அதுநீங்கலானவை- படைஅரண் நட்பு முதலானவைகளின் வலிமைகள். அவையும் அதற்கு வேண்டுமவையாய் இனமாகலால்- மற்றையவென்றும், அவை வேண்

டியவையாயிருந்தாலும் அம்மனவலி இல்லாதவிடத்தே பயனில்லவாகலால் பிறவென்றுய்,சொல்லினார். [இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்று சொல்லப்பட்டது.] (௧)

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி...... *
னாறென்ப ராய்ந்தவர் கோள்...... *

(இ-ள்.) ஆய்ந்தவர்- (முன்புநீதிநூலை) ஆராய்ந்தமந்திரிகளது—கோள்-துணிவு-ஊறு-பழுதுபடுந்தொழிலை - ஓரால் - செய்யாமையும் - உற்றபின்- (செய்யுந் தொழில் ஊழினாலே) பழுதுபட்டவிடத்து-ஒல்காமை- (அதற்குத்) தளராமையும் ஆகிய - இவ்விரண்டின் - இவ்விரண்டினது- ஆறு - வழியாகும்—என்பர் - என்று (நூலோர்) சொல்லுவர். (எ-று.) (கருத்து) மந்திரிகள் துணிவானது பழுதுபடுந்தொழிலைச் செய்யாமையு மத்தொழிற் பழுதாகிற்றளரமையுமாமென்பதாம். ※ தேவர்க்கும் அசுரர்க்கும் மந்திரிகளாகிய பிரகற்பதி சுக்கிரன் இவர்களது துணிவைத்தொகுத்துப் பின்னேநீதி நூலுடையோராலே சொல்லப்பட்டபடியேசொல்லுகின்றமையாலிங்கே வினைத்தூய்மையும் உடன்சொல்லினார், (௨)

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி...... *
னெற்றா விழுமந் தரும்...... *

(இ-ள்.) (செய்யப்படுந்தொழிலை)-கடை- முடிவிலே - கொட்க-சுழல [வெளிப்படவென்றபடி] - செய்தக்கது - (அதற்குமுன்னெல்லாம்மறைத்துச்) செய்வதே - ஆண்மை - வலிமையாகும்.—இடை-நடுவிலே-கொட்கின் - வெளிப்படுமாயின் - (அவ்வெளிப்படுதல்)-எற்றா-நீக்கப்படாத-விழுமம் - துன்பத்தை—தரும் - (செய்தவனுக்குக் கொடுக்கும். (எ-று.) (கருத்து) தொழிலைமறைத்து முடிவிற்செய்வதேவலிமையாம் அதுநடுவில் வெளிப்படுமாகிற் றுன்பமாமென்பதாம். ※ மறைத்துச்செய்கலாவது - சேனைமுதலாகிய ஐந்து அங்கங்களும் எண்ணியவிதத்தை-பிறர் அறியாதிருக்கவும், தான் அறிந்ததையும்-தன்னிங்கிதம்-வடிவு - செயல் - சொற்களால் - அவர்-ஆலோசித்து அறியாதிருக்கவும், அடக்கிச்செய்தல்.— அத்துன்பங்களாவன-பகைவர் முன்னறிந்து அத்தொழிலை விலக்குதலும், செய்வானை விலக்குதலும், செய்வாராதலால் அவ்விலக்குதல்களால் வருவன. [இவைஇரண்டுபாட்டாலும் அதன்பகுதி சொல்லப்பட்டது.

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்...... *
சொல்லிய வண்ணஞ் செயல்...... *

(இ-ள்.) சொல்லுதல் - (இத்தொழிலை இவ்விதத்தாலே செய்வோ

மென்று ஒழுங்குபடச்) சொல்லுதல் - யார்க்கும் - எவர்க்கும் - எளிய-எளியவையாகும்.—(அதனை) - சொல்லியவண்ணம் - அச்சொல்லப்பட்டவிதத்தால்-செயல் - செய்தல் - அரியவாம் - அரியவையாம்.(எ-று.) (கருத்து) தொழில்செய்வோமென்றல்யார்க்குமெளிதாம் அதைச் சொல்லியபடி செய்தலரிதாம் என்பதாம். ❊ அரியவைகளை எண்ணிச்சொல்லுதல் மனவலிமையில்லாதவர்க்கும் கூடுமாதலால்- எளிய வென்றார். [இதனால் அதனது அருமை சொல்லப்பட்டது.] (௪)

வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க...... ...❊
ணூறெய்தி யுள்ளப் படும்.......................... ................ ❊

( இ - ள். ) வீறெய்தி-(எண்ணத்தினாலே) சிறப்பை அடைந்து-மாண்டார் - (மற்றையிலக்கணங்களாலும்) மாட்சிமைப் பட்டமந்திரிகளது - வினைத்திட்பம் - தொழில்வலிமையானது - வேந்தன்கண்-அரசனிடத்து ஊறெய்தி-உளதாதலை அடைதலாலே- உள்ளப்படும்-(எல்லாராலும்) நன்குமதிக்கப்படும். (எ-று.) (கருத்து) மந்திரிகள் தொழில் வலிமையானது அரசனிடத்துப் பொருந்துதல் யாவராலு மதிக்கப்படும் என்பதாம். ❊ வேந்தன்கணூறெய்தல்- எடுத்ததொழில் அதனால் முடிந்து செல்வமும் புகழும் அவனிடத்தே உண்டாதல். [இதனால்அதன் சிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்.........❊
திண்ணிய ராகப் பெறின்........................................ ❊

(இ-ள்.) எண்ணிய- (தம்மால்) எண்ணப்பட்ட பொருள்களை யெல்லாம் - எண்ணியாங்கு - அவ்வெண்ணியபடியே - எய்துப - அடைவார்.—எண்ணியார் - (அவ்வெண்ணப்பட்ட பொருள்களுக்கு வழியாகிய தொழிலிடத்தே)- திண்ணியராகப்பெறின் - வலிமையுடையவராகப்பெற்றால். (எ-று.) (கருத்து) தொழிலில்வலிமையுடையவராகில் நினைக்கப்பட்ட பொருளை நினைத்தபடி பெறுவார் என்பதாம். ❊ எளிதிலே அடைவாரென்றற்கு-எண்ணியாங்கெய்துபவென்றார். அவர் அப்படியல்லாமல் எண்ணுமையில் வலிமையை யுடையராகவே அவையெல்லாம் கைகூடுமென்பது கருத்து [இதனால் அதனையுடையவர் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (௬)

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்-- ❊
கச்சாணி யன்ன ருடைத்து........................................ ❊

(இ-ள்.) (உலகமானது)- உருள் - உருளாநின்ற- பெருந்தேர்க்கு-பெரியதேர்க்கு - அச்சாணியன்னார் - அச்சினிடத்தேஆணிபோல் தொழிலினிடத்தே வலிமையை யுடையவரை- உடைத்து - உடைய

து-(அதனால்) - உருவுகண்டு-(அவர்) வடிவினிடத்தே சிறுமைநோக்கி-எள்ளாமைவேண்டும் - (அவரை இகழாமைவேண்டும்.) (எ-று.) (கருத்து) உலகம் தேர்க்கச்சாணிபோலத் தொழிலில் வலிமையுள்ளோரையுடையது அதனால் வடிவுகண்டொருவரை யிகழலாகாது என்பதாம். ❊ எள்ளாமைவேண்டு மென்றதனாலும், உவமானத்தாலும், சிறுமைவருவிக்கப்பட்டது. அச்சு-உருள்கோத்தமரம். ஆணி உருள்கழலாமல் அதன்கடையிலே செருகுவது. அது வடிவினாலே சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக்கொண்டு செலுத்துகிற வலிமையுடைத்தாதல்போல் வடிவினாலே சிறியராயிருந்தே பெரியதொழிலைக்கொண்டு செலுத்துகிற வலிமையுடைய மந்திரிகளும் உண்டு அவரை அவ்வலிமைநோக்கி அறிந்துகொள்க வென்பதாம். [இதனால் அவரை அறியும்விதம் சொல்லப்பட்டது.] (எ)

கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது............*
தூக்கங் கடிந்து செயல்............*

(இ-ள்.) கலங்காது - (மனம்) தெளிந்து- கண்ட - (செய்வதாகத்) துணிந்த-வினைக்கண்-தொழிலினிடத்து-துளங்காது-(பின்) அசைதலில்லாமல்- தூக்கங்கடிந்து - ஆலசியத்தை ஒழித்து - செயல்-செய்யக்கடவர். (எ-று.) (கருத்து) மனந்தெளிந்து செய்யத்துணிந்ததொழிலிடத்து ஆலசியமில்லாமலத்தொழிலைச் செய்யக்கடவர் என்பதாம். ❊ கலங்கியவிடத்து ஒழிவது செய்வதுபோல் தோன்றுமாகலால் தெளிந்து பலகால் ஆராய்ந்தாலும் செய்வதாதலாற்றதொழிலை- கலங்காது கண்டவினை யென்றார். துளங்காமை - வலிமையுடைமை (அ)

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி............*
யின்பம் பயக்கும் வினை............*

(இ-ள்.) (முதலிலேமெய்ம்முயற்சியினாலே-துன்பம்-துன்பமானது-உறவரினும்- (தமக்கு) மிகவரினும் - (அதுகண்டு தளராமல்) இன்பம்-சுகத்தை-பயக்கும்-(முடிவிலே) தருகின்ற- வினை - தொழிலை-துணிவாற்றி- வலிமையுடையராய் - செய்க - செய்யக்கடவர்.(எ-று.)(கருத்து) துன்பம்வரினுமின்பந்தரும்தொழிலைச்செய்யக்கடவரென்பதாம். ❊ துணிவு-கலங்காமை- அக்கலங்காமை யுடையவர்க்கல்லது சிறிதுகாலத்திலே நீங்குவதாகியமுயற்சித் துன்பம்நோக்காமல் அதனால் உண்டாய்நிலைபெறும் இன்பத்தை நோக்கிச்செய்தல் கூடாமையாலே - துணிவாற்றிச் செய்கவென்றார். [இவை இரண்டு பாட்டாலும் அவர்தொழில்செய்யும் விதம்சொல்லப்பட்டது.](கூ)

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம் ..... *
வேண்டாரை வேண்டா துலகு.......... ... ... ......... *

(இ-ள்.) உலகு-உயர்ந்தோர் - வினைத்திட்பம் - தொழில் வலிமை மை-வேண்டாரை - (இது நமக்குச் சிறந்ததென்று) கொள்ளாத மந் திரிகளை;— எனைத்திட்பம்-அவை நீங்கலாகிய வலிமைகளெல்லாம்- எய்தியக்கண்ணும் - உடையவராகிய விடத்தும் - வேண்டாது- நன் குமதியார். (எ-று.) (கருத்து) உயர்ந்தோர் தொழில்வலிமையை விரு ம்பாதமந்திரிகளைமதியாரென்பதாம். ❋ மனத்தினிடத்திலேவலிமை யில்லாதவர்க்கு - படை-அரண்-நட்பு-முதலானவைகளின் வலிமை களெல்லாம் உண்டாயினும் தொழில்முடியாமையால் அவ்வலிமை களெல்லாம் கெடுமென்பதுபற்றிஉலகுமவேண்டாதென்றார். [இதனு ல்தொழில்வலிமை யில்லாதவரது இழிவுசொல்லப்பட்டது.] (௰)

## ௬அ-ஆம்-அதி-வினைசெயல்வகை.

அஃதாவது - அவ்வலிமையுடைய மந்திரியானவன் அத்தொழிலைச் செய்யுந் திறமாம்.—அதிகா ரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு .......... .............. *
தாழ்ச்சியுட் டங்குத றீது ... ......... ................ ......... *

(இ-ள்.) சூழ்ச்சி-ஆலோசனைக்கு - முடிவு- எல்லையாவது— துணி வெய்தல் (ஆலோசிப்பவன் இனிது இதுதப்பாதென்றுந்) துணிவை ப்பெறுதல்.- அத்துணிவு- அப்படித்துணிவு பெற்றதொழில்- தாழ் ச்சியுள்- (பின்) ஆலசியத்தில் - தங்குதல் - தங்குகல் - தீது -குற் றமுடையதாம். (எ-று.) (கருத்து) ஆலோசனைக் கெல்லையாவதுது ணிவுபெறுதல் அத்துணிவு பின்முலசியப்படுதல் குற்றம் என்பதா ம். ❋ சூழ்ச்சிமுடிவு துணிவெய்த லென்றதனால் - துணிவுபெறும் வரைக்கும் ஆலோசிக்கவேண்டு மென்பதாயிற்று. பின்வந்த துணி வு-அது பெற்றதொழிலுக்கு ஆகலால்-ஆகுபெயர் — ஆலசியமுண் டானவிடத்தே காலக்கழிவாகலாலும், பகைவர்அதைஅறிந்து அழி த்தலாலும், முடியாமையால்-அதனைத்தீதென்றார். (௧)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க ............ *
தூங்காது செய்யும் வினை ............ *

(இ-ள்.) தூங்கி-ஆலசியித்து- செயற்பால - செய்யும் பகுதியையுடையதொழில்களுள் - தூங்குக - ஆலசியம் பண்ணக்கடவன்—தூங்காது - ஆலசியம்பண்ணாமல - செய்யும்வினை - செய்யுந்தொழில்களுள்- தூங்கற்க - ஆலசியம்பண்ணாதிருக்கக் கடவன். (எ-று.) (கருத்து) ஆலசியமாகச்செய்யுந் தொழில்களை ஆலசியமாகச் செய்யக்கடவன் விரைவாகச்செய்யுந் தொழில்களை விரைவாகச் செய்யக்கடவன் என்பதாம். ※ இருவகைத் தொழில்களும் - வலியாலும், காலத்தாலும், அறியப்படும். மாறிச்செய்தால் - அவை பலியாமற் போமென்பது கருத்து. முன்னே தூங்காமை யென்றதை இங்கே பகுத்துச்சொல்லினர்.] இவை இரண்டு பாட்டாலும் பொதுவகையால் தொழில் செய்யுந் திறம் சொல்லப்பட்டது.] (௨)

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால் ............ *
செல்லும்வாய் நோக்கிச் செயல் ............ *

(இ-ள்.) (தொழில் செய்யும்போது) - ஒல்லும்வாயெல்லாம் - கூடுமிடத்தெல்லாம்- வினை - தண்டஞ்செய்தல் - நன்று - நல்லதாகும்- ஒல்லாக்கால் - (அது) கூடாதவிடத்து - (மற்றைமூன்று உபாயங்களிலே)-செல்லும்வாய்நோக்கி- (அது) முடிவதோருபாயம் நோக்கி செயல் - செய்யக்கடவன். (எ-று.) (கருத்து) குற்றங் கூடுமிடத்தெல்லாந் தண்டித்தல்நல்லது அது கூடாவிடத்து மூன்றுபாயங்களாற் செய்யக்கடவன். என்பதாம். ※ கூடுமிடம்-பகைவனினும் தான்வலியவனுகியகாலம்.—அக்காலத்திலே பகைவர் தண்டத்துக்கே அஞ்சுவராகலால் - அத்தண்டமே நன்றென்றார்.—கூடாதவிடம்- ஒத்தகாலமும், இளைத்தகாலமும், ஆம்.—[இதனால்-வலிமை-ஒப்புமை-மெலிமை-எனநிலைமூவகைப் படுமென்பது, அவைகளுள் வலிமையினது சிறப்பும், சொல்லப்பட்டது.] (௩)

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற் ............ *
தீயெச்சம் போலத் தெறும் ............ *

(இ-ள்.) வினை- (செய்யத்தொடங்கிய) தொழிலும்- பகை-(அழிக்கத்தொடங்கிய)பகையும்-என்றிரண்டின் - என்று சொல்லப்பட்ட இரண்டினது-எச்சம்-குறையும்- நினையுங்கால்-ஆராயுமிடத்து - தீயெச்சம்போல- தீயினது குறைபோல்—தெறும்-(பின்வளர்ந்து) கெடுக்கும். (எ-று.) (கருத்து)தொழிலும் பகையும் அக்கினிபோல் வளர்ந்து கெடுக்கும் என்பதாம். ※ இனி இக்குறை என்ன செய்யுமாட்டு

மென்று இகழ்ந்து விட்டுவிடாமல் முடிவுபெறச் செய்கவென்பதா ம்.—பின்வளர்தல் ஒப்புமைபற்றிப்பகையெச்சமும் உடன்சொல்லி னார்.[இதனால்வலியவன் செய்யுந்திறஞ்சொல்லப்பட்டது;] (ச)

பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து ...........*
மிருடீர வெண்ணிச் செயல் ...........*

(இ-ள்.) (தொழில்செய்யுமிடத்து)- பொருள் - பொருளும்- கரு வி-சாதனமும்-காலம்-காலமும் - வினை - தொழிலும் - இடன் - இட மும்ஆகிய-ஐந்தும்-ஐந்தும்-இருடீர-மயக்கமற- எண்ணி - நினைத் து—செயல்- செய்யக்கடவன். (எ-று.) (கருத்து) பொருளும் சாத னமும் காலமும் தொழிலும் இடமும்இவ்வைந்து நினைத்துத்தொழி ல்செய்யக்கடவன் என்பதாம். ❁ பொருள்-அழியும்பொருளும்,ஆ கும்பொருளும்,—கருவி - தன்சேனையும், பகைவர்சேனையும், கால ம்- தனக்கு ஆங்காலமும், அவர்க்கு- ஆங்காலமும், வினை-தான்வல் லதொழிலும், அவர்வல்லதொழிலும், இடன்- தான் வெல்லும் இட மும், அவர்வெல்லும் இடமும், இவைகளைத்தான் வெற்றிபெறுந்தி றத்தில் தப்பாமல் எண்ணிசசெய்க வென்பதாம். (ரு)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் ...........*
படுபயனும் பார்த்துச் செயல் ...........*

(இ-ள்.) (தொழில்செய்யுமிடத்து)- முடிவும்-(அது) முடிதற்கு உளதாகிய முயற்சியையும்- இடையூறும் - (அதற்குவரும்) இடையூ ற்றையும்-முற்றி-(அவ்விடையூறு நீக்கி) முடித்தால் - எய்தும்- (தா ன்)அடையும்-படுபயனும்-பெரும்பயனையும்- பார்த்து - சீர்தூக்கி- செயல்-செய்யக்கடவன்.(எ-று.)(கருத்து)முயற்சியையும் இடையூற் றையும் பயனையும் ஆராய்ந்து தொழில்செய்யக்கடவன் என்பதாம். ❁ முடிவு-அதன்முயற்சிக்கு ஆகுதலால் ஆகுபெயர்.—முயற்சியள வுக்கும் இடையூறளவுக்கும் பயனளவு பெரிதாயிருந்தால் அத்தொ ழிலைச் செய்கவென்பதாம் (சா)

செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை ...........*
யுள்ளறிவா னுள்ளங் கொளல் ...........*

(இ-ள்.) செய்வினை- (அவ்வழியினாலே) செய்யப்படுந்தொழிலை- செய்வான்-செயத்தொடங்கினவன் - செயன்முறை - செய்யுமுறை மையாவது -அவ்வினை-அத்தொழிலினது-உள் - உளப்பாட்டை-அறி வான்-அறிபவனது-உள்ளம்- கருத்தை - கொளல் - (தான்) அறிதல். (எ-று.) (கருத்து) தொழிலைச்செய்யத்தொடங்கினவன்செய்யுமுறை யாவது அத்தொழிலி னுளப்பாட்டையறிதல் என்பதாம்.❁அவ்வா

றென்றது-பொருண்முதலானவைகளை எண்ணலையும், முடிவுமுதலானவைகளை ஆராய்தலையும், உள்ளறிவான்- முன்செய்துகைவந்தவன்- அவன்கருத்து-அதனைச்செய்துவந்தஉபாயம்.-அதனை அறியவேதாலும் அவ்வுபாயத்தினாலே செய்துபயனை அடைவானென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் ஒப்பவன்செய்யுந்திறம் சொல்லப்பட்டது.

வினையான் வினையாக்கிக் கோடனனைகவுள்........................*
யானையால் யானையார்த் தற்று.......................................*

(இ-ள்.) வினையால்- (செய்யப்படுகின்ற) தொழிலினாலே - வினை- (அப்படிப்பட்ட)வேறொருதொழிலை- ஆக்கிக்கோடல் - முடித்துக்கொள்ளக்கடவன் -(அது)- நனைகவுள் - (மதத்தா) நனைந்த கபோலத்தையுடைய-யானையால்-யானையினால் - யானை - (அப்படிப்பட்ட வேறொரு) யானையை- ஆர்த்தற்று - கட்டியதோடு ஒக்கும். (எ-று.) (கருத்து) தொழிலாலேதொழிலை முடித்துக்கொள்ளக்கடவன் அது யானையை யானையாற் கட்டிய தொப்பாம் என்பதாம். ❁ பிடித்தற்கருமைதோன்ற-நனைகவுளென்றார். தொடங்கிய தொழிலாலே வேறுமொருதொழிலை முடித்தற்கு உபாயமாகும் விதம்ஆலோசித்துச்செய்தால் எல்லாத்தொழில்களும் எளிதிலேமுடியுமென்பதாம். (அ)

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே.............................*
யொட்டாரை யொட்டிக்கொளல்.......................................*

(இ-ள்.) (தொழில்செய்பவனால்) -நட்டார்க்கு-(தனது)நட்பினருக்கு- நல்லசெயலின்-நல்லவைகளைச் செய்தலினும் - ஒட்டாரை-(தன்பகைவராகிய) பகைவரை - ஒட்டிக்கொளல் - (தனக்கு) நட்பாக்கிக்கொள்ளுதல்—விரைந்ததே விரைந்து செய்யத்தகுவதாம். (எ-று.) (கருத்து)பகைவரைச் சிநேகமாக்கிக்கொள்ளுதல் சிநேகருக்கு நல்லவைகளைச் செய்தலினு நல்லதுஎன்பதாம். ❁ அத்தொழிலைப்பலிக்கச்செய்யும் அவ்விரண்டு காரியங்களையும் பகைவர்க்குத் தன்மெலிவுதெரிவதன் முன்னே செய்கவென்றற்கு-விரைந்ததென்றார். (கூ)

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்........*
கொள்வர் பெரியார்ப் பணிந்து.................................*

(இ-ள்.) உறைசிறியார்- ஆளுமிடஞ்சிறியராகியமந்திரிகள் (தம்மின்மிகுந்தவலியவர் எதிர்ந்தவிடத்தே) உள்-(தமது)அங்கங்கள் - நடுங்கல்-நடுங்குதலுக்கு-அஞ்சி-பயந்து - குறைபெறின் - (அந்நிலைக்கு வேண்டுவதாகிய) சந்து கூடுமாயின்-பெரியார் அப்பெரியவரை- பணிந்து-வணங்கி-கொள்வர்-(அதனைஏற்றுக்)கொள்வர்.(எ-று.)(கருத்து) ஆளுமிடஞ் சிறியாராகிய மந்திரிகள் பகைவ ரெதிர்த்த விடத்

லுப்பணிந்துகொள்வர் என்பதாம். ❁ இடம்-நாடும், அரணும்,—அவைகளின்சிறுமை உடையர்மேல் ஏற்றப்பட்டது.—மெலியாரோடு சந்திக்கு வலியாரிசைதல் அரிதாகலால்-பெறின்என்றார்.-அடியிலே மெலியராயினார் தம்மங்கங்களும் அஞ்சிநீங்கினால் முதலோடும்கெடுவராகலின் அஃது வாராமற்சிறிதுகொடுத்தும்சந்தினை ஏற்றுக்கொள்கவென்பதாம்.— பணிதல் மானிகளுக்குக் கருத்தல்லாமை யால் கொள்வாரென உலகியலாற்சொல்லினார். [இவைமூன்று பாட்டாலும்மெலியவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.] (௰)



## ௬௯-ஆம், அதி-தூது.



அஃதாவது- பொருத்தல்- பிரித்தல்களுக்கு வேற்றரசரிடத்தே செல்வாரது தன்மை. அவ்விரண்டனையும் முன்வினைசெயல்வகைமையின்றமையால் இது அதன்பின்வைக்கப்பட்டது. தான்வகுத்துச்சொல்வோன் - சொல்லியது சொல்வோன்- எனத்தூது இருவகைப்படும் அவருள் முன்னோன் மந்திரியோடு சமானனுவானாகலானும் பின்னோன் அவனிலே காற்பங்கு குணங்குறைந்தோனாகலானும் இஃது அமைச்சியலாயிற்று.

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்.......*
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு ..................*

(இ-ள்.) அன்புடைமை-(தன்சுற்றத்தாரிடத்து) அன்புடையவனாதலும்-ஆன்றகுடிப்பிறத்தல் - (மந்திரிதொழில் செய்தற்கு) அமைந்தகுடியிலேபிறத்தலும்-வேந்தவாம்பண்புடைமை-அரசர்-சாதிவிரும்பும் குணமுடையவனாதலும் - தூதுரைப்பான்-தூதுவார்த்தைசொல்லுவோனுக்கு - பண்பு-இலக்கணமாம்.(எ-று.)(கருத்து) அன்பும் நற்குடியிற்பிறத்தலும் அரசர்விரும்புங் குணமுமுடையனாதல் தூதனிலக்கணம் என்பதாம், ❁ முன்னைடவிரண்டினாலும்முறையே சுற்றத்தார்க்குத் தீங்குவாராமல் தானேகாத்து நடத்தலும், தன்முன்னோர் தூதியல்கேட்டு அறிதலும், பெற்றும். — வேந்தவாம்பண்புடைமை - பின்புமன்னரைச் சேர்ந்தொழுகலிலே அறியப்படும். அதனால் வேற்றரசரும் அவனுக்கு வசப்படுதல் கொள்ளப்படும்.] (௧)

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்... *
கின்றி யமையாத மூன்று.............................*

யாக்கொள்ளும்) பொருளும்-வேந்தன் பொருள் - அரசனுக் குரிய பொருள்கள். (ள்-று.) (கருத்து) உடையவரில்லாப் பொருளும், சுங்கப்பொருளும், பகைவரைவென்று திறைகொண்ட பொருளு மரசன் பொருள்களாம், என்பதாம். ❊ உறுபொருள்-வைத்தவரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கீழ்க்கிடந்து பின்கண் டெடுத்ததுமாம். சுங்கம். மரக்கலத்திலும் பண்டியிலும் வரும் பண்டங்களுக்கு வாங்கும்வரி, தெறுபொருள்-தெறுதலால் வரும்பொருளென விரியும். ஆறிலொன்றல்லாமலும்உரியவைசொல்லியபடி.[இவைமூன்றுபாட்டாலும் அதுசம்பாதிக்கும் வழிசொல்லப்பட்டது. (சு)

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்.....*
செல்வச் செவிலியா லுண்டு ....... ......... ......... .........*

(இ-ள்.) அன்பீன்-அன்பினால்-ஈன்றிடப்பட்ட - அருளென்னும்-அருளென்கின்ற-குழவி-குழந்தையானது-பொருளென்னும்-பொருளென்று உயர்த்திச்சொல்லப்படும்-செல்வம்-செல்வத்தையுடைய-செவிலியால்-செவிலித்தாயால்-உண்டு-வளரும். (எ-று.) (கருத்து) அன்பாலீன்றிடப்பட்டஅருளென்னுங்குழந்தையானதுபொருளென்னுஞ்செவிலித்தாயால் வளரும் என்பதாம். ❊ சம்பந்தம் பற்றுமல் வருத்தமடைந்தவரிடத்துச் செல்வதாகிய அருள்-சம்பந்தம்பற்றிச் செல்லும் அன்புமிகுந்தவிடத்து உண்டாவதாகலால் அதனை அன்பீன்குழவியென்றும், அது வறியவர்மேற்செல்வது - அவ்வறுமைகளையவல்ல பொருளுடையவர்க்கு ஆதலால் பொருளை-அதற்குச்செவிலியென்றும், அது உலகிற்செவிலிபோலல்லாமல் தானே எல்லாப்பொருளும் உதவிவளர்த்தலால் - செல்வச்செவிலியென்றும், சொல்லினர். (எ)

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்.... *
றுண்டாகச் செய்வான் வினை ....................... .......... ..... .....*

(இ-ள்.) தன்கைத்து-தன்கையதாகியபொருள் - உண்டாக - உண்டாகவிருக்க-ஒன்று - ஒருதொழிலை - செய்வான் - செய்பவனது -வினை-செய்கையானது—குன்றேறி- (ஒருவன்) மலைமேல் ஏறி நின்று யானைப்போர்- யானைகளதுபோரை - கண்டற்று - கண்டதனோடொக்கும். (எ-று.)(கருத்து) தன்பொருளிருக்கவொருதொழிலைச்செய்பவன் செய்கையானது மலைமேலேறி யானைகள் போரைக் கண்டதொக்கும் என்பதாம். ❊ எப்படிக்குன்றேறினவன் அச்சமும் வருத்தமும் இல்லாமல் பூமியில் வானையும் யானையும் செய்கின்ற சண்டையைத்தான் இனிதிருந்து காண்பானோ அப்படிக்கைப்பொருளு

ண்டாக ஒருதொழிலை மேற்கொண்டவனும் அச்சமும் வருத்தமும் இல்லாமலவல்லவனாயவித்தான் இனிதிருந்துமுடிப்பானென்பதாம்.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு ..................... *
மெஃகதனிற் கூரிய தில் ...... .. .... ...... ....... .... .... *

(இ-ள்.) (தமக்கு ஒன்றுண்டாக நினைப்பவர்) - பொருளை - திரவியத்தை - செய்க - சம்பாதிக்கக்கடவர் - (அப்பொருள்) - செறுநர் - (தம்) பகைவரது - செருக்கு - தருக்கை - அறுக்கும் - கெடுக்கும் - எஃகு - ஆயுதமாம். — (அதற்கு) - அதனின் - அதுபோல் - கூரியது - கூரிய ஆயுதம் - இல் - (வேறு) இல்லை. (எ-று.) (கருத்து.) திரவியத்தைச்சம்பாதிக்கக்கடவர் அத்திரவியம் பகைவர் செருக்கைக் கெடுக்கு மாய்தமாம் என்பதாம். ※ பொருளைச் சம்பாதித்தவர் பெருமையும் நட்புமுடையவராவராதலாலே பகைவர் செருக்குநீங்கித் தாமேஅடங்குவாரென்பதற்கு - செறுநர் செருக்கறுக்கு மெஃகென்றும்; மற்றையாயுதங்கள் அதுபோல் அருவப் பொருளை அறுக்க மாட்டாமையால் - அதனிற் கூரியதில்லையென்றும்; சொல்லினர். (கூ)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு ..... .... *
ளேனை யிரண்டு மொருங்கு ..................................... *

(இ-ள்.) ஒண்பொருள் - நல்லவழியால் வரும்பொருளை - காழ்ப்ப - மிகவதிகமாக - இயற்றியார்க்கு - உண்டாக்கினவர்க்கு - ஏனையிரண்டும் மற்றைஅறமும் இன்பமும் - ஒருங்கு - ஒருசேர - எண்பொருள் - எளியபொருள்களாம். (எ-று.) (கருத்து) நல்வழியால் வரும்பொருளைமிகவுமுண்டாக்கினவர்க்குத் தருமமுமின்பமு மெளியனவாம் என்பதாம். ※ காழ்த்தல் முதிர்தல். அப்பொருள் - பயன்கொடுத்தல்லது போகாமையால் - ஒண்பொருளென்றும், மற்றையிரண்டும் அதன் விளைவாகலால் தாமே ஒரேகாலத்திலே உண்டாகுமென்பதற்கு - எண்பொருளென்றும், சொல்லினர். [இவைநான்கு பாட்டாலும் அதன்பயன் சொல்லப்பட்டது.] (ய)

※❦❦❦❦❦❦❦❦❦❦❦❦※

## எஎ-ஆம், அதி-படைமாட்சி.



இனிப்பொருளினால் ஆவதாய் வெல்வதாகிய படையை இரண்டதிகாரத்தாலேசொல்லத் தொடங்கிமுதலிலேபடைமாட்சி சொல்லுகிறார்.

அஃதாவது - சேனையினது நன்மையாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன் ..........*
வெறுக்கையு ளெல்லாந் தலை ..........*

(இ-ள்.) உறுப்பு - (யானைமுதலாகிய) நாலுறுப்புக்களாலும் - அமைந்து நிறைந்து - ஊறு - (போரிலே) காயம்படுதற்கு - அஞ்சா - அஞ்சாது - நின்று - வெல் - (பகையை) வெல்வதாகிய - படை - சேனையானது - வேந்தன் - அரசனது - வெறுக்கையுளெல்லாம் - செல்வங்களிலெல்லாம் - தலை - முதன்மையாகிய (செல்வமாம்.) (எ-று.) (கருத்து) போரிலஞ்சாதுநின்று வெல்லும்படையானது அரசன்செல்வம்யாவற்றிலுந் தலைமை என்பதாம். ※ இவ்விடத்திலே படையென்றது - அந்நான்கின் கூட்டத்தை சேனை - ஊறஞ்சிய விடத்தே வெல்லுதல் கூடாமையால் ஊறஞ்சாவென்றும், அச்சேனை ஒழிந்த அங்கங்களுக்கும் அரசனுக்கும் காவலாகலால் - வெறுக்கையுளெல்லாந்தலையென்றும் சொல்லினர். (௧)

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத் ..........*
தொல்படைக் கல்லா லரிது..........*

(இ-ள்.) தொலைவிடத்து - (தான்)சிறிதாகியவிடத்தும் - உலைவிடத்து - (அரசனுக்குப்போரினிடத்து) அழிவுவந்தால் - ஊறு - (தன்மேலே) காயம்படுதற்கு - அஞ்சா - அஞ்சாது நின்றுதாங்கும் - வன்கண் - சௌரியமானது - தொல்படைக்கல்லால் - அவன் முன்னோனாத்தொடங்கிவருஞ் சேனைக்கல்லாமல் - அரிது - உண்டாகாது. (எ-று)(கருத்து.) அஞ்சாதுநின்று தாங்குஞ் சௌரியமானது அரசன் பழைய சேனைக்கல்லது மற்றவர்க்கல்லை என்பதாம். ※ இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.— மூலப்படை - கூலிப்படை - நாட்டுப்படை - காட்டுப்படை - துணைப்படை - கைப்படை - எனப்படுகிற அறுவகைப்படைகளுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படையாதலால் அரசன் அதற்குவேண்டுபவைகளைக்கொடுத்து அதைக்காப்பாற்றுகவென்பது கருத்து. (௨)

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை ..........*
நாக முயிர்ப்பக் கெடும்..........*

(இ-ள்) எலிப்பகை - எலிகளாகிய பகைதிரண்டு - உவரி - கடல்போல் - ஒலித்தக்கால் - இரைந்தால் - என்னாம் - (பாம்புக்கு) என்னதுன்பம்வரும்.— நாகம் - அப்பாம்பு - உயிர்ப்ப - மூச்செறிந்தவளவிலே - கெடும் - (அதுதானே) கெடும். (எ-று.)(கருத்து) எலிகள் கூடிச் சத்தித்தால் பாம்புக்கென்ன துன்பம்வரும் பாம்புமூச்சு விட்டவளவில் எலிகளழியும் என்பதாம். ※ இத்தொழி லுவமத்தால் திரட்சிபெற்று

ம். (வீரரல்லாதார் பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான் அவன் எழும்பினவளவிலே அவர் கெடுவரென்பது தோன்ற நின்றமையால்- இது பிறிதுமொழிதலணி.) வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனை ஆளுதல் நல்லதென்பதாம் [இவைமூன்று பாட்டாலும் முறையே அரசனுக்குப் படையானது மற்றையங்களுட் சிறந்ததென்பதும், அதனுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதும், அதனுள்ளும் வீரன் சிறந்தவனென்பதும், சொல்லப்பட்டன. (௩)

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த ............... *
வன்க ணதுவே படை ............... *

(இ-ள்.) படை - (அரசனுக்குப்) படையாவது— அழிவின்று- (போரினிடத்துக்)கெடுதலில்லாமல்—அறைபோகாதாகி (பகைவராலே கீழறுக்கப்படாததாகி-வழிவந்த-பழைமையாகவந்த - வன்கணதுவே- சௌரியமுடையதே (எ-று.) (கருத்து) போரிற்கெடுதலில்லாமல்பழைமையாகவந்தசௌரியமுடையதேயரசனுக்குப்படையாம் என்பதாம். ❁ அழிவில்லாமையால் மறமானங்களுடைமையும், அறைபோகாமையால் அரசனிடத்து அன்புடைமையும், பெறப்பட்டன. (௪)

கூற்றுடன்று மேல்வரினுங் கூடியெதிர் நிற்கு ............... *
மாற்ற லதுவே படை ............... *

(இ-ள்.) படை-சேனையானது-கூற்று-கூற்றுவன்-உடன்று - கோபித்து-மேல்வரினும்-தன்மேல்வரினும்-கூடி-மனமொத்து- எதிர்நிற்கும் எதிர்நின்றுதாங்கும்- ஆற்றலதுவே- வலிமையையுடையதேயாம். (எ-று.) (கருத்து) இயமன்கோபித்து மேலிட்டுவரினுமெதிர்நின்றுதாங்கும் வலிமையுடையதே படையாம் என்பதாம். ❁ மிகப்பலர் மனமொத்தற்குக் காரணம் அரசன்மேலன்பு, உம்மை-சிறப்பும்மை. (௫)

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற ............... *
மெனநான்கே யேமம் படைக்கு ............... *

(இ-ள்.) மறம்-சௌரியமும்-மானம் - மானமும் - மாண்ட-மாட்சிமைப்பட்ட-வழிச்செலவு- (முன்வீரர்சென்ற) நல்வழியிலேசெல்லுதலும்-தேற்றம் - (அரசனால்) நம்பப்படுதலும் - எனநான்கேள இந்நான்கு குணமுமே - படைக்கு-சேனைக்கு - ஏமம்-அரணாம்.எ-று.) (கருத்து) சௌரியமும், மானமும், நல்வழிச்செல்கையும், நம்பிக்கையும், ஆகியவிந்நாற்குணமுஞ்சேனைக்காகுதும்என்பதாம். ❁ இவைகளால் முறையே பகைவரைச் சீக்கிரத்திலே கொன்றுநிற்

லகையும், அரசனுக்குத்தாழ்வு வாராமற்காத்தலும், தோற்பவர்மேற் படையெறியாமை முதலியவும், அறைம்போகாமையும், ஆகியசெய் கைகள்பெறப்பட்டன. இச்செய்கையோர்க்குப் பகைவர் நெருங்க மாட்டாராகலின் வேறரண் வேண்டாமென்பதாம். (௬)

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த.................*
போர்தாங்குந் தன்மையறிந்து ...... ...... .... ...... *

(இ-ள்) தானை-சேனையாவது- தலைவந்த - (பகைவராலே வகுக்கப்பட்டுத்) தன்மேல்வந்த-போர்-(படையின்) போரை- தாங்குந்தன்மை-விலக்கும்வகுப்பை - அறிந்து - அறிந்து(வகுத்துக்கொண்டு)-தார்-(அவரது)தூசிப்படையை - தாங்கி (தன்மேல்வாராமல்)தடுத்து-செல்வது-(தான்அதன்மேலே) செல்வதேயாம். (எ-று.)(கருத்து) தன்மேல்வந்தபோரை விலக்கும்வகுப்பை யறிந்துபகைவர் தூசிப்படையைத் தடுத்துச்செல்வதே படையாம் என்பதாம். ❁ படைவகுப்பாவது- வியூகம். அதுஎழுவகையுறுப்புக்களையுடையதாய் வகையால் நான்காய்-விரியால் முப்பதாம். இவைகளின் பெயரும் இலக்கணங்களும் இங்கேசொன்னால் விரியும் அவையெல்லாம் வடநூல்களுட்கண்டு கொள்க. [இவ்வநான்குபாட்டாலும் படையதிலக்கணம் சொல்லப்பட்டது.] (௭)

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை.................*
படைத்தகையாற் பாடு பெறும்......................... *

(இ-ள்.) தானை-சேனை- அடற்றகையும் - (பகைமேலேதான்சென்று)போர்செய்யுஞ்சௌரியமும் - ஆற்றலும்- (அதுதன்மேல்வந்தால்) பொறுக்கும்வலிமையும்- இல்லெனினும்-இல்லையாயினும்-படைத்தகையால்-தனதுதோற்றப்பொலிவாலே - பாடு - பெருமையைபெறும்-அடையும். (எ-று) (கருத்து) சேனையானது சௌரியமும் வலிமையுமில்லையாயினும் பொலிவினாலே பெருமையையடையுமென்பதாம். ❁ இல்லெனினுமெனவே அவசியம் அவைகள்வேண்டுமென்பது பெறப்பட்டது. தோற்றப்பொலிவாவது - அலங்கரிக்கப்பட்டதேர்யானை குதிரைகளுடனும் படாகை கொடி குடை பலவாத்தியம் காகளமுதலானவைகளுடனும் அணிந்து தோன்றும் அழகு பாடு-கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை. (௮)

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு.................*
மில்லாயின் வெல்லும் படை...... ......... ............*

(இ-ள்.) சிறுமையும்-(தான்தேய்ந்து) சிறிதாகலாலும்-செல்லாத்துனியும்-(மனத்திலிருந்து) நீங்காதவெறுப்பும் - வறுமையும்-தரித்

திரமும்-இல்லாயின் -(தனக்கு) இல்லையாயின்-படை- சேனையானது
வெல்லும்- பகையை) வெல்லும்.(எ-று.) (கருத்து) சிறிதாகவும்வெறுப்பும் வறுமையும் இல்லாவிடின் சேனையானது பகையை வெல்லும் என்பதாம். ❋ விட்டுப்போதலும், வறுமைபடைதலும், அரசன் பொருள் கொடாமையால் வருவன. நீங்கா வெறுப்பு மகளிரைவௌவலிழிவாயின செய்தல்முதலானவைகளால் வருவது. இவையுள்ளவிடத்து அவனிடத்து அன்பில்லாமல் உற்றுப்போர்செய்யாமையின் இல்லாயின் வெல்லுமென்றார். (அ)

நிலைமக்கள் சாலவுடைத்தெனினுந் தானை ........ ❋
தலைமக்களில்வழி யில் ........ ❋

(இ-ள்.) நிலைமக்கள்-(போரினிடத்து) நிலையையுடைய வீரரை-சாலவுடைத்தெனினும் - மிகவுடைய தாயினும் - தலைமக்கள்- (தனக்குத்) தலைவராகியவீரர் - இல்வழி-இல்லாவிடத்து- தானை-சேனை-இல்-இல்லாது. (எ,று.) (கருத்து) சேனையானது வீரரை மிகவுடைத்தாயினும் படைத்தலைவரில்லாவிடத்துப்போரிலில்லாதென்பதாம் ❋ சேனாபதிகள் நிலையுடையவரல்லாமல் போவாராயின் காண்போரில்லெனப் போர்செய்யாமல் தாமும்போமென்றதற்கு-தலைமக்களில்வழியில்லென்றார். [இவைமூன்று பாட்டாலும் முறையே படைத்தகைமையாலும், அரசன்கொடைத்தாழ்வுகளாலும், தலைவரில்லாமையாலும், தாழ்வுசொல்லப்பட்டது.] (௯)

## ௭௮-ஆம்-அதி-படைச்செருக்கு.

அஃதாவது-அச்சேனையினது மறமிகுதியாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை ........ ❋
முன்னின்று கன்னின் றவர் ........ ❋

(இ-ள்.) தெவ்விர்-பகைவரே - என்-என்னுடைய—ஐ-முன்- தலைவனெதிர்-நின்று-(போரேற்று) நின்று-கன்னின்றவர் - (அவன்வேல்பட்டுவீழ்ந்து) கல்லினிடத்தே நின்றவீரர்- பல-பலராவர் - (நீர்அதனிடத்து நில்லாமல்உம்முடலியேநிற்கையைவேண்டில்)-என்-என்னுடைய-ஐமுன் - தலைவனெதிர்- நில்லன்மின் - (போரேற்று) நில்லாதேயுங்கள். (எ-று.) (கருத்து)பகைவரேயென்றலைவனெதிர்நின்றுவெ

ல்லர்து இறந்து கல்லாக்நாட்டப்பட்டவர் பலராவர் நீங்க ளுயிரோ
டிருக்க விரும்பினால் என்றலைவர்முன் னில்லாதீர்கள் என்பதாம்.❋
கல்-போரில்வீரர் இறந்தவிடத்து அவருருவஞ்செய்து நட்டப்படுதல்
ஒருவீரன் தன்மறம் அரசன்மேல் வைத்துச் சொல்லிய படி. [இப்
பாட்டு நெடுமொழிவஞ்சி.] (௧)

கானமுயலெய்த வம்பினில் யானை... ..... ....... ... .....*
பிழைத்தவே லேந்த லினிது ... ........ .......... .......*

(இ-ள்.) கானம்-காட்டில் ஓடுகிற-முயல் - முசலை-எய்த- (தப்பாம
ல்(எய்த-அம்பினின் - அம்பை ஏந்துதலைப்பார்க்கிலும்- யானை-(வெ
ளிநிலத்திலேநின்ற) யானையை- (எறிந்து) -பிழைத்தவேல்- தப்பிய
வேலை-ஏந்தல்-தாங்குதல் -இனிது-நன்று . (எ,று.) (கருத்து)முயலை
யெய்த அம்பை யேந்துதலைப்பார்க்கிலும் யானையையெய்து தப்பி
யஅம்பை யேந்துதல் நல்லது என்பதாம்.❋ கானமுயலென்றதனா
ல்-வெளிநிலமென்பதும்; பிழைத்தவே லென்றதனால் - தப்பாமையெ
ன்பதும், முயற்குத்தக எய்தவென்றதனால்- யானைக்குத்தகவெறிதலு
ம்,வருவிக்கப்பட்டன.— இதுபகையரசனது சேனையோடு சண்டை
செய்து அது தோற்றுப் பின்னிடக்கண்டு நாணிப்பின் அவ்வரசன்
மேற்செல்லலுற்ற ஒருவீரனது சொல்லு. (௨)

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா..... ......*
லூராண்மை மற்றத னெஃகு... ............ ..........*

(இ-ள்.) தறுகண்-(பகைவரிடத்தே முகங் கொடாமற் செய்கிறம
றம்-பேராண்மை- மிகுந்தவாண்மையாகும்.- ஒன்றுற்றக்கால்-(அவ
ர்க்கு)ஒருதாழ்வுவந்ததாயின்- (அதுதீர்த்துக் கொள்ளுதற் பொரு
ட்டு)-ஊராண்மை-(முகங்கொடுத்து) உபகாரியாந் தன்மை-அதன்-
அதற்கு-எஃகு - கூர்மையாகும்.-என்ப-என்று (நூலோர்)சொல்லு
வர். (எ,று.) (கருத்து) பகைவரைவெல்லு மறமானது மிகுந்தவா
ண்மையாகு மப்பகைவர்க்குத் தாழ்வுவந்த காலத் ததவுதல்கூர்
மையாகும் என்பதாம்.❋ மற்று-அசை. [இவ்வயிரண்டு பாட்டு
ம் தழிஞ்சி.] (௩)

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்......... ...... .....*
மெய்வேல் பறியா நகும் ........ ... ........... ... ...*

(இ-ள்.) கைவேல்-(தன்) கைப்படையாகிய வேலை- களிற்றொடு-
(தன்மேல்வந்த)யானையோடு—போக்கி - எறிந்துவிட்டு- வருபவன்-
(வருகின்ற யானைக்கு வேல்தேடித்) திரிபவன்-மெய்வேல்-தன்மார்பி
லிருந்தவேலை (கண்டு) - பறியா-பிடுங்கி-நகும்- மகிழ்வான் (எ-று.)
(கருத்து) கைவேலை யானைமே லெறிந்துவருபவன் தன்மெய்வேலை

ப்பிடுங்கி மகிழ்வான் என்பதாம். ※ களிற்றொடுபோக்கல்- களிற்றினுயிரைக்கொண்டுபோம்படிவிடுதல் —மகிழ்ச்சி - தேடியதுஅடைதலால்.—இதனுள்-களிற்றையல்லது எறியானென்பதும்,கோபமிகுதியால் வேல்மார்பிலே புதைந்ததை அறிந்திலனென்பதும்,பின்னும்போர் மேல் விரும்பினனென்பதும், பெறப்பட்டன. [இது நாட்டுவிலாட்டு.] (௪)

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி... .... *
ணோட்டன்றோ வன்க ணவர்க்கு ...... ... ... ...... ......*

(இ-ள்.) விழித்தகண்-(பகைவரைக்) கோபித்துப்பார்த்தகண்-வேல்கொண்டு-(அவர்) வேலைக்கொண்டு - எறிய-எறிய-அழித்து -(அதற்குப்பொறுமல் அப்பார்வையை அழித்து-இமைப்பின்-இமைக்குமாயின்-(அவ்விமைத்தல்) - வன்கணவர்க்கு- வீரர்க்கு-ஓட்டன்றோ தோற்பல்லவா.(எ-று.) (கருத்து)கோபித்துப்பார்த்தகண்வேல்கொண்டெறிய இமைக்குமாயின் தோற்பல்லவா என்பதாம். ※ அக்கோபப்பார்வை யிமைத்தலும் போரினிடத்து இகழ்ச்சியென்றறிந்து அதுவும் செய்யானென்பதாம். (௫)

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்..... .........*
வைக்குந்தன் னாளை யெடுத்து ... .................. .........*

(இ-ள்.) (வீரனானவன்)-தன்னாளை - தனக்குக்கழிந்ததினங்களை - எடுத்து-(எடுத்தெண்ணி)-(அத்தினங்களுள்)-விழுப்புண்- பெருங்காயங்கள்-படாதநாளெல்லாம் - படாததினங்களையெல்லாம் - வழுக்கினுள்-பயன்படாது கழிந்ததினங்களுள்ளே- வைக்கும் - வைப்பான். (எ-று.) (கருத்து) சுத்தவீரனானவன் போர்செய்யப்படாதநாளை வீணாளென்றெண்ணுவான் என்பதாம். ※ விழுப்புண்முகத்திலும்,மார்பிலும், பட்டபுண். போர்பெற்றிருக்கவும்,அதுபெறாதநாள்களோடுகூட்டுவனென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் ஊறஞ்சாமை சொல்லப்பட்டது] (௬)

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார் .... .... ...... ......... *
கழல்யாப்புக் காரிகை நீர்த்து ....... ......... ...............*

(இ-ள்.) சுழலும்-(பூமியைச்) சூழ்ந்துநிற்கும் - இசை- புகழை-வேண்டி-விரும்பி -வேண்டாவுயிரார் உயிர்வாழ்தலை வேண்டாதவீரர்-கழல்-வீரக்கழலை - யாப்பு-கட்டுதல்-காரிகைநீர்த்து அலங்காரகுணமுடையதாம். (எ-று.) (கருத்து) புகழைவிரும்பி யுயிரைவிரும்பாதவர் வீரக்கழலைக்கட்டுத லலங்காரமாம் என்பதாம். ※ பூமியைச் சூழுமெனவே அப்புகழின் பெருமை பெறப்பட்டது.—

அப்படிப்பட்டவீரர் வானுலகமும் புகழும் எளிதிலே அடைவரா கலால் ஆபரணமாவது அக்கழலேயென்பதாம். (எ)

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன் ........................ ..........*
செறினுஞ்சீர் குன்ற லிலர்.............................. ..........*

(இ-ள்.) உறின்-(போர்) பெறின்-உயிர்-(தம்) முயிர்ப்பொருட்டு அஞ்சா-அஞ்சாமல் (அதன்மேற் செல்லும்) - மறவர் - வீரர்—இ றைவன்-(தம்) மரசன்-செறினும்-(அதுவ்வண்டா மென்று) கோபி க்கினும்-சீர்குன்றல் - அவ்வீரமிகுதி குறைதல் - இலர் - இலராவர். (எ-று.) (கருத்து) தம்முயிர்க்கஞ்சாது போர்செய்யும் வீரர்தம்ம ரசன் கோபிக்கினும் வீரங்குறையார் என்பதாம். ❋வீரர்போர்பெ ற்று அறியாமையால் அதுமபற்ருல் அரசன்தடுப்பினும் நில்லா ரெ ன்பதாம். (அ)

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே........................*
பிழைத்த தொறுக்கிற் பவர் ... ........... ...........*

(இ-ள்.) இழைத்தது - (தாம்) சொல்லியசபதம் - இகவாமை-தப் பாமற்பொருட்டு-சாவாரை - (போய்ச்) சாகவல்லவீரரை-பிழைத்த து-(அது) தப்பியவிதம் (சொல்லி)ஒறுக்கிற்பவர் - இகழ்தற்குரிய வர்—யார்-யாவர். (எ-று.) (கருத்து) சபதப்படி போரிற்சாகும்வீர ரையிகழ்பவர்யார்என்பதாம். ❋இழைத்தல்- இன்னதுசெய்யேனுகி ல்இன்னனுகுகவெனத்தான்வகுத்தல் சொல்லியென்பது-வருவிக்கப் பட்டது. சபதமுடிக்கப்புகுந்துமுன்னேஇறந்தாலும்தொலைவில்லா மையால் அது முடித்தவராவரெனச்சாதற் சிறப்புச்சொல்லியபடி.

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா.......... .......*
டிரந்துகோட் டக்க துடைத்து.................................*

(இ-ள்.) (தமக்குச்செய்த நன்றிகளை நினைத்து)-புரந்தார்-ஆண்ட வரசாது-கண் - கண்கள் - நீர்மல்க- நீர்பெருகும்படி — சாகிற்பின்- (போரிலே) சாகப்பெறின்-சாக்காடு - அச்சாவு- இரந்து-இரந்தாயி னும்-கோட்டக்கது - கொள்ளுந் தகுதியை—உடைத்து - உடைய து,(எ-று.) (கருத்து) வீரர்கள் அரசர்கண்கள்நீர் ததும்பப்போரிலி றந்தால் அவ்விறத்தல் கொள்ளத் தக்கது என்பதாம். ❋ சுற்றத்தா ர்அழ இல்லிலிடத்தும் [illegible]லேசாவோர் பழவினைப்பயனை அடை தலால்-அப்போதை வினை[illegible] உலகத்தை அடையும் சாவை-இ ரந்து கோட்டக்க துடைத்தென்றார். [இவைநான்குபாட்டாலும்உ யிர்காவாமை சொல்லப்பட்டது.] (ம)

# ௭௯-ஆம்-அதி-நட்பு.

இனிப்படைபோல் அரசனுக்குத் தொழி லிடத்து உதவுவதா கிய நட்பை ஐந்ததிகாரத்தால் விதிமுகத்தாலும், பன்னி ரண்டதிகாரத்தால் எதிர்மறைமுகத்தாலும், சொல்லத் தொட ங்கி விதிமுகவதிகார மைந்தினுள்ளும் முதலிலே நட்புச் சொல்லுகின்றார்.

அஃதாவது இன்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்.... ... ....... ........*
வினைக்கரிய யாவுள காப்பு ... ........ ...... ............*

(இ-ள்.) நட்பின்-நட்புப்போல்-செயற்கரிய-சம்பாதித்துக்கொள் ளுதற்கு-அரியபொருள்கள்-யா-எவைகள்,—உள-இருக்கின்றன.(ச ம்பாதித்துக்கொண்டால்),— அதுபோல்-வினைக்கரிய-(பகைவர்செ ய்யுந்)தொழிலுக்குப் (புகுதற்கு) அரிய-காப்பு- காவலானவை-யா-எவைகள்-உள-இருக்கின்றன. (எ-று.) (கருத்து) நட்பைப்போல்ச் சம்பாதித்தற் கரியபொருளெவையிருக்கின்றன என்பதாம். ※நட் புச்செய்தற்கு ஆவாரைப்பெறுதலும், பெற்றால் செய்யும்உபாயமு ம்,செய்தால் வேறுபடாமல் நிற்றலும், முதலானவை அருமையா கலால்-நட்புப்போல் செயற்கரியன வில்லையென்றும், செய்தால்ப கைவர் அஞ்சிப் போர்தொடங்காராதலால்- அதுபோல் போர்வா ராமற் காத்தற்கு அரியகாவலில்லையென்றும், சொல்லினார்.— நட்பு இயற்கை, செயற்கை என இருவகைப்படும். அவைகளில் இயற்கைந ட்பு பிறப்புமுறையா லாகியதும், தேசமுறையா லாகியதும், என இருவகைப்படும். அவைகளுள் முன்னையது சுற்றமாகலால் சுற்ற ந்தழாலில் அடங்கிற்று. மற்றதுபகையிடையிட்டதேயத்ததாகலால் துணைவலியெனவலியறிதலுள் அடங்கிற்று.[இனி இவ்வதிகாரத்திலே சொல்லப்படுவது-முன்செய்தஉதவிபெற்றுவருவதாகியசெயற்கை நட்பேயாகலால் அதன் சிறப்பு இதனால் சொல்லப்பட்டது.] (௧)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்.................*
பின்னீர பேதையார் நட்பு ........................*

(இ-ள்.) நீரவர்-அறிவுடையவரது - கேண்மை- நட்புக்கள்-பிறை -பிறைபோல் - நிறைநீர-(நாடோறும்) நிறையுந்தன்மையினவாம்- பேதையார்-அறிவில்லாதவரது - நட்பு-நட்புக்கள்—மதி - (நிறைந் த)சந்திரன்போல் - பின்னீர-பின்னேநாடோறும் குறையுந்தன்மை

றனவாம். (எ-று.)[கருத்து]அறிவுடையோர்நட்பு இளம்பிறைபோல்வளரும். அறிவில்லார்நட்பு நிறைசந்திரன்போல் குறையும்என்பதாம். ❁ இனிமைபற்றி நீரவென்றார். அறிவுடையவர் தங்களிலே செய்தநட்பு முன்சுருங்கிப் பின்பெருகற்கும், அறிவில்லாதவர்தங்களிலே செய்தநட்பு முன்பெருகிப் பின்சுருங்கற்கும்,காரணம்-தம்முள்முன்னறியாமையும் பின்னறிதலுமாம். (௨)

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்........ ✻
பண்புடை யாளர் தொடர்பு......................... ✻

(இ-ள்.) பண்புடையாளர் - நற்குணமுடையமக்கள் - தொடர்பு-(தங்களிலேசெய்த)நட்பு-பயிறொறும் - பழகுந்தோறும்-(அவருக்கு இன்பஞ்செய்தல்)—நூல் - நூற்பொருள் - நவிறொறும் - கற்குந்தோறும்- நயம்போலும் (கற்பவர்க்கு) இன்பஞ் செய்தல்போலும். (எ,று.) (கருத்து) நற்குணமுடையவர் நட்புப்படிக்குந்தோறு நூல்பயன்கொடுத்தல் போலாம் என்பதாம். ❁ இரண்டிலும் ஒரும்பாடுக்கு ஒருபோது மிகு மென்பதாம். [இவ்வை யிரண்டுபாட்டாலும் அச்சிறப்புக்கு ஏது சொல்லப்பட்டது.] (௩)

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்........ ✻
மேற்சென் றிடித்தற் பொருட்டு...................... ✻

(இ-ள்.) நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல்—(நகைசெய்தற்கு) ஏற்றவைசொல்லி - நகுதற்பொருட்டு - நகைசெய்தற்பொருட்டு-அன்று - அல்ல.—மிகுதிக்கண்-(அவர்க்கு) வேண்டாதசெய்கை (உண்டானவிடத்து) - மேற்சென்று-முற்பட்டு-இடித்தற்பொருட்டு-கண்டித்துப் புத்திசொல்லுதற்பொருட்டு. (எ-று.) (கருத்து)நகைக்கும்பொருட்டல்ல சிநேகஞ்செய்தல் புத்தி சொல்லும்பொருட்[டு] என்பதாம். ❁ பழியும் பாவமுந் தருஞ்செய்கை-தன்பின் [...]ல்பற்றி வேண்டப்படுவ தல்லாமையால் - அதனை மிகுதியெ[ன்]றும், அது செய்தற்குமுன்னே திருப்பவேண்டுதலால்- மேற்சென்றென்றும், இனியசொல்லுக்குத் திரும்பாமையால்- இடித்தற்பொருட்டென்றும், சொல்லினர். [இதனால் நட்பின்பயன் சொல்லப்பட்டது.] (௪)

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா........ ✻
னட்பாங் கிழமை தரும்............................ ✻

(இ-ள்.) (ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு)-புணர்ச்சி- ஓரிடத்திலிருத்தலும்-பழகுதல்- பலதரங்கண்டுபேசலும்-வேண்டா-வேண்டுவதில்லை-உணர்ச்சிதான் - (இருவர்க்கும்) ஒத்த அறிவுதானே - ந-

யாம்-சிநேகமாம் - கிழமை-உரிமையை-தரும்-கொடுக்கும்.(எ-று.) (கருத்து) இருவர்க்குமொத்த வறிவே சிநேகந்தருமென்பதாம்.❊ இவையில்லையாயினும் ஒருவனை யொருவர் சமமாக வறிதலே உடனுயிர் நீங்குதற்குரிய நட்பை உண்டாக்குமென்பதாம். [நட்பிற்கு-புணர்ச்சி-பழகுதல் - உணர்ச்சியொத்தல்- என்கிற காரணமூன்றுள்ளும் பின்னது சிறப்புடைய தென்பது இதனால் சொல்லப்பட்டது.] (௫)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத் ......... ............ ❊
தகநக நட்பது நட்பு ...... ... ... ....... ... ... ... ... ❊

(இ-ள்.) முகநக-(கண்டவிடத்து) முகமாத்திரமே மலரும்வகை நட்பது - சிநேகிப்பது - நட்பன்று- சிநேகமன்று.— நெஞ்சத்தகநக-(அன்பால்)உள்ளமும்மலர - நட்பது - சினேகிப்பதே - நட்பு-சினேகமாம். (எ-று.) (கருத்து) முகமலர்ந்து சிநேகிப்பது சிநேகமல்ல, அகமலர்ந்து சிநேகிப்பதே சிநேகம் என்பதாம். ❊ நெஞ்சத்தகமுமென்னுமெச்சவும்மை தொக்குநின்றது. அதனால்இரண்டும் ஒருசேரமலரவேண்டுமென்பது பெற்றாம். (௬)

அழிவினவை நீக்கி யாறுய்த் தழிவின்க ...... ... ... ... ❊
ணல்ல லுழப்பதா நட்பு........................... ❊

(இ-ள்.) நட்பு- (ஒருவனுக்கு)நட்பாவது- அழிவின் - அழிவைத் தருகிற-அவை-தீயவழியை —நீக்கி- விலக்கி - ஆறு - நல்வழியை— உய்த்து-நோக்கி-அழிவின்கண்-(ஊழினாலே)கேடுவந்தவிடத்து-அல்லல்-அத்துன்பத்தை-உழப்பதாம்- உடனிருந்து அனுபவிப்பதே (எ-று.) (கருத்து) நட்பாவதுதீயவழியைநீக்கி நல்வழியைநோக்கித்துன்பத்தை யனுபவிப்பதாம் என்பதாம். ❊ ஆறெனவருகின்றமையால் அழிவினவை தீயவழியெனப்பட்டது, (௭)

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே .... ...... ...... ❊
யிடுக்கண் களைவதா நட்பு ......... ........................ ❊

(இ-ள்.) நட்பு- நட்பாவது - உடுக்கையிழந்தவன்-(சபையினிடத்து)ஆடைகுலைந்தவனுக்கு - கைபோல- கைசென் றுதவுதல்போல- (சினேகிக்கப்பட்டவனுக்கு) -ஆங்கே-அப்பொழுதே- இடுக்கண்-துன்பத்தை-களைவதாம்-நீக்குவதாகும். (எ-று.) (கருத்து) ஆடைகுலைந்தவன்கைபோலத் துன்பத்தை நீக்குவதே நட்பாம்என்பதாம்.❊ ஆடைகுலைந்தவனுக்குக் கை எப்படியோ அப்படியே ஆபத்தை அடைந்தவனுக்கு நட்பாளன் மனத்தினும் முற்பட்டுஉதவிசெய்துதுன்பம்ஒழிப்பானென்பதாம்.நட்பினன்செயல்நட்பிலேற்றப்பட்டது

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி........ *
ஒல்லும்வா யூன்று நிலை ............................ *

(இ-ள்.) நட்பிற்கு-சிநேகத்திற்கு-வீற்றிருக்கை-அரசிருக்கை-யாதெனின்-யாதென்றால்-(அது) கொட்பின்றி-(எந்நாளும்) வேறுபடாமல்-ஒல்லும்வாய்-கூடுமிடத்தெல்லாம்-ஊன்றுநிலை-(அறம்பொருள்களிலே தளராமல்) தாங்குந்திண்மை. (எ-று.) (கருத்து) நட்பிற்கரசிருக்கை யாதென்றால் எந்நாளுந் தாங்குந் திண்மையாம் என்பதாம். ※ ஒருநாளும் வேறுபடாமல் கூடுமிடத்தெல்லாம் மறுமை யிம்மைகளுக்கு உறுதியாகிய அறம்பொருள்களிலே தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சிநீக்கி நிறுத்துதற்குமேல் ஒருசெயலும் இல்லாமையால் அதனை நட்பிற்கு முடிந்த எல்லை என்றார். (௯)

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று ................. *
புனையினும் புல்லென்னு நட்பு .......................... *

(இ-ள்.) இவர்-இவர்-எமக்கு-எங்களுக்கு-இனையர் - இவ்வளவன்பினர்.-யாம்-நாங்கள்-இன்னம்- (இவர்க்கு) இவ்வளவன்பினேம்.- என்று-என்று-புனையினும்-(ஒருவரை)ஒருவர் சிறப்பிக்கினும் - நட்பு-சிநேகம்-புல்லென்னும்-சிறிதாய்த்தோன்றும். (எ-று.) (கருத்து) இவரெங்களுக் கிவ்வள வன்பினர் நாங்களிவர்க்கிவ்வள வன்பினரென்று சிறப்பிக்கிற் சிநேகஞ்சிறிதாம் என்பதாம். ※ தாம் அவர் என்கிற பேதமில்லாதிருந்தும் சிறப்பித்துச் சொல்லில்போதம்உண்டாகலால்-புல்லென்னுமென்றார். [இவை ஐந்துபாட்டாலும்நட்பினதிலக்கணம் சொல்லப்பட்டது.] (௰)



## ௮௰-ஆம்-அதி-நட்பாராய்தல்.



அஃதாவது - முன் சொல்லப்பட்ட இலக்கணமுடையவரை ஆராய்ந்தறிந்தே சிநேகிக்க வேண்டுதலால் அவரை ஆராயுந்திறமும், அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்................ *
வீடில்லை நட்பாள் பவர்க்கு.............................. *

(இ-ள்.) நட்பாள்பவர்க்கு - நட்பைவிரும்பி அதனிடத்தேநிற்பவர்க்கு-நட்டபின்-(ஒருவனோடு) நட்புச்செய்தபின் - வீடு-(அவனை) விடுதல்-இல்லை-உண்டாகாது-(ஆதலால்)- நாடாது - ஆராயாமல்-ந

ட்டவின்-சினேகித்தல்போல்-கேடு-கேடுதருவது - இல்லை-(வேறே)இல்லை. (எ-று.) (கருத்து) சிநேகிப்பவர்க்குச் சிநேகித்தபின் சிநேகத்தைவிடுதலில்லை.ஆராயாமல்சிநேகித்தல்போற் கெட்டைத்தருவதொன்றில்லை என்பதாம். ✲ ஆராய்தல் - குணநன்மை செயற்கை தன்மைகளை - கேடுதருவதைக் கேடெனலால்ஆகுபெயர்.—சிநேகித்தால்-தாம் அவரொன்றும்வேற்றுமை இல்லாமையால் - விடில்லையென்றும் அவ்வொற்றுமையால் அவரிடத்துப் பழிபாவங்கள், தம்மவையாகலால் இருமையும் கெடுவரென்பது நோக்கி - நாடாது நட்டவிற் கேடில்லையென்றும் சொல்லினார். (௧)

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை...✲
தான்சாந் துயரந் தரும்.........................✲

(இ-ள்.) (குணமுஞ்செய்கையும் நல்லனென்பதும் அல்லனென்பதும்) - ஆய்ந்து- (பலகால்)ஆராய்ந்தும்-ஆய்ந்து-பலவழியால் ஆராய்ந்தும்-கேண்மை-(ஒருவனோடு)நட்பை - கொள்ளாதான் - கொள்ளாதவன்-கடைமுறை-முடிவில்-தான்-தான்-சாம் - சாவதற்கு ஏதுவாகிய- துயரம் - துன்பத்தை - தரும்(தானே) விளைத்துக்கொள்ளுவான். (எ,று,) (கருத்து) ஆராய்ந்துகொள்ளாதவன் சிநேகஞ் சாவதற்கேதுவான துன்பந்தரும் என்பதாம். ✲ தீயகுணமும் தீயசெயலுமுடையவனோடு நட்புக்கொள்ளின் அவனுக்குவரும் பலகைமையெல்லாம் தனக்கும்வந்து பின் அவைகளால் இறந்துவிடுவனென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் ஆராயாத விடத்துப்படும் இழுக்குச்சொல்லப்பட்டது. (௨)

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா.................✲
வினனு மறிந்தியாக்க நட்பு .............................✲

(இ-ள்.) குணனும்-(ஒருவனது) குணத்தையும் - குடிமையும் குடிப்பிறப்பையும்-குற்றமும்-குற்றத்தையும்- குன்றாவினனும்-குறைவற்ற சுற்றத்தையும்- அறிந்து - (ஆராய்ந்)தறிந்து-நட்பு-சிநேகம்-யாக்க-(அவனோடு) செயக்கடவன். (எ-று.)(கருத்து.) குணத்தையுங் குடிப்பிறப்பையுங் குற்றத்தையுங் சுற்றத்தையு மறிந்துநட்புச்செய்யக்கடவன் என்பதாம். ✲ குற்றமில்லாதவர் உலகத்திலே இல்லாமையால் பொறுக்கத்தக்க குற்றமுடையராயிருந்தால் அவர் நட்புவிடக் கூடாதென்பதற்கு குற்றமுமென்றும், சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பாளரோடும் கட்டுண்டுவருதலால்- குன்றுவினனுமென்றும், விடப்பட்டால்- தங்குறைபாமென்பதற்கு- அறிந்தியாக்கவென்றும், சொல்லினார். (௩)

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்...................... *
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு ... .......................... *

(இ-ள்.) குடிப்பிறந்து- உயர்ந்தகுடியிற்பிறந்து - தன்கண் - தன்னிடத்து- பழி(உலகர்)சொல்லும்பழிக்கு- நாணுவானை - அஞ்சுவானை-கொடுத்தும்- (சில) கொடுத்தாயினும் - நட்புக் கொளல்வேண்டும்-சிநேகங்கொள்ளவேண்டும். (எ-று.) (கருத்து) உயர்குலத்திற்பிறந்து பழிக்கஞ்சுபவனைப் பொருள் கொடுத்துஞ் சிநேகங் கொள்ளக்கடவன் என்பதாம். ❊ குடிப்பிறப்பால் தான்பிழை செய்யாமையும், பழிக்கு அஞ்சலால் பிழைபொறுத்தலும், பெற்றும். இவ்விரண்டுமுடையவனைப் பெறுதல் அருமையாதலால் அவன்கட்பவிலை கொடுத்தும் கொள்கவென்பதாம். (ச)

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய...................... *
வல்லார்நட் பாய்ந்து கொளல்..... .......................... *

(இ-ள்.) அல்லது - (தாம்) உலகநடையல்லாததை (செய்யநினைக்கின்)- அழச்சொல்லி - அழும்வகைசொல்லி (விலக்கியும்)- (செய்தக்கால்)- இடித்து - (பின்னும்செய்யாவகை) நெருக்கியும் - வழக்கு- அவ்வுலகநடையைச் (செய்யாவிடத்து)- அறியவல்லார்- செய்விக்கவும்-வல்லவரை-ஆய்ந்து-ஆராய்ந்து-நட்பு-சிநேகம் - கொளல்-கொள்ளக்கடவர். (எ-று.) (கருத்து) ஒருவன் பாவங்களைச்செய்ய நினைத்தால்அழும்படிசொல்லி விலக்கியும் பாவங்களைச் செய்தால் செய்யாதிருக்க நெருக்கியும் உலகநடைசெய்விக்க வல்லவரைச் சிநேகிக்கக்கடவர் என்பதாம். ❊ அழச்சொல்லி இடித்து எனவந்த பரிகாரத்தொழில்களுக்கு ஏற்ற குற்றத்தொழில்கள் வருவிக்கப்பட்டன. வழக்கு-உலகத்தார் ஆதி தொடங்கிச் செய்துவந்தசெயல்- தப்மோடுசிலேகித்தவரும் அறியும்வகை அறிதல் அரிதாகலால்-அறியவல்லாரென்றார், (ரு)

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை...................... *
நீட்டி யளப்பதோர் கோல் ....... .......................... *

(இ-ள்.) (ஒருவனுக்குக்கேடென்பது)-கிளைஞரை - சுற்றத்தாராது நட்பாகிய(நிலங்களை) - நீட்டியளப்பது - குறையாமல் அளப்பதாகிய-ஓர்கோல்-ஒருகோலாம்.—(ஆகலால்)-கேட்டினும் - அக்கேட்டினிடத்தும்-ஒருறுதி-(அவராலேபெறப்படும்) ஒருநல்லறிவு - உண்டு உண்டாகும். (எ-று.) (கருத்து) கேட்டினிடத்தும், சிநேகராற்பெறப்படு நல்லறிவுண்டாம் என்பதாம். ❊ தமது சிநேகத்தினெல்லைசுருங்கியிருக்கவும் செல்வக்காலத்தில் புறத்துவெளிப்படாமல்

வந்தவர் பின் கேடுவந்தவிடத்துச்சொல் வேறுபடுதலால் அக்கேட்டால்சிநேகத்தை அளவுசெப்பலா மென்பதுபற்றி - கேட்டினைக் கோலாக்கியும், அதனால் அளந்தறிந்தால்ஆவாரையே கொள்ளுதலால் அவ்வறிமை உறுதி யென்றும், சொல்லினர். (இஃது ஏகதேசவுருவகம்) [இவைநான்குபாட்டாலும் ஆராயும் விதமும், ஆராய்ந் தால் சினேகிக்கப்படுவார் இவரென்பதும், சொல்லப்பட்டன. (௫)

ஊதியமென்ப தொருவற்குப் பேதையார்.........................*

கேண்மை யொரீஇ விடல்.................................*

(இ,ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு - ஊதியமென்பது - பேறென்று சொல்லப்படுவது—பேதையார் - அறிவிலாதவரது- கேண்மை-நட்பை-ஒரீஇ ஒழிந்து - விடல்-(அவரை) விடுதல். (எ,று.) (கருத்து) ஒருவனுக்கிலாபமென்று சொல்லப்படுவது அறிவில்லார் சிநேகத்தை விடுதல் என்பதாம் ※ நட்பொழிந்தாலும் விட்டுநீங்காத விடத்துத் தீங்குவருதலால்-விடலென்றும், நீங்கிய விடத்துத் தீங்கொழிதலேயலாமல் இருமையின்பங்களுக்கும் உரிமைபெறுதலால்- அதனை ஊதியமென்றும்,சொல்லினர். (௬)

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க.........................*

வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.................................*

(இ-ள்.) உள்ளம்-(தம்) மனவெழுச்சி - சிறுகுவ - சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை-உள்ளற்க-(செய்ய)நினையா திருக்கக்கடவர்.—(அதுபோல்)-அல்லற்கண் -(தமக்கொரு) துன்பம் வந்தவிடத்து-ஆற்றறுப்பார் - கைவிடுவோரது-நட்பு-சிநேகத்தை - கொள்ளற்க-கொள்ளாதிருக்கக்கடவர். (எ-று.)(கருத்து)மனந்தளருந்தொழிலைச்செய்ய நினையாதிருக்கக்கடவர். துன்பத்திற்கைவிடுவோர் நட்பைக்கொள்ளாதிருக்கக்கடவர்என்பதாம். ※ அத்தொழில்களாவன தம்மின்வலியவரோடு தொடங்கியவையும், பயனில்லா தவையும், ஆம்.— முன்னெல்லாம் வலியாவார்போலேநடத்தலால் ஆற்றறுப்பாரென்றார். ஆற்றறுத்தல்-வலியறுத்தல். (எடுத்துக் காட்டுவமை.) கொண்டால் அழிந்தே விடுவனென்பதாம். (௭)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை .........*

யுள்ளினு முள்ளஞ் சுடும் .................................*

(இ-ள்.) கெடுங்காலை-(ஒருவன்) கெடுங்காலத்து- கைவிடுவார்-(அவனைவிட்டு) நீங்குவார்-கேண்மை - (முன் அவனோடுசெய்த) நட்பானது- அடுங்காலை-(கூற்றுவன்) கொல்லுங்காலத்து - உள்ளினும்-(ஒருவன்)நினைக்கினும்- உள்ளம்- (அந்நினைதத)உள்ளத்தை-சுடும்-சுட்

டுவிடும். (எ-று.) (கருத்து) கெடுங்காலத்துக் கைவிடுவோர் நட்பானது இயமன் கொல்லுங்காலத்து நினைக்கினுமுள்ளத்தைச்சுடுமென்பதாம். ❁ நினைத்தவளவிலே சம்பந்தமில்லாத பிறனுக்கும் கூற்றுவனிலும் கொடியதாமென்று - கைவிட எண்ணிச் செய்த நட்பின் கொடுமை சொல்லியபடி. [இவைமூன்றுபாட்டாலும்ஆராய்ந்தால்சினேகிக்கப்படாதவர் இவரென்பது சொல்லப்பட்டது.] (கூ)

மருவுகமாசற்றார் கேண்மையொன் றீத்து.................. *
மொருவுக வொப்பிலார் நட்பு.................................... *

(இ-ள்.) மாசற்றார்-(உலகோடொத்துக்) குற்றமற்றவரது-கேண்மை-நட்பையே-மருவுக - பழகக்கடவன்.— ஒப்பிலார்-(உலகத்தோடு)ஒத்தலில்லாதவரது-நட்பு - நட்பை-(ஆராயாதுகொண்டால்)— ஒன்று- (அவருக்குவேண்டிய)ஒன்றை-ஈந்தும் - கொடுத்தாயினும்- ஒருவுக-விடக்கடவன். (எ-று.) (கருத்து) குற்றமற்றவர்சிநேகத்தைக்கொள்ளக்கடவன் ஒப்பில்லார் சிநேகத்தைப் பொருள்கொடுத்தாகினும் விடக்கடவன் என்பதாம். ❁ உலகோடொத்தவர் நட்புஇருமையின்பமும் தருதலால் மருவுகவென்றும், அதனோடு மாறுயினவர்நட்புத்துன்பமே தருதலால் அதைவிலைகொடுத்தாயினும்விடுகவென்றும், சொல்லினர் [இதனால்சினேகிக்கப்படுவாரும்படாரும் ஆகிய அவ்விருமையும் தொகுத்துச்சொல்லப்பட்டது. (ம)

❁—*—*—*❁*—*—*—*❁*—*—*—*❁*—*—*—❁

## அக-ஆம்-அதி-பழைமை.



அஃதாவது-நட்பினரது பழையராந் தன்மைபற்றி அவர்செய்தபிழைகளைப் பொறுத்தல் ஆராய்ந்து சினேகிக்கப் பட்டாராயினும் பொறுக்கப்படும் குற்றமுடையராகலாலும், ஊழ்வகையாலும் நட்புக்கொள்ளப்பட்டவரிடத்துப்பிழையுளதாமென்பது அறிவித்தற்கு இது நட்பாராய்தலின்பின் வைக்கப்பட்டது.

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங் .................
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.................................... *

(இ-ள்.)பழைமையெனப்படுவது- பழைமையென்றுசொல்லப்படுவது- யாதெனின் - யாதென்றால் - (அது-) கிழமையை - பழமை

யோர்) உரிமையாலேசெய்தவைகளை-யாதும்- சிறிதாயினும்-கீழ்ந்திடா- சிதைக்காமல் (அவைகளுக்குஉடன்படுவதாகிய) —நட்பு-சிநேகம் .எ,று.) (கருத்து) பழைமையென்று சொல்லப்படுவதியாதென்றால் பழைமையோர் செய்தவற்றைச் சிதையாமற் கொள்ளு நட்பாம் என்பதாம். ❊ கிழமை ஆகுபெயர். பின் கெழுதகைமையெனவருவதுமது—உரிமையாற்செய்தவையாவன- கருமஞ்செய்யும்போது கேளாதுசெய்தல் - கெடும்வகைசெய்தல். தமக்குவேண்டுமவைகளைத் தாமே கொள்ளுதல்.பணிவச்சங்களில்லாமை. இவ்வமுதலானவை. [இதனாலேபழைமையாவது காலஞ்சென்றதன்று இப்படிப்பட்ட நட்பென்பது சொல்லப்பட்டது.] (௧)

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்............ ........❊
குப்பாதல் சான்றோர் கடன்.......... ........... ......❊

(இ-ள்.) நட்பிற்கு-சிநேகத்திற்கு - உறுப்பு- அவயவமானவை-கெழுதகைமை-(நட்பினர்) உரிமையாற்செய்பவையாம்.— (ஆதலால்) அதற்கு- அவ்வுரிமைக்கு-உப்பாதல்-இனிமையசாதல்-சான்றோர்-நிறைந்தோர்க்கு-கடன்-முறைமை. (எ-று.) (கருத்து)சிநேகத்திற்கவயவமாவன, சிநேகருரிமையாற்செய்தவையாமென்பதாய் ❊ மற்று, அசை. வேறல்லாமைதோன்றஉறுப்பென்றார். அவ்வவமாகுதலறிந்தே இனிபவராவரென்பதுதோன்ற-சான்றோர்மேல்வைத்தார். (௨)

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை .................. ❊
செய்தாங் கமையாக் கடை ........................ ...........❊

(இ-ள்.) கெழுதகைமை-(நட்பினர்) உரிமையினாலேசெய்தவைகளுக்கு-செய்தாங்கு - (தாம்) செய்தவைபோல்- அமையாக்கடை-உடன்படாராயின்-பழகிய- (அவரோடு) பழையதாய்வந்த- நட்பு-சிநேகமானது எவன்-என்னபயனை - செய்யும்-செய்யும் (எ-று.) (கருத்து)நட்பினர் செய்தவைகளுக்குத் தாஞ்செய்யா விடத்து நட்பென்னபயன்செய்யும் என்பதாம். ❊ அப்படிஉடன்படுதலாவது-தாமும் அவரித்து உரிமையால் உடன்படுதல். [இவை யிரண்டுபாட்டாலும்பழைமையால்வரும்உரிமையது சிறப்புச்சொல்லப்பட்டது.

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்...❊
கேளாது நட்டார் செயின்... ........... .... ..........❊

(இ-ள்.) நட்டார்-நட்பினர் - கெழுதகையால்-உரிமையால்-கேளாது-தம்மைக்கேளாது - செயின்-(தங்கருமங்களைச்)செய்தாராயின்-விழைதகையான்- (அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி—(அறிவுடையோர்)-வேண்டியிருப்பர் - (அதனை)விரும்புவர்.(எ,று.)

(கருத்து) நட்பாளர் உரிமையாற் கேளாதுசெய்தா லறிவுடையோ ரதனை விரும்புவர் என்பதாம். ❀ ஒருவர்க்குத் தங்கருமம் தாம் அறியாமல் முடிந்திருக்கையைக் காட்டிலும் நன்மையில்லாமையால் அச்செயல் விரும்பத்தக்கதாயிற்று. அதனை அப்படியறிந்துவிரும்புதல் அறிவுடையார்க்கல்லது இல்லாமையால் அவர்மேல்வைத்துச் சொல்லப்பட்டது. [இதனால் கேளாது செய்தவிடத்து அதனைவிரும்புகவென்பது சொல்லப்பட்டது.] (௪)

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க-*
நோதக்க நட்டார் செயின்.......................... ......*

(இ-ள்.) நோதக்க-(தாம்) வெறுக்கத்தக் கவைகளை - நட்டார்-சினேகித்தவர்-செயின்- - செய்தால்-(அதற்குக்காரணம்)-பேதைமையொன்றோ-அறியாமையொன்றோ.-பெருங்கிழமை-மிகுந்தஉரிமையுமாம்.— என்று-என்று-உணர்க-அறியக்கடவர். (எ,று.) (கருத்து) வெறுக்கத்தக்கவைகளைச் சிநேகர்செய்தா லதுமிகுந்தவுரிமையாம். என்பதாம். ❀ செயினெனவே தம்மியல்பிலே செய்யாமை பெற்றாம். இதுவருகின்றவைக்குள்ளும் ஒக்கும். இழவூழால் வரும்பேதைமை யார்க்கும் உண்டாகலால் தமக்கு ஏதங்கொண்டாரொன்றாவது ஊழ்வகையால் எம்மால் வரக்கடவது ஒற்றுமை மிகுதிபற்றி அவரால் வந்ததென்றாவது, கொள்வதல்லது அன்பிலாமையென்று கொளப்படாதென்பதாம். [கெடும் வகைசெய்யின் அதற்குக் காரணம் இதனால் சொல்லப்பட்டது.] (௫)

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்... .........*
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.... ........ ........ ........*

(இ-ள்.) எல்லைக்கணின்றார்-(நட்பின்) வரம்பிலேநின்றவர்-தொல்லைக்கணின்றார்-(தம்மோடு) பழைமையில் வேறுபடாது நின்றவரது)—தொடர்பு-நட்பை— தொலைவிடத்தும்-(அவராலே) தொலைவுவந்தவிடத்தும்—துறவார்-விடார். (எ-று.) (கருத்து) நட்பிலே நின்றவர் பழைமையோர்சிநேகத்தைவிடார் என்பதாம். ❀ பழைமையில் வேறுபடாமையாவது-உரிமையொழியாமையாம்.—தொலைவு-பொருட்கேடு போர்க்கேடு. (௬)

அழிவந்த செய்யினு மன்பறாரன்பின்....... ...............*
வழிவந்த கேண்மை யவர்...................................*

(இ-ள்.) அன்பின்-அன்புடனே-வழிவந்த- பழையதாய்வந்த-கேண்மையவர் - நட்பினையுடையவர்— (நட்பினர்)-அழிவந்த-அழிவுவந்தவைகளை-செய்யினும்- செய்தாலும்-அன்பறார்-(அவரிடத்தே)அ

ன்புநீங்கார். (எ-று.) (கருத்து) பழைமையான நட்பினையுடையவர் பிறர் அழிவானவற்றைச் செய்தாலு மன்பைவிட்டகலார் என்பதாம். ❊ அழிவு- முன்சொல்லியகேடுகள். [இவை யிரண்டுபாட்டாலும் கேடுசெய்த விடத்தும் விடுந்தன்மைய தன்றென்பது சொல்லப்பட்டது.] (எ)

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு........ *
நாளிழுக்க நட்டார் செயின் .... .... .... .. ..... ........*

(இ-ள்.) கேள்-நட்பினரது - இழுக்கம்-பிழையை-கேளா- (பிறர் சொல்லினும்) கேளாத-கெழுதகைமை வல்லார்க்கு-உரிமையறியவல்லவர்க்கு-நட்டார் - அந்நட்பினர்-இழுக்கம்- பிழையை - செயின் செய்தால்-(அது) -நாள்- (பயன்பட்ட) நாளாம். (எ,று.) (கருத்து) நட்பாளர் பிழையைக்கேளாதவர்க்குநட்பாளர் பிழையைச் செய்தலதுபயன்பட்டநாளாம் என்பதாம். ❊ பிழையாவன-முன்சொல்லிய-பணியாமை - அஞ்சாமை-நற்பொருள்வெளவல் - முதலானவை. கேட்டல் உட்கொள்ளுதல். செய்தவிடத்தல்லாமல் அவ்வல்லமைவெளிப்படாமையால் செய்யாதவை நாளல்லவாயின. [இதனால் பிழைபொறுத்தற் சிறப்புச் சொல்லப்பட்டது.] (அ)

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை .... .......*
விடாஅர் விழையு முலகு... ........................*

(இ-ள்.) கெடாஅ)(உரிமை)கெடாமல்-வழிவந்த - பழையதாய்வந்த-கேண்மையார் - நட்பையுடையவரது - கேண்மை- நட்பை-விடாஅர் -(அவர்பிழைநோக்கி) விடாதவரை-உலகு - உலகமானது-விழையும்-(நட்புக்குறித்து) விரும்பும். (எ-று.) (கருத்து)பழையசிநேகர் நட்பை விடாதவரை உலகமிச்சிக்கும் என்பதாம். ❊ விடாரையெனவே விடுதற்குக்காரணம் சொல்லப்பட்டது. நம்மிடத்தும் இவர் இப்படிப்பட்டவ ராவரென்று யாவரும் - தாமேவர்நநட்பாவரென்பதாம். (கூ)

விழையார் விழையப் படுப பழையார்கட்.................*
பண்பிற் றலைப்பிரியா தார்.......................... *

(இ-ள்.) பழையார்கண்- பழையநட்பினரிடத்து-(அவர்பிழைசெய்தாராயினும்)- பண்பிற்றலைப்பிரியாதார்- (தம்) பண்புநீங்காதவர்-விழையார்-பகைவராலும்-விழையப்படுப-விரும்பப்படுவர். (எ-று.) (கருத்து) பழைய சிநேகரிடத்துச் சிநேக நீங்காதவர் பகைவராலு

மிச்சிக்கப்படுவர் என்பதாம். ☸ தம் பண்பாவது - செய்யாத முன் போல் அன்புடையவராதல். அக்குணநோக்கிப்பகைவரும் நட்பின ராவரென்பதாம், [இவையிரண்டுபாட்டாலும் பழைமையறிவார் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (௰)



# அஉ - ஆம், அதி-தீநட்பு.



இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையால் விடத்தக்க தாகிய நட்பு நட்பாராய்தலதிகாரத்தில் சுருங்கச் சொல்லி அவ்வளவில் அடங்காமையால் அதனை இருவகைப் படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி முன்னே தீ நட்புச் சொல்லுகிறார்.

அஃதாவது- தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பாம். அதிகார முறைமை சொல்லாமலே விளங்கும்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை.................... ☸
பெருகலிற் குன்ற லினிது.......... ....................... ☸

(இ-ள்.) பருகுவார்போலினும்-(ஆசைமிகுதியால்)உண்பவர்போன்றாராயினும்-பண்பிலார் - குணமிலாரது [தீக்குண முடையவரது என்றபடி]-கேண்மை-நட்பானது-பெருகலின் - வளர்தலினும்-குன்றல்-குறைதல்-இனிது-இனிதாம். (எ-று.) (கருத்து) நற்குணமில்லார்நட்பானது பெருகுதலினும் சிறுகுதலினிதாம் என்பதாம். ☸ பெருகினால் வருங்கேடு குன்றினால் வாராமையின் குன்றலினிதென்றார். [இதனால் தீ நட்பினதாகாமைபொதுவகையாற் சொல்லப்பட்டது.

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை ........ ..... ☸
பெறினு மிழப்பினு மென் ........................ ............ ☸

(இ-ள்.) உறின்-(தமக்குப்பயன்) உள்ளவிடத்து-நட்டு- சிநேகித்து-அறின்-(அது)இல்லாவிடத்து-ஒரூஉம்- ஒழியும் - ஒப்பிலார்-ஒப்பில்லாதவரது-கேண்மை-சிநேகத்தை-பெறினும் - பெற்றாலும்-(என்)-(ஆக்கம்)-யாது.-இழப்பினும்-இழந்தாலும்-என்- (செல்வம்)டாது. (எ-று.) (கருத்து), செல்வம்வந்தவிடத்துச்சிநேகித்து அதுஇல்லாவிடத்துக் கைவிடுவோர்கள் சிநேகத்தைப் பெற்றாலென்ன, அற்றாலென்ன என்பதாம். ☸ தமக்கு உற்றவை பார்ப்பவர் பிறரோடு பொருத்தமிலராதலால் அவரை ஒப்பிலாரென்றார். அவரிடத்து அயலார்தன்மையே பொருந்துமென்பதாம். (உ)

உறுவதுசீர் தூக்கு நட்பும் பெறுவது..........................✻
கொள்வாருங் கள்வரு நேர்..........................✻

(இ-ள்.) உறுவதுசீர்தூக்குநட்பும்- (நட்பளவுபாராமல் அதனால் வரும்பிரயோசனத்தளவுபார்க்கும் நட்பினரும் - பெறுவதுகொள்வாரும் - (கொடுப்பாரைக்கொள்ளாமல்) விலையைக்கொள்ளும் வேசையரும் - கள்வரும்- (பிறர்கேடு நோக்காது அவர்சோர்வு பார்க்கும்) கள்வரும்-நேர்- (தம்முள் ஒப்பர். (எ-று.) (கருத்து) நட்பின்பயனையெண்ணுவாரும் வேசையரும்கள்ளரும்தம்மிலொப்பாவரென்பதாம். ✻ நட்பு- ஆகுமபெயர். பொருள்களைக் குறித்து வஞ்சித்தநடத்தலால் அவ்விருவரோடும் ஒப்பசொன்னதாயிற்று. [இவையிரண்டுபாட்டாலும் தமக்குப்பிரயோசனம் பார்ப்பவராது நட்பினது தீமைசொல்லப்பட்டது.] (௩)

அமரகத்தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்.................✻
தமரிற் றனிமை தலை.................................✻

(இ-ள்.) (முன்னெல்லாந் தாங்குவதுபோலிருந்து)-அமரகத்து-போர்வந்தவிடத்து - ஆற்றறுக்கும்-போர்க்களத்திலே தள்ளிவிட்டுப்போகின்ற-கல்லா கல்வியில்லா த-மாவன்னார்-குதிரைபோல்வாதுதமரின்-தமராந்தன்மையினும் - தனிமை - தனியாதலே - தலை - சிறப்புடைத்து (எ-று.) (கருத்து) போர்க்களத்தில்விட்டோடிப்போவோர் நட்பிலுந் தனிமையாக விருத்தலல்லது என்பதாம். ✻ கல்லாமை-கதியைந்தும், சாரியைபதினெட்டும், போர்செய் திறமும் அறியாமை. துன்பம்வாராதமுன்னெல்லாம் துணையாவார்போன்று வந்தவிடத்துவிட்டு நீங்குவாரென்பதுஉவமையாற்பெற்றும். அவர் தமரானால் வரும் அழிவுதனியானல் வாராமையால் - தனிமை தலையென்றார். எனவே அதுவும் தீதாதலறிக. (௪)

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை...............✻
யெய்தலி னெய்தாமை நன்று...............................✻

(இ-ள்.) செய்து செய்துவைத்தாலும்-ஏமஞ்சாரா - காப்பாகாத -சிறியவர்-கீழ்மக்களது-புன்கேண்மை - தீநட்பு - எய்தலின்-(ஒருவனுக்கு)உண்டாதலின் —எய்தாமை-இல்லாதிருத்தல் - நன்று - நல்லது. (எ-று) (கருத்து) சிறியவர்களுடைய தீ நட்பானது ஒருவனுக்குஉண்டாதலினு மில்லாதிருக்கை நல்லது என்பதாம். ✻ சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. காவலாகாமை - தொலைவி னிடத்து விட்டு நீங்கல். எய்தலி னெய்தாமை நன்றென்பதற்கு - முன் உரைத்தபடி.

க்கார்க்க. [இவையிரண்டுபாட்டாலும் தொகையிலே துணையாகாதவ ர்நட்பினது தீமை சொல்லப்பட்டது. (௫)

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா ........................ *
ரேதின்மை கோடி யுறும் ....... ..... ........ ........ ... *

(இ-ள்.) பேதை-அறிவில்லாதவனது - பெருங்கெழீஇநட்பின்-மி கநெருங்கிய நட்பைப்பார்க்கிலும்-அறிவுடையார் - அறிவுடையவர து-ஏதின்மை- பகைமை-கோடியுறும்- கோடிப்பங்கு நல்லது. (எ-று.) (கருத்து) அறிவில்லார் நட்பைப்பார்க்கிலும் அறிவுடையவர்ப கைநல்லதென்பதாம். ✲ அறிவுடையவனதுபகைமை - ஒருதீங்கு ம்செய்யாமையாலும், பேதையினது நட்பு- பல்தீங்கும் செய்தலா லும், கோடியுறுமென்றார். (௬)

நகைவகைய ராகிய நட்பிற் பலவ்வராற் ........................ *
பத்தடுத்த கோடி யுறும் ........ ..... .... ........ ............... *

(இ-ள்.) நகைவகையராகிய- (தாம்அறிநல்வகையராதற் கல்லாம ல்)நகுதல்வகையராதற்கேதுவாகிய நட்பின - நட்பால் (வருமவை களின்)-பலவ்வரால் - பகைவரால் (வருபவை) பத்தடுத்தகோடி - ப த்துக்கோடிமடங்கு-உறும்-நல்லவையாம். (எ-று.) (கருத்து) நகைக் கேதுவாகிய நட்பைவிட பகைக்கேதுவாகிய நட்பு நல்லவை யாம் என்பதாம். ✲ அந்நட்பாவது - விடரும், தூர்த்தரும், கலைக்கூத் தரும், போன்ற பலவகையால் நகுவித்தூக்தாமபயன்கொள்ளுமிடா ழிவாரோடு உண்டாகியது. பத்தடுத்தகோடி பத்தாகத் தொகுத்த கோடி. அந்நட்பில் வருமின்பங்களில் அப்பலவ்வரால் வருந்துன்ப ங்கள் மிகநல்லவென்பதாம். (௭)

ஒல்லுங் கருமமுடற்று பவர்கேண்மை ........................ *
சொல்லாடார் சோர விடல் ........................ ........... *

(இ-ள்;) ஒல்லுங்கருமம்-(தம்மாலே)முடியுந்தொழிலை- உடற்று பவர்-முடியாதாகச் செய்பவரோடுகொண்ட - கேண்மை - நட்பை- (அதுகண்டால்)-சொல்லாடார்- ( அதை அவரறியச் ) சொல்லாமல் சோரவிடல்- தளரவிடக்கடவர். (எ-று.) (கருத்து) தம்மாலேமுடியு ந்தொழிலை முடியாதாகச் செய்பவருடன் கொண்ட நட்பை விடக் கடவர் என்பதாம். ✲ சோரவிடல் - விடுகின்றவிதம் தோன்றாமல் ஒ ருகாலைக்கொருகால் ஒயவிடுதல்.—அறியச் சொல்லினாலும், விடுகி ன்றவிதம் தெரிந்தாலும், அப்போது பரிகரித்துப் பின்னும்நட்பா யிருக்க நினைப்பாராகலால் சொல்லாடாரென்றும், சோரவிடலென் றும், சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் முறையே பேதைய

ர்-நகுவிப்பவர்-இயல்வது செய்யாதவர்- இவர்நட்புத்தீமைகள்சொ
ல்லப்பட்டன. (அ)

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு ....................*
சொல்வேறு பட்டார் தொடர்பு ............ ..................*

(இ-ள்.) வினைவேறு-தொழில்வேறு-சொல்வேறு-சொல்வேறு—
பட்டார்-பட்டவரது-தொடர்பு நட்பு-கனவினும் - (நனவிலேமாத்
திரமேயல்லாமல்)கனவிலும்-இன்னாது- துன்பஞ்செய்வதாகும். எ-
று.) (கருத்து) தொழில்வேறு, சொல்வேறு, பட்டவர்சிநேகமான
துகனவிலுந் துன்பந்தரும் என்பதாம். ❋ தொழிலுஞ் சொல்லும்
ஒவ்வாமல் வேறுவேறாயிருத்தல்- தொழிலிலேபகைவராயும். சொல்
லிலேநட்பினராயும், இருக்கை. நிகழ்ச்சியிலே உண்டா யிருத்தலா
லே- கனவினுமின்னாதென்றார். மன்-ஓ-அசைநிலை. (௯)

எனைத்துங் குறுகுத லோம்பன் மனக்கெழீஇ... .........*
மன்றிற் பழிப்பார் தொடர்பு.... .......... ..........*

(இ-ள்.) மனை-வீட்டிலே (தனித்திருந்தபோது)- கெழீஇ-நட்பா
டி-மன்றில்-சபையிலே (பலருடனிருந்தபோது) - பழிப்பார்-பழி
சொல்லுவோரது-தொடர்பு - நட்பு- எனைத்தும்-எவ்வளவுசிறிதாயி
னும்-குறுகுதல்-(தம்மைச்)சேர்தலை ஓம்பல்-பரிகரிக்கக்கடவர். எ, று.
(கருத்து) வீட்டிலே தனித்திருக்கையிற் சிநேகித்துச் சபை யிற்
பழிப்பவர் நட்புக்கொள்ளா திருக்கக்கடவர் என்பதாம். ❋ அவ்
விருசெயலும் தீதாகலின் அவர் ஒருபோதும் தம்மைச்சேராதவி
தம் குறிக்கொண்டு காக்கவேண்டு மென்பதற்கு அவர் நட்பின்மே
ல்வைத்துச் சொல்லினார். [இவை யிரண்டு பாட்டாலும் வஞ்சர்நட்
பின் றிமை சொல்லப்பட்டது.] (௰)



# அ௩-ஆம்-அதி-கூடாநட்பு.



இனிமற்றைக் கூடாநட்புச் சொல்லுகின்றார்.

அஃதாவது - பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமயம்கிடைக்
குமளவும் புறத்திலே கூடி நடப்பவர் நட்பு.

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை.......................*
நேரா நிரந்தவர் நட்பு.................... ..............*

(இ-ள்.) நேரா-கூடாதிருந்தே-நிரந்தவர் - (வாய்க்குமிடங்காணு மளவும்) புறத்திற் கூடிநடப்பவரது - நட்பு-சிநேகம்- சீரிடம்-வாய்க்குமிடத்தை-காணின் - கண்டால்-எறிதற்கு- (அற) வெறிதற்குத் (துணையாகிய)-பட்டடை - பட்டடையாகும்.(எ-று.) (கருத்து)வாய்க்குமிடங்கூடாதிருந்தவர் நட்பானது அந்த இடத்தைக்கண்டாலெறிதற்குப் பட்டடையாம் என்பதாம். ❁ எறியுங்காலம் வாராமுன்னெல்லாந் தாங்குவதுபோலிருந்து வந்தவிடத்து அறவெறிவிப்பதாகிய பட்டடைக்கும் அப்படிப்பட்ட தாகிய நட்பிற்கும் தொழிலொப்புமை யிருத்தலால் அதுபற்றி அந்நட்பைப் பட்டடையாக உபசரித்தார். (க)

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்.................*
மனம்போல வேறு படும்................................*

(இ-ள்.) இனம்போன்று-(தமக்கு)உற்றவர்போன்று - இனமல்லார்-உறவில்லாதவரோடு உண்டாகிய - கேண்மை - நட்பானது,—(இடம்பெற்றால்)-மகளிர்-பெண்பாலார் - மனம்போல-நெஞ்சம்போல-வேறுபடும்-வேறுபடும். (எ,று.) (கருத்து) உறவினர்போன்றுஉறவினராகாதவர் நட்பானது பெண்களிதயம்போல வேறுபடும் என்பதாம் ❁ நட்பு-வேறுபடுதலாவது - இடம்பெற்றால் பழைய பகையேயாகுதல். [இவையிரண்டுபாட்டாலும் கூடாநட்பினது குற்றம் சொல்லப்பட்டது.] (உ)

பல்நல்ல கற்றக் கடைத்து மனநல்ல..........................*
ராகுதன் மாணார்க் கரிது ..................................*

(இ-ள்.) நல்ல-நல்லவையாகிய-பல-பலநூல்களை - கற்றக்கடைத்தும்-கற்றவிடத்தும் - (அதனால்)-மனநல்லராகுதல் - மனந்திருந்தி நட்பினராகுதல்-மாணார்க்கு-பகைவர்க்கு—அரிது-இல்லை.(எ,று.) (கருத்து) பலநூலைக்கற்றவிடத்தும் மனநலத்தராகுதல் பகைவர்க்கில்லை என்பதாம். ❁ நல்லநூல்-மனக்குற்றங் கெடுப்பன. நல்லராகுதல்-சலம்விடுதல். உட்சலமுடையாரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்றுகொள்ளாரென்பதாம். (௩)

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா .........................*
வஞ்சரை யஞ்சப் படும்.....................................*

(இ-ள்.) (கண்டபோது)-முகத்தின்-முகத்தால் - இனிய-இனிமையுள்ளனவாக-நகாஅ- சிரித்து-அகத்து- மனத்தால்— இன்னா - (எப்பொழுதும்) இனியராகாத- வஞ்சரை- வஞ்சகரை — அஞ்சப்படும்-அஞ்சல்வேண்டும். (எ-று.) (கருத்து) முகமலர்ந்து நகைத்துஅகம

லாதவஞ்சகருக்குப் பயப்படவேண்டும் என்பதாம். ※ நகைபற்றி வகைபற்றி-இனியவென்றும், மனத்திலே சலம்தோன்றா நிற்கவும் அதற்கு விரோதமாகிய நகையைப் புறத்திலே காட்டலால் வஞ்சரென்றும், அச்சலம் குறிப்பறிதற்குச் சாதனமாகிய முகத்தானும் தோன்றாமையால்-அஞ்சப்படுமென்றும், சொல்லினார். [இவையிரண்டுபாட்டாலும் குற்றத்திற்கு ஏதுவாகிய அவர்கொடுமை சொல்லப்பட்டது.] (௪)

மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றும் ※
சொல்லினாற் றேறற்பாற் றன்று ※

(இ-ள்.) மனத்தின்-மனத்தால்-அமையாதவரை-(தம்மோடு)பொருந்தாதவரை-எனைத்தொன்றும்-யாதொருகருமத்திலும்-சொல்லினால்-சொல்லினால்—தேறற்பாற்று-தெளிதன்முறைமையது-,அன்று-அல்ல-(என்றுநீதிநூலில்)சொல்லும். (க-று.)(கருத்து)மனமொவ்வாதவரை யாதொரு சொல்லாலுந் தெளிதல் கூடாது என்பதாம். ※பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லை நல்லசொல்லென நினைத்து அவரைக் கருமங்களிலே தெளிதல் நீதிநூலின் முறைமை அன்றென்பதாம். (௫)

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ ※
லொல்லை யுணரப் படும் ※

(இ-ள்.) நட்டார்போல்-நட்பினர்போல்-நல்லவை-நன்மையைத்தருஞ் சொற்களை-சொல்லினும்-சொன்னாலும்-ஒட்டார்சொல்-பகைவர்சொற்கள்—(அதுதாராமை)-ஒல்லை-விரைவிலே [சொல்லியபொழுதேயென்றபடி]-உணரப்படும்-அறியப்படும். (க,று.)(கருத்து) நட்பாளர்போலநல்லசொற்களைச்சொன்னாலும் பகைவர்சொற்கள் நலந்தாராமையையறியப்படும் என்பதாம். ※சொல்லினென வே அவர் சொல்லாமையே பெற்றாம். பகைவராதலால்- தீமைதருதற்கு ஐயமில்லை யென்பதற்கு ஒல்லையுணரப்படுமென்றார். (௬)

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந் ※
தீங்கு குறித்தமை யான் ※

(இ-ள்.) வில்வணக்கம்-வில்லினது வணக்கம்-தீங்கு-(எற்றவர்க்குத்) தீமைசெய்தலை - குறித்தமையால்-குறித்ததனால்- ஒன்னார்கண்-பகைவரிடத்தே (பிறக்கும்)-சொல்வணக்கம் - சொல்லினது வணக்கத்தையும்-கொள்ளற்க -(தமக்கு நன்மைசெய்தலைக் குறித்ததென்று நினையாதிருக்கக்கடவர். (க,று.) (கருத்து) வில்வணக்கந் தீங்கைத்தருதலால் பகைவரிடத்துச் சொல்வணக்கங் கொள்ளாதிருக்கக்கடவ

ர் என்பதாம். ❊ தம்வணக்கம் அன்றென்பது தோன்ற - சொல்வணக்கமென்றும், வில்வணக்கம் வேறாயினும் - வணங்குதலொப்புமைபற்றி அதன் குறிப்பையே ஏதுவாக்கியும், சொல்லினார்.—வில்லினன்குறிப்பு அவனினாகிய வில்வணக்கத்தின்மேல்நிற்றலால் பகைவரதுகுறிப்பும் அவரினாகிய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. இதுவும் தீங்குகுறித்த வணக்கமென்றே கொண்டு அஞ்சிக் காக்கவேண்டுமென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் அவரைச் சொல்லாலே தெளியலாகாதென்பது சொல்லப்பட்டது.] (எ)

தொழுதகையுள்ளும் படையொடுங்கு மொன்னா ... ❊
ரழுதகண் ணீரு மனைத்து........... ........... ❊

(இ-ள்.) (பகைவர்குறிப்பை அறியவல்லவர்க்கு) - ஒன்னார்-பகைவர்-தொழுதகையுள்ளும் - கும்பிட்டகையுள்ளும்—படை- ஆயுதமானது-ஒடுங்கும் - மறைந்திருக்கும்.— அழுத கண்ணீரும் -(அவர்) அழுதகண்ணீரும்— அனைத்து- அப்படியே அது மறைந்திருத்தற்கு இடமாம். (எ,று.) (கருத்து.)பகைவர் கும்பிட்ட கையோடுமாயுதம் மறைந்திருக்கும் அப்பகைவரழுதகண்ணீருமப்படியேஎன்பதாம். ❊ தாம்நட்பென்பதனைத் தங்கையாலும், கண்ணாலும், நம்புவித்துப்பின்கொல்லுதற்கு எடுக்கவிருக்கின்ற ஆயுதமஆலோசித் தறியும்போது நம்புவிக்கின்றபொழுதே அவைகளுள்ளே தோன்றுமென்பதற்கு-ஒடுங்குமென்றார்.— பகைவர்தமது தளர்ச்சி காட்டித் தொழுதாலும், அழுதாலும் அவர்குறிப்பையே நோக்கிக் காத்துக்கொள்கவென்பதாம். [இதனால் அவரைச்செயலால் தெளியலாகாதென்பது சொல்லப்பட்டது.] (அ)

மிகச்செய்து தம்மெள் ளுவாரை நகச்செய்து..... ........ ❊
நட்பினுட் சாப்புல்லற் பாற்று........... ..........…. ❊

(இ-ள்.) (அரசநீதியானது) - மிகச்செய்து - (புறத்திலேநட்பை) மிகச்செய்து - தம்மெள்ளுவாரை-(உள்ளே தம்மை இகழும்பகைவரை —நட்பினுள் - (காமும்) அந்தநட்பினிடத்தே நின்று- நகச்செய்து-(புறத்திலேஅவர்) மகிழும்படி செய்து - சாப்புல்லற் பாற்று-(உள்ளே அது) சாம்படிக்குப் பொருந்தும்தன்மையுடைத்து.எ-று. (கருத்து) இராசநீதியானது புறத்துநட்பை மிகச்செய்து இகழ்பவரை நட்பின்மகிழும்படி செய்து பொருந்துந் தன்மை யுடையது என்பதாம். ❊ நின்றென்பதும், அரசநீதியென்பதும், வருவிக்கப்பட்டன.உள்ளொன்றுபுறமொன்றுதல் ஒருவருக்குத்தகாதாயினும் பகைவரிடத்தாலல் தகுமென்பதுநீதிநூலதுதுணிவென்பதற்கு அதன்மேல்வைத்துச்சொல்லினார். எள்ளுவாரைப்புல்லலெனக்கூட்டு

பகைநட்பாங்காலம் வருங்கால் முகநட்.... .. ... .... ... *
டகநட் பொரீஇ விடல் .... ....... ..... .... ......... *

(இ-ள்.) பகை-(தம்) பகைவர்-நட்பாங்காலம்- நட்பினராய்நடக்குங்காலம்-வருங்கால் - வந்தால்-முகம்- (தாமும்) முகத்தால்-நட்டு-(அவரோடு)நட்புச்செய்து-அகம் மனத்தால்-நட்பு நட்பை-ஓரீஇ-நீங்கி-விடல்-(பின் அதுவும்) விடக்கடவர். எ-று.) (கருத்து) பகைநட்பாகுங்காலத்தில் முகநட்பாய்ச்சிநேகித்து அகநட்பு விடல்வேண்டும் என்பதாம். ❋ அக்காலமாவது - தம்மாலும் பகையென்றுவெளிப்பட நீக்கக்கூடாதவளவு இதனாலே கூடுமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றும். [இவையிரண்டுபாட்டாலும் அந்தநட்பிடத்துநடக்கும்விதம் சொல்லப்பட்டது.] (௰)



# அ௪-ஆம்-அதி-பேதைமை.



இனி அந்நட்பைஎதிர்மறுத்துப் பகைமுகத்தாலே சொல்லத்தொடங்கினர். அப்பகை தான்முழுவதும் விடலாகாத குற்றமாகி யகுரோதத்தாலும், காமத்தாலும், வருவனாம். அவைகளுள்-குரோதத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும், காமத்தால்வருபவை ஐந்ததிகாரத்தாலும், சொல்லுதற்கு அவ்விரண்டிக்கும் அடியாகிய மயக்கத்தை இருவகைப் படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலே பேதைமை சொல்லுகிறார்.

அஃதாவது - யாதொன்றும் அறியாமை.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண் *
டூதியம் போக விடல் ............................ *

(இ-ள்.) பேதைமையென்பது-அறியாமை யென்று சொல்லப்படுவது ஒன்று-(மற்றைக்குற்றங்களிலெல்லாம் மிகுந்த) தொன்று.-யாதெனின்-(அது) யாதென் றவினவினல்- ஏதங்கொண்டு - (தனக்குக்)கேடுதருமவைகளைக் கைக்கொண்டு - ஊதியம் - ஆக்கந்தருமவைகளை—போகவிடல்-கைவிடுதல். (எ-று.) (கருத்து) அறியாமையென்பதியாதென்றால் குற்றங்களைக் கைக்கொண்டு இலாபத்தைவிடுதல் என்பதாம். ❋ கேடு-வறுமை-பழிபாவங்கள். ஆக்கம்-செல்வ

ம்புகழறங்கள்.— பேதைமை-தானே தன்னிருமைப் பயனும் கெடுத்துக்கொள்ளுத லென்பதாம். (௧)

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை ......... ✻
கையல்ல தன்கட் செயல் ......... ......... ......... ......... ✻

(இ,ள்.) (ஒருவனுக்கு)-பேதைமையுளெல்லாம்- பேதைமையெல்லாவற்றுள்ளும்- பேதைமை - மிகுந்த பேதைமையாவது— கையல்லதன்கண் -(தனக்கு) ஆகாதசெய்கையில்-காதன்மை- ஆசையை-செயல்-செய்தல். (எ-று.) (கருத்து) அறிவில்லாமை யெல்லாவற்றுள்ளுமறிவில்லாமையாவதுஆகாத செய்ய செய்தல்என்பதாம்.✻இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச்செய்தலென்பதாம். [இவையிரண்டு பாட்டாலும் பேதைமையது இலக்கணஞ் சொல்லப்பட்டது. (௨)

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்......... ✻
பேணாமை பேதை தொழில்......... ......... ......... ......... ✻

(இ-ள்.) நாணாமை-(நாணவேண்டுமவைகளுக்கு) நாணாமையும்-நாடாமை-(நாடவேண்டுமவைகளை) நாடாமையும் — நாரின்மை-(யாவரிடத்தும்)முறிந்தசொற்செயலுடைமையும்-யாதொன்றும்-(பேணவேண்டுமவைகளுள்) யாதொன்றையும் - பேணாமை- பேணாமையும்-பேதைதொழில்-மூடனதுதொழில்களாம்(எ-று.)(கருத்து) நாணாமையும் நாடாமையும் ஆசையின்மையும் யாதொன்றைப்பேணாமையும் அறிவீனனுடைய தொழில்களாம் என்பதாம். ✻நாணவேண்டுமவை- பழிபாவங்கள். நாடவேண்டுமவை - கருமங்களிலேவிதி விலக்குகள். முறிதல் கன்னறுதல்.பேணவேண்டுமவை-குடிப் பிறப்புக்கல்வியொழுக்கமுதலாயின. இவை பேதைக்குள்ளதாளும் இயல்பாய் வருதலாலே- தொழிலென்றார். (௩)

ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் ......... ✻
பேதையிற் பேதையா ரில்......... ......... ......... ✻

(இ-ள்.) ஓதி-(மனமொழிமெய்கள் அடங்குதற்கு ஏதுவாகிய நூல்களை ஓதியும் உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால் வரும்பயனை) அறிந்தும்-பிறர்க்கு பிறருக்கு-உரைத்தும்-(அதனை அறியும்படி) சொல்லியும்-தான்-தான்-அடங்கா-(அவை) அடங்கி நடவாத—பேதையின்-மூடன்போல்-பேதையார்-மூடர்-இல்-(உலகில்)இல்லை. எ-று.) (கருத்து) கற்றறிந்தும் பிறர்க்குக்கற்பித்துந் தானடங்காதஅறிவீனன்போ லறிவீனனில்லைஎன்பதாம்.✻ இப்பேதைமை- தன்க்குமருந்தாகிய இவைகளாலே தீராமையாலும், வேற்றுமருந்தில்லாமையா

லும், பேதையிற்பேதையாரில்லென்றார். [இவ்விரண்டுபாட்டாலும் பேதையது தொழில் பொதுவகையாற் சொல்லப்பட்டது. [இனிச் சிறப்புவகையாற் கூறுவர். (௪)

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந் ........... *
தான்புக் கழுந்து மளறு ...................................... *

(இ-ள்.) பேதை - மூடனானவன் — எழுமையும் - வரும்பிறவிகளிலெல்லாம் — தான் - தான் - புக்கு - புகுந்து — அழுந்து - அழுந்துதற்கிடமாகிய - அளறு - நரகத்தை — ஒருமை - இவ்வொருபிறப்புள்ளே — செயலாற்றும் - செய்துகொள்ள வல்லவனாவான். (எ-று.) (கருத்து) அறிவீனன் வரும் பிறவிகளிற்புகுந்து நரகத்தை யேற்றுக்கொள்வான் என்பதாம். ❊ எல்லாப்பிறப்பும் எழாய் அடங்குதல் அறியப்பட்டமையின் எழுமையுமென முற்றும்மை கொடுத்தார். இவ்விடத்தும் பிறப்புகளிலும் கொடுவினை வசத்தால் அந்நரகத்துன்பமே அனுபவித்துவருதலால் - எழுமையுந் தான் புக்கழுந்துமளறென்றார். நெடுங்காலந் தான் நரகத்துன்பம் அனுபவித்தற்கு ஏதுவாம் கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்துள்ளே செய்து கொள்ளுதல் பிறர்க்கு அரிதாகலின் ஆற்றுமென்றார். [இதனால் அவன் மறுமைச் செயல் சொல்லப்பட்டது. (௫)

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப் ........ *
பேதை வினைமேற் கொளின் ........... ....... *

(இ-ள்.) கையறியா - செய்முறைமையறியாத — பேதை - மூடனானவன் வினை - ஒருதொழிலை — மேற்கொளின் - மேற்கொள்வானாயின் - பொய்படும் - (அதுவும்) புரைபடும் - ஒன்றோ - (அது) ஒன்றுதானோ. — புனைபூணும் - (தானும்) தளைபூணுவான். (எ-று.) (கருத்து) மூடனொருதொழிலை மேற்கொள்வானாயின் அத்தொழில் குற்றப்படுமன்றியுமவன் தளைபூணுவான் என்பதாம். ❊ புரைபடுதல் - பின் ஆகாதபடி உள்ளழிதல். அதனையும் கெடுத்துத்தானும் கெடுமென்பதாம். [இதனால் அவன் செல்வம்படைக்குமாறு சொல்லப்பட்டது.

ஏதிலாராரத் தமர் பசிப்பர் பேதை ........... ........... *
பெருஞ் செல்வ முற்றக் கடை ....... ... ............... ... *

(இ-ள்.) பேதை - மூடனானவன் - பெருஞ்செல்வம் - பெரியசெல்வத்தை — உற்றக்கடை - (ஊழால்) அடைந்தவிடத்து - ஏதிலார் - (தன்னோடு) ஒருசம்பந்தமுமில்லாதவர் - ஆர - அநுபவிக்க - தமர் - (எல்லாச்சம்பந்தமுமுடைய) தம்மவர் - பசிப்பர் - பசித்திருப்பார். (எ-று.) (கருத்து) அறிவீனன் செல்வமடைந்தவிடத்து அயலாரநுபவிக்கத்

சுற்றத்தார் பசித்திருப்பர் என்பதாம். ☼ எல்லா நன்மைகளுஞ்செய்துகொள்ளற்குச் சாதனமென்பது தோன்ற - பெருஞ்செல்வமென்றும், அதனைப்படைக்கும் வலிமை இல்லாமைதோன்ற- உற்றக்கடையென்றும், எல்லாம்பெறுதல்தோன்ற - ஆரவென்றும், உண்ணவும் பெருமைதோன்றப் பசிப்பவொன்றும், சொல்லினார். (எ)

மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்.............*
கையொன் றுடைமை பெறின்.............................*

(இ-ள்.) பேதை-மூடனானவன்- தன்கை-தன்கையில்-ஒன்று- ஒரு பொருளை — உடைமைபெறின் - உடைமையாகப் பெற்றானாயில்- மையலொருவன்-பித்தினையுடைய ஒருவன்-களித்தற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டுமயங்கியதுபோலும். (எ-று.)(கருத்து) அறிவில்லான் பொருளைப்பெற்றானாகில் வெறியனையுடையவொருவன்மதுவுண்டு மகிழ்ந்தாற்போலும் என்பதாம். ☼ ஆல் - அசை.— பெறினெனவே-அவன் ஊழாலலது- தன்னாலே பெறுமைபெற்றம். பேதைமையும், செல்வக்களிப்பும், ஒருசேர உடைமையால்அவன்செய்காரியங்கள்- மையலும், மதுக்களிப்பும், ஒருசேர் வுடையவன்செய்காரியங்கள் போலே தலைதடுமாறுமென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் அவன் செல்வமடைந்தவிடத்துப் பயன்கொள்ளும்விதம் சொல்லப்பட்டது.] (அ)

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட் ..........*
பீழை தருவதொன் றில் ........................................*

(இ-ள்.) பிரிவின்கண்-(பின்) பிரிவுவந்தவிடத்து- (அப்பிரிவு)— தருவது- (இருவருக்கும்)தருவதாகிய பீழையொன்று-துன்பமொன்று-இல்-இல்லை-(ஆதலால்) - பேதையார் - மூடரது - கேண்மை- (தம்முட்கொண்ட)நட்பு-பெரிதினிது - மிகவுமினிது, (எ-று.) (கருத்து) பிரிவினிடத்துத் துன்பமில்லை அறிவில்லார் நட்புமிகவுமினிது என்பதாம். ☼ தினந்தோறும் தேய்ந்துவருதலால் துன்பந்தாராதாயிற்று. புகழ்வார்போன்று பழித்தபடி. [இதனால் அவனது நட்பின்குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்....... .....*
குழாஅத்துப் பேதை புகல்...................................*

(இ-ள்.) சான்றோர்-பெரியோரது-குழாஅத்து-சபையினிடத்து- பேதை-மூடனானவன்-புகல்- புகுதல்—கழாஅக்கால் - கழுவாதகாலை-(அசுத்தமிதித்தகாலையென்றபடி) - பள்ளியுள் -(இன்பந்தருஞ்) சயனத்தின்மேல்-வைத்தற்று -வைத்தல்போலும்.(எ-று.) (கருத்து) பெரியோர் சபையிலறிவில்லான் புகுதல் கழுவாதகாலைச்சயனத்தில்

வைத்தல்போலும் என்பதாம். ※ ஆல் - அசை.— அதனால் அச்சபையும் இழிவுசெய்யப்படும் விதம்போல் இதனால் இச்சபையும் இழிவுசெயப்படுமென்பதாம் [இதனால் அவன் சபையிடத்து இருக்கும்விதம் சொல்லப்பட்டது. (௰)



## அ௫-ஆம்-அதி - புல்லறிவாண்மை.



இனி மற்றைப்புல்லறிவாண்மை சொல்லுகின்றார். அதுபுல்லிய அறிவை ஆளுதற் றன்மையென விரியும்.

அஃதாவது - தான்சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவனாகமதித்து உயர்ந்தோர் மேலே சொல்லப்படும் உறுதிச் சொல்லைக் கொள்ளாமை.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை....... ※
யின்மையா வையா துலகு ............................... ※

(இ-ள்.) இன்மையுள்- (ஒருவனுக்கு) இல்லாமை பலவுள்ளும்-இன்மை-மிகுந்தஇல்லாமையாவது- அறிவின்மை - அறிவில்லாமை.- பிறிதின்மை-மற்றைப் பொருளில்லாமை யோவெனின் - (அதனை)- உலகு- உலகத்தார் - இன்மையா-(அப்படிப்பட்ட) இல்லாமையாக- வையாது-கொள்ளார். (எ-று.) (கருத்து) இல்லாமையுள்ளேயில்லாமையாவது அறிவில்லாமையாய் பொருளில் லாமையை யுலகத்தாரில்லாமையாக வெண்ணார் என்பதாம். ※ புல்லறிவாளர் செல்வமடைந்தவிடத்தும் இம்மை மறுமைப்பயனடையாமையால் அதனை இன்மையுளின்மையென்றும், நல்லறிவாளர்வறுமையடைந்தவிடத்தும் அப்பயனை யிழவாமையால் அதனை - இன்மை யாவையாதென்றும்; சொல்லினார். [இதனாற்புல்லறிவின் குற்றம்சொல்லப்பட்டது.]

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது.................. ※
மில்லை பெறுவான் றவம்.................................. ※

(இ-ள்.) அறிவிலான்- புல்லறிவுடையவன்-நெஞ்சுவந்து-மனமகிழ்ந்து-ஈதல்- (ஒருவனுக்கொன்று)கொடுத்தல் (கூடியதாயின் அதற்குக்காரணம்)- பெறுவான்-பெறுகின்றவனது — தவம்- நல்வினையே.-பிறிதியாதும்- வேறொன்றும்- இல்லை-இல்லை.(எ,று.) (கருத்து) அறிவில்லா னொருவனுக் கொன்றைக் கொடுத்தல் பெற்றுக் கொள்பவனது தவமாம் என்பதாம். ※ புல்லறிவாளரும்ஒரோவிட

த்தேமனமகிழ்ந்து கொடுத்தலால் அவரும் நல்வினை செய்வாரென் பார்க்கு-பெறுவான் விழ்பொருள் அடைந்தவன்போல்வதல்லது இம்மைநோக்கியாவது. மறுமைநோக்கியாவது ஈகின்றாரல்லாரென்ச் சொல்லியபடி [இதனால் புல்லறிவாளர் தம்மிடத்து நல்லவைசெய்தலறியாமை சொல்லப்பட்டது.] (உ)

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை ..................*
செறுவார்க்குஞ் செய்தலரிது ..............................*

(இ-ள்.) அறிவிலார்- புல்லறிவுடையவர்- தாம்-தாமே- தம்மை-தங்களை- பீழிக்கும்-வருத்தும்- பீழை-வருத்தமானது-செறுவார்க்கும்-வருத்துதற்கு உரிய பகைவர்க்கும் - செய்தல்-செய்தல் - அரிது-அரிதாம். (எ-று.) (கருத்து) அறிவில்லார் தங்களை வருத்தும் வருத்தமானது வருத்தப் படுத்தும் பகைவர்க்குஞ் செய்தலரிது என்பதாம். ❁ பகைவர்தாம் அறிந்தஒருதீங்கைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை பழிபாவமுதலான பலவும் எக்காலமும் செய்யமாட்டாமையால் அவர்க்கும் செய்தலரிதென்றார். [இதனால்அவர்தம்மிடத்துத்தீயவைசெய்தலேஅறிவரென்பதுமசொல்லப்பட்டது

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை.........*
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.....................*

(இ-ள்.) வெண்மையெனப்படுவது - புல்லறிவுடைமை யெனப்படுவது - யாதெனின்-யாதென்றால் - (அது) - ஒண்மையுடையம்யாம் நல்லறிவுடையோம்யாம் — என்னும் - என்று (தம்மைத்தாமே) நன்குமதிக்கும்- செருக்கு - மயக்கம். (எ,று.) (கருத்து) அறிவில்லாமையென்று சொல்லப்படுவ தியாதென்றால் நல்லறிவுடையோமென்னுமயக்கமாம் என்பதாம். ❁ வெண்மை - இளமை- அது அறிவு முதிராமை-உலகத்தார் இகழ்தல் அறிந்திருந்தும் அப்படி மதித்தலால்-மயக்கமென்றார். (௪)

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற.....................*
வல்லதூஉ மையந் தரும்..................................*

(இ-ள்·) (புல்லறிவாளர்) - கல்லாத - (தாம்) கல்லாதநூல்களையும்- மேற்கொண்டு - (கற்றவராக) மேவிட்டுக்கொண்டு- ஒழுகல் -நடக்குதல் கசடற -குற்றமற- வல்லதூஉம்- கற்றதொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும்- ஐயம்-ஐயத்தை- தரும்-(பிறருக்கு) விளைக்கும் -(எ,று) (கருத்து) கல்லாத நூற்களைக் கற்றோமென்று சொல்லுதல் கற்றநூற்களையுஞ் சந்தேகப்படுத்தும் என்பதாம். ❁ உண்டாயினெ

ன்பது வருவிக்கப்பட்டது.—ஐயம்-இவர் அந்நூலிலே வல்லவரே ன்பதும்இப்படித்தானிருக்குமோ வென்பது. (௫)

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்.................. *
குற்ற மறையா வழி.................................. *

(இ-ள்.) (புல்லறிவாளர்)-தம்வயின்-தம்மிடத்து உண்டாகும்-குற்றம்-குற்றங்களை-மறையாவழி-(அறிந்து) கடியாராயின்-அற்றம்-மறைக்கத்தக்க அவயவத்தை-மறைத்தலோ-(ஆடையால் மறைத்தவராகத் தம்மை நினைத்தலும்-புல்லறிவு-அற்பவறிவாகு(ம். எ)-று.) (கருத்து) அறிவில்லார் குற்றங்களைக் கடியாராயின் அஃ(து) அறிவில்லாமை என்பதாம். ❋ குற்றமறைத்தலாவது-அவைக்அறி ல்லாமற் போகச்செய்தல். மறைக்கப்படுமவை பலவுள்ளும் உயர்ந்தவைகளையெல்லாம் மறையாது தாழ்ந்தவொன்றையே மறைத்து அவ்வளவிலே தம்மையும் உலகநடை யுள்ளவராக மதித்தலும் புல்லறி வென்பதாம் [இவைமூன்றுபாட்டாலும் அவர் தம்மை வியத்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

அருமறை சோரு மறிவிலான் செய்யும்.......................... *
பெருமிறை தானே தனக்கு.................................. *

(இ-ள்.) அருமறை-பெறுதற்கரிய உபதேசப்பொருளை-சோரும்-(பெற்றாலும்) உட்கொள்ளாது போக்கும்-அறிவிலான்-புல்லறிவாளன்-(அவ்வுறுதியறியாமையால்)-தானே-தானே-தனக்கு-தனக்கு-பெருமிறை-மிகுந்தவருத்தத்தை-செய்யும்-செய்வான்.(எ-று.) (கருத்து) இரகசியப்பொருளைப் போக்குமறிவில்லான்தனக்குத்தானே வருத்தத்தைச் செய்வான் என்பதாம். ❋ மிகுந்தவருத்தம்-பொறுத்தற்கரிய துன்பம். (௭)

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்...................... *
போஒ மளவுமோர் நோய்...................................... *

(இ-ள்.) (புல்லறிவாளன்)-ஏவவும்-(தனக்கு) உறுதியானவைகளை (அறிவுடையார்) சொல்லவும்-செய்கலான்-செய்யான்.—(அதுவல்லாமல்)-தான்-தானாகவும்-தேறான்-(இவை செய்பவையென்று) அறியான்.—அவ்வுயிர்-அந்தவுயிர்-போமளவும்-(உடம்பைவிட்டுப்)போமளவும்-ஓர்நோய்-(பூமிக்குப் பொறுத்தற்கரிய) ஒருநோயாம். (எ-று.) (கருத்து) அறிவில்லான்பிறரேவவுந்தனக்குறுதிகளைச் செய்யான் தானாகவுந் தெளியான் என்பதாம். ❋ உயிர்தான் அறியுந்தன்மையதாயிருந்தும் நின்றதேகவசத்தால் மயங்குந் தன்மையதாய் வேறுபடுதலால் அவ்வுயிரொன்றும், அதனினீங்கிய பொழுதே

அதற்கு இரண்டினுள் ஒன்றுகூடுதலால்- போமளவுமென்றும்,குலமலை முதலானவைகளைச்சுமக்கின்றபூமிக்குஇப்பாவவுடம்புபெருஞ்சுமையாய்த் துன்பஞ்செய்தலால்-ஓர் நோயென்றும்,சொல்லினார்.

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான் ...........*
கண்டானாந் தான்கண்ட வாறு ........ .................. *

(இ-ள்.) (தன்னை எல்லாமறிந்தவனாகமதித்தலால்)-காணாதான்-(பிறரால்ஒன்றை) அறியுந்தன்மையில்லாதவனை-காட்டுவான் - அறிவிக்கப்புகுவோன்-தான்காணான் - (அவனாலேபழிக்கப்பட்டுத்)தான் அறியாதவனாய்முடியும்.- காணாதான் - (இனி)அவ்வறியுந் தன்மையில்லாதவன்- தான்கொண்டது விடாமையால் - தான்கண்டவாறு - தான் அறிந்தவிதத்தால் - கண்டானாம்-(அதனை)அறிந்தவனாய்முடியும். (எ-று ) (கருத்து)ஒன்றுமறியாதவனைக்காட்டுவான்தானறிவில்லாதவனாவான் என்பதாம். ✲ புல்லறிவாளனுக்கு நல்லறிவைவருவித்தல் ஒருவழியாலும் பொருந்துவதன்றென்பதாம். (௯)

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத் ...........*
தலகையா வைக்கப் படும் ...................... ............ *

(இ-ள்.) உலகத்தார் - உயர்ந்தோர்பலராலும் - உண்டென்பது-உண்டெனப்படுகிறபொருளை - இல்லென்பான் - (தன் புல்லறிவால்)இல்லையென்று சொல்லுவோன்-(மனிதனென்று நினைக்கப்படான்-)— வையத்து - பூமியிலே - அலகையா - (காணப்படுகிற)ஒருபேயென்று-வைக்கப்படும்-நினைக்கப்படுவான். (எ-று.) (கருத்து) பெரியோருண்டென்பதை யில்லையென்பவன் பேயென்றெண்ணப் படுவானென் பதாம். ✲ கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும், முதலாக அவர் உண்டெனப்படுமவை பலவாயினும் சாதியொருமைபற்றி உண்டென்பதென்றும், பேயும் இல்லையென்பவனும்தானேவேண்டியவை சொல்லலால் ஒத்தலும், வடிவால் ஒவ்வாமையும் உடைமையால் தன்னுடம்பை மறைத்து மக்களுடம்பிலே தோன்றுதல் வல்லவலகையென்றும், சொல்லினார். [இவை நான்குபாட்டாலும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமையினது குற்றம் சொல்லப் பட்டது.]





# ௮௬ - ஆம், அதி - இகல்.



இனி அவைகளால்வரும் குரோதகாமங்களுள் அரசர்க்குக் குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அதனால் வருமவைகளைச் சொல்லத் தொடங்கி முதலிலே இகல்சொல்லுகின்றார். அஃதாவது இருவர் தம்முள்ளே போர்செய்து வலிமைதொலைதற்கு ஏதுவாகிய மாறுபாடாம்.

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்.......... ✲
பண்பின்மை பாரிக்கு நோய் ...................................... ✲

(இ-ள்,) எல்லாவுயிர்க்கும்-சகலவுயிர்களுக்கும் - பகலென்னும்-(பிறவுயிரோடு)கூடாமையென்னும்-பண்பின்மை - தீயகுணத்தை-பாரிக்கும்-வளர்க்கும்-நோய்-குற்றமாவது - இகல் - மாறுபாடாம்-என்ப - என்று (நூலோர்) சொல்லுவர். (எ-று.) (கருத்து) எல்லாவுயிர்க்குந் தீயகுணத்தை வளர்க்குங்குற்றமாவது மாறுபாடாம். என்பதாம். ✲ மக்களையும் விலங்குகளோடு ஒப்பாக்குவதென்பதுதோன்ற-எல்லாவுயிர்க்குமென்றும், கூடாத தீக்குணத்தை நடுநின்றுவிளைத்தலால் - பகலென்னும் பண்பின்மையென்றும் சொல்லினார். [இதனால் மாறுபாட்டது குற்றம்சொல்லப்பட்டது. (௧)

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி ....................... ✲
யின்னாசெய் யாமை தலை........................................ ✲

(இ-ள்.) பகல்-(தம்மோடு) கூடாமையை - கருதி - நினைத்து-பற்றா - வெறுப்பவைகளை - செயினும்- (ஒருவன்) செய்தானாயினும் -இகல்கருதி-(அவனோடு)மாறுபடுதலைக்குறித்து - இன்னா - துன்பந்தருமவைகளை - செய்யாமை - (தாம் அவனுக்குச்) செய்யாமை-தலை-உயர்ந்தது. (எ-று.) (கருத்து)ஒருவன் வெறுப்பானவற்றைச்செய்தானாயினுந் துன்பந்தருமவைகளைச் செய்யாமை தலைமை என்பதாம். ✲ துன்பந்தருமவைகளைச் செய்யில் பகைமை வளரத் தாம் தாழ்ந்துவருகலாலும், ஒழியில் அவ்வெறுப்பவைகள் ஒய்ந்துபோகத்தாம் ஓங்கிவருதலாலும், செய்யாமைதலையென்றார். (௨)

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்............ ✲
தாவில் விளக்கந் தரும் ........................................... ✲

(இ-ள்.) (ஒருவன்)-இகலென்னும் - மாறுபாடெனப்படுகின்ற-எவ்வம்-துன்பத்தைச்செய்யும்-நோய்- நோயை-நீக்கின் - (தன்மனத்திலிருந்து நீக்குவானாயின்-( அந்நீக்குதல் )- தவலில்லா- (எந்நாளும்) அழிவில்லாமைக்கு ஏதுவாகிய-தாவில்-கெடாத - விளக்கம்-புக

ழை- தரும்- (அவனுக்குக்) கொடுக்கும். (எ-று.) (கருத்து) ஒருவன் மாறுபாட்டை நீக்குவானாயி னது புகழைத்தரும் என்பதாம். ✻ யாவரும் நட்பாதலால் எல்லாச்செல்வமும் பெற்றுக் கொடைமுதலான காரணங்களால் புகழ்பெறுமென்பதாம். (௩)

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந் ............ ✻
துன்பத்துட் டுன்பங் கெடின் ...................... ✻

(இ-ள்.) இகலென்னும்-மாறுபாடெனப்படுகின்ற-துன்பத்துள்-துன்பங்கள்பலவினும்- துன்பம் - மிகுந்ததுன்பம் - கெடின்-(ஒருவனுக்கு இல்லையாயின்)- (அவ்வில்லாமை)- இன்பத்துள் - இன்பங்கள்பலவினும்-இன்பம்-மிகுந்தவின்பத்தை - பயக்கும் - (அவனுக்குக் கொடுக்கும். (எ-று.) (கருத்து) ஒருவனுக்கு மாறுபாடாகியதுன்பநீங்குமாயினது மிகுந்த வின்பத்தைத் தரும் என்பதாம். ✻ துன்பத்துட்டுன்பம்- மாறுபாடுடையோன் பலரோடும் போர்செய்து வலிமைதொலைதலால் யாவர்க்கும் எளியவனாயிருப்பது. அதனை வினாவிலே தருதலால்-இகலென்னு மெவ்வமென்றார். இன்பத்துளின்பம்-மாறுபாடில்லோன் யாவரும் நட்பாதலால் எல்லாப் பயனும் பெற்றிருப்பது. (௪)

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே ............... ✻
மிகலூக்குந் தன்மை யவர் ............................ ✻

(இ-ள்.) இகல்-மாறுபாடு(தம்மனத்துத் தோன்றியவிடத்து)-எதிர்சாய்ந்தொழுகவல்லாரை- (அதனை ஏற்றுக்கொள்ளாமற்) சாய்ந்து நடக்கவல்லவரை- மிகலூக்கும் - வெல்லநினைக்கும் - தன்மையவர்- தன்மையையுடையவர் - யாரே-யாவர். (எ-று.) (கருத்து) மாறுபாட்டை நீக்கும்வல்லவரை வெல்லநினைப்பவர் யார் என்பதாம். ✻ மாறுபாட்டை நீக்கிநடத்தல் வேந்தருக்கு எவ்விதத்தாலும் அரிதாகலால் வல்லாரையென்றும், அவர் யாவர்க்கும் நட்பாகலால் அவரை வெல்லநினைப்பவர் யாவரும் இல்லையென்றும், சொல்லினார். [இவை நான்குபாட்டாலும் மாறுபடாதவர்க்குவரும் நன்மைசொல்லப்பட்டது.

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை ..................... ✻
தவலுங் கெடலு நணித்து ............................... ✻

(இ-ள்.) இகலின்-(பிறரோடு) மாறுபடுதலிலே- மிகல் - மிகுதல்- இனிதென்பவன்-(எனக்கு) இனிதென்று செப்பவனது - வாழ்க்கை - உயிர்வாழ்க்கை-தவலும் - பிழைபடுதலும்- (நணித்து) சிறிதும்பொழுதிலுண்டாம்.—கெடலும் - முழுதுங்கெடுதலும் - நணித்து - சிறிதும்பொழுதிலுண்டாம். (எ-று.) (கருத்து) மாறுபடுதலை யினிதென்பவன் வாழ்க்கையானது வழுவுதலுங் கெடுதலு முண்டாம் என்ப

தாம். ※ மிகுதல்-மேலுமேலு மெழும்பல். இனிதென்பது - தான் வெல்லுதல் குறித்தல்- பிழைபடுதல் - வறுமையாலே துன்பப்படுதல்- முழுதுங்கெடுதல் - இறத்தல்.— பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உண்டாகு மென்பதாம். (௬)

மிகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்மேவு ........ .... ※
இன்னா வறிவி னவர் ........................................ ※

(இ-ள்.) இகன்மேவும் - மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய-இன்னா-துன்பஞ்செய்கின்ற-அறிவினவர் - அறிவையுடையவர்-மிகன்மேவும் - வெற்றிபொருந்துதலையுடைய - மெய்ப்பொருள்- நீதிநூற்பொருளை -காணார்- அறியமாட்டார். (எ-று.) (கருத்து) மாறுபாட்டாற் றுன்பஞ்செய்யுமறிவினையுடையவர் நீதிநூற்பொருளையறியார் என்பதாம். ※ இன்னாவறிவு- தமக்கும்பிறர்க்கும் தீங்கை உண்டாக்கும் அறிவு.-வெற்றிவழிநின்றார்க்கு உண்டாவதுகாணப்படும்பிரயோசனத்தையுடையதாகலால் மெய்ந்நூலெனப் பட்டது. மாறுபாட்டினாலே அறிவுகலங்குதலால்காணாரென்றார். [இவையிரண்டுபாட்டாலும் மாறுபட்டவர்க்கு வரும் தீங்கு சொல்லப் பட்டது.]

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை ........ .................... ※
மிகலூக்கி னூக்குமாங்கேடு ............... .... ............ ※

(இ-ள்.) இகலிற்கு-(தன்னுள்ளத்து) மாறுபாடு தோன்றியவிடத்து-எதிர்சாய்தல்-(அதற்கு) எதிரிடுதலையொழிதல்-ஆக்கம் - (ஒருவனுக்கு) ஆக்கமாம்.-அதனை-அம்மாறுபாட்டிலே - மிகல்- மிகுதலை-ஊக்கின் -மேற்கொள்ளுவானாயின் - கேடு-கேடும்-ஊக்குமாம்-(தன்னிடத்துவருதலை) மேற்கொள்ளும். (எ-று.)(கருத்து)மாறுபாட்டிற் கெதிர்சாய்தலேசெல்வ மதைமேற்கொள்ளிற்கேடாம் என்பதாம். ※ எதிர்தல் ஏற்றுக்கொள்ளுதல். சாய்ந்தபொழுதே வருதலால்-சாய்த லாக்கமென்றார். (அ)

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை ........ ..... . ......... ※
மிகல்காணுங் கேடு தரற்கு............ ........ .... ......... ※

(இ-ள்.) (ஒருவன்)-ஆக்கம்வருங்கால் - (தன்னிடத்து) ஆக்கம்வரும்போது-(காரணம் உண்டாயினும்)-இகல்-மாறுபாட்டை - காணான்-நினையான்.—கேடுதரற்கு - (தனக்குக்) கேடுசெய்து கொள்ளுமிடத்து-(காரணம் இல்லாதிருந்தும்)-அதனை - அதனிடத்தே - மிகல்-மிகுதலை காணும் - நினைப்பான். (எ-று.) (கருத்து)ஒருவன்செல்வம் வரும்போது மாறுபாட்டைக்காணான் கேடுவரும்போ ததனைநினைப்பான் என்பதாம். ※ மாறுபாட்டால் வருங்கேடு பிறரால்அன்றெ

ன்பது தோன்ற-தாற்சென்றார். ஆக்கக்கேடுகட்கு முன் மாறுபடாமையும், படுதலும் உண்டாமென்பதாம். (௯)

இகலானா மின்னாத வெல்லா நகலானா ............ ※
நன்னய மென்னுஞ் செருக்கு ... ... ............ ※

(இ-ள்.) இகலான்-மாறுபாடொன்றினாலே- இன்னாதவெல்லாம்-துன்பஞ் செய்பவையெல்லாம்—ஆம் - உண்டாகும்- நகலான்-நட்பொன்றினாலே -நன்னயமென்னும் - நல்லநீதியென்னும், செருக்கு-பெருஞ்செல்வம்—ஆம். உண்டாகும். (எ-று.) (கருத்து) மாறுபாட்டாற்றுன்பமெல்லாமுண்டாம் நட்பாற்செல்வமுண்டாமென்பதாம். ※ இன்னாதன-வறுமை பழிபாவங்கள் முதலானவை. நகல். மகிழ்தல். அதுவும்செருக்கென்பதும் தன்றன்காரணங்களுக்காயின நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். [இவைமூன்றுபாட்டானும் அவ்விருமையுஞ்சொல்லப்பட்டன.] (௰)



## ௮௭-ஆம் - அதி - பகைமாட்சி.



அஃதாவது-அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையால்
பகையை மாட்சிமைப் படுத்தல். அரசர்க்கு எவ்வழியானும்
பகையில்லாமைகூடாமையால் மேலேபொதுவகையால்
விலக்கப்பட்ட இகலை இவ்விடத்தே சிறப்பு வகை
யால்விதிக்கின்றாராகலால் இது அதன்
பின் வைக்கப்பட்டது.

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா ............ ※
மெலியார் மேன் மேக பகை ............ ※

(இ-ள்.) வலியார்க்கு-(தம்மின்) வலியவர்க்கு- மாறேற்றல்- பகையாயெதிர்தலை - ஒம்புக-ஒழியக்கடவர்.— மெலியார்மேல்- மற்றைமெலியவர்க்கு-பகை- பகையாகுதலை-ஒம்பா-ஒழியாமல்-மேக- விரும்பக்கடவர்.(எ-று.)(கருத்து) வலியவர்க்கெதிர்தலை நீங்கக்கடவர்மெலியவர்க்குப் பகையாதலை விரும்பக்கடவர் என்பதாம். ※ வலியாரொன்றவிடத்துத் துணைவலியும் அடங்கலால் மெலியாரென்றவிடத்துத் துணைவலியில்லாமையும் கொள்ளப்படும். அத்துணைதான்-படைபொருள் முதலாகிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை நீதிவழியொழுகல் முதலாகிய ஒற்றுமைத்துணையும்,எனவிரண்டா

ம், அவ்விரண்டுமில்லாளை வெல்வார்க்கு வலிமை தொலையாமையா
ல் அவனோடு பகைத்தல்விதிக்கப்பட்டது. [சிங்கநோக்காகிய இதனு
ள் பகைமாட்சி பொதுவகையாலே சொல்லப்பட்டது.] (௧)

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா.... ............*
னென்பரியு மேதிலான் றுப்பு................ ............*

(இ-ள்.) (ஒருவன்)-அன்பிலன்-(தன்சுற்றத்தார்மேல்) அன்பிலன்.
—ஆன்றதுணையிலன் - (அதுவேயன்றி) வலியதுணை யிலன்.- தான்
றுவ்வான் - (அதன்மேல்) தான்வலியிலன்- (அப்படிப் பட்டவன்)
ஏதலான்-(தன்மேல்வந்த) பகைவனது-துப்பு வலிமையை- என்ப
ரியும் எப்படித்தொலைப்பான்; (எ-று.) (கருத்து) அன்பும் துணையு
ம்வலிமையு மில்லாதவன் பகைவனது வலிமையை யெப்படி நீக்கு
வான் என்பதாம். ❁ சுற்றமும் முன்சொல்லப்பட்ட இருவகைத்து
ணையும் தன்வலியும்இல்லானாகலால் அவன்மேல்செல்வார்க்குவலிவள
ர்வதல்லாமல் தொலையா தென்பதாம். (௨)

அஞ்சு மறியா னமைவில னீகலான்.............................
றஞ்ச மெளியன் பகைக்கு.......... ....... ..... ..........*

(இ-ள்.) (ஒருவன்)-அஞ்சும்-(அஞ்சவேண்டாதவைகளுக்கு) அஞ்
சுவான்- அறியான்-(அறியவேண்டுமவைகளை) அறியான்.— அமை
விலன்-(பிறரோடு) பொருத்தமிலன்-ஈகலான் - (இவைகளின் மே
லும் யாவரிடத்தும்) உலோபகுணமுடையவன்.— (இப்படிப்பட்
டவன்)-பகைக்கு-பகைவர்க்கு - தஞ்சமெளியன்- மிகவெளியனாவா
ன். (எ-று.) (கருத்து) அஞ்சுபவனு மறியாதவனு நட்பில்லாதவனு
முலோபனுமானவன் பகைவர்க் கெளியவனாவான் என்பதாம். ❁
தஞ்சமெளியனென்பவை - ஒருபொருளைக்குறித்துவந்தபலசொல்-
இந்நான்குகுற்றமு முடையான் பகையில்லாமனும் அழியு மாகலா
ல்தஞ்சமெளியனென்றார். (௩)

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும் .... ........*
யாங்கணும் யார்க்கு மெளிது.............. ................*

(இ-ள்.) (ஒருவன்) -வெகுளி கோபத்தினின்றும்-நீங்கான்-நீங்கா
தவன்-நிறையிலன் -(அதுவேயன்றித்தா) னிறையுடைய னல்லன—
(அவன்மேற்செல்லுதல்)- எஞ்ஞான்றும் - எந்நாளும்-யாங்கணு
ம்-எவ்விடத்தும்- யார்க்கும்-யாவருக்கும் - எளிது-எளிமை.(எ-று.)
(கருத்து) கோபத்தையு நிறை யில்லாமையு முடையவன் பகைவர்
க்கெளியவனாவான் என்பதாம் ❁ நிறை-மறைபிறரறியாமை-இவன்
கோபகுணமுடையவனாகலாலும், ரகசியத்தை வெளிப்படுத்தலாலு

மீஇவன்மேலே போர்க்குச் செல்வார்க்குக் காலமும்இடமும்வலியு ம்அறிந்து செல்லுதல் வேண்டுவதில்லையாயிற்று. (௬)

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்...*
பண்பிலன் பற்றார்க் கினிது..... .............. ......... ......*

(இ-ள்.) (ஒருவன்)-வழிநோக்கான் - நீதிநூலைக்கல்லான்.-வாய்ப் பனசெய்யான்-(அது) விதித்ததொழில்களைச் செய்யான்.— பழி நோக்கான்-(தனக்குவரும்) பழியைப்பாரான்.—பண்பிலன்-குண முடையனல்லன்.—(அவன்பகைமை)பற்றார்க்கு - பகைவர்க்கு-இ னிது-இன்பம். (எ-று.)(கருத்து)நீதிநூல்கல்லாதவன்விதித்தனசெ ய்யாதவன் பழிநோக்காதவன் குணமில்லாதவன்பகைவர்க் கெளிய னுவான் என்பதாம். ❋ பழையோராதியாக வழங்கிவருதலால் வழி யென்றும்தப்பாது பிரயோசனப்படுதலால்- வாய்ப்பனவென்றும், இக்குற்றங்களுடையவன் தானே அழிதலால் பற்றார்க் கினிதென்று ம், சொல்லினர். (௭)

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்..........*
பேணாமை பேணப் படும் ........... ... ..... ..............*

(இ-ள்.) காணாச்சினத்தான்- (தன்னையும்பிறரையும்) அறியாமைக் குன்றுவாகிய கோபத்தையுடையவன் (யாவன்.)- கழிபெருங்காம த்தான்-மேலுமேலும் வளராநின்ற மிகுந்த காமத்தையுடையவன் (யாவன்.) - பேணாமை-(அவரதுபகைமை) - பேணப்படும்-விரும் பிக்கொள்ளப்படும். (எ-று.) (கருத்து) கோபத்தையுங்காமத்தையு முடையவன் பகைவர்க்கெளியன் என்பதாம். ❋ முன்சொல்லப்ப ட்டவனுக்குயாவரும்பகை யாகலாலும், பின்சொல்லப் பட்டவனு க்குக்காரியம் தோன்றாமையாலும், தாமே அழிவரென்பது பற்றி பேணாமை பேணப்படுமென்றார். (௮)

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து ....*
மாணாத செய்வான் பகை.................................*

(இ-ள்.) அடுத்திருந்து-(தொழிலைத்) தொடங்கியிருந்து- மாணா த-(அதற்கு) ஏற்காதவைகளை-செய்வான் - செய்பவனது- பகை-ப கைமையை-கொடுத்தும் - (சிலபொருள் அழியக்) கொடுத்தாயினு ம்—மன்ற-நிச்சயமாக-கொளல்வேண்டும் - கொள்ளுதல்வேண்டும். (எ-று.) (கருத்து) ஏலாதவற்றைச் செய்பவன் பகைமையைப் பொ ருள்கொடுத்துங்கொள்ளல்வேண்டும் என்பதாம். ❋ஏற்காதவைமெ லியவனுயிருந்து துணிதலும், வலியவனுயிருந்து தணிதலும், மு

தலாயின.— அப்பொழுது அதனாலே சிலபொருள் அழியினும்
ன்னே பலபொருள்களைப் பெறுதற்குச் சந்தேகம் இல்லாமையால்
கொடுத்துங் கொளல்வேண்டுமன்றவென்றார். [இவை ஆறு பாட்
டாலும் அது சிறப்புவகையாலே சொல்லப்பட்டது.] (எ)

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்...... ............ *
இனனிலனா மேமாப் புடைத்து........... .........

(இ-ள்.) (ஒருவன்)-குணனிலனாய்-குணமொன்று மிலனாய்-கு
ம்பலவாயின் - (உடைய) குற்றம்பலவாகிய விடத்து—இனனில
ம்-(அவன்) துணையில்லாதவனாகும்.—(அவ்விலனாகுகையே)- மா
ளர்க்கு-(அவன்) பகைவர்க்கு - ஏமாப்புடைத்து - துணையாகுகை
யையுடைத்து. (எ-று.) (கருத்து) குணமில்லாதவனாய்ப்பலகுற்றமு
டையவனாகில் துணையில்லாதவனாவான் அவன் பகைவர்க்கெளிய
என்பதாம். ❋ குணம்-இறைமாட்சியுள்ளே சொல்லப்பட்டவை.—
குற்றம்-இவ்வதிகாரத்துள்ளே சொல்லப்பட்டவையும், மற்றும்இப்
படிப்பட்டவையும், ஆம்—துணை-சுற்றநட்புப் பொருள் படை
லானவை.—பகைவர்க்கு இவ்வழியால் உண்டாகும் பயன் தா
ண்டாமாகலால் - ஏமாப்புடைத்தென்றார்.

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா..................
வஞ்சும் பகைவர்ப் பெறின்.... ......... .........

(இ-ள்.) அறிவிலா-(நீதியை) அறிதலில்லாத-அஞ்சும்-அஞ்சு
ற-பகைவர்-பகைவரை - பெறின்-பெற்றால்-செறுவார்க்கு-(அவ
வெல்வார்க்கு-சேண்- உயர்வுள்ள- இன்பம் - இன்பங்கள் - இகவா
நீங்கா. (எ,று.) (கருத்து)நீதியையறியாதபகைவரைப் பெற்றால்வெ
ல்பவர்க்கின்பமாம் என்பதாம். ❋ உபாயமறிதலும், அறிந்தால்செ
ய்துமுடிக்குந்திடமும், இல்லாதவரோ பகைவராதல் கூடாமையால்
பெறினென்றும், அவரை அறிந்து மேற்சென்ற பொழுதே ப
யில்லாமையும், செல்வமும், ஒருசேர அடைதலாலே-சேணுடை
ன்ப மிகவாவென்றும், சொல்லினார்,

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்றும்....
மொல்லானை யொல்லா தொளி... ......... .........

(இ-ள்.) கல்லான்-(நீதி நூல்களைக்) கல்லாதவனோடு- வெகுளும்
கைத்தலால்வரும்-சிறுபொருள் - எளியபொருளை-ஒல்லானை- அ
யாதவனை-எஞ்ஞான்றும் - எந்நாளும்-ஒளி-புகழ் - ஒல்லாது-அ
யாது. (எ,று.) (கருத்து) கல்லாதவனுடன் பகைத்தலால்வரும்
ருளை யடையாதவனைப் புகழடையாது என்பதாம். ❋ சிறு பொரு

ன்-முயற்சி சிறிதாகிய பொருள். நீதியறியாதவனை வெல்லுதல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதவனை வெற்றியால்வரும் புகழ் கூடாதென்பதாம். ஆகவே இச்சிறிய முயற்சியாலே பெரிய பயனடைகவென்றபடியாயிற்று. [இவைமூன்றுபாட்டாலும் அதனாலாகியபயன்சொல்லப்பட்டது.] (௰)

## அஅ-ஆம்-அதி-பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது-மாட்சிமைப்படாத பகையை ஆக்குதற்குற்றமும், முன்னாய்நின்ற பகையுள்-நட்பாக்குந்தன்மையதும், அயலாக்குந்தன்மையதும், அவைகளிலேசெய்வதும், மற்றவைக்களையுந்தன்மையதும், அதனிடத்தேசெய்வனவும், களையுமடருவமும், களையாவற்போனல்படுமிழுக்கமும், என்று இவ்விதங்களை ஆராய்தல். இவையெல்லாம் மாட்சிமைப் படாத பகையினவாகலால் இதுபகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

பகையென்னும் பண்பி லதனை யொருவ............... ❋
னகையேயும் வேண்டற்பாற் றன்று.................. ❋

(இ-ள்.) ஒருவன்-ஒருவன்-பகையென்னும் - பகையென்றுசொல்லப்படும்-பண்பிலதனை - தீமையுண்டாக்குவதனை - நகையேயும்-விளையாட்டிடத்தேயாயினும் - வேண்டற்பாற்றன்று - விரும்புதற்றன்மையையுடையதன்று.—(நீதிநூல்) (எ-று.) (கருத்து) ஒருவன் பகையாகிய தீமைக்குணங்களை விளையாட்டிலும் விரும்பாதிருக்கக்கடவன் என்பதாம். ❋மாட்சிமைப்படாத பகையை ஆக்கிக் கொள்ளுதல் எவ்விதத்தாலும் தீமையே தருதலால் பண்பிலதென்றும் அதனை விளையாட்டிடத்து வேண்டினும் கோபமேவிளைந்து மெய்யாமாகலால்-நகையேயுமென்றும், வேண்டாமை பழமையோர்க்குரைவென்றற்கு-நீதிநூலமேல் வைத்தும், சொல்லினர். நீதிநூல் வருவிக்கப்பட்டது. (௧)

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க.......... ❋
சொல்லே ருழவர் பகை.............................. ❋

(இ-ள்.) (ஒருவன்)-வில்லேர்-வில்லையேராகவுடைய - உழவர்- உழவரோடு-பகைகொளினும் - பகைகொண்டாலும் - சொல்லேர்- சொல்லையேராகவுடைய - உழவர்-உழவரோடு-பகை-பகையை- கொள்ளற்க-

கொள்ளாதொழியக்கடவன். (எ-று.)(கருத்து) வீரர்பகையைக்கொண்டாலு மந்திரிகள் பகையைக் கொள்ளாதிருக்கக்கடவன். சொல்லேருழவர்-மந்திரிகள் என்பதாம். ❊ சொல்-ஆகுபெயராய் நீதிநூலின்மேல்நின்றது. வீரம் ஆலோசனை என்கிற ஆற்றல்களுள் வீரமேயுடையவரோடு பகைகொண்டால் கேடுவருவது நிச்சயமன்று. வந்தாலும் தனக்கேயாம். மற்றை ஆலோசனையுடையவரோடானால் தன்வமிசத்தோர்க்கும் தப்பாது வருதலால்-அதுகொளினும் இதுகொள்ளற்கவென்றார்; கொளினும் என்கிற உம்மையால் வில்லேருழவர்பகையும் ஆகாமைபெறப்படும்.— இரண்டு முடையவரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டாவாயிற்று. (௨)

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப் ..... ........ ............ ❊
பல்லார் பகைகொள் பவன் .. ...... ....... ....... ..... ❊

(இ-ள்.) தமியனாய்-(தான்) தனியனாயிருந்துகொண்டு- பல்லார்-பலரோடும்-பகைகொள்பவன் - பகையைக்கொள்வோன் - ஏமுற்றவரினும்-பித்தங்கொண்டவரினும் - ஏழை-அறிவிலன். (எ-று.) (கருத்து) தனித்திருந்து பலர் பகையைக்கொள்பவன் பித்தரிலு மறிவில்லான் என்பதாம். ❊ தனிமை-சுற்றநட்புப்படை முதலானவையில்லாமை.— மயக்கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும் பித்தங்கொண்டவர் அதனாலே தீங்கடையாமையால் தீங்கடைதலுமுடைய இவனை அவரினுமேழையென்றார்.—தீங்காவது- துணையுள்ளவிடத்தும் வெல்லுதல் சந்தேகமாயிருக்க அத்துணையில்லாமலும் பலரோடும் பகைகொண்டு அவரால் வேறுவேறு போர்செய்யிடத்தும் ஒருமுகமாகப் போர்செய்யிடத்தும், அழிந்தேவிடுதல். [இவைமூன்றுபாட்டாலும் பகைகொள்ளுதற் குற்றம் பொதுவினும் சிறப்பினும் சொல்லப்பட்டது.] (௩)

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன் .....❊
றகைமைக்கட் டங்கிற் றுலகு.... ........ .. ............ ❊

(இ-ள்.) பகை-பகையை-நட்பாக்கொண்டொழுகும் -(வேண்டியபோது வேறுபடுத்தித்தனக்கு) நட்பாகச்செய்துகொண்டு நடக்கும்—பண்புடையாளன் - இயல்பையுடைய அரசனது-தகைமைக்கண்-பெருமையுள்ளே - உலகு-உலகம்-தங்கிற்று-தங்கியது (எ-று.) (கருத்து)) பகையை நட்பாகக்கொண்டு நடக்குமரசன் பெருமைக்குள்ளேயுலகந்தங்கியதென்பதாம். ❊ வேறுபடுத்தல்-பகைநிலையினீக்குதல். ஒழுகல்-நீதிவழிநடத்தல். பெருமை-பொருள்படைஎன்கிறவிருக்கை ஆற்றல். அதன்வழிய தாதற்கு என்றும் வேறுபாடில்லாமையால் அத்துணிவுபற்றித் தங்கிற்றென்றார். (௪)

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ ...... .....*
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று..... ..........*

(இ-ள்.) தன்றுணை-தனக்கு உதவுந்துணையோவெனில்- இன்றா-இல்லை.—பகை-(நலிவுசெய்யும்) பகையோவெனில் - இரண்டு- இரண்டு-(இப்படியிருக்கிறபோது) - தானொருவன் ஒருவனாகிய தான்-அவற்றின்-அப்பகை யிரண்டனுள்-ஒன்று-(பொருந்திய தாகிய)ஒன்றை-இன்றுணையா-(அப்போதைக்கு) இனிய துணையாக - கொள்க-(செய்து)கொள்ளக்கடவன். (எ-று.) (கருத்து) தனக்குதவுந்துணையில்லை. வருத்தும்பகையிரண்டு. இவ்விரண்டிற்பொருந்தியதொன்றைக்கொள்ளக்கடவன் என்பதாம். ✲ பொருந்தியதாவது - மற்றதை வெல்லுதற்கு ஏற்றது—அப்பொழுது - அவ்வெல்லும் பொழுது.—வேறுபாடில்லாமல் செய்துகொள்க வென்றற்கு- இன்றுணையாகவென்றார். ஆலிரண்டும்-அசை. [இவையிரண்டுபாட்டாலும்நட்பாக்கற் றன்மையது சொல்லப்பட்டது.] (௫)

தேறினுந் தேறா விடினு மழிவின்கட் ....................*
றேறான் பகாஅன் விடல்......................... ..........*

(இ-ள்.) (பகைவன்)-தேறினும் - (முன்)தெளிந்தானாயினும்-தேறாவிடினும்-தெளிந்திலனாயினும்- அழிவின்கண்- (தனக்குப் புறத்தொருதொழிலால்) தாழ்வுவந்தவிடத்து - தேறான்- கூடானாகியும்-பகாஅன் - நீங்கானாகியும் - விடல் - (நடுவே) விட்டு வைக்கக் கடவன் (எ-று.) (கருத்து) பகைவன் தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினுந்தாழ்விடத்துக்கூடானாகியுநீங்கானாகியுமிருக்கக்கடவனென்பதாம். ✲ முன்தெளிந்தானாயினும் அப்போது கூடா தொழிகவென்றது-உள்ளாய்நின்று கெடுத்தனோக்கி.—தெளிந்திலனாயினும் அப்போது நீங்காதொழிகவென்றது - அவ்வழிவிற்குத் துணையாதனோக்கி. [இதனால் அயலாக்குந் தன்மையது சொல்லப்பட்டது.] (௬)

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க........ ........*
மென்மை பகைவ ரகத்து.... .... ................*

(இ-ள்.) நொந்தது-நொந்ததனை - அறியார்க்கு - (தாமாக) அறியாத நட்பினர்க்கு-நோவற்க-(தன்) னோவுசொல்லா திருக்கக் கடவன்.—மென்மை - வலியில்லாமையை - பகைவரகத்து-(அதைப்பார்த்திருக்கும்)பகைவரிடத்து - மேவற்க-மேவிட்டுக் கொள்ளாதிருக்கக்கடவன். (எ-று.) (கருத்து) நொந்ததை யறியார்க் குத் தன்னோவைச் சொல்லா திருக்கக்கடவன். வலியில்லாமையைப் பகைவரிடத்து மேவிட்டுக்கொள்ளா திருக்கக்கடவன் என்பதாம். ✲ பகை

வரிடத்தே செய்யலாகாதது சொல்லவந்தவர் - நட்பினரிடத்தேசெய்யலாகாததும் உடன் சொல்லினார். [இதனால் அவ்விருவகையிடத்தும் செய்வது சொல்லப்பட்டது.] (எ)

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும் ......... *
பகைவர்கட் பட்ட செருக்கு .................. *

(இ-ள்.) வகையறிந்து-(தான்தொழில்செய்யும்) வகையை அறிந்து-தற்செய்து - (அதுமுடித்தற்கேற்பத்) தன்னைப்பெருக்கி - தற்காப்ப (மறதி அடையாமல்) தன்னைக்காக்கவே - பகைவர்கண் - (தன்) பகைவரிடத்து-பட்ட-உண்டாகிய - செருக்கு - களிப்பு-மாயும்-கெடும். (எ-று.) (கருத்து) தொழில்வகையறிந்து தன்னைக்காக்கப் பகைவர்செருக்குங்கெடும் என்பதாம். ✲ வகை-வலியவனாய்த்தானே போர்செய்விதமும், மெலியவனானவளவிலே போர்விலக்கும்விதமும், முதலானவை.—பெருக்கல்- பொருள்படைகளாலே பெருகச்செய்தல்.--களிப்பு-இவ்வழிபால் வெல்வோமென்றெண்ணிமகிழ்ந்திருக்கல் இவ்விறுகுதல் அறிந்ததாமே அடங்குவமென்பதாம். [இதனாற்களையுந் தன்மையதனிடத்துச் செய்வன சொல்லப்பட்டன-]

இளைதாக முண்மரங் கொல்க களையுநர் ............ *
கைகொல்லுங் காழ்த்த விடத்து .................. *

(இ-ள்.) முண்மரம் -(களைய வேண்டுவதாகிய) முள்ளு மரத்தை-இளைதாக-இளையதாகிய நிலையிலே- கொல்க- களையக்கடவர்.—(அல்லாமல்)-காழ்த்தவிடத்து-முதிர்ந்தநிலையில் - (களையத்தொடங்கினால்)-களையுநர்- களைபவரது-கை-கையை- கொல்லும் - (அதுதானே) களையும். (எ-று.) (கருத்து) முள்ளாகிய மரத்தை யிளைமையிற் களையக்கடவர் அதுமுதிர்ந்தாற்களைபவர் கையைக் களையும் என்பதாம். ✲ (களையப்படுவதாகிய தம்பகையை அது மெலிதாகிய காலத்தே களைக அப்படிச்செய்யாமல் வலிதாகியகாலத்திலே களையத்தொடங்கினால் தம்மை அப்பகைதானே களையு மென்பது தோன்ற நின்றமையால் இது பிறிது மொழிதலணி) [இதனாற் களையும் பருவம் சொல்லப்பட்டது] (௯)

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர் ............ *
செம்மல் சிதைக்கலா தார் .................. *

(இ-ள்.) செயிர்ப்பவர் - (தம்மோடு) பகைப்பவரது - செம்மல்-தருக்கை-(கெடுக்கலாயிருக்க) - சிதைக்கலாதார் - (இகழ்ச்சியால்) கெடுக்காதவரசர் - உயிர்ப்ப-(பின்) மூச்சுவிடு மாத்திரத்திற்கு- மன்ற-நிச்சயமாக-உளரல்லர்- இருக்கின்றவரல்லர். (எ-று.) (கருத்து)

பகைப்பவர் செருக்கைக் கெடுக்காதவரிறப்பர் என்பதாம். ❊ அவ ர்வலியவராய்த் தம்மைக்களைதல் நிச்சய மாகலால் இறந்தாரேயாவ ரென்பதாம். [இதனால் களையாவழிப்படும் இழுக்கம் சொல்லப்பட் டது. (௰)

## ௮௯-ஆம்-அதி-உட்பகை.

அஃதாவது- புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்து அதுவெல்லும் ளவும் உள்ளாய்நிற்கும்பகை. இதுவும் களையப் படுவதி லேசேர்ந்ததாகலால் பகைத்திறம் தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு.........................❊
மின்னாவா மின்னா செயின் .......................................❊

(இ-ள்.) (ஒருவனுக்கு)- நிழனீரும்- (அநுபவிக்கப் படுவனவாகி ய)நிழலும் நீரும்- இன்னாத - (முன் இன்பஞ்செய்வன வாயினும்பி ன் னோய்செய்யுமவை - இன்னா-இனியனவல்லவாம்.-(அதுபோல்)- தமர்நீரும்-(தழுவவேண்டுவன வாகிய) தம்மவரியல்புகளும் - இன் னாசெயின்-(முன் இன்பஞ் செய்வனவாயினும் பின்) துன்பஞ்செ ய்யுமன்வ- இன்னாவாம்- இனியனவல்லவாம். (எ-று.) (கருத்து) ஒரு வனுக்கு நிழலுநீரு நோய்செய்யு மதுபோலத் தம்மினத்தாரியல்பு களுந் துன்பஞ்செய்யும் என்பதாம். ❊ நோய் - பெருங்கால் - பெரு வயிறுமுதலானவை.—தமரென்றதனால்- உட்பகையாதற் குரியஞா திகளெனவறிக. இன்னாசெயல்-முன்வெளிப்படாதிருந்து துணைப்ப ற்றவழி கெடுத்தல். (௧)

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக..................❊
கேள்போல் பகைவர் தொடர்பு ..................................❊

(இ-ள்.) வாள்போல் - வாள்போலே(வெட்டுவோமென்று வெளி ப்பட்டுநிற்கும்) - பகைவரை சத்துருக்களை - அஞ்சற்க - அஞ்சாதி ருக்கக்கடவர்.—(அப்படியில்லாமல்) - கேள்போல் - உறவினர்போ லே(மறைந்துநிற்கும்)-பகைவர்-பகைவரது - தொடர்பு - நட்பை- அஞ்சுக-அஞ்சக்கடவர். (எ-று.) (கருத்து) வெட்டுவோமென்னும் பகைவர்க் கஞ்சாதிருக்கக்கடவர். உறவினர்போலிருக்கும் பகைவர் க்கஞ்சக்கடவர். என்பதாம். ❊ முன்னே அறிந்து காக்கப்படுதலா ல்-அஞ்சற்கவென்றும், அப்படி அறிவும் காக்கவுங் கூடாமையால்

கெடுதல் நிச்சயமென்பதுபற்றி - அஞ்சுகவென்றும், சொல்லினர். - பின்செய்யும் பகையினும் கொடிதாகலாலும், காக்குங்காலம் அதுவாகலாலும், அஞ்சப்படுவது முன்செய்த அவர் நட்பாயிற்று. [இவையிரண்டுபாட்டாலும் உட்பகை யாகா தென்பது சொல்லப்பட்டது.] (௨)

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து .....................*
மட்பகையின் மாணத் தெறும் .....................................*

(இ-ள்.) உட்பகை-உட்பகையாயினோரை-அஞ்சி - பயந்து - தற்காக்க - தன்னைக்காத்துக்கொண்டு நடக்கக்கடவர்— (அப்படி நடவாதபோது) உலைவிடத்து - (தனக்கு) ஓர் தளர்ச் சிவந்தவிடத்து- மட்பகையின்-(ஆயவன்) மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல்— மாண-தப்பாமல் தெறும்!- (அவர்) கெடுப்பர். (எ-று.) (கருத்து) உட்பகைக்கஞ்சித் தன்னைக்காக்கக்கடவர்; காவாவிடிற் பகைவர் கெடுப்பர். என்பதாம். ※ காத்தல்-அவரணையாமலும், அவருக்கு உடம்படாமலும், பரிகரித்தல். பகைமைதோன்றாமல் உள்ளாயிருந்தே இறுத்தலால் கெடுதல் தப்பாதென்பதாம். (௩)

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா .........................*
வேதம் பலவுந் தரும் ..............................................*

(இ-ள்.) மனமாணா - (புறந்திருந் தியதுபோன்று) அகந்திருந்தாத-உட்பகை-உள்ளுட்பகை-தோன்றின் - (அரசனுக்கு) உண்டாமாயின்-(அது) இனமாணா-சுற்றம்- வசப்படாமைக்கு ஏதுவாகிய - ஏதம்பலவும்-குற்றம்பலவும் - தரும் - (அவனுக்குத்) தரும். (எ-று.) (கருத்து) அரசனுக்குட் பகையுண்டாயின் பலகுற்றமுந்தரும்என்பதாம். ※ அவை-சுற்றத்தாரை உள்ளாய்நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர்வேறுபட்டவிடத்தே தான் தேறாமையும்; பின் அவைகளால்விளைவனவும், ஆம். (௪)

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா ....*
னேதம் பலவுந் தரும் ..............................................*

(இ-ள்.) உறன்முறையான்-(புறத்தில்)உறவுமுறைத்தன்மையோடு கூடிய-உட்பகை-உட்பகையானது - தோன்றின்-(அரசனுக்கு)உண்டாயின்-(அது)-இறன்முறையான் - இறத்தன் முறைமையோடு கூடிய-ஏதம்பலவும்-குற்றம்பலவற்றையும் - தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்.(எ-று.) (கருத்து.) உறவின்முறை யுட்பகை யரசனுக்குத்தோன்றி லதுபல குற்றத்தையுந் தரும் என்பதாம். ※ அவை-புறப் பகைக்குத் துணையாய் நின்றே அது தோன்றாமல் கொல்லு

க்கைமுதலாகிய வஞ்சனைசெய்தலும், மந்திரிகண் முதலாகிய அங்கங்களைத்தேய்த்தலும், முதலானவை. (௫)

ஒன்றாமை யொன்றியார் கட்படினெஞ்ஞான்றும்...... *
பொன்றாமை யொன்ற லரிது ..................... *

(இ-ள்.) ஒன்றாமை-பகைமை - ஒன்றியார்கண் (தனக்கு) உள்ளாயினாரிடத்து படின்-உண்டாகுமாயின்-பொன்றாமை - இறவாமை-ஒன்றல்- (அரசனுக்குக்) கூடுதல் - எஞ்ஞான்று - எந்நாளும் - அரிது-அருமை. (எ-று.) (கருத்து) தனக்குள்ளாயினாரிடத்துப் பகையுண்டாயி னரசனுக்கிறத்தலைத்தரும். என்பதாம். ❈ பொருள்படை முதலாகிய உறுப்புக்களாலே பெரியனாகிய காலத்து மென்றற்கு-எஞ்ஞான்றுமென்றார். [இவைநான்குபாட்டாலும் அதனால்தனக்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது. (௬)

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே .......... *
யுட்பகை யுற்ற குடி......................... .............. *

(இ-ள்.) செப்பின்-செப்பினது- புணர்ச்சிபோல் - புணர்ச்சிபோல்- கூடினும் - (புறத்தே வேற்றுமை தெரியாமற்) கூடினாராயினும் -உட்பகை-உள்ளிடத்துப்பகை-உற்ற - உண்டாகிய—குடி - குடியிலுள்ளார்- கூடாதே-(அகத்தேதம்முட்) கூடார். (எ-று.) (கருத்து) உள்ளிற்பகைபொருந்திய குடியிலுள்ளார் செப்பின் மூடிபோற்கூடினாராயினுமன வொற்றுமையிற்கூடார். என்பதாம். ❈ செப்பின் புணர்ச்சி - செப்புமேன்மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. —அவர் உட்பகையால் மனம்வேறுபட்டமையால் புறப்பகைபெற்ற விடத்தே வேறுவேறாவரென்பதாம். (௭)

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு...... *
துட்பகை யுற்ற குடி...... ............. ....... ............ *

(இ-ள்.) (முன்வளர்ந்து வந்ததாயினும்) உட்பகையுற்றகுடி - உட்பகையுண்டாகிய குடியானது- அரம்பொருத-அரத்தினாலேதேய்க்கப்பட்ட - பொன்போல-இரும்புபோல-பொருது- (அதனாலே) தேய்க்கப்பட்டு-உரம்-வலிமை-தேயும்- தேய்ந்துபோம். (எ-று.) (கருத்து) உட்பகைபொருந்திய குடியானது அரத்தினாலே தேய்க்கப்பட்ட விரும்புபோலக் கெடும் என்பதாம். ❈ காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்ல மெல்லப் பரிசயித்தலால் வலிமைதேய்ந்துவிடு மென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் அவன்குடிக்கு வரும் தீங்குசொல்லப்பட்டது.] (௮)

எட்பகவன்ன சிறுமைத்தே யாயினு ............................ *
முட்பகை யுள்ளதாங் கேடு.................................... *

(இ-ள்.) உட்பகை- (அரசனது) உட்பகை - (அவன்பெருமையை நோக்க) -எட்பகவன்ன-எள்ளின்பிளவையொத்த-சிறுமைத்தேயா யினும்-சிறுமை யுடையதே யாயினும் - கேடு-(அப்பெருமையெல் லாம் அழியவரும்) கேடு- உள்ளதாம் - (அது) னகத்ததாம். (எ-று.) (கருத்து) உட்பகை யெட்பிளப்பிற் கொப்பான சிறிதாயினுங்கேடு ணடாம் என்பதாம். ❁ மிகவும்பெரியகேட்டுக்கு எல்லைவருமளவும் மிகவுஞ் சிறியஉட்பகை உள்ளே அடங்கியிருந்து வந்தால் வெளிப் பட்டு நிற்குமென்பதாம். [இதனாலது சிறிதென்று இகழப்படாதெ ன்பது சொல்லப்பட்டது.] (அ)

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட் ..................... *
பாம்போ டுடனுறைந் தற்று.......................... *

(இ-ள்.) உடம்பாடிலாதவர்-மனப்பொருத்த மில்லாதவரோடு— வாழ்க்கை-(ஒருவன்)கூடிவாழும் வாழ்வு- குடங்கருள் - ஒருகுடிசை யினுள்ளே-பாம்போடு-நாகப்பாம்போடு- உடனுறைந்தற்று - கூடி வாழ்ந்தாற்போலும். (எ,று.) (கருத்து) மனவொற்றுமை யில்லாரு டன் கூடிவாழும் வாழ்க்கையானது ஒரு குடிசையுள்ளே பாம்புடன் கூடிவாழ்தல்போலாம் என்பதாம். ❁ இடச்சிறுமையாலும்பழக்க த்தாலும் பாம்பினாலே கடிக்கப்படுதல் நிச்சயமாம் ஆகவே அவ்வு வமையால் அவனுயிர்க்கு முடிவுவருதல் நிச்சயமென்பதும்பெற்றும் [இதனாலே கண்ணோட்டஞ் செய்யாதவனாக் கடியக்கடவ னென்ப து சொல்லப்பட்டது.] (௯)



# கூய-ஆம்-அதி- பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது - பெரியாரைப்பிழைசெய்து நடவாமை இரட்டுற மொழிதலாலே பெரியாரென்பது.வலிமையினாலேபெரியராகியவே ந்தர் மேலும், தவத்தினாலே பெரிய ராகியமுனிவர் மேலும், நின்ற து. மேற்சொல்லாமல் குறைந்துநின்றதாகலால் இது கூரோ தத்தா ல்வரு மவைகளது முடிவில் வைக்கப் பட்டது.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்........... *
போற்றலு ளெல்லாந் தலை.......................... *

(இ-ள்.) ஆற்றுவார்- (எடுத்துக்கொள்ளப்பட்டவை யாவும்முடிக்க)வல்லாருடைய- ஆற்றல் - வல்லமைகளை - இகழாமை - அவமதியாமை - போற்றுவார்-(தம்மிடத்துத் தீங்குவாராமற்) காப்பவருடைய-போற்றலுளெல்லாம்-காவலுக்குளெல்லாம்- தலை- மிகுந்தது. (எ-று.) (கருத்து) வல்லவருடைய வல்லமைகளை யிகழாமையே காவலெல்லா வற்றுள்ளுந் தலை என்பதாம். ஆற்றலென்பது - பெருமை அறிவு முயற்சி என்கிற மூன்றின் மேலும் நின்றது. இகழ்ந்தவிடத்தே தம்மைக்களைய வல்லாரென்பது தோன்ற-ஆற்றுவாரென்றும், அரண்படை பொருணட்பு முதலாகிய மற்றைக் காவல்கள் அவரால் அழியுமாகலால் அவ்விகழாமையை - தலைமையான காவலென்றும், சொல்லினர். [இதனுற் பொதுவகையால் அவ்விருவகைப் பெரியோர்க்கும் பிழைசெய்யாமையது சிறப்புச்சொல்லப்பட்டது.

பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரற் ............ *
பேரா விடும்பை தரும் ............................................ *

(இ-ள்.) (வேந்தர்)-பெரியாரை - (வலிமைகளாலே) பெரியராயினரை-பேணுது-நன்குமதியாமல்(அவமதித்து) -ஒழுகின் - நடப்பாராயின் -(அந்நடக்கையானது) பெரியாரால் - அப்பெரியரால்- பேராவிடும்பை- (எந்நாளும்) நீங்காத்துன்பங்களை - தரும்-(அவருக்குக்) கொடுக்கும். (எ-று.) (கருத்து) பெரியோரை யவமதித்து நடந்தா லந்நடக்கை தீங்கைத்தரும் என்பதாம். அத்துன்பங்களாவன- இருமையிலும் ஓயாமல்வருகிற மூவகைத் துன்பங்களு மாம். அவையெல்லாந் தாமே செய்துகொள்ளுகின்றவை யென்பது தோன்றவொழுக்கத்தை வினைமுதலாக்கியும், பெரியாரைக் கருவி யாக்கியுஞ்சொல்லினர். [பொதுவகையால் அவர்க்குப் பிழைசெயற்குற்றம் இதனுற் சொல்லப்பட்டது. [இனிச்சிறப்புவகையாற் சொல்லுவார்,

கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி ........ *
னாற்று பவர்க ணிழுக்கு ............................................ *

(இ-ள்.) அடல்வேண்டின்- (வேற்றுவேந்தனைக்) கொல்லுதல்வேண்டில்-ஆற்றுபவர்கண்-(அதனை அப்பொழுதே) செய்யவல்லவேந்தரிடத்து-இழுக்கு-பிழையை- கெடல்வேண்டின் - (தான்) கெடுதல் வேண்டினுற்பின்-கேளாது- நீதிநூலிலேசொல்லப்பட்டதைக் கேளாமல்- செய்க- (ஒருவன்) செய்யக்கடவன். (எ-று.) (கருத்து) தான்கெடவிரும்பினுல் வேற்றரசரைவெல்லும் வேந்தரிடத்துப் பிழை செய்யக்கடவன் என்பதாம். நீதிநூல் அச்செய லாகா தென்று சொல்லுதலாலே - கேளா தென்றார். (௩)

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க் ... ....... *
காற்றாதா ரின்னா செயல்...... ........................... *

(இ-ள்.) ஆற்றுவார்க்கு- மூவகையாற்றலுமுடையவர்க்கு- ஆற்றாதார்-அவ்வாற்றலில்லாதவர்- இன்னா-இன்னாதனவற்றை- செயல்-(முற்பட்டுச்) செய்தல்-கூற்றத்தை-(தானேயும்வருந்தன்மையனாகிய)கூற்றுவனை-கையால்-(அதற்குமுன்னே) கைகாட்டி - விளித்தற்று-அழைத்தாலொக்கும். (எ-று.) (கருத்து)வல்லமையுடையவர்க்குவல்லமையில்லாதார் துன்பஞ்செய்தல் இயமனைக்கையாலழைத்தல்போலாம் என்பதாம். ❁ ஆல் - அசை. கையாலழைத்தல் - இகழ்ச்சிக்குறிப்பு. தாமேயும் உயிர்முதலானவைகளைக் கொள்ளுதற் குரியவரை அதற்குமுன்னே விரைந்து தம்மேல்வருவித்துக்கொள்ளுவாருக்கு மரணம் திடமாகவும் சமீபமாகவும் வருமென்பது சொல்லியபடி. [இவையிரண்டுபாட்டாலும் வேந்தர்க்குப்பிழைசெய்தலின் குற்றம் சொல்லப்பட்டது. (௪)

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின் ... *
வேந்து செறப்பட் டவர்......................... ..... .... ... *

(இ-ள்.) வெந்துப்பின்-வெவ்விதாகிய வலிமையையுடைய - வேந்து-வேந்தனால்- செறப்பட்டவர் - கோபிக்கப்பட்டஅரசர் - யாண்டுச்சென்று - (அவனைத்தப்பி) எங்கேபோய் (உளராவார்.) யாண்டும்-எவ்விடத்தும்—உளராகார்- உயிர்வாழ்வாராகார். (எ-று.) (கருத்து) வல்லவரசனாற் கோபிக்கப்பட்டவரசர் எவ்விடத்துச்சென்றுமுயிர் வாழார் என்பதாம். ❁ வெவ்விய வலியுடைய அரசனுதலாலே அவனது நிலம்விட்டுப் போனவர்க்கு இடம் கொடுப்பாரில்லை உளராகுதல்இவர்இனி ஆகாரென்பது நோக்கி அவனோடு நட்புக்கொள்ளுதற்பொருட்டும், தாமேவந்து அடைந்த அவருடைமையை அபகரித்தற்பொருட்டும், கொல்லுவர் அன்றெனின் உடனே அழிவரென்பனை நோக்கி- யாண்டுச்சென் றியாண்டு முளராகாரென்றார். [இதனாற்குற்றமுடையார் அருமையுடைய அரண் சேர்ந்து முய்யாரென்பது சொல்லப்பட்டது. (௫)

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்................*
பெரியார்ப் பிழைத்தொழுகு வார் ....... ......... .. . ... *

(இ-ள்.) (காட்டிடைச்சென்றொருவன்) எரியால்-(அவ்விடத்துத்)தியால்-சுடப்படினும்-சுடப்பட்டாலும் - உய்வு - (ஒருவழியால்) உயிர்பிழைத்தல்-உண்டாம்-கூடும்.— பெரியார் - (தவத்தாற்) பெரியார்க்கு-பிழைத்தொழுகுவார்-பிழைசெய்துநடப்பவர் - உய்யார்-

(எவ்வழியாலும்)உயிர்பிழைபார் (எ-று.) (கருத்து) தீயினாற்சுடப் படினு மொருவழியிற் பிழைப்புண்டாம். பெரியோர்க்குப் பிழை செய்து நடப்பவர் பிழையார் என்பதாம். ※ தீமுன் உடம்பைப்ப ற்றி அதுவழியாக உயிர்மேலே செல்லுதலால் நடுவிலே உய்யவுங் கூடும் அருந்தவர் கோபம் அப்படிப்பட்டதல்லாமல் தான் நிற்பது கணமாய் அதற்குள் யாவர்க்கும் காத்தல் அரிதாகலின் அது கூடா தாகலால் அதற்கு ஏதுவாகிய பிழைசெய்யற்க வென்பதாம்- (௬)

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந் .. ※
தகைமாண்ட தக்கார் செறின் ........................ .. ※

(இ-ள்.) தகை - (சாபானுக்கிரகங்களுக்கு ஏதுவாகிய) பெருமை யால்-மாண்ட-மாட்சிமைப்பட்ட - தக்கார்-அருந்தவர்-செறின்-(அ ரசனைக்)கோபிப்பாராயின் வகை- அங்கங்களால் - மாண்ட - அழகு பெற்ற - வாழ்க்கையும் - (அவ)னரசாட்சியும் - வான்பொருளும்-(ஸ ம்பாதித்துவைத்த)பெரும்பொருளும் - என்னாம் - என்பட்டுவிடும் (எ-று.) (கருத்து) பெரியோர் கோபிப்பாராகி லரசனரசாட்சியுமவ ன்பொருளுமென்ன பயன்படும் என்பதாம். ※ அங்கம் - அமைச்சு நாடு அரண படைஎனவிவை- செறினென்பது அவர்கோபியாமை தோன்றநின்றது பின்வருமவைகளுக்கும் இது ஒக்கும். அரசன்த ன்செல்வக்களிப்பால் அருந்தவரிடத்துப் பிழைசெய்வானாயின் அ ச்செல்வம் அவர்கோபத்தீயால் ஒரு கணத்துள்ளே வெந்து விடு மென்பதாம். (௭)

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு... ... .........※
நின்றன்னார் மாய்வர் நிலத்து........ ............ ※

(இ-ள்.) குன்றன்னார் மலையையொக்குமருந்தவர்- குன்ற கெட- மதிப்பின்-நினைப்பாராயின்- நிலத்து-இந்நிலத்து-நின்றன்னார்- நிலை பெற்றாற்போலுள்ள செல்வர்-குடியொடு - (தங்)குடியோடு- மாய்வ ர்-(அப்பொழுதே)மாய்வர். (எ-று.) (கருத்து) பெரியோர்கெடும்ப டிநினைப்பாராகிற் செல்வர்குடியொடு கெடுவர் என்பதாம். ※ வெயி ல்மழைமுதலானவைகளைப்பொறுத்தலும், அசையாமையும், உள்ளி ட்டகுணங்களுடைமையால் - குன்றன்னாரென்றார்.— நிலைபெற்றாற் போலுதலாவது மிகவும் பெருஞ்செல்வமுடையோராகலால்இவர்க் குஎந்நாளும் அழிவில்லையென்று கண்டவரால்நினைக்கப்படுதல்.

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து ................ ※
வேந்தனும் வெந்து கெடும்........................※

(இ-ள்.) ஏந்தியகொள்கையார்-(காத்தற்கருமையால்) உயர்ந்த வி

ரதங்களையுடையார்-சீறின் - (அவர்வலிமையால்)கோபிப்பாராயின்; வேந்தனும்-இந்திரனும் - இடைமுரிந்து-நடுவே (தன்பத) மிழந்து-வெந்து-அழிந்து-கெடும்-கெடுவான். (எ-று.) (கருத்து) தவத்திற்பெரியோர் கோபிக்கி னிந்திரனுங்கெடுவான் என்பதாம். ※இந்திரபதம்பெற்ற நகுடன் பிழைசெய்து அகத்தியமுனி சாபத்தால் அதனை இழந்தானென்பதறிக. [இவைநான்குபாட்டாலும் முனிவர்க்குப் பிழைசெய்தலின் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௯)

இறந்தமைந்த சார்புடையா ராயினு முய்யார் ……… *
சிறந்தமைந்த சீரார் செறின்…………………… *

(இ-ள்.) சிறந்தமைந்த-மிகவும் அதிகமான- சீரார் - தவத்தையுடையவர்-செறின் - கோபிப்பாராயின் - (அக்கோபிக்கப் பட்டவர்) இறந்தமைந்த-மிகவும்பெரிய - சார்புடையாராயினும் - சார்பையுடையவராயினும்-உய்யார் - (அதுபற்றி)உய்யமாட்டார். (எ-று. (கருத்து) தவமுடையோர் கோபிக்கிற்சார்புடையவரும் பிழையாரென்பதாம். ※ சார்பு-அரண் படை பொருள் நட்பு-ஆம். அவையெல்லாம் கோபிப்பவரது வலிமையால் திரிபுரம்போல் அழிந்து விடுமாகலால்- உய்யாரென்றார். [இதனால் அக்குற்றமுடையவர்சார்புபற்றியும் உய்யாரென்பது சொல்லப்பட்டது. (௰)



## ௯௧-ஆம், அதி-பெண்வழிச்சேறல்.

இனிக்காமத்தால் வருபவை நேரே பகையல்லவாயினும்பெருக்கஞ்சிதைத்தல் அழிவைத்தருதல் என்கிற தொழில்களாலே பகையோடு ஒத்தலால் அவைகளைப் பகைப் பகுதியின் முடிவிலே சொல்லத்தொடங்கி முதலிலே பெண்வழிச்சேறல் சொல்லுகிறார்.

அஃதாவது-தன்வழிநடத்தற்கு உரியவளாகிய மனையவள் வழியே தான் நடத்தல்.

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார் ….. *
வேண்டாப் பொருளு மது…………… ………… *

(இ-ள்.) மனைவிழைவார்- (இன்பங்காரணமாகத்) தம்மனையாளை விரும்பி அவள்வழிநடப்பவர்-மாண்பயன் - (தமக்கு)இனியதுணையாகிய அறத்தை எய்தார்-அடையார்.- வினைவிழைவார் - பொருள் க

ம்பாதித்தலிலே முயல்பவர் வேண்டாப்பொருளும்- (அதற்குவிரோ தமென்று) இகழும்பொருளும் —அது-அவ்வின்பம். (எ-று.) (கரு த்து) மனையவள் வழியிலேநடப்பவர் தருமத்தை யடையார் என்ப தாம். ❊ அவ்வின்பம் - அவளது தன்மையாகத்தகுவ தவானவின்ப ம். அது அவளாலே பயனுகிய அறத்திலும் அவ்வறத்திற்கும் தன்ன திகாரத்திற்குமேதுவாகிய பொருளிலும் அவ்வாச்செல்லவிடாமை யால்-விடப்படுத்தன்மையதென்பதாம். (௧)

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர் ........ ❊

நாணாக நாணுத் தரும்.............................. ❊

(இ-ள்.) பேணாது-(தன்னாண்மையை) விரும்பாமல்-பெண்விழை வான்- (மனையவளது) பெண்மையை விரும்புவோனது- ஆக்கம்- செல்வம்-(இவ்வுலகத்து ஆண்பாலார்க் கெல்லாம்) - பெரியதோர் நாண்-பெரியவொருநாணம் - ஆக-உண்டாக-நாணு - நாணுதலை-த ரும்- தனக்கும் கொடுக்கும். (எ-று.)(கருத்து) மனையவள்பெண்ட ன்மையைவிரும்புவோன் செல்வப்வெட்கத்தைக் கெடுக்கும் என் பதாம். ❊ படைக்கும்வலிமையிலனுகலின் அச்செல்வத்தால் கொடு த்தலும் அனுபவித்தலும் முதலாகியபயன்கொள்வான் அவளாகலா ல்அவ்வாண்மைச்செய்கை அவளிடத்ததாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனாலேதன்னாண்மையில்லாமைஅறிந்துபின்னே தானும் நாணுவனென்பது நோக்கி- பெரியதோர்நாணாக நாணுத் தருமென்றார். இவையிரண்டுபாட்டாலும் அவளைவிழைதற் குற்ற ஞ்சொல்லப்பட்டது.] (௨)

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று ... ❊

நல்லாரு ணாணுத் தரும்........ ........ ........ ❊

(இ-ள்.) (ஒருவன்)-இல்லாள்கண்-இல்லாளிடத்து - தாழ்ந்தவியல் பின்மை-தாழ்தற்கு ஏதுவாகிய அச்சம்—நல்லாருள்- (அவ்வச்சமி ல்லாத)நல்லாரிடத்துச் (செல்லுங்கால்) - நாணு-நாணுதலை — எஞ் ஞான்றும் - எந்நாளும்-தரும்- (அவனுக்குக்) கொடுக்கும். (எ,று.) (கருத்து) மனையவளுக்கஞ்சுமச்சமானது நாணந்தருமென்பதாம். ❊ அவள் தனக்கு அஞ்சி நடத்தல் இயல்பாகலால் அவளுக்குஅஞ்சு தல் இயல்பில்லாமையாயிற்று. அப்படி அஞ்சி நடத்தலால் அவனை நியமிப்பார் இல்லையாம். ஆகவே எல்லாக்குற்றங்களும் விளையுமெ ன்றுநோக்கி-எஞ்ஞான்று நாணுத்தருமென்றார். (௩)

மனையாளை யஞ்சு மறுமையி லாளன் ........ ........ ❊

வினையாண்மை வீறெய்த லின்று ........ ........ ❊

(இ-ள்.) மனையாளை-(தன்) மனையாளை-அஞ்சும் - அஞ்சிநடக்கின்ற-மறுமையிலாளன் - மறுமைப் பயனில்லாதவனுக்கு- வினையாண்மை-தொழிலாளுந்தன்மை- (உண்டாகியவழியும்) -வீறெய்தலின்றி-(நல்லோராலே)கொண்டாடப்படாது. (எ-று.)(கருத்து)மனையாளுக்கஞ்சுவோனது தொழில் பெருமை யடையாது என்பதாம். ※இல்லறஞ்செய்தற்குரிய நன்மை இல்லாமையால் மறுமையிலாளனென்றும் தொழிலையாளுந் தன்மை தனது புருஷத் தன்மையில்லாத அவனால் முடிவுபோகாமையால் - வீறெய்தலின்றென்றும், சொல்லினார். (௪)

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்...... ......... ※
நல்லார்க்கு நல்ல செயல் ........ .... .. ............... ..... ....※

(இ-ள்.) இல்லாளையஞ்சுவான் - (தன்)மனையாளை அஞ்சுவோன் — (தான்தேடிய பொருளே யாயினும்)- நல்லார்க்கு-நல்லோர்களுக்கு, நல்லசெயல்-(அப்பொருளாலே) நல்லவைகள் செய்தற்கு- எஞ்ஞான்றும்-எந்நாளும் - அஞ்சும்-அஞ்சாநிற்பன். (எ,று.) (கருத்து)மனைவிக்கஞ்சுவோனல்லோர்க்கு நலிசெய்ய வஞ்சுவான் என்பதாம். ※மற்று-அசைநிலை,—நல்லார் - அருந்தவர் சான்றோர்தாய் தந்தைகள் முதலாயினோருடன் விருந்தினருமாம்.—நல்லன செய்தல்-அவருக்கு வேண்டியவைகளைக் கொடுத்தல். அது செய்ய வேண்டு நாள்களினு மென்றற்கு எஞ்ஞான்றுமென்றார். (௫)

இமையாரின் வாழினும் பாடிலரோ யில்லா........ ........... ※
ளமையார்தோ ளஞ்சு பவர் ....... ..... ... ......... .......... ※

(இ-ள்.) இல்லாள் - (தம்) மில்லாளுடைய-அமையார்தோள் வேய்போலுந் தோளுக்கு-அஞ்சுபவர் - பயப்படுவர்- இமையாரின்-(வீரத்தாலே சுவர்க்கமடைந்த) தேவர்போல்- வாழினும் - (இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும் - பாடிலரோ-ஆண்மையிலர். (எ,று.) (கருத்து) மனையாளுக்குப்பயப்படுவோர் பெருமை யடையார் என்பதாம். ※தேவர்போல் வாழ்தலாவது-பகைத்தவீரர் தோள்களை யெல்லாம் வெல்லுதலால் நன்குமதிக்கப்பட்டுவாழ்தல். அது கூடாமையால்-வாழினுமென்றார். அமையார்தோளென அஞ்சுதற்காரணத்தது எளிமைசொல்லியபடி வீரரதுதோள்களை வென்றாராயினும் இல்லாரது தோள்களை அஞ்சுவோர் ஆண்மையிலரென்பதாம். [இவை நான்குபாட்டாலும் அவளை அஞ்சுதற்குற்றம் சொல்லப்பட்டது.]

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப் ※
பெண்ணே பெருமை யுடைத்து ......... ..... .... ... ※

(இ-ள்.) பெண்-இல்லாளது - ஏவல்-ஏவற்றொழிலை செய்தொழு

கும்-(நாணமில்லாமல்) செய்துதிரிகின்றவனது - ஆண்மையின்-ஆ ண்டன்மையைக்காட்டிலும் - நாணுடை- நாணத்தை யுடைய-பெ ண்ணே-(அவள்) பெண்டன்மையே - பெருமை - மேன்பாட்டை-உடைத்து- உடையது (எ-று) (கருத்து) பெண்ணேவல் செய்து நடக்குமாண்டன்மையினு மப்பெண்ணே பெருமையுடையது என்பதாம். ❁ நாணுடைப்பெண்ணை அதிகமாகச்சொல்லியது- அவளேவல் செய்வோன்று நாணில்லாமை முடித்தற்காதலால்- அதுவருவிக்கப்பட்டது.— ஏவல் செய்வித்துக்கொள்ளுதற்சிறப்புத்தோன்ற-பெண்ணே எனப்பிரித்தார்.] (எ)

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட்...... ...❋
பெட்டாங்கொழுகு பவர்........ ......................❋

(இ-ள்-) (தாம்வேண்டியபடியன்றி)- நன்னுதலாள் - (தம்) மனையாள்-பெட்டாங்கு - வேண்டியபடி-ஒழுகுபவர்-நடப்பவர்-நட்டார் (தம்மோடு) நட்புச்செய்தவரது - குறை-குறையை-முடியார்-முடிக்கமாட்டார்- (அதுவல்லாமலும்) - நன்று-மறுமைக்குத் துணையாகிய) அறத்தையும்-ஆற்றார் செய்யமாட்டார். (எ-று.) (கருத்து) மனைவிமனப்படி நடப்பவர் சிநேகருக்குதவார் தருமஞ்செய்யாரென்பதாம். ❁ நன்னுதலாளென்பதனை அமையார்தோளென்றதுபோற்கொள்க. அவள் தானேஅறிந்து ஏவுதலும் பொருள் கொடுத்தலுப் கூடாமையால் இருமைக்கும் வேண்டுவனசெய்ய மாட்டாரென்பதாம். (அ)

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்...... ..... ...❋
பெண்ணேவல் செய்வார்க ணில்..........................❋

(இ-ள்.) அறவினையும்-அறச்செயலும் - ஆன்றபொருளும்- அதுமுடித்தற்கு ஏதுவாகிய பொருட்செயலும்-பிறவினையும்-அவ்விரண்டின்வேறாகிய இன்பச்செயல்களும் - பெண்ணேவல்- (தம்) மனையாளேவலை-செய்வார்கண் - செய்வாரிடத்து-இல்-உண்டாகா(எ-று.) (கருத்து) மனைவிக்கேவல் செய்பவரிடத்துத் தருமச்செய்கைபொருட்செய்கைஇன்பச்செய்கை யிம்மூன்று மில்லையென்பதாம். ❁ இன்பச்செயல்களுக்கு அறச்செயல்பொருட்செயல்களை முன்னே ஒழிந்தார்க்கு தலைமை அவளிடத்திருத்தலால் பின் அச் செயல்களும்இல்லையென்பதுதோன்ற - அவைகளைப்பிரித்துச் சொல்லினர்.— [இவைமூன்றுபாட்டாலும் அவளேவல் செய்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும் ❋
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். ... ... ......... ........ ❋

(இ-ள்.) எண்சேர்ந்த-(கரும) வாலோசனையிலேசென்ற- நெஞ்சத்து-மனத்தையும்-இடன் - (அதனாலாகிய) செல்வத்தையும்- உடையார்க்கு- உடையவர்க்கு-பெண்சேர்ந்தாம்-மனையாளைச்சேர்தலால் விளையும்-பேதைமை - அறியாமை-எஞ்ஞான்றும் - எக்காலத்தும்-இல்-உண்டாகாது. (எ-று.) (கருத்து) நல்லமனமும், நல்லசெல்வமுமுடையவர்க்கு மனைவியால்வரு மறியாமை யில்லை என்பதாம். ❋ இல்லாமைக்காலத்துமென்றற்கு-எஞ்ஞான்றுமென்றார். அப்பேதைமையாவது-மேற்சொல்லிய - விலழுதல். அஞ்சல்ஏவல்செய்தல் என்கிறமூன்றற்கும் காரணமாகியது. [எதிர்மறைமுகத்தால் அம்மூன்றும் இதனால் தொகுத்துச்சொல்லப்பட்டன.] (௰)

❋❋❋❋❋❋❋

# ௯௨-ஆம்-அதி-வரைவின்மகளிர்.

அஃதாவது-தந்நலம் விலைகொடுப்பவர் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்கிற வரைவில்லாதமகளிரதுஇயல்பு. ஆதலால் தமக்குரிய மகளிரால்வருங் குற்றத்தின் பின்வைக்கப்பட்டது.

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா ❋
ரின்சொ லிழுக்குத் தரும்........................ ❋

(இ-ள்.) அன்பின்விழையார் - (ஒருவனை) அன்புபற்றி விரும்பாராகி-பொருள்விழையும் - பொருள்பற்றிவிரும்பும்- ஆய்தொடியார் மகளிர்-இன்சொல் - (அது கைவருமளவும் அன்புபற்றி விரும்பினராகச்சொல்லும்) இனியசொல்-இழுக்கு - இன்னாமையை - தரும்-(அவனுக்குத்)தரும். (எ-று.)(கருத்து) அன்பால்விரும்பாதுபொருளால்விரும்பும் வேசையர்களின் சொல்லானது துன்பந்தரும் என்பதாம். ❋ ஆய்தொடி-ஆராய்ந்தவளையல். ஆய்தொடி-இன்சொல் என்றதனால் அவர்மயக்குஞ் சாதனம் சொல்லப்பட்டது. அச்சொல்அப்பொழுது இனிதுபோன்று பின் வறுமையை உண்டாக்கலால்அதுகொள்ளலாகாதென்பதாம்.] (௧)

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்........ ❋
நயன்றூக்கி நள்ளா விடல் ......................... ❋

(இ-ள்.) பயன்றூக்கி-(ஒருவனுக் குள்ள) பொருளை அளந் தறிந்து-பண்புரைக்கும் - (அது கிடைக்குமளவும்) தமதுகுணமுடைமைசொல்லும்-பண்பின்மகளிர்-குணமில்லாத மகளிரது-நயன்றூக்கி-நடக்கைவழியை ஆராய்ந்தறிந்து-நள்ளா- (அவரைப்) பொருந்தாமல்-விடல்-விடக்கடவர். (எ,று.) (கருத்து)பொருட்பயனைக்குறித்து நயம்பேசும் வேசையர் நடக்கையறிந்து அவரைவிடக்கடவரென்பதாம். ☼ பண்புசொல்லிலல்லது அவரிடத்தில்லாமைதோன்ற-பண்பின் மகளிரென்றும், அது சாதித்தருமாதலால் நூலாலேயல்லாமல் அவர்செயலாலும் அறிந்தென்றற்கு- நயன் றூக்கி யென்றும், அவ்வாறு அவரைவிடுதற்கு உபாயமென்பதுதோன்ற-நள்ளாவிடலென்றும், சொல்லினர். (உ)

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று…. ….. …. … ……*

(இ-ள்.) பொருட்பெண்டிர்- (கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்) பொதுமகளிரது-பொய்ம்மை - பொய்ம்மையையுடைய-முயக்கம்-தழுவுதல் - (பிணமெடுப்பவர்)- இருட்டறையில்-இருள்வீட்டில் - ஏதில்பிணம்-முன்னறியாதபிணத்தை- தழீஇயற்று தழுவினாற்போலும். (எ,று.)(கருத்து) வேசையர்கள் பொய்யானபுணர்ச்சியானது இருள்வீட்டிலயலான் பிணத்தைத்தழுவினாற்போலும் என்பதாம். ☼ பொருளுக்குத்தழுவும் பரத்தையர் - கருத்தும்செயலும் ஆராயாமல் சாதியும் பருவமும் ஒவ்வா தானைக் கூடும்போது அவர்குறிப்பு- கூலிக்குப்பிணமெடுப்பவர் காணப்படாதஒரிடத்திலே சம்பந்தமில்லாத ஒருபிணத்தை எடுக்கும்போது இவர்குறிப்போடொக்கும் எனவே அகத்தால் அருவராநின்று பொருளைநோக்கிப்புறத்தால் தழுவுவர் அதனை ஒழியக்கடவரென்பதாம்.— [இவைமூன்றுபாட்டாலும் அவர்சொல்லும்செயலும் பொய்யென்பது சொல்லப்பட்டது.] (௩)

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு-*
ளாயு மறிவி னவர் ……..…………. ………. ……*

(இ-ள்.) பொருட்பொருளார் - (இன்பமாகிய பொருளை இகழ்ந்து) பொருளாகிய பொருளையே விரும்புமகளிரது- புன்னலம்-புல்லியநலத்தை- அருட்பொருள்-அருளோடு கூடியபொருளை - ஆயும் ஆராய்ந்து சம்பாதிக்கும்-அறிவினவர்-அறிவையுடையவர்- தோயார்-தீண்டார். (எ-று.) (கருத்து)அருளையாராயுமறிவுடையார்வேசையரைச்சேரார் என்பதாம். ☼ அறமுதலாகிய நான்கும் பொருளெனப்படுதலால்-பொருட்பொருள் அருட்பொருள் எனவிசேடித்தது

ர்.—புன்மை இழிந்தார்க்கே உரித்தாதல்-—தாம்விரும்புகின்ற அற த்திற்கு அவர் மெய்ந்நலம் விரோதமாகலால்- தோயாரென்பதாம்.

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்...*
மாண்ட வறிவி னவர் ........................*

(இ-ள்.) மதிநலத்தின் - (இயற்கையாகிய) மதிநன்மையால்- மாண்ட-மாட்சிமைப்பட்ட - அறிவினர்-(செயற்கை)யறிவையுடையவர் பொதுநலத்தார்- (பொருள்கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையையுடைய மகளிரது-புன்னலம் - புல்லிய நலத்தை- தோயார்-தீண்டார். (எ,று.) (கருத்து) புத்தி நலமுடைய பெரியோர்ப ரத்தையரைச் சேரார்என்பதாம். ※ மதிநன்மை முற்பிறப்பிலேசெ ய்தநல்வினைகளால் மனந்தெளிவுடைத்தாதல். அத்தெளிவினு லல்லாமல் அக்கல்வியறிவு மாட்சிமைப் படாமையால்-மதிநலத்தின்மா ண்ட வறிவினவ ரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொய்ம்மையும், மெய்ந்நலம் பலருக்கும் பொதுவாயிருக்கையும்,வி ளங்கித்தோன்றலால்-தோயாரென்றும், சொல்லினர். (௫)

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்............*
புன்னலம் பாரிப்பார் தோள் ........................*

(இ-ள்.) தகை-ஆடல்பாடல் அழகென்பவைகளாலே - செருக்கி-களித்து-புன்னலம் (தம்) புல்லியநலத்தை - பாரிப்பார்-(விலைகொடுப்பவர்க்கெல்லாம்) பரப்புமகளிரது - தோள்-தோளை- தந்நலம்-(அறிவொழுக்கங்களாலாகிய) தமதுபுகழை - பாரிப்பார்- (உலகத் தெபரப்புதற்குரிய) உயர்ந்தோர்-தோயார்- தீண்டார்.(எ-று.)(கருத்து) தமதுபுகழைவிளக்கும் பெரியோர் வேசையர் தோளைச்சேரார் என்பதாம். ※ ஆடல்முதலிய மூன்று முடைமைஅவர்க்குமே ன்பாடாகலால் தகையென்றும், தோய்ந்தால் அறிவொழுக்கங்கள் அழிபுமாகலால் - அவ்வறிவொழுக்கங்களாலே புகழ் பரப்புவோர் தோயாரென்றும், சொல்லினர். [இவைமூன்று பாட்டாலும் அவ ரை உயர்ந்தோர் தீண்டாரென்பது சொல்லப்பட்டது.] (௬)

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்........ ....*
பேணிப் புணர்பவர் தோள் ........................*

(இ-ள்.) நெஞ்சின்-நெஞ்சினுல்-பிறவேறுபொருள்களை - பேணி-ஆசைப்பட்டு-) அவைகொடுப்பவரை) புணர்பவர் - (அவைகாரண மாகமெய்யினாலே) புணருமகளிரது-தோள்-தோள்களை - நிறைநெ ஞ்சமில்லவர் - நிற்கச்செய்தலினாலே(திருந்திய நெஞ்சமில்லாதவர்-தோய்வர்-சேர்வர். (எ-று.)(கருத்து)நன்மனமில்லாதவர்வேசையர்

தோள்களைச் சேர்வார் என்பதாம். ❊ பொருளும், அதனால் படை
க்கப்படுவனவும், விரும்புகிறநெஞ்சு அவையேயிருத்தலால்புணர்வ
து அவருடம்புமாத்திர மென்பதறிந்து அதன்வழி ஓடாதுநிற்குநெ
ஞ்சையுடையார் தோயாமையால்-அஃதில்லாதார்தோய்வரென்றார்.

ஆயுமறிவின ரல்லார்க் கணங்கென்ப........................... *
மாய மகளிர் முயக்கு ............................................ *

(இ-ள்.) மாயமகளிர்- (உருவுஞ்சொற்செயல்களால்)வஞ்சித்தல்வல்ல
மகளிரது-முயக்கு- புணர்ச்சியை - ஆயும்-(அவ்வஞ்சனையை) ஆரா
ய்ந்தறியும்-அறிவினரல்லார்க்கு - அறிவுடையவரல்லாதவர்க்கு—அ
ணங்கு- அணங்குதற்கு-என்ப- என்று(நூலோர்)சொல்வர். (எ-று.)
(கருத்து) அறிவில்லார்க்கு வேசையர் புணர்ச்சியை நூலோரணங்
கென்பர் என்பதாம். ❊ அணங்கு - காமவழியால் உயிர் கொள்ளுந்
தெய்வமகளிர்.—தாக்கு-தீண்டல் இவ்வுருவகத்தால் - அப்புணர்ச்சி
முன்னே இனிதுபோலே தோன்றிப் பின்பு உயிர்கொள்ளுதல் பெ
ற்றும். இதுநூலோர் துணிவென்பது தோன்ற அவர்மேல்வைத்து
ச்சொல்லினார். (௮)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப் ..... *
பூரியர்களாழு மளறு .............................................. *

(இ-ள்.) வரைவிலா-(உயர்ந்தோர் இழிந்தோரென்னு அளவில்லைதொ
டுப்பவர் யாவரையும்) கூடும்-மாணிழையார் - மாட்சிமைப்பட்ட-ஆ
பரணத்தையுடையவரது-மென்றோள் - மெல்லியதோள்கள் - புரை
யிலா-(அக்குற்றத்தையறியும்) அறிவில்லாத-பூரியர்கள் - கீழ்மக்கள்
ஆழும்-(புகுந்து) அழுந்தும்-அளறு- நரகமாம். (எ-று.) (கருத்து)
வேசையர் தோள்கள் கீழ்மக்க ளழுந்து நரகமாம் என்பதாம். ❊
சாதியாலிழிந்தாரை நீக்குதற்கு- புரையிலாப் பூரியர்களென்றும், அ
வராழ்தற்கேது உருமுதலாகிய மூன்றுமேயென்பதுதோன்ற-மா
ணிழையார் மென்றோளென்றும், அவர்க்கு நரகத்தைத் தடையில்
லாமல் தருமென்பது தோன்றஉருவகமாக்கியும், சொல்லினார். (௯)

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் .............................*
திருநீக்கப் பட்டார் தொடர்பு ... .......................... ..........*

(இ-ள்.) இருமனப்பெண்டிரும் - இவர்மனத்தை யுடையமகளிரு
ம்-கள்ளும்-கள்ளும்-கவறும்-சூதும் திரு - திருமகளால் - நீக்கப்ப
ட்டார்-விடப்பட்டவர்க்கு-தொடர்பு-நட்புக்களாம்.(எ-று.) (கருத்
து) வேசையரும் கள்ளுஞ் சூதும்இலக்குமியால் விடப்பட்டவர்க்கு
நட்பாம் என்பதாம். ❊ இருமனம் - ஒருவனோடு கூடுதலும், கூடா

மையும், ஒருகாலத்திலே யுடையமனம்.—கள்ளும் சூதும்பரத்தை யர்க்குச் சமானமான குற்றமுடையவை யாகலாலே உடன்சொல்ல ப்பட்டன வருகின்ற அதிகார முறைமையும் இதனாலே அறிக.—தி ருநீக்கப்பட்டமை இவ்வுடையாளங்களால் அறியப்படுமென்பதாம். [இவைநான்குபாட்டாலும் அதுசெய்பவர் இழிஞரென்பது சொல் லப்பட்டது. (௰)



# ௯௰௩-ஆம்-அதி-கள்ளுண்ணாமை.



அஃதாவது- இனிஒழுக்கமும்உணர்வும்அழித்தலில்பரத்தையரோடு ஒப்பதாகிய கள்ளினை உண்ணாமையது சிறப்பு - எதிர்மறை முகத்தாலே சொல்லுகிறார்.

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங் ..... ......... ⁕
கட்காதல் கொண்டொழுகு வார் ............. ..... ......... ⁕

(இ-ள்.) கட்காதல்கொண்டு - கள்ளின்மேல் ஆசைகொண்டு - ஒழுகுவார்-நடக்குமரசர்-எஞ்ஞான்றும்- எந்நாளும் - உட்கப்படாஅர்-(பகைவரால்)அஞ்சப்படார்— (அதுவேயல்லாமல்)- ஒளி - (முன் பெற்றுநின்ற) ஒளியையும்-இழப்பர்-இழந்துவிடுவர்.(எ-று.) (கருத்து.) கள்ளிச்சையைவுந்தமரசர் அஞ்சார் புகழை யிழப்பார் என்பதாம். ❋ அறிவில்லாமையால் பொருள் படைமுதலியவைகளால் பெரியராகிய காலத்தும் பகைவர் அஞ்சார் தம் முன்னோராலே அடைந்த ஒளியும் இகழப்படுதலால் இழப்ப ரென்பதாம். [இவையிரண்டாலும் அரசநீதி இனிதுசொல்லாதென்பது இதனாலே சொல்லப்பட்டது. (௧)

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா ......... ...... ⁕
னெண்ணப் படவேண்டா தார்......................... ...⁕

(இ-ள்.) (அறிவுடையராயினோர்) கள்ளை - (அவ் வறிவுகெடுதற்கு ஏதுவாகிய)கள்ளினை - உண்ணற்க - உண்ணாதிருக்கக்கடவர்—உணில்-உண்ணவேண்டுவாருண்டாயின்- சான்றோரான் - நல்லோரால் எண்ணப்படவேண்டாதார்- மதிக்கப்படவிரும்பாதார் - உண்க உண்ணக்கடவர். (எ-று.) (கருத்து) கள்ளையுண்ணாதிருக்கக்கடவர். மதிக்கத்தகாதவருண்ணக்கடவர் என்பதாம். ❋ பெறுதற்கரிய அறிவைப் பெற்றிருந்தும் கள்ளால் அழித்துக் கொள்ளுவாரை இயல் பாகவே

அறிவில்லாத மிருகங்களுடனேயும் எண்ணுராகலால் - சான்றோரா லெண்ணப்பட வேண்டார்தா ருண்கவென்ருர். (௨)

ஈன்ருண் முகத்தேயு மின்னுதா லென்மற்றுச்.................*
சான்ருேர் முகத்துக் களி ..........................................*

(இ-ள்.) ஈன்ருண்முகத்தேயும் - எதுசெய்தாலும்மகிழும்) தாய் முன்பாயினும்- களி-(கள்ளுண்டு) களித்தல்- இன்னுது - துன்டஞ் செய்வதாம்—(ஆதலால்)-மற்றுச் சான்ருேர்முகத்து - பின்-(குற்றம்யாதும் பொருத) பெரியோர்முன்பு - (அக்களித்தல்) - என் (அவர்க்கு)யாதாகும். (எ-று.) (கருத்து) தாய்முன்னங் கள்ளுண்டு களித்தல்துன்பமாம் பெரியோர்முன் கள்ளுண்டுகளித்தலென்னபயனும் என்பதாம். ※ ஆல்-அசை. மன்மொழிமெய்கள் தம் வசப்படாமையால் நாணம் அழியும் அழியவே தாய்க்கும் இன்னுதான கள் - இருமையும் கெடுத்தலறிந்து தூரத்தே கடியும்பெரியோர்க்கு இன்னுதாகல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.] (௩)

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்.*
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு ...................*

(இ-ள்.) கள்ளென்னும்-மதுவென்றுசொல்லப்படுகின்ற - பேணு (யாவரும்) இகழும் - பெருங்குற்றத்தார்க்கு - மிகுந்தகுற்றத்தையுடையவர்க்கு-நாணென்னு நல்லாள் - நாணமாகிய நல்லவள்—(அவரைப்பார்த்தற்குஅஞ்சி)-புறங்கொடுக்கும்-எதிர்முகமாகாள்(எ-று.) (கருத்து) கள்ளுண்பவர்களுக்கு நாணமில்லை என்பதாம். ※ காணுதற்கும் அஞ்சிஉலகத்தார் தூரத்தேநீங்குவார் ஆதலால்பேணுவென்றும், பின்னொருவழியிலும் நீக்கப் படாமையால் - பெருங்குற்றமென்றும்; இழிந்தோரிடத்து நில்லாமையால் - நல்லாளென்றும்; சொல்லினர். [இவ்வமூன்று பாட்டாலும் ஒளியிழத்தற் காரணம் சொல்லப்பட்டது.] (௪)

கையறியாமை யுடைத்தே பொருள் கொடுத்து........*
மெய்யறி யாமை கொளல்.......................................*

(இ-ள்.) (ஒருவன்)-பொருள்கொடுத்து - விலைப்பொருளைக்கொடுத்து- மெய்யறியாமை- (கள்ளாலேதனக்கு) மெய்மறதியை—கொளல்-கொள்ளுதல்- கையறியாமை-(அவன்பழவினைப்பயனுகிய) செய்வதறியாமையை-உடைத்து - (தனக்குக்காரணமாக) உடைத்து. (எ-று,) (கருத்து) கட்குடித்து மெய்மறதியைக் கொள்ளுதலறிவில்லாமையுடையது என்பதாம். ※ தன்னை யறியாமை சொல்லவேமற்றவையாவையும் அறியாமை சொல்லவேண்டாவாயிற்று·அறிவார்வி

கொடுத்து ஒன்றைக்கொள்ளுங்கால் தீயதைக் கொள்ளாமையால் மெய்ப்பொருளாயாமையை கொளல் முன்னையறியாமையால்வந்ததென்பதாம்.

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்று ........... *
நஞ்சுண்பார் கள்ளுண் பவர் ....................................*

(இ-ள்.) துஞ்சினார்-உறங்கினவர்-செத்தாரின் - இறந்தவரின்-வேறல்லர் - (வேறாயினும் அக்காலத்தே அறிவில்லாமையால்) வேறெனப்படார்.—(அப்படியே)-கள்ளுண்பவர் - கள்ளைக்குடிப்பவர் - எஞ்ஞான்றும்-எக்காலத்தும்-நஞ்சுண்பார்- (அறிவில்லாமையால்)-நஞ்சுண்பவரேயாவர். (அவரின்வேறாயினும் வேறெனப்படார் (எ-று) (கருத்து) கள்ளைக்குடித்தவர் நஞ்சைக்குடித்தவர்க்கொப்பாவர் என்பதாம். ❊ உறங்கினவர்க்கும், கள்ளுண்பவர்க்கும், வேற்றுமையுஞ்சுநிற்றல். [இவ்விரண்டுபாட்டாலும் அவர் அறிவிழத்தலின் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௬)

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங் ... .... *
கள்ளொற்றிக் கண்சாய் பவர்..................................*

(இ-ள்.) கள்ளொற்றி-கள்ளைமறைந்து (குடித்து) - கண்சாய்பவர் (அக்களிப்பால்) அறிவுசோர்பவர்-உள்ளூர் - உள்ளூர்வாழ்பவரால்-உள்ளொற்றி-உள்ளேநடக்கிற காரியத்தை ஆலோசித்து அறிந்து-எஞ்ஞான்றும் - எந்நாளும்-நகப்படுவர் - சிரிக்கப்படுவார். (எ-று.) (கருத்து) கள்ளைக்குடித்தறிவுமயங்குவோர் சிரிக்கப்படுவர் என்பதாம். ❊ ஒற்றுதல் - சோர்விலுலே களிப்பினை அறிந்து அதனால் கள்ளுண்டதை அறிதல்- (௭)

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்..............*
தொளித்ததூஉ மாங்கே மிகும் .... ..... .... ......... ........ ..*

(இ-ள்.) களித்தறியேனென்பது - (மறைந்துண்டு) கள்ளுண்டறியேனென்று (உண்ணாத பொழுது தமது ஆசாரஞ்) சொல்லுதலை-கைவிடுக-விடக்கடவர்.—(அவ்வுண்டபொழுதே) நெஞ்சத்தொளித்ததும் (முன்பிறர் அறிந்தால் இழுக்காமென்று) மனத்தில் ஒளித்தகுற்றமும்-ஆங்கேமிகும்- முன்னையளவின்மிகுந்துவெளிப்படும் (ஆதலால்) (எ-று.) (கருத்து) கட்குடிக்கினுட்பொருள்வெளிப்படுமாகையாலாசாரஞ்சொருதலைக் கைவிடக்கடவர் என்பதாம். ❊ [இவையிரண்டுபாட்டாலும் அது மறைக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.] (௮)

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்......... ........... *
குளித்தானைத் தீத்துரீஇ யற்று............................... *

(இ-ள்.) களித்தானை-(கள்ளுண்டு) களித்த ஒருவனை - காரணங்காட்டுதல்-(இது ஆகாதென்று மற்றொருவன்) காரணங் காட்டித் தெளிவித்தல்- கீழ்நீர்க்குளித்தானை - நீருள்ளே மூழ்கிய ஒருவனை - தீ - விளக்கினால்- தூர் இபற்று-(மற்றொருவன்) தேடுதலை யொக்கும்.(எ,று.) (கருத்து) கட்குடித்தவனைத் தெளிவித்தலெதுபோலெனில் நீருள்ளே மூழ்கினவனைவிளக்கினாற் றேடுதலொக்கும் என்பதாம் ❁ நீருள்விளக்குச் செல்லாமைபோல் அவன்மனத்துள் காரணஞ்செல்லாதென்பதாம். [இதனாலவனைத் தெளிவித்தல் முடியாமை சொல்லப்பட்டது] (௯)

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா......❋
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு..........................❋

(இ-ள்.) (கள்ளுண்பவனொருவன்)- கள்ளுண்ணாப்போழ்தில்- கள்ளையுண்ணாமல்தெளிந்திருந்தபொழுதில்- களித்தானை-(கள்ளுண்டு) களித்தபிறனை- காணுங்கால்- காணும்போது - உண்டதன்சோர்வு-(தான்) உண்டபொழுது உண்டாந்தன்சோர்வை - உள்ளான்கொல் (அவன் சோர்வால் அதுவும் இப்படிப் பட்டதென்று) நினையான் போலும். (எ-று.) (கருத்து) கள்ளுண்பவன் தான் குடியாதபோது குடித்தவனைக்கண்டு தன்சோர்வைநினையான்போலும்என்பதாம்.❁ சோர்வு மனமொழிமெய்கள் தன்வசப்படாமை. [கருத்தளவையால்-அதனிழுக்குத்தை ஆலோசித்து அறிந்தால் ஒழியுமென இதனால் அதுஒழிதற்காரணம் சொல்லப்பட்டது.] (௰)

# கூச - ஆம் - அதி - சூது.

அஃதாவது- இனி அக்கள்ளுண்டல்போல்அறம்பொருளின்பங்களுக்குத் தடையாகிய சூதாடலும் பிணியநுபவித்தலும் சொல்லத்தொடங்கி முதலிலே சூதினது இயல்புசொல்லுகின்றார்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் ......❋
தூண்டிற்பொன் மீன்விழுங்கியற்று .......................❋

(இ-ள்.) வென்றிடினும் - (தான்)வெல்லும் வலிமை யுடையனாயினும்-சூதினை-சூதாடுதலை- வேண்டற்க- விரும்பா திருக்கக்கடவன்—(வென்றுபொருள் பெறுவார் உண்டென்றால்)- வென்றதூஉம்- அவ்வென்றபொருளும்- தூண்டிற்பொன்- (இறையால்மறைந்த) தூண்

டிலிரும்பை - மீன்விழுங்கியற்று - மீன்விழுங்கியதுபோலும். (எ-று.) (கருத்து) வெல்லவல்லவனாயினுஞ் சூதை விரும்பாதிருக்கக்கடவன் வென்றபொருளுந் தூண்டிலிரும்பை மீன்விழுங்கியது போலும் என்பதாம். ✽ வெல்லுதல் நிச்சயமல்லாமையால் வென்றிடினுமென்றும், கருமங்கள் பலவுங் கெடுதலால்-வேண்டற்கவென்றும், சொல்லினார். எய்தியபொருள் சூதாடுவார் நீங்காமைக் கிட்டதனை யென்பதாம், அதனாலே பின் துயருழத்தலும், உவமையாற் பெற்றாம். (௧)

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ..... .... ✽
னன்றெய்தி வாழ்வதோ ராறு..................... .... .......... ... ✽

(இ-ள்.) ஒன்றெய்தி - (அத்தூண்டிலிரும்புபோன்ற) ஒன்றனைமுன்பெற்று-(இன்னும் பெறுவோமென்னுங் கருத்தால்) நூறிழக்கும்-நூற்றினை இழந்துவறியராகும் - சூதர்க்கும் - சூதாட்டமுடையவர்க்கும் - நன்றெய்தி-(அப்பொருளால்) அறமுமின்பமும்பெற்று-வாழ்வதோராறு - வாழ்வதொருவழி- உண்டாங்கொல்-உண்டாமோ (எ-று.) (கருத்து) ஒருபொருள் பெற்று நூறுபொரு ளிழக்குஞ்சூதாடுவோர்க்கு நன்மைபெற்றுவாழும் வழியுண்டாமோ என்பதாம். ✽ அவ்வழியால் பொருளிழந்தே வருதலால் அதனாலே பெறும்பயனும் அவர்க்கு இல்லையென்பதாம். (௨)

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்.......................... ✽
போஒய்ப் புறமே படும்........ .................... .............. ✽

(இ-ள்.) உருளாயம் - உருளுங் (கவற்றில் அகப்பட்ட) ஆதாயத்தை-ஓவாது-இடைவிடாமல்-கூறின் - சொல்லிச் (சூதாடு) மாயின் -பொருள்-(அரசன்சம்பாதித்த) பொருளும் — ஆயம் - (அவன்) பொருள்வருவழியும் - போஒய் - (அவனைவிட்டுப்)போய் - புறமேபடும்-பகைவரிடத்தேதங்கும். (எ-று.) (கருத்து) அரசன் சூதாடுவானாயி னவன்பொருளுமப்பொருள் வரும்வழியும் பகைவ ரிடத்துப்போம் என்பதாம். ✽ கவற்றினுருட்சியை அதனாலாகிய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடுதலை அதுசொல்லலாகிய காரணத்தின்மேலிட்டும், சொல்லினார்.— காத்தலினும்,செய்தலினும்,கருத்திலனாகலால் அவையிரண்டும்பகைவரிடத்தே செல்லுமென்பதாம். (௩)

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்..................✽
வறுமை தருவதொன் றில்........................ ......✽

(இ-ள்.) சிறுமைபல-(முடிவில்லாத) - துன்பங்கள்பலவும்-செய்து-(தன்னைவிரும்பினவர்க்குச்) செய்து சீர் - (உள்ள) புகழையும்-அழிக்கும்-கெடுக்கும்-சூதின் - சூதுபோல்- வறுமை - வறுமையை-தருவது-கொடுக்கவல்லது-ஒன்று-வேறொன்று-இல்-இல்லை. (எ-று.)

(கருத்து) துன்பங்களை யுண்டாக்கிப் புகழையுங் கெடுக்குஞ் சூதைப்போல வறுமையைக் கொடுப்பதொன்றில்லை என்பதாம். ※ அத்துன்பங்கள் பின்னேசொல்லப்படும்.— நல்வினைகளையும், நல்வினைத்திணையும், நீக்கி- தீவினைகளையும், தீயினத்திணையும், கூட்டுதலால்- சீரழிக்குமென்றார். சூதாடுவோர் வறுமைக்கு எல்லையாவரென்பதாம்.

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி ……………………………※
யிவறியா ரில்லாகி யார். ……………………………※

(இ-ள்.) இல்லாகியார் - (முற்காலத்திலேதாம் இருந்தும்) இல்லாதவராய்ப்போழ்தினவர்- கவறும்- சூதினையும் - கழகமும் - அதையாடுமிடத்தினையும் - கையும்- (அவ்வாடுதற்கு வேண்டுங்) கைத்தொழிலினையும் - தருக்கியிவறியார் - மேற்கொண்டு கைவிடாதவேந்தர். (எ-று.) (கருத்து) சூதையுஞ் சூதாடுமிடத்தையுஞ் சூதாடுதொழிலையுங்கைவிடாதவரசர் பொருளிருந்து மில்லாதவரே என்பதாம். ※ கைத்தொழில்- வெல்லும்படி பிடித்தெறிதல். மேற்கொள்ளுதலாலே பாண்டவர் தம்மரசிழந்து காட்டிலேபோய்அங்கேமறைந்தொழுகினரென அனுபவங் காட்டியபடி. [இவை ஐந்துபாட்டாலும் அதனது வறுமை யுண்டாக்கற் குற்றம் சொல்லப்பட்டது.] (௫)

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு ……………………………※
முகடியான் மூடப்பட் டார் ……………………………※

(இ-ள்.) சூதென்னும் (தனது பெயர்சொல்லல் மங்கலமல்லாமையால்) சூதென்றுவேறுபெயர்சொல்லப்படுகிற - முகடியால்- மூதேவியால்-மூடப்பட்டார் - விழுங்கப்பட்டவர் - அகடாரார் - (இம்மையிலே) வயிறுநிறையப்பெறார்.— அல்லலுழப்பர் - (மறுமையிலே) நரகத்துன்பமனுபவிப்பர். (எ-று.) (கருத்து) சூதென்னு மூதேவியால் விழுங்கப்பட்டவ ரிம்மையில் வறுமையு மறுமையில் நரகமுமநுபவிப்பர் என்பதாம். ※ செல்வங்கெடுத்து வறுமை கொடுத்தற்றொழிலில்வேறுபடாமையால் - சூதென்னு முகடி யென்றும், வெற்றிதோற்பு நோக்கி ஒரு பொழுதும் விடாராகலால், இங்கே அகடாராரென்றும், பொய் களவுமுதலாகிய பாவங்கள் சம்பாதித்தலால்- அங்கே அல்லலுழப்பரென்றும், சொல்லினார்.— வயிறாரமை சொல்லவே மற்றை ஆடையணிமுதலாகிய புலன்களை அனுபவிக்கப்பெறாமை சொல்லவேண்டாவாயிற்று. (௬)

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங் ……………………………※
கழகத்துக் காலை புகின் ……………………………※

(இ-ள்.) காலை (அறம்பொருளின்பங்களுக்குவிதித்த) காலம்- கழ

கத்து-சூதாடுமிடத்து- புகின் - (அரசனுக்குக்)கழியுமாயின்- (அக்கழிவு) பழகிய-நெடுநாளாய்வந்த-செல்வமும் (அவன்) செல்வத்தையும்-பண்பும்-நற்குணங்களையும்—கெடுக்கும்- அழிக்கும்.எ-று. கருத்து) அரசன்சூதாடிலவ்வாட்டமவன்செல்வத்தையுங்குணத்தையுமழிக்குமென்பதாம். ※ தான்செய்துகொள்ளும் அறமுதலானவைமாத்திரமல்லாமல்முன்னோரைத்தொடங்கிவருகின்றசெல்வமும்,முன்செய்தநல்வினையினலாகிய நற்குணங்களும்இல்லாமற்போமென்பதாம்

பொருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ யருள்கெடுத் ※
தல்ல லுழப்பிக்குஞ் சூது ... .... ........ ........ ....... ※

(இ-ள்.) சூது-சூதாட்டமானது - பொருள்கெடுத்து - (தன்னைப் பழகினவனது) பொருளைக் கெடுத்து - பொய் - பொய்யை - மேற்கொளீஇ- மேற்கொளப்பண்ணி - அருள்கெடுத்து-(மனதிலெழுகிற) அருளைக்கெடுத்து-(இவ்வழியால்) - அல்லலுழப்பிக்கும்- (அவனை இருமையிலும்) துன்பமுறுவிக்கும். (எ-று. (கருத்து) சூதாட்டமானது பொருளைக் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச் செய்து கிருபையைக் கெடுத்துத் துன்பத்தை விளைவிக்கும் என்பதாம். ※ பொருள்கெடுத்தல் முதலாகிய மூன்றும் சூதினுடைய தொழில்களாகவும், அவைகளுக்கு -தோற்புவெற்றி கோபம் என்பன முறையே சாதனங்களாகவும், கொள்க.—முன்னையதால் இம்மையிலும், பின்னவைகளால் மறுமையிலும், ஆம். (அ)

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து ........ ...... . ※
மடையாவா மாயங் கொளின் ......... ........ ........ . ※

(இ-ள்.) (அரசன்) —ஆயம் - சூதினை - கொளின் - (தனக்குவிளையாட்டுத்தொழிலாக) விரும்புவானாயின்-ஒளி ஒளியும் - கல்வி-கல்வியும்-செல்வம்-செல்வமும்-ஊண்-ஊணும்- உடை - உடையும் என்றைந்தும்- என்றிவ்வைந்தும்- அடையாவாம் - (அவனைச்) சேராவாம். (எ-று.) (கருத்து) அரசன் சூதாட்டத்தை விரும்புவானாகில்கீர்த்தியுங் கல்வியுஞ் செல்வமு மூணுமுடையுமவனைச் சேராவாம் என்பதாம். ※ ஆயம் சூதுக்கு ஆகுபெயர் இம்முறை செய்யுளுக்கிசையப்பிறழ்ந்தது. செல்வம் - அறுவகை உறுப்புகள். ஊணுடையென்பவைகளால் அனுபவிக்கப் படுவனவெல்லாம் கொள்ளப்படும்—காலமும், கருத்தும், பெருமையால இவைஉண்டாகாவென்பதாம். [இவை நான்குபாட்டானும் சிறுமைபலசெய்து அவைகளால் இருமையுங்கெடுத்தல் சொல்லப்பட்டது.] (௯)

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப ......... ※
முழத்தொறூஉங் காதற் றுயிர்.............. ......... ....." ※

(இ-ள்.) இழத்தொறூஉம் - (சூதாடலால் இருமைப் பயன்களையு ம்) இழக்குந்தோறும் - காதலிக்கும் - (அதன்மேலே) ஆசைசெய்யு ம்-சூதேபோல்-சூதனேபோல்—உயிர்- உயிரானது - துன்பமுழத் தொறூஉம்-(உடம்பால்) மூவகைத் துன்பங்களையும் - அநுபவிக்கு ந்தோறும்- காதற்று- (அதன்மேலே) ஆசையை யுடைத்து. (எ-று.) (கருத்து) இருமைப்பயன்களை யிழக்குந்தோறுஞ் சூதின் மேலிச்சிக் குஞ் சூதன்போல உயிரானது துன்பங்களை யநுபவிக்குந் தோறு மதன்மேலாசையுடையது என்பதாம். ❁ சூது ஆகுபெயர். உயிர் தானது அறியாமை சொல்லுவார்போன்று சூதனது அறியாமை சொ ல்லுதல் கருத்தாகலின் அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு உவமான மாக்கினார். [இதனெதிர் மறைமுகத்தால் சூதைவெறுத்து நடப்பவ னையொக்கும் உடம்பினை வெறுத்து நடக்கின்ற உயிரெனவுங் கொ ள்க.] இதனால் அதைவிடுதற் கருமையும் விட்டவாறுபெருமையும் சொல்லப்பட்டன. (௰)

❁

# ௯௫ - ஆம், அதி - மருந்து.

பழவினையாலும் காரணங்களாலும் மனிதர்க்கு வாதமுதலாகிய பிணி கள்வரும் அவைகளுள் பழவினையால் வருவன அவ்வினை கழி யும்போதல்லாமல் தீராமையால் அவை யொழித்து மற் றைக் காரணங்களால் வருமவைகளைத் தீர்க்குமரு ந்தின் திறஞ்சொல்லுகின்றார். காரணங்களா வன-உணவு தொழில்களது ஒவ்வாமை யாதலால் பிணிகளும் காரணங்களால், வருவனவாயின.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்............*
வளிமுதலா வெண்ணிய மூன்று......................*

(இ-ள்.) (உணவும்செயல்களும் ஒருவன் சரீரசுபாவத்துக்கு ஒத்த வளவினவன்றி) - மிகினும்-(அதனின்) மிகுமாயினும் - குறையினு ம்-குறையுமாயினும்- நூலோர்- ஆயுள்வேத முடையோரால்- வளி முதலா-வாதமுதலாக - எண்ணிய-எண்ணப்பட்ட - மூன்று-மூன்று நோயும் நோய்-துன்பத்தை - செய்யும் - (அவனுக்குச்) செய்யும் (எ-று.) (கருத்து) உணவுந்தொழிலு மிகுங்காலுங் குறைங்காலும் பிணிமூன்றுந் துன்பஞ்செய்யும் என்பதாம். ❁ நூலோர்களெண்ணி யவெனவே அவர் அவைகளால்வகுத்த-வாதப்பகுதி - பித்தப்பகுதி சிலேஷ்மப்பகுதி-என்கிற பகுதிப்பாடும் பெற்றும். அவைகளுக்கு

உணவு ஒத்தலாவது-சுவை வீரியங்களாலும் அளவாலும் பொருந்
துதல். செயல்கள் ஒத்தலாவது-மனமொழிமெய்களாலே செய்யுந்
தொழில்களை அவ்வவ நந்துவதற்குமுன்னமையொழிதல். இவ்விரண்
டும் ஒட்டுபடியல்லாமல் மிகினுங்குறையினும்,அவை தன்றன்னிலையி
லேநிலாமல் வருத்துமென்பதாம். இதனால் உடம்புகளுக்கு இய
ல்பாகியநோய்-மூவகையென்பதும், அவை துன்பஞ்செய்தற் கார
ணம்—இருவகையென்பதும், சொல்லப்பட்டன.] இன்பஞ்செய்த
ற்காரணம் பின்னேசொல்லுவர். (௧)

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய... .......*
தற்றது போற்றி யுணின்.................................*

(இ-ள்.) (ஒருவன்)-அருந்தியது-(முன்) உணப்பட்டது-அற்
றது-சீரணித்தபடியை-போற்றி-(குறிகளாலே) தெளியவறிந்து-உ
ணின்-(பின்னை) உண்பானாயின்-யாக்கைக்கு-(அவ) னுடம்புக்கு-
மருந்தென-அவிழ்தமென்று-வேண்டாவாம்-வேறுவேண்டுவதில்லை
(எ-று.) (கருத்து) உண்ணப்பட்டது சீரணித்ததையறிந் துண்பானா
யினவனுக்கு மருந்து வேண்டாவாம் என்பதாம். ※ குறிகளாவன-
உடம்புசிறந்திருத்தல்-நோக்கம் பரிசுத்தமா யிருத்தல்- கரசரணா
திகரணங்கள் தொழிற்குரியவாதல் - பசிமிகுதல்-எனவிவை முதலா
யின. பிணிகள் உடலுக்கே ஆகுதலால்-யாக்கைக்கென்றார். உணினெ
ன்பது அதனருமைதோன்ற நின்றது. (௨)

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு...................*
பெற்றா னெடிதுய்க்கு மாறு...........................*

(இ-ள்.) அற்றால்-(முன்னுணப்பட்டது) அற்றால்-(பின்னுணப்ப
டுவதனை-அளவறிந்து - (அவ்வ) ளவறிந்து-உண்க - (அவ்வளவின
தாக) உண்ணக்கடவன்.—உடம்பு-பெறுதற்கரிய விம்மனித வுடம்
பை-பெற்றான்-பெற்றவன் - நெடிது -நெடுங்காலம்-உய்க்குமாறு,
(அதனைக்) கொண்டுசெலுத்தும்வழி - அஃது-அதுவாம். (ஆகலா
ல்) (எ-று.) (கருத்து) உடலைக்கொண்டவனவனுடலிருக்கும்படிசீர
ணித்தவளவறிந் துண்ணக்கடவன் என்பதாம். ※ இம்மைமறுமை
வீடுபேறுகளை அடைதற்குரியது இம்மனிதவுடம்பொன்றுமேயா
கலால் உடம்புபெற்றானென்றும், அதுநெடுங்காலம் நின்றவிடத்து
அவைபெறச் செய்துகொள்ளலாமாகலால்-நெடிதுய்க்கு மாமெ
ன்றும், சொல்லினார். (௩)

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல........ ...........*
துய்க்க துவரப் பசித்து.................................*

(இ-ள்.) அற்றதறிந்து - (முன்னுணப்பட்டது) அற்றபடியைஅ

றிந்து-துவரப்பசித்து (பின்னே) மிகப்பசித்து-(உண்ணும் போது)-மாறல்ல-மாறுகொள்ளாத உணவுகளை- கடைப்பிடித்து-குறிக்கொண்டு-துய்க்க-உண்ணக்கடவன். (எ,று.) (கருத்து) சீரணித்தவளவறிந்து மாறில்லாவுணவுகளை யுண்ணக்கடவன என்பதாம். ❋ அற்றதறிந்தெனப் பின்னுஞ்சொல்லியது அதனை உறுதிப் படுத்தற் பொருட்டு.—உண்டது அற்றாலும் அதன்பயனாகிய இரசம் அறாதாகலால் அதுவும் அறல்வேண்டுமென்றற்கு-மிகப்பசித்தென்றார். மாறுகொள்ளாமையாவது-உண்பவன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள்ளே மாறுகொள்ளாமையும், ஆம். அவையாவன-முறையே உணவு- வாதபித்தசிலேஷ்மங்களாலாகிய சரீரசுபாவங்களுக்கு அடைபடாதவைகளைச் செய்வனவாதலும்; ※ பெரும்பொழுது ஐ சிறுபொழுது எனகிற காலவேறுபாடுகளுள் ஒன்றற்கு ஆவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் ஒத்த அளவு சாதல்போல்வனவும்-ஆம். அவைகளைக் குறிக்கொள்ளாது பலபட்டவழியால் உண்டால் அதனால் நோயும் மரணமும் வருதலால்-கடைப்பிடித்தென்றார். (௪)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி .. ............ ※
னூறுபா டில்லை யுயிர்க்கு .. ...... ........ ........ ...... ※

(இ-ள்.) மாறுபாடில்லாத-(அம்மூவகை மாறுகோளும் இல்லாத)-உண்டி-உணவை-மறுத்து - (தன்னுள்ளம் வேண்டியவளவை) மறுத்து (பிணிவாராதவளவில்)- உண்ணின் - (ஒருவன்) உண்டால்-உயிர்க்கு-(அவ) னுயிர்க்கு-ஊறுபாடு-(பிணிகளாலே) துன்பம் விளைதல்—இல்லை-உண்டாகாது. (எ-று.) (கருத்து) நல்லுணவையுண்டாற்பிணிகளாற்றுன்பமில்லை என்பதாம். ❋ துன்பமுறுவது உயிராதலால்-அதன்மேல் வைத்துச்சொல்லினார். மாறுபாடில்லாத விடத்தும் குறைதல்நன்றென்பதாம். [இவைநான்குபாட்டாலும் உணப்படுவனவும், அவைகளினளவும், காலமும், பயனும், சொல்லப்பட்டன

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும் ..... ... ...※
கழிபே ரிரையான்க ணோய் .. ........ ........ ....※

(இ-ள்.) இழிவறிந்து-அக்குறைதலை (நல்லதென்று). அறிந்து-உண்பான்கண்-(அவ்வாறே) உண்பவனிடத்து- இன்பம்போல்- இன்பத்தைப்போல்- கழிபேரிரையான்கண்- மிகப்பெரிய இரையையுண்ணுவோனிடத்து- நோய் - நோயானது—நிற்கும்- நீங்காதிருக்கு

※ பெரும்பொழுது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்.
ஐ சிறுபொழுது மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு.

ம். (எ-று.) (கருத்து) குறைவாகவுண்பவனிடத்தின்பம்போல் நிறைவாகவுண்பவனிடத்துத் துன்பமிருக்குமென்பதாம். ❋ அவ்வாறேயுண்டல்-உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல் இன்ப மாவது-வாதமுதலாகிய மூன்றும் தன் நிலையில் வேறு படாமையால்-மனமொழி மெய்கள் இவன் வசப்படலும், அதனால் அறமுதலாகிய நான்கும் அடைதலும், ஆம். இரையை அருந்துமளவன்றி எடுத்து அதனால் வருந்தும் மிருகத்தோடொத்தலால்-இரையானென்றார்.

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி ....... ....... ❋
நோயள வின்றிப் படும் ....... ....... ....... ❋

(இ-ள்.) தெரியான்-(தன் சரீரசுபாவமும் அதற்கேற்ற வுணவும் காலமும்) ஆராயானாகி (வேண்டியவுணவை வேண்டியகாலத்து)—தீயளவன்றி-(வயிற்றுத்) தீயளவல்லாமல்-பெரிதுண்ணின்-(ஒருவன்) மிகவுண்ணுவானாயின்-நோய்-நோயானது-அளவின்றி-அளவில்லாமல்-படும்-(அவனிடத்து வளரும். எ-று.) (கருத்து) சீரணித்ததறியாதவனு மிகவுண்பானாகில் நோயவனிடத்துண்டாம் என்பதாம் ❋ [இவையிரண்டுபாட்டாலும் அப்படி உண்ணாதவிடத்தேபடும் இழுக்குச் சொல்லப்பட்டது.] (௭)

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும் ....... ❋
வாய்நாடி வாய்ப்பச் செயல் ....... ....... ....... ❋

(இ-ள்.) (மருத்துவன்) நோய்-நோயாளியிடத்து (நிகழ்கின்ற) நோயை—நாடி-(அதன் குறிகளால் இன்னதென்று) அறிந்து-நோய்முதல்-(பின்பு) அந்நோய்வருதற் காரணத்தை-நாடி-ஆராய்ந்து-அது தணிக்கும்வாய்-(பின்) அதுதீர்க்கும் உபாயத்தினை—நாடி-அறிந்து-வாய்ப்பச்செயல்-(அதனைப்) பிழைபடாமற்செய்யக்கடவன். (எ-று.) (கருத்து) வைத்தியன் வியாதியையு மதன் காரணத்தையு மதுநீங்கு முபாயத்தையு மாராய்ந்து மருத்துவஞ்செய்யக்கடவன் என்பதாம். ❋ காரணம்-உணவுசெயலென முன்சொல்லப்பட்டவை. அவ்விரண்டையும் நாடுதற்குப்பயன்-நோயையும் உபாயத்தையும் ஐயமறத்துணிதல்.—மருந்துசெய்தல்-உதிரங்களைதல்-அறுத்தல்-சுடுதல்-முதலாகிய செயல்களெல்லாம் அடங்குதற்கு அதுதணிக்கும்வா யென்றார். பிழைபடாமை-பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறையிலே தப்பாமை. (௮)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங் ....... ....... ❋
கற்றான் கருதிச் செயல் ....... ....... ....... ❋

(இ-ள்.) கற்றான்-(ஆயுர்வேதத்தைக்) கற்றமருத்துவன்-(அவ்வுபாயத்தைச் செய்யுங்கால்)-உற்றானளவும்-நோயாளியளவையும்-

பிணியளவும்-(அவனிடத்து நிகழ்கின்ற) நோயினளவையும்-காலமும்-(தன்செயற்கேற்ற) காலத்தினையும்-கருதி -(அந்நூல் வழியால்) நோக்கி-செயல்-(அவைகளோடு பொருந்தச்) செய்யக்கடவன். (எ-று:) (கருத்து) மருத்துவன் பிணியாளியளவையும் பிணியளவையுங் காலத்தினளவையுமறிந்து பொருந்தச்செய்யக்கடவன் என்பதாம் ❊ நோயாளியளவு-சரீரசுபாவம்பருவம் வேதனைகளினளவு.—பிணியளவு ❋ சாத்தியம்-அசாத்தியம்-யாப்பியம் - என்கிற- சாதிவேறுபாடும், தொடக்க நடுவீறென்னும் அதன்பருவவேறுபாடும் வன்மைமென்மைகளும், முதலாயின—காலம் முன்சொல்லியது இம்மூன்றும் தப்பாமல் நூல்வழியாலும், அறிவு மிகுதியாலும், ஆராய்ந்துசெய்கவென்பதற்கு-கற்றான் கருதிச் செயலென்றார். [இவையிரண்டு பாட்டாலும் அவ்விழுக்கம்வந்தவிடத்துத் தீர்க்கும்வழி சொல்லப்பட்டது.] (௯)

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென் ......... ❋
றப்பானாற் கூற்றே மருந்து ................................ ❋

(இ-ள்.) மருந்து-(பிணிக்கு)மருந்தாவது-உற்றவன்- (அதனை)யுற்றவன்- தீர்ப்பான்-(அதனைத்) தீர்க்குமருத்துவன்- மருந்து-(அவனுக்குச்சாதனமாகிய) மருந்து-உழைச்செல்வான்- (அதனைத்தப்பாமல்) செய்பவன்-என்று-என்று சொல்லப்பட்ட - அப்பால்-அந்நான்குபகுதியையுடைய- நாற்கூற்றே - நான்கு திறத்தது. (எ-று.) (கருத்து)பிணிக்கு மருந்தாவது நோயாளி வைத்தியன்மருந்துசெய்பவன் இந்நான்குமாம்என்பதாம். ❊ அவைகளுள்- உற்றவன்வகை நான்காவன, பொருளுடைமை- மருத்துவன்வழிநிற்றல்-நோய்நிலையுணர்த்தல்வன்மை- மருந்துத்துன்பம் பொறுத்தல்-எனவிவை—தீர்ப்பான்வகை நான்காவன, நோய்பார்த்தற் கஞ்சாமை- ஆசிரியனைவழிபட்டு அடைந்தகல்வி நுண்ணறிவுடைமை-பலகாலுந் தீர்த்துவருதல்-மனமொழிமெய்கள் பரிசுத்தமாதல் - எனவிவை.— மருந்தின் வகைநான்காவன, பலபிணிகளுக்கும் ஏற்றல்-சுவைவீரியம் விளைவாற்றல்களால்மேம்படுதல் எளிதிலே பெறப்படுதல்-சரீர சுபாவத்தோடுபொருந்தல் எனவிவை.— இயற்றுவான்வகை நான்காவன, நோயாளியிடத்தே அன்புடைமை-மனமொழிமெய்கள் பரிசுத்தமாதல் சொல்லியபடியே செய்தல் வல்லமை-அறிவுடைமை- எனவிவை.— இவையெல்லாங் கூடியவிடத்தல்லது பிணிதீராமையால் இக்கூட்டத்தைமருந்தென்றார். [இதனால் அவன் தீர்த்தற்குவேண்டுவன வெல்லாம் தொகுத்துச் சொல்லப்பட்டன.] (௰)

அங்கவியல் முற்றிற்று.



# ஒழிபியல்.



இனி அவ்வரசியன் முதலானவைகளிலே அடங்காதொழிந்தவைகளினியல்பைப் பதின்மூன் றதிகாரத்தினாலேசொல்லத்தொடங்கி முதலிலே குடிமை சொல்லுகிறார்.

## ௯௬-ஆம்-அதி-குடிமை.

அஃதாவது-உயர்ந்தகுடியினிடத்துப் பிறந்தவரது தன்மை. உயர்குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் அவசியம்வேண்டுவ தாகலால் அச்சிறப்புப் பற்றி முன்வைக்கப் பட்டது.

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்................*
செப்பமு நாணு மொருங்கு..............................*

(இ-ள்.) செப்பமும்-செம்மையும்-நாணும் - நாணமும்- ஒருங்கு ஒருசேர- இற்பிறந்தார்கணல்லது - உயர்ந்தகுடியிலே பிறந்தவரிடத்தல்லாமல் (பிறரிடத்தே)-இயல்பாக-சுபாவமாக-இல்லை-உண்டாகா. (எ-று.) (கருத்து) செம்மையும்,நாணமும்,நற்குடியிற்பிறந்தவர்க்கல்லது மற்றவர்க்கில்லையென்பதாம். ☼ செம்மை-கருத்தும்சொல்லும் செயலும்-தம்முள்ளே மாறுபடாமை நாண்-பழிபாவங்களின்மடங்குதல். இவை இற்பிறந்தார்க்கானால் ஒருவர்கற்பிக்கவேண்டாமல் தாமே உண்டாகும். பிறர்க்கானால் கற்பித்தவிடத்தும்நெடிது நில்லாவென்பதாம். (௧)

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று..................*
மிழுக்கார் குடிப்பிறந் தார்..............................*

(இ-ள்.) குடிப்பிறந்தார்-உயர்ந்த குடியிலேபிறந்தவர்- (தமக்குரிய)-ஒழுக்கமும் - நன்னடக்கையும்-வாய்மையும்-மெய்ம்மையும்-நாணும்- நாணமும்ஆகிய- இம்மூன்றும்-இம்மூன்றிடத்தும்-இழுக்கார்-(நூலறிவாலல்லாமல்தாமாகவே) வழுவார். (எ-று.)(கருத்து) உயர்குடியிற்பிறந்தவர் நன்னடக்கை, சத்தியம், வெட்கம், இம்மூன்றிலுந் தவறார் என்பதாம். ☼ ஒழுக்கமுதலாகிய மூன்றும் மெய்ம்மொழிமனங்களுக்கு உரியவை யாதலால்-அம்முறை வைக்கப் பட்டன. இழுக்கல். தாமறியாது வருதலால்-இழுக்காரென்றார். (௨)

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்.................*
வகையென்ப வாய்மைக் குடிக்கு..............................*

(இ-ள்.) வாய்மை-(எக்காலத்தும்) வேறுபடாத-குடிக்கு- குடியிற்பிறந்தவர்க்கு-(வறியவர்சென்றவிடத்து) -நகை-முகமலர்ச்சியும் ஈகை-(உள்ளவை) கொடுத்தலும்-இன்சொல்- இன்சொற் (சொல்லுதலும்)-இகழாமை-இகழாமையும் ஆகிய-நான்கும் - இந்நான்கும்-வகை-(உரிய) வகையாகும்- என்ப-என்று (நூலோர்) சொல்லுவர் (எ-று.) (கருத்து) நற்குடியிற்பிறந்தவர்க்கு முகமலர்ச்சி கொடுத்தல் இன்சொல் இகழாமை இந்நான்கு முரித்தாம் என்பதாம். ☼ பொய்ம்மை வேறுபடுதலுடைமையால் வேறுபடாமையை வாய்மையென்றும், இல்லாரை எல்லாரும் இகழ்வாராகலால்-இகழாமையை அவர்க்குரித்தியும், சொல்லினார். குடி-ஆகுபெயர். [இவை மூன்றுபாட்டாலும் குடிப்பிறந்தாரியல்பு சொல்லப்பட்டது.] (௫)

அடுக்கியகோடி பெறினுங் குடிப்பிறந்தார் ... *
குன்றுவ செய்த லிலர் ... *

(இ-ள்.) அடுக்கிய-(பலவாக) அடுக்கிய-கோடி-கோடியளவினதாகிய பொருளை-பெறினும் - பெற்றாலும்-குடிப்பிறந்தார்- உயர்ந்தகுடியிலேபிறந்தவர்-குன்றுவ (தம்மொழுக்கங்) குன்றுந் தொழில்களை-செய்தலிலர்-செய்யார். (எ-று.) (கருத்து) உயர்குடியிற் பிறந்தவர் கோடிபொருளைப்பெற்றாலுங் குன்றுந் தொழிலைச் செய்யார்கள் என்பதாம். ☼ கோடியென்பது இங்கே எண்ணப்படும் பொருண்மேல் நின்றது. குன்றுந்தொழில்கள்-குன்றுதற்கு ஏதுவாகிய தொழில்கள். (௬)

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி ... *
பண்பிற் றலைப்பிரித லின்று ... *

(இ-ள்.) பழங்குடி-பழமைதொட்டுவருகிற குடியிலே பிறந்தவர்-வழங்குவது-(தாம்) கொடுக்கும்பொருள் - உள்வீழ்ந்தக்கண்ணும்-முன்னையளவிலே சுருங்கியவிடத்தும்- பண்பின்- (தமது) குணமுடைமையில்-தலைப்பிரிதலின்று-நீங்கார். (எ-று) (கருத்து) நற்குடியிற்பிறந்தவர் கொடுக்கும்பொருள் சுருங்கியவிடத்துங் குணமுடைமையிற்குறைபார் என்பதாம். ☼ பழமை தொட்டுவருதல் - சேரசோழ பாண்டிய ரென்பதுபோல ஆதிகாலந்தொடங்கி மேம்பட்டுவருதல், அவர்க்கு வழுவையாவது-தாங்கொடுக்கும் பொருள்முன்னையளவிலே சுருங்குவதாகலால் அதனையேசொல்லினார். (௭)

குலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற ... *
குலம்பற்றி வாழ்து மென்பார் ... *

(இ-ள்.) மாசற்ற- வசையற்று வருகின்ற - குலம்பற்றி-(நமது)கு

டிமரபினேடொத்து-வாழ்தும்மென்பார் - வாழக்கடவோமென்றறி னைத்து அப்படியே வாழ்வோர்-(வறுமையுற்றவிடத்தும்)- சலம்பற்றி-வஞ்சனையைப்பொருந்தி- சால்பில-அமைவில்லாத தொழில்களை செய்யார்-செய்யார். (எ-று.) (கருத்து) நற்குடிப்பிறப்பில் வாழ்பவர்வஞ்சனைபொருந்தி யமைவில்லாத தொழில்களைச்செய்யாரென்பதாம். ❁ அமைவில்லாமை- தங்குடிமரபினுக்குத் தகாமையாம். [இவைமூன்றுபாட்டாலும் அவர் வறுமையுற்றவிடத்தும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது சொல்லப்பட்டது.] (௫)

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின் ........ ❋
மதிக்கண் மறப்போ லுயர்ந்து ......... ........ ........... ❋

(இ-ள்.) குடிப்பிறந்தார்கண்-உயர்ந்தகுடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற)-குற்றம்— (தான்சிறிதேயாயினும்)- விசும்பின்-ஆகாயத்தில்-மதிக்கண்-சந்திரனிடத்து - மறுப்போல்-களங்கம்போல் உயர்ந்து-ஓங்கி-விளங்கும்-தோன்றும். (எ-று.) (கருத்து) உயர்குடியிற்பிறந்தவரிடத்துண்டாங் குற்றஞ்சிறிதாயினுஞ் சந்திரனிற்களங்கம்போலோங்கிவிளங்கும் என்பதாம். ❁ உயர்ந்தகுடிக்கு-விசும்பும் அதிற்பிறந்தோற்கு-மதியும், அவர்குற்றத்துக்கு- களங்கமும், உவமானங்கள். குடியினது உயர்ச்சியினாலும், சந்திரன் போன்ற அவர்நற்குணங்களோடு மாறுகலாலும், அக்குற்றமானது உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம். (௭)

நலத்தின்கணாரின்மை தோன்றி னவனைக் ......... ........... ❋
குலத்தின்க ணையப் படும் ........ .......................... ❋

(இ-ள்.) நலத்தின்கண்-(குல) நலமுடையானுப் வருகின்றவனிடத்தே-நாரின்மை- அன்பில்லாமை - தோன்றின்- உண்டாமாயின் — (உலகம்)-அவனை-அம்மனிதனை- குலத்தின்கண் - அக்குலப் பிறப்பிடத்தே-ஐயப்படும்-சந்தேகப்படும் (எ-று.) (கருத்து) நலமுடையனிடத்து அன்பில்லாமையுண்டாயினவனைக்குலமுடையனல்லனென்றையப்பாட்டில் வைக்கப்படும் என்பதாம். ❁ நலமும், குலமும், ஆகுபெயர். அன்பில்லாமையால்-கொடாமைகடுஞ்சொல்முதலானவைசொல்லப்பட்டன தோன்றினென்பது- தோன்றாமைவிளக்கிநின்றது. நலனுடையனும்வருகவினடுவேஇவைதோன்றலால் உள்ளதுஐயமாயிற்று. [இவையிரண்டுபாட்டாலும்வேறுபட்ட வழிப்படுமிழுக்கம் சொல்லப்பட்டது.] (௮)

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங் .... ............. ❋
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்..... ........................ ❋

(இ-ள்.) நிலத்திற்கிடந்தமை-நிலத்தினியல்பை—கால்- (அதனிடத்தேமுளைத்த) முளையானது - காட்டும் காண்பிக்கும்.—(அதுபோல்)-குலத்திற்பிறந்தார் வாய்ச்சொல்-நற்குலத்திற் பிறந்தவர் வாய்ச்சொல்-காட்டும் - (அக்குலத்தினியல்பைக்) காட்டும். (எ-று.) (கருத்து) நிலத்தியல்பைமுளைகாட்டும் குலத்தியல்பைவாய்மொழி காட்டும் என்பதாம். ❁ கிடந்தமை-உள்ள குணம்.—முளைமாத்திரத்தால் நன்மையும் தீமையும் தெரிதலால் இலைமுதலானவை காட்டுமெனச் சொல்லாராயினர். ஆகவே குலத்திற்பிறந்தார்க்கும் செயல்முதலானவை வேண்டாவாயின் குலத்தியல்பறிதற்குச்சாதனம் சொல்லுவார்போன்று இன்சொல் சொல்லவேண்டு மென்றபடியாயிற்று. (௯)

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங்குலம்வேண்டின் - ✳
வேண்டுக யார்க்கும் பணிவு ........................ ✳

(இ-ள்.) (ஒருவன்)-நலம்வேண்டின் - (தனக்கு) நலமுடைமைவேண்டுவானாகில்- நாணுடைமை- நாணமுடையவனாதலை- வேண்டும்- வேண்டக்கடவன்.— குலம் வேண்டின்-குல முடைமையைவேண்டுவானாயின்-யார்க்கும்-(வணங்கத்தக்க)யாவரிடத்தும் - பணிவு- வணங்குதலை-வேண்டுக - வேண்டக்கடவன். (எ-று.) (கருத்து) நலத்தை விரும்பினால் நாணத்தைக்கொள்ளக்கடவன் குலத்தை விரும்பினால் வணக்கத்தைக் கொள்ளக்கடவன் என்பதாம். ❁ நலம் - புகழ்புண்ணியங்கள். அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தைதாய் இவரெல்லாம் அடங்க- யார்க்குமென்றார்-பணிவு- இருக்கையெழல் எதிர்செலல் முதலாயின. [இவையிரண்டுபாட்டாலும் குடிமைக்கு வேண்டுவன சொல்லப்பட்டன.] (௰)

❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁ ❁

## கூ௭ - ஆம் - அதி - மானம்.

இனிக்குடிப்பிறந்தவர்க்கு உரியகுணங்கள் சொல்லத்தொடங்கிமுதலில் மானம் சொல்லுகின்றார்.

அஃதாவது-எந்நாளும் தன்னிலையிலே தாழாமையுந் ஊழால் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமாம். இது அக்குடிப்பிறப்பை அழியாமல் நிறுத்துதலாலே அச்சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது,

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங் ........................ ✳
குன்ற வருப விடல் ........................ ✳

(இ-ள்.) இன்றியமையா- செய்யாதவிடத்தே தாம்அமையாத-சிறப்பினவாயினும்-சிறப்புடையவையாயினும் -குன்ற-(தங்குடிப்பிறப்பானது) தாழ-வருப - வருஞ்செயல்களை-விடல் - விடக்கடவன் (எ-று.) (கருத்து) மிகவுஞ்சிறப்புடையவையாயினுந் தங்குடிதாழவருஞ்செயல்களை விடக்கடவன் என்பதாம். ☸ அமையாமை - இறத்தல். குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையால்வந்தது. தாம்இறக்கவருமிடத்தே இழிதொழில்களைச் செய்தாயினும் பிழையென்னும் வடநூலின் முறைமையை-மறுத்து உடம்பினது நிலைஇல்லாமையும். மானத்தினது நிலையுடைமையும், ஆராய்ந்து அவை செயலாகா தென்றபடி. (௧)

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு ..................... .........※
பேராண்மை வேண்டு பவர்....................... .........※

(இ-ள்.) சீரொடு-புகழுடனே-பேராண்மை- மானத்தைநிறுத்துதலை-வேண்டுபவர் விரும்புபவர் - சீரினும்- புகழ்சம்பாதிக்குமிடத்தும்-சீரல்ல - (தங்குடிக்கு)ஒவ்வாத இழிதொழில்களை - செய்யார்-செய்யார். (எ-று.) (கருத்து)மானத்தைவிரும்புவோர்தங்குடிக்கொவ்வாததொழில்களைச் செய்யார் என்பதாம். ☸ எவ்விடத்தும் நிலைகுலையாத திடத்தால் உண்டாதல்பற்றி - பேராண்மை யெனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவும் செய்யாரென்பதாம். ஏ-அசைநிலை.] (௨)

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய ....................※
சுருக்கத்து வேண்டு முயர்வு ................................※

(இ-ள்.)(குடிப்பிறந்தவர்க்கு)- பெருக்கத்து - நிறைந்த செல்வமுண்டானவிடத்துபணிதல்-(யாவரிடத்தும்)பணிவு- வேண்டும்-வேண்டும்.—சிறிய-குறைந்த-சுருக்கத்து - வறுமையுண்டானவிடத்து-உயர்வு-பணியாமை-வேண்டும்-வேண்டும். (எ-று.) (கருத்து) நற்குடியிற்பிறந்தவர்க்குச் செல்வத்தில்வணக்கமும்வறுமையில்வணங்காமையும் வேண்டும் என்பதாம். ☸ பணியாமை - தாழ்வாராமல்புழைபவுயர்ச்சியிலே நிற்றல். செல்வமுடையபோது அது உயர்ச்சிசெய்தவிடத்திலேதாம் தாழ்தலும், வறுமை யுடையபோது அது தாழ்வுசெய்தவிடத்திலே தாம் உயர்தலும், வேண்டுமென்பதாம்.[இவை மூன்றுபாட்டாலும் தாம் தாழ்தற்குஏது வானவைகளைச் செய்யாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர் ..................... .........※
நிலையி னிழிந்தக் கடை ....................................... ........※

(இ-ள்.) மாந்தர்-(குடிப்பிறந்த)மனிதர் - நிலையின் - (தம்முயர்ந்த) நிலையிலிருந்து இழிந்தக்கடை-தாழ்ந்தவிடத்து-தலையினிழிந்த-தலையிலிருந்துவீழ்ந்த-மயிரனையர் - மயிர்போல்வர். (எ-று.)(கருத்து) நற்குடியிற்பிறந்தவர் நிலைகெட்டவிடத்துத் தலையிலிருந்துநீங்கியமயிர்க்கொப்பாவர் என்பதாம். ❈ அந்நிலையைவிடாது நின்றவிடத்தேவிரும்பிமரியாதை செயப்படுதலும், விட்டுத்தாழ்ந்த விடத்தே இழிவுசெயப்படுதலும், உவமானத்தாற் பெற்றாம். (௪)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ……………… ……… ❈
குன்றி யனைய செயின்……………………………… ❈

(இ-ள்.) குன்றினனையாரும்- (குடிப்பிறப்பால்) மலைபோலுயர்ந்தவரும்-குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகியசெயல்களை குன்றியனைய-ஒருகுன்றியளவாயினும்-செயின்-செய்தால்- குன்றுவர் - தாழ்வார். (எ-று,) (கருத்து) மலையை நிகர்த்தகுடிப்பிறப்பாளரும் தாழ்தற்கேதுவானசெயல்களைச் செய்தலால் தாழ்வார்கள் என்பதாம். ❈ குன்றியனையவும் என்கிறஇழிவு சிறப்பும்மைவிகாரத்தாலதொக்கது. தாழ்தற்கு ஏதுவாகியசெயல்களாவன-பழிக்கப்படுஞ்செயல்கள். (௫)

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்……………… ❈
றிகழ்வார்பின் சென்று நிலை……… …. ……………………… ❈

(இ-ள்.) இகழ்வார்பின்- (தம்மை) அவமதிப்பவர் பின்னேசென்று நிலை- (ஒருவன்மானம்விட்டுச்) சென்றுநிற்கின்றநிலை— புகழின்று-(இவ்வுலகத்துப்) புகழுண்டாக்காது- புத்தேணாட்டு - மற்றைத் தெய்வலோகத்திலே-உய்யாது-செலுத்தாது - மற்று - இனி - என-(அவனுக்குச்செய்வது) யாது-யாது. (எ-று.) (கருத்து) இகழ்பவர்பின்சொல்லுவோர் நிலைபுகழைப்புண்டாக்காதுதேவருலகத்துச்செலுத்தாது. என்பதாம். ❈ ஆலிரண்டும் - அசைகள். புகழுண்டாக்குவப் புகழென்றார். பயனாகிய இவ்விரண்டும் இல்லாமல்வீணாகமானங்கெடுகின்ற தென்னையென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் அவைசெய்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே…. .. ❈
கெட்டா னெனப்படுத னன்று ……… … ……………………… ❈

(இ-ள்.) ஒட்டார்பின் - (தன்னை) இகழ்வார்பின்னே — சென்று-போய்-(பொருள்பெற்று) ஒருவன் வாழ்தலின் - (அதனால்) ஒருவன் உயிர்வாழ்தலைக் காட்டிலும்-அந்நிலையே- முன்னை நிலையிலேநின்று-கெட்டானெனப்படுதல்- இறந்தானென்றுசொல்லப்படுதல்- நன்று-(அவனுக்கு)நன்று. (எ-று.) (கருத்து) ஒருவனிகழ்பவர்பின் சென்

றுவாழ்தலினு முன்னிலையிலிருந் திறந்தானென்று சொல்லப்படுதலேநல்லது என்பதாம். ❁ புகழும் வானுலகமும் உண்டாக்காதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வமென்பாரை நோக்கிச்சொல்லியது.

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை ..*
பீடழிய வந்த விடத்து ........ ....... ........................... .. *

(இ ள்.) பெருந்தகைமை - உயர்குடிப்பிறப்பானதுமீடு(தன்)வலியாகியமானம்-அழியவந்தவிடத்து-கெடவந்தபோது ஊனோம்பும் (இறந்துபோகாமல்பயனில்லாத) வுடம்பைக்காப்பாற்றும் - வாழ்க்கை-வாழ்வானது - மற்றுமருந்தோ (பின்னுமிறவாமைக்கு) மருந்தாமோ. (எ-று.) (கருத்து)மானமழிய வந்தபோது உடலைக்காப்பாற்றும்வாழ்வானதுஇறவாமைக்கு மருந்தாமோ என்பதாம். ❁ அக்குடிப்பிறப்பு- நற்குணங்களுக்கெல்லாம் இடனாதற்சிறப்புப்பற்றி-பெருந்தகைமையென்றும். அக்குணம் பலவினும் மானமானது அக்குடிப்பிறப்புக்குவலியாதற்சிறப்புப்பற்றிமீடென்றும். அம்மானம் அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலால் - அதனை ஊனென்றும், பின்னுமிறத்தல் நிச்சயமென்றற்கு- மருந்தோவென்றும்சொல்லினார். (௮)

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா..................... .... *
ருயிர்நீப்பர் மானம் வரின்..........................................*

(இ-ள்.) மயிர்நீப்பின் -(தன்மயிர்த்திரளில்)ஒருமயிர்நீங்கினும்-வாழா-உயிர்வாழாத- கவரிமாவன்னார் - கவரிமாவையொப்பவர்— மானம்வரின்- (உயிர்நீக்குதற்கான) மானம்பெறும்அளவுவரின் - உயிர்-அவ்வுயிரை-நீப்பர்-விடுவர். (எ-று.) (கருத்து) கவரிமானுக்கொப்பானவர் மானங்கெடவரின் உயிரைவிட்டுவிடுவர். என்பதாம். ❁ நீப்பினுமென்னுமும்மை-தொக்குநின்றது. உயிருமானமும் உடனில்லாதவிடத்துப் பின்னும் போவதாகிய வுயிரை நீக்கி எந்நாளுநிற்பதாகிய மானமடைவரென்பதாம். உவமானம் அவர்க்கு அதுஇயல்பென்பது விளக்கியது. (௯)

இளிவரின் வாழாத மான முடையா..... ....... .... ...,.... *
ரொளிதொழு தேத்து முலகு...... ..... ........... ........ . *

(இ.ள்.) இளிவரின்- (தமக்கு) ஒரவமானம் வந்தவிடத்து- வாழாத-(பொறுமல்) உயிர்வாழாத-மானமுடையார்-மானமுடையவரது—ஒளி- புகழ்வடிவை - உலகு - உலகத்தார் - தொழுதேத்தும்-(எந்நாளும்) தொழுதுதுதிப்பார், (எ-று.) (கருத்து) அவமானம்வந்தபோது உயிர்பெற்றவாழாத மானமுடையவர் புகழ்வடிவை யுலகத்தார் துதிப்பர் என்பதாம். ❁ புலவர் பாடும் புகமுடையோர்வி

சும்பின் வலவனை வானவூர்தி யெய்துவராதலால் - சுவர்க்கம்பெறு தல்சொல்ல வேண்டாவாயிற்று. [இவை நான்குபாட்டாலும்மானப் பொருட்டாகிய இறப்பின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (ம)

# கூஅ-ஆம்-அதி-பெருமை.

அஃதாவது-செய்தற்கரியசெய்தல் - செருக்கில்லாமை பிறர்குற்றஞ் சொல்லாமை - என்றிவை முதலாகிய நற்குணங்களாலே பெரியராயினோரது தன்மையாம். நிலையிலிருந்துமேலுமேலும்உய ர்த்துவதாகிய இக்குணங்கள்உண்டாவது நிலையிலிருந்துதா ழாமை உள்ளவிடத்தேயாகலால் இது மானத்தின் பின் வைக்கப்பட்டது.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற் ........*
கஃதிறந்து வாழ்து மெனல். ..........................*

(இ-ள்.)ஒருவற்கு - ஒருவனுக்கு-ஒளி-ஒளியாவது - உள்ளவெறுக்கை-(பிறராலேசெய்தற்கரியவைகளைச்)செய்வோமென்று நினைக்கிற)மனவெழுச்சியின்மிகுதி.—ஒருவர்க்கு- ஒருவனுக்கு-இளி-மாசாவது-அஃதிறந்து-அச்செயலையொழிந்து- வாழ்துமெனல் - உயிர்வாழ்க்கடவோமென்றுநினைத்தல்.(எ,று.)(கருத்து) ஒருவனுக்கொளியாவது மனவெழுச்சியாம். இளியாவதுமனவெழுச்சியில்லாமையாம் என்பதாம்.* ஒளி-தான் உளனாயகாலத்து மிகுந்துதோன்றுதலுடைமை.—முன்னும் செயற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும் இங்கே அவை அளவிறந்த உபகாரம் ஈகை முதலானவையாம்.— அவைகளினாலாகிய பெருமையை அதன் காரணத்தின்மேலிட்டு- உள்ளவெறுக்கையென்றும்; அதனையே அதன் காரியமாகியவொளியாக்கியும், சொல்லினார். இதனாற்பெருமையின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (க)

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா ......*
செய்தொழில் வேற்றுமை யான் ........................*

(இ-ள்.) எல்லாவுயிர்க்கும்- எல்லாமக்களுயிர்க்கும்- பிறப்பு-(பொதுவாகிய)பிறப்பியல்பு-ஒக்கும்- ஒத்திருக்கும்-(ஆயினும்) - சிறப்பு-(பெருமைசிறுமையெனப்பட்ட) சிறப்பியல்புகள் - ஒவ்வா - ஒத்திடாவாம்.—செய்தொழில்- செய்யுந்தொழில்களது - வேற்றுமையான்-

வேறுபாட்டால். (எ,று,) (கருத்து) மக்களுக்குப் பிறப் பியல்பொதி திருக்கும். தொழில்வேற்றுமையாற் சிறப்பியல் பொவ்வாவாம் என் பதாம். ❁ வேறுபாடு- நல்லவையும், தீயவையும், இரண்டுமானவை யும், இரண்டு மல்லாதவையும்; ஆகிய பலபிரிவுகள்.— வினைவசத்தா ல்பஞ்சபூதகாரியமாகிய உடம்பைப் பொருந்திநின்று அதன்பயன னுபவித்தல் எல்லாருக்கும் ஒத்திருத்தலால் பிறப்பொக்கு மென்று ம்,பெருமை சிறுமைகளுக்குக் கட்டளைக் கல்லாகிய தொழிற்பிரி வுகள் உடம்புதோறும் வேறுபடுதலால்- சிறப்பொவ்வா வென்றும், சொல்லினர். (௨)

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங் ......... *
கீழல்லார் கீழல் லவர் ......... *

(இ-ள்) மேலல்லார் - (செய்தற் கரியவைகளைச் செய்யமாட்டாம ல்) சிறியராயினோர் - மேலிருந்தும் - உயர்ந்த ஆதனங்களில் இருந் தாராயினும்-மேலல்லர்-பெரியராகார் -.கீழல்லவர்-(அவைசெய்து) பெரியராயினோர்- கீழிருந்தும் - தாழ்ந்தவெறுநிலத்தில்இருந்தாரா யினும்-கீழல்லார்-சிறியராகார். (எ-று.) (கருத்து.) சிறியவர் மேலிரு ந்தாலும் பெரியவராகார். பெரியவர் கீழிருந்தாலுஞ் சிறியவராகார் என்பதாம். ❁ மேலிருத்தல் கீழிருத்தல்களாலே செல்வ வறுமைக ளும், மேல்கீழ்களாலே - பெருமை சிறுமைகளும், கருதப்பட்டன [இவையிரண்டுபாட்டாலும் முறையே குடிப்பிறப்பு மாத்திரத்தா லும், செல்வமாத்திரத்தாலும், பெருமை உண்டாகாமை சொல்லப் பட்டது. (௩)

ஒருமை மகளிரே போலப் பெருமையுந் ......... *
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு ......... *

(இ-ள்) ஒருமை - பிளவுபடாத மனவொருமையை யுடைய - மக ளிரேபோல-கற்புள்ளமாதரைப்போல - பெருமையும்- பெருமைக் குணமும்— தன்னைத்தான் - தன்னைத்தானே - கொண்டொழுகின்- (ஒருவன் நிறையின்வழுவாமல்) காத்துக்கொண்டு நடக்கவல்லனாயி ன்-உண்டு-(அவனிடத்து)உண்டாம், (எ-று.) (கருத்து) பெருமைக் குணமுங் கற்புள்ள மாதரைப்போலத் தன்னைக்காத்துக்கொண்டவ னுக்குண்டு. என்பதாம். ❁ ஒழுகுதல்- மனமொழிமெய்களை அடக் கிஉபகாரமுதலானவை செய்துவருதல். [இதனால்பெருமைஉண்டா மாறுசொல்லப்பட்டது.] (௪)

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி ......... *
னருமை யுடைய செயல் ......... *

(இ-ள்.) பெருமையுடையவர் - அவ்வழியாலே பெருமையுடையவராயினார்-(தாம்வறியராகியவழியும்)-அருமையுடைய - (பிறராலே செய்தற்கு) அருமையுடையனவையாகிய- செயல்- (தஞ்)செயல்களை- ஆற்றின்-(அவைசெய்யும்)வழியால் - ஆற்றுவார் - (முடிவுபெறச்) செய்பவல்லவராவர்.(எ-று.)(கருத்து)பெருமையுடையோர் அருமையுடையசெயல்களைச் செய்வார் என்பதாம். ❁ அரிய செயல்களைமுன்செய்து வந்தமைதோன்ற - பெருமையுடையவரென்றதனாலும், ஆற்றுவாரென்றதனாலும், வறியராகிய வழியுமென்பது பெற்றாம். [இதனால் அதனையுடையார் செய்தி சொல்லப்பட்டது.] (௫)

சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப் ............... ❋
பேணிக்கொள் வேமென்னு நோக்கு ............... ❋

(இ-ள்.) பெரியாரை -(அப்படிப்பட்ட) பெரியாரை - பேணி-வழிபட்டு- கொள்வேமென்னும்-(அவரியல்பைக்)கொள்வேமென்னும்-நோக்கு- கருத்து-சிறியார் - மற்றச்சிறியராயினோரது - உணர்ச்சியுள்-மனத்தினிடத்து-இல்லை-உண்டாகாது. (எ-று.) (கருத்து)பெரியோரைவழிபட்டுக்கொள்வோமென்னுங் கருத்துச்சிறியோர்மனத்திடத்தில்லை என்பதாம். ❁ குடிமை செல்வம் கல்வி யென்றிவையுடையவராயிருக்கை மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவைநமக்கியல்பென்று அடங்கி யிருப்பாரை வழிபட்டு அவ்வியல்புடையராதல் கூடாதென்பதாம். (௬)

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான் ............... ❋
சீரல் லவர்கட் படின் ............... ❋

(இ-ள்.) சிறப்பும்- (தனக்குத்தரும் பெரியாரிடத்து அடங்கியிருத்தலைச்செய்வதாகிய) சிறப்பும்-தான்-தான்-சீரல்லவர்கட்படின்(தனக்குத்தகாத) சிறியவரிடத்துவண்டாமாயின் - இறப்பேபுரிந்த-அடங்கியிருத்தலொழிந்து செருக்கினிடத்திலே)மிகுந்த- தொழிற்றும்-செயலையுடைத்தாம் (எ-று.) (கருத்து) சிறப்புஞ் சிறியவரிடத்துண்டாயின் செருக்கிலே மிகுந்த தொழிலையுடையதாம் என்பதாம். ❁ செருக்கினை மிகச் செய்யுமென்பதாயிற்று. சிறப்பு - குடிமைசெல்வங்கல்விகளினாலாகிய மிகுதி . [இவை யிரண்டுபாட்டாலும் அஃதில்லாதார் செய்தி சொல்லப்பட்டது.] (௭)

பணியுமா மென்றும் பெருமை சிறுமை ............... ❋
யணியுமாந் தன்னை வியந்து ............... ❋

(இ-ள்.) பெருமை - பெருமையுடையவர்—என்றும் - சிறப்புண்டாகிய நாளினும்-பணியும்-அடங்கிநடப்பார்.- சிறுமை-(மற்றைச்)

சிறுமையுடையவர்- (என்றும்) அதுஇல்லாதநாளிலும் - தன்னைவிய ந்து-தம்மைமெச்சி- அணியும்- சிறப்பிப்பார். (எ,று.) (கருத்து) பெருமையுடையவர் சிறப்புண்டாகியகாலத்து மடங்கிநடப்பார். சிறுமையுடையவர் சிறப்பில்லாக்காலத்துந் தம்மைச் சிறப்பித்து நடப்பார் என்பதாம். ☞ [பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே' என்றவிலக்கணத்திற்குமாறு யினு மதற்குக்காரணம். ❋ பண்புடையவர் தொழில்கள் பண்பின் மேல் ஏற்றப்பட்டன. இதுபின் அற்றமறைக்கு மென்னுமிடத்தும் ஒக்கும் ஆமிரண்டும்-அசை. சிறப்பித்தல் - பிறரினுந் தமக்கு ஒருயர்வை ஏற்றிக்கொள்ளல். (அ)

பெருமை பெருமித மின்மை சிறுமை ............ ❋
பெருமித மூர்ந்து விடல் ............ ❋

(இ-ள்.) பெருமை - பெருமைக்குணமாவது-பெருமிதமின்மை -(காரணம்) உண்டாகியவிடத்தும் அது இயல்பாதனேக்கிச்)செருக்கில்லாதிருத்தல் — சிறுமை - சிறுமைச்குணமாவது பெருமிதமூர்ந்துவிடல்-(காரணம் இல்லாவிடத்தும் அதனை ஏற்றிக்கொண்டு) செருக்கின்முடிவிலே நின்றுவிடுதல். (எ,று.) (கருத்து) பெருமைக் குணமாவது செருக்கில்லாதிருத்தல். சிறுமைக்குணமாவது செருக்குடைத்தாயிருத்தல் என்பதாம். ❋ அளவறச் செருக்கலென்பதாயிற்று. (௯)

அற்றமறைக்கும் பெருமை சிறுமைதான் ............ ❋
குற்றமே கூறி விடும் ............ ❋

(இ-ள்.) பெருமை - பெருமையுடையவர்- அற்றமறைக்கும் - (பிறர்மானத்தையேசொல்லி) அவமானத்தை- மறையாநிற்பர்.—சிறுமை-மற்றைச்சிறுமையுடையவர் - குற்றமேகூறிவிடும்- (பிறர்குணத்தைமறைத்துக்) குற்றத்தையே-சொல்லிவிடுவர். எ,று.) (கருத்து) பெரியோர் பிறரவமானத்தை மறைப்பர். சிறியோர் பிறர்குற்றத்தைச் சொல்லுவர் என்பதாம். ❋ மறைத்தலும் சொல்லும்மற்றையிடத்தும் கூட்டப்பட்டன. தான் ❋ அசை. [இவைமூன்றுபாட்டாலும் இருவர்செயலும் சேர்த்துச்சொல்லப்பட்டன.] (௰)

☞ நன்னூல்.





# ௯௰௯-ஆம் அதி. சான்றாண்மை.



அஃதாவது-பலகுணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளுந் தன்மை. பெருமையுள் அடங்காத பலகுணங்களையும் தொகுத்துக்கொண்டுநிற்கையால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து.............❋
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு... ......... ...❋

(இ-ள்.) கடனறிந்து-(நமக்கு இது) தகுவ தென்று அறிந்து—சான்று-(பலகுணங்களாலும்) நிறைந்து-ஆண்மை-(அவைகளை) ஆளுந்தன்மையை-மேற்கொள்பவர்க்கு-மேற்கொண்டு நடப்பவர்க்கு-நல்லவையெல்லாம்-நல்லகுணங்களெல்லாம்-கடன்-இயல்பாயிருக்கும்-என்ப-என்று (நூலோர்) சொல்லுவர். (எ-று.)(கருத்து) பெரியவர்களுக்கு நற்குணங்களை மேற்கொள்ளுதல் கடமையாயிருக்கும் என்பதாம். ❋ சிலகுணங்களில்லாவிடத்தும், உள்ளவை இயல்பாயிராதவிடத்தும் சான்றாண்மை யென்னுஞ்சொற் பொருள்கூடாமையால் இவ்வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இப்படிச் சொல்லினாரென்பதாம். (௧)

குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்.............. ...❋
எந்நலத் துள்ளதூஉ மன்று......... ......... ....❋

(இ-ள்.) சான்றோர்நலன்-சான்றோர்நலமாவது- குணநலம்-குணங்களாலாகியநலமே — பிறநலம்-அது நீங்கலான உறுப்புக்களாலாகியநலம்-எந்நலத்துள்ளதூஉம்- எந்த நலத்திலுமுள்ளதும்- அன்று-அல்ல. (எ,று.) (கருத்து) சான்றோர்க்குக்குணநன்மையேபெரியநன்மையாய் மற்றநன்மை நன்மையல்ல என்பதாம். ❋ அகநலத்தைமுன்னே பிரித்தமையால் மற்றைப்புறநலத்தை-பிறநலமென்றும், அது குடிப்பிறப்புக்கல்விமுதலாக நூலோரெடுத்த நலங்களுள்ளே செல்லாமையால்-எந்நலத்துள்ளதூஉ மன்றென்றும், சொன்னார் [இவையிரண்டு பாட்டாலும் சால்புக்கு ஏற்ற குணங்கள்பொதுவகையாற் சொல்லப்பட்டன.] (௨)

அன்புநாணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ...❋
டைந்துசால் பூன்றிய தூண்......... ......... .........❋

(இ,ள்.) அன்பு-(சுற்றத்தார்மேலே யல்லாமற்பிறர்மேலும் உண்டாகிய) அன்பும்-நாண்-(பழிபாவங்களி) னாணலும்- ஒப்புரவு-(யா

வரிடத்தும்) உபகாரஞ்செய்தலும்-கண்ணோட்டம்- (பழையவர்மேல்) கண்ணோடலும் - வாய்மையோடு - (எவ்விடத்தும்) மெய்ம்மை சொல்லுதலோடும்—சால்பு - சால்பென்னும்(பாரத்தை)·ஊன்றிய தாங்கிய தூண்-தூண்கள்-ஐந்து-அஞ்சு. (எ-நு.) (கருத்து) அன்பு நாணம்-உபகாரம் -தாக்ஷணியம்-சத்தியம் - இவ்வைந் துஞ் சால்பென்னும் பாரத்தைத் தாங்குந்தூண்கள் என்பதாம். ❁ இக்குணங்கள் இல்லாதவிடத்தே சால்பு நிலைபெறுமையால் இவைகளைத் தூணென்றார். (௩)

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை ........ .... ❋
சொல்லா நலத்தது சால்பு ........... ............... ❋

(இ-ள்.) நோன்மை-தவமாவது-கொல்லா நலத்தது - (பிறவறங்களும் வேண்டுமாயினும்) ஒருயிரையுங் கொல்லாத அறத்தினிடத்ததாம,—(அதுபோல்)-சால்பு - சால்பாவது-பிறர் தீமை சொல்லா நலத்தது- (பிறகுணங்களும் வேண்டு மாயினும்) பிறர்தீமையைச் சொல்லாதகுணத்தினிடத்ததாம். (எ-நு.)(கருத்து.) நோன்பாவது யாதொன்றையுங் கொல்லாமையாம். சால்பாவது பிறர்குற்றத்தைச்சொல்லாமையாம் என்பதாம், ❁ தவத்திற்குக் கொல்லா வறம் போல் சால்பிற்குப் பிறர்குற்றஞ் சொல்லாக்குணம் சிறந்ததென்பதாம். (௪)

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்................❋
மாற்றாரை மாற்றும் படை ....... ......... .......... ❋

(இ-ள்.) ஆற்றுவார்-(ஒருகரு மத்தைச்) செய்து முடிப்பவரது-ஆற்றல்- வலிமையாவது- பணிதல்-(அதற்குத் துணையா வாரைத்)தாழ்ந்துகூட்டிக்கொள்ளுதல்.— சான்றோர்-(இனிச்) சால்புடையவர்-மாற்றாரை - பகைவரை - மாற்றும்படை ·பகைமை யொழிக்குஞ் சாதனமும்-அது- அப்பணிதல். (எ-நு.) (கருத்து)காரியமுடிப்பவர்வல்லமையாவது பணிதல் அது சத்துருக்களை வெல்லும் படையாமென்பதாம். ❁ ஆற்றல்·செயவல்லராந்தன்மை. சால்பிற்குவேற்றப ணிதற்குணத்துச் சிறப்புச்சொல்லுவார் மற்றதுமுடன்சொல்லினார்.

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி............ .......... ❋
துலையல்லார் கண்ணுங் கொளல்...........··.......❋

(இ-ள்.) சால்பிற்கு-சால்பாகிய பொன்னினை) வறிதற்கு - கட்டளை-உரைகல்லாகிய (செயல்)- யாதெனின்- யாதென்றால் - தோல்வி (தம்மினுயர்ந்தவரிடத்துக்கொள்ளுந்) தோற்பை— துலையல்லார்கண்ணும்-இழிந்தவரிடத்தும் - கொளல்-கொள்ளுதல்· (எ-நு.)(கருத்

து) சால்பிற்குளாகல் ஏதுவெனில் இழிந்தவரிடத்துந்தோல்விகொள்ளுதல் என்பதாம். ❁ எச்சவும்மையால் இருதிறத்தாரிடத்தும் வேண்டுதல்பெற்றும்.— கொள்ளுதல்வெல்லும் வலிமையுடையராயிருந்தே தோற்றுக்கொள்ளுதல். இழித்தாரை வெல்லதினைத்துத் தமக்குச்சமானமாக்கிக் கொள்ளாமல் தோற்பால் அவரின் உயர்வாராயின் அதனாலே சால்பளவு அறியப்படுமென்பதாம். (௬)

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா ............*
லென்ன பயத்ததோ சால்பு..................................*

(இ-ள்.) (சால்புடையவர்)-இன்னா-(தமக்குத்) துன்பந்தருமவைகளை—செய்தார்க்கும்-செய்தவர்களுக்கும் - இனியவே- இன்பந்தருமவைகளையே- செய்யாக்கால் -செய்யாவிட்டால்-சால்பு- சான்றாண்மை-என்னபயத்தது - (வேறே) என்னபயனுடைத்து. (எ-று.)(கருத்து) துன்பஞ்செய்தவர்களுக்குமின்பஞ்செய்யாவிடில் சான்றாண்மையென்னபயனைத்தரும் என்பதாம். ❁ ஒ-அசை-சிறப்பும்மைசால்புடையவரும் இன்னாசெய்தற்கு இடமாதல்விளக்கிநின்றது. தாமும் அவர்க்கு இன்னாசெய்வாராயின் தம்முடைய சால்பால்ஒருபயனும் இல்லையென்பதாம். [இவைஐந்துபாட்டாலும் சிறப்புவகையாற் சொல்லப்பட்டது.] (௭)

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னும்... ...*
திண்மைஉண் டாகப் பெறின்..........................*

(இ-ள்.) சால்பென்னும்-சால்பென்று சொல்லப்படும்- திண்மை-வலிமை-உண்டாகப்பெறின் - தன்னிடத்துண்டாகப் பெற்றால்-ஒருவற்கு-ஒருவனுக்கு - இம்மை-வறுமை(யால்வருவது) - இளிவன்று-இகழ்வாகாது. (எ-று.) (கருத்து) சால்பின்வலிமையுண்டாகப்பெற்றால்வறுமை இகழ்வாகாது என்பதாம். ❁ தளராமல் நாட்டுதலால் வலியாயிற்று. சால்புடையவர் வறுமையிலும் மேன்படுவரென்பதாம்.] (அ)

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்.....*
காழி யெனப்படு வார் .......................................*

(இ-ள்.) சான்றாண்மைக்கு- சால்புடைமையாகிய (கடலுக்கு)—ஆழியெனப்படுவார்-கரையென்று சொல்லப்படுவார்- ஊழிபெயரினும்-(மற்றைக்கடலும் கரையுள் நில்லாமற்) காலம்வேறுபட்டாலும்-தாம்பெயரார்- தாம்வேறுபடார். (எ,று.) ;(கருத்து) சான்றோர் காலம் வேறுபடினுந் தாங்கள் வேறுபடார் என்பதாம். ❁ சான்றாண்மையின் பெருமைதோன்ற அதனை-கடலாக்கியும், அதனைத்தா

ங்கிக்கொண்டுநிற்றலால்-அதனை யுடையாளை - கணையாக்கியும்,சொ
ல்லினார். [ஏகதேசவுருவகம்.] (௯)

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான் .... ... *
றாங்காது மன்னோ பொறை.... ......... ...........*

(இ-ள்.) சான்றவர்- (பல்குணங்களாலும்) நிறைந்தவர் - சான்றா
ண்மை-(தமது) தன்மை-குன்றின்- குன்றுவராயின் - இருநிலந்தா
ன்-மற்றைப்பெரியபூமிதானும் - பொறை - (தன்) பாரத்தை-தாங்
காது-தாங்காதாய் முடியும். (எ-று.) (கருத்து) சான்றோர் சான்றா
ண்மை குன்றுவாராகில் பூமிபாரந்தாங்காது என்பதாம். ❊ தானு
மென்னும் எச்சவும்மை விகாரத்தால் தொக்கது —அவர்க்கு அது
குன்றாமையும் அதற்கு அது தாங்கலும் இயல்பாகலால் அவை எத்
தானும் உண்டாகா நின்றனவென்பது தோன்ற நின்றமையால்-ம
ன்னென்பது ஐ ஒழியிசையில்வந்தது. ஓகாரம்- அசை. [இவைமூ
ன்றுபாட்டாலும் பலகுணங்களாலும் நிறைந்தவரது சிறப்புச்சொ
ல்லப்பட்டது.] (௰)

# ௱-ஆம் அதி-பண்புடைமை.

அஃதாவது-பெருமை சான்றாண்மைகளில் தாம்வழுவாது நின்றே
எல்லா ரியல்புகளும் அறிந்து நடத்தலுடைய ராதல். அதிகார
முறைமையும் இதனால்விளங்கும்.

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்.... ......*
பண்புடைமை யென்னும் வழக்கு.........................*

(இ-ள்.) யார்மாட்டும்-யாவரிடத்தும் - எண்பதத்தால்-எளியசம
யத்தராயிருத்தல்- பண்படைமையென்னும்- பண்புடைமையெனா
ப்படுகின்ற-வழக்கு - (அரிதாகிய) நல்வழியை-எய்தல் - அடைதல்-
எளிது-எளிது-என்ப-என்று (நூலோர்) சொல்லுவர். (எ,று.) (கரு
த்து) யாவரிடத்து மெளிய சமயத்தராக விருக்கிற் பண்புடைமை
யென்னு நல்வழியடைத லெளிது என்பதாம். ❊ குணங்களால் நி
றைந்து எளியசமயத்தருமாகிய போது பண்புடைமைதானே உண்
டாமாகலால்-எண்பதத்தா லெய்தலெளிதென்றும், அதுஉலகத்தை
யெல்லாம் வசியமாக்கலால் அதனை-பழையோர் சென்ற நல் வழி

ஐ ஒழியிசை ஒழிந்த சொற்பொருளைத் தருவது.

யாக்கியும், அதனை எளிதிற்பெற இதுநூலோரோதியவுபாயமென்றற்கு அவர்மேல்வைத்தும்; சொல்லினார். (௧)

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்.. ✻
பண்புடைமை யென்னும் வழக்கு..... ..... . ........ .... ✻

(இ-ள்.) அன்புடைமை-(பிறர்மேல்) அன்புடைய னாதலும் - ஆன்ற குடிப்பிறத்தல்-(உலகத்தோடு) அமைந்தகுடியிற் பிறத்தலும்-இவ்விரண்டும் ஆகிய இவ்விரண்டும் - பண்புடைமை யென்னும்-ஒருவனுக்குப் பண்புடைமையென்று (உலகத்தார்) சொல்லும் —வழக்கு-நல்வழி. (எ-று.) (கருத்து) ஒருவனுக்கு அன்புடைமையுநற்குடியிற்பிறத்தலுமே நல்வழியாம் என்பதாம்: ✻அமைதல்-ஒத்துவருதல்-குடிப்பிறத்தலென்றது - குடிப்பிறந்தவர்செயலை.— இரண்டுங் கூடியவழியே பண்புடைமை யாவதென்பதுதோன்ற முற்றுமைகொடுத்தார்: [இவையிரண்டுபாட்டாலும் பண்புடையராதற்குக்காரணம் சொல்லப்பட்டது.] (௨)

உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க .... ✻
பண்பொத்த லொப்பதா மொப்பு......................... ✻

(இ-ள்.) உறுப்பொத்தல் (நெருங்கத்தகாத) உடம்பாலொத்தல்-மக்களொப்பன்று-(ஒருவனுக்கு) நல்மனிதரோடு (ஒப்பாகாமையால்) பொருந்துவதன்று.— ஒப்பதாம்-(இனிப்)பொருந்துவதாகிய-ஒப்பு ஒப்பாவது - வெறுத்தக்க-நெருங்கத்தக்க - பண்பொத்தல்-பண்பாலொத்தல். (எ-று.) (கருத்து) அவயவத்தா லொப்பாதலொப்பல்ல, குணத்தாலொப்பாதலே யொப்பாம் என்பதாம்.✻ஒருவனுக்கு நன்மக்களோடு பிறப்பொத்தலாவது - உயிரின்வேறாய் நிலைபெறுத உடம்பொத்தலாகாதுவேறல்லாமல்நிலைபெறுத லுடையபண்பொத்த லாகலால் அப்படிப்பட்டஅவர் பண்பினையுடையனாகவென்பதாம். ஆல்-அசை. (௩)

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்......... ....... ....... ✻
பண்புபா ராட்டு முலகு........................ ....... ...✻

(இ-ள்.) நயன்-நீதியையும்-ஒடு- அதனுடன்- நன்றி- அறத்தையும்-புரிந்த-விரும்பிய - பயனுடையார்-(பிறர்க்குந் தமக்கும்) பயன்படுதலுடையவரது- பண்பு-பண்பை - உலகு-உலகத்தார் - பாராட்டும்-கொண்டாடாநிற்பர். (எ,று.) (கருத்து) நீதியையுந்,தருமத்தையும்,விரும்பிய பயனுடையவர்குணத்தை யுலகத்தார் புகழ்வர் என்பதாம். ✻ நயனொடு நன்றிபுரிதலும், பயனுடைமையும், பண்புகாரணமாக வந்தமையால் அதனைப்பாராட்டுமென்றார். (௪)

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும் ....... .....*
பண்புள பாடறிவார் மாட்டு ....................................*

(இ-ள்.) இகழ்ச்சி-(தன்னை) இகழ்தல்-நகையுள்ளும் - (ஒருவனுக்கு) விளையாட்டினிடத்தும்-இன்னாது-துன்பந்தருவதாம். (ஆகலால்-பாடறிவார்மாட்டு - (பிற) ரியல்பறிந்து நடப்பவரிடத்து—பகையுள்ளும்-பகையுள்ள விடத்தும் - பண்பு- (அப்பகை உண்டாகாமல் இனிமையாகிய) பண்புகளே-உள-உண்டாவனவாம். (எ-று.) (கருத்து) விளையாட்டினு மிகழ்தலானது துன்பந்தரும். நல்லவரிடத்துப் பகையினு நற்குணமுண்டாமென்பதாம். ❊ பாடறிவா ரெனவே அவ்வின்னாமை யறிதலும்பெற்றாம். அதனை அறிந்தவர்பின் அதுசெய்யார் இனியவே செய்வாரென்பது கருத்து. (௫)

பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேல் ... .........*
மண்புக்கு மாய்வது மன் ..........................*

(இ-ள்.) பண்புடையார்-பண்புடையவரிடத்தே-பட்டு-படுதலால் உலகம்-உலகியல் - உண்டு-(எந்நாளும்) உளதாய்வாரா நின்றது.— இன்றேல்-(அங்கேபடுதல்) இல்லையாயின்.— அது- அவ்வுலகியல்-மண்புக்கு-மண்ணிலேபுகுந்து - மாய்வது- மாய்ந்துபோவதாம்.(எ-று.) (கருத்து) பெரியவரிடத்து நற்குண முண்டாத லால் உலகியலெந்நாளு முண்டாகின்றது. அது இல்லாவிடி னுலகியல் கெடுமென்பதாம். ❊ மற்றைப்பண்பில்லார் சார்பல்லாமையால் ஓருசார்புமில்லாமல்மண்ணிற்புகுந்து மாயுமது வேண்டாவாயிற் றென்பது படநின்றமையால்-மன்னென்பது ஒழியிசையில் வந்தது. [இவை நான்குபாட்டானும் அதனையுடையவரது உயர்ச்சிசொல்லப்பட்டது

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்........*
மக்கட்பண் பில்லா தவர் ..........................*

(இ-ள்.) மக்கள்-நன்மக்களுக்கேயுரிய- பண்பில்லாதவர்-நற்குணமில்லாதவர்-அரம்போலும் - அரத்தைப்போலும்- கூர்மையரேனும்-கூர்மையையுடையரோயாயினும்-மரம்போல்வர்-(ஓரறிவினதாகிய)மரம்போல்வர். (எ-று.) (கருத்து) நன்மக்களுக்குரிய குணமில்லாதவர் கூரியபுத்தியுடைய ராயினுமரத்தை நிகர்த்தவர் என்பதாம். ❊ ஓரறிவு-பரிசத்தை அரிதல். தான்மடி வில்லாமல் தன்னையுற்றபொருள்களை மடித்தலாகிய தொழில் பற்றி வந்தது.— பின்னுவமைவிசேட அறிவில்லாமையாகிய குணம்பற்றிவந்தது.—அவ்விசேடஅறிவிற்குப் பயனாகிய மக்கட் பண்பில்லாமையால் அவ்வறிவுதானுமில்லை யென்பதாயிற்று. (௭)

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும் ✽
பண்பாற்றா ராதல் கடை ✽

(இ-ள்.) நண்பு-நட்பினை - ஆற்றாராகி-(தம்மோடு) செய்யாதவராகி-நயமில)பகைமையை - செய்வார்க்கும்-செய்து நடப்பவரிடத்தும்-பண்பாற்றாராதல் - (தாம்)பண்புடையவராய் நடவாமை— கடை-(அறிவுடையவர்க்கு)இழுக்காம். (எ-று.)(கருத்து) நட்பைக் கொள்ளாராகிப் பகையைக்கொள்வார்க்கும் குணமுடையவராநடவாமையே கடை என்பதாம். ✽நயம்-ஈரம். சிறப்பும்மை அவர்பண்பாற்றாமைக்கு இடனாதல் தோன்றநின்றது. அதனைச் செய்யின் தாமும் அவர் தன்மையராவரென்றற்கு-கடையென்றார். (அ)

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம் ✽
பகலும்பாற் பட்டன் றிருள் ✽

(இ-ள்.) நகல்வல்லரல்லார்க்கு - (பண்பில்லாமையால் ஒருவரோடு கலந்து) உண்மகிழ்தல் மாட்டாதவர்க்கு - மாயிருஞாலம் - மிகவும் பெரியபூமியானது - பகலும் - (இருளில்லாத) பகற்பொழுதிலும்- இருள்-இருளினிடத்தே-பாற்பட்டன்று - கிடந்ததாம்.(எ-று.)(கருத்து)நட்புச்செய்து மகிழாதார்க்குப் பூமியானது இருளுடையதாகும் என்பதாம். ✽எல்லாரோடும் கலந்து அறியப் பெறாமையால் பண்பில்லாதவர்க்கு உலகியல்தெரியாதென்றற்கு உலகம் இருளினிடத்துப் பட்டதென்றார்.] (௯)

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால் ✽
கலந்தீமை யாற்றிரிந் தற்று ✽

(இ-ள்.) பண்பிலான்-பண்பில்லாதவன் - பெற்ற-(முன்னை நல்வினையினால்) அடைந்த-பெருஞ்செல்வம் - பெரியசெல்வம்- (அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல்-நன்பால் - நல்ல(பசுவின்)பால்-கலம் - (ஏற்ற) கலத்தினது-தீமையால் - குற்றத்தால்-திரிந்தற்று-கெட்டாற்போலும், (எ-று.)(கருத்து) குணமில்லாதவன் முன்னல்வினையாலடைந்த செல்வமானது பயன்படாதுகெடுதல்பசுவின்பால் பாத்திரக்குற்றத்தாற் கெட்டாற்போலும் என்பதாம். ✽ கலத்தீமையென்பது- கலந்தீமையென விகாரப்பட்டது. தொழிலுவமமாகலால்உவமேயத்தில் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும்வலிமையிலனாதல் தோன்ற- பெற்றவென்றும், எல்லாப்பயனுங் கொள்ளற்கு ஏற்ற இடமுடைமை தோன்ற - பெருஞ்செல்வமென்றும், சொல்லினர். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனால்வருகிற அதிகாரப்பொருண்மையும் தோற்றுவாய்செயப்பட்டது. [இவைநான்குபாட்டாலும் அஃதில்லாரதுஇழிவுசொல்லப்பட்டது.



# ௱க-ஆம்-அதி-நன்றியில்செல்வம்.

அஃதாவது-சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுத லில்லாத செல்வத்தினியல்பு. செல்வமுடையானது குற்றம் செல்வத்தின் மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமை முன் றோற் றுவாய் செய்ததனாற் பெற்றாம்.

வைத்தான் வாய்சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான் ... *
செத்தான் செயக்கிடந்த தில் ... *

(இ-ள்.) வாய்சான்ற-(தன்) மனையிடமெல்லாம் நிறைதற்குவது வாகிய-பெரும்பொருள்-பெரியபொருளை - வைத்தான் (சம்பாதித்து வைத்தவனாகி- அஃது- அதனை உண்ணான்-(உலோபத்தால்) அனுபவியாதவன் (உளனாயினும்)-செத்தான்-செத்தானும்-செயக்கிடந்தது-(அதனிடத்து அவனாலே) செயக்கிடந்ததோ ருரிமையானது-இல்-இல்லை-(ஆதலால்) (எ-று) (கருத்து) பெரும்பொருளைத்தேடி வைத்தவனாகியப்பொருளையநுபவியாதவனிருந்தாலு மிறந்தவனுக்கொப்பாவன் என்பதாம். ※ [இதனாலேசம்பாதித்தவனுக்கு அச்செல்வம் பயன்படலில்லாமை சொல்லப்பட்டது.] (க)

பொருளானா மெல்லாமென் றீயா திவறு ... *
மருளானா மாணாப் பிறப்பு ... *

(இ-ள்.) பொருளான்- பொருளொன்றினால்- எல்லாம்-யாவும்-ஆம்-உண்டாகும்- என்று-என்று-அறிந்து (அதனைச்சம்பாதித்து)-ஈயாது-(பின்பிறர்க்குக்)கொடாது-இவறும் -உலோபத்துவஞ் செய்யும்-மருளான் -மயக்கத்தினாலே - மாணா-நிறைதலில்லாத- பிறப்பு-(பேய்ப்) பிறப்பு—ஆம்-(ஒருவனுக்கு) உண்டாம்.(எ-று.) (கருத்து)பொருளைச்சம்பாதித்துக் கொடாமையாற் பிறப்புண்டாம் என்பதாம். ※ இருமையிலும் அடையும் இன்பங்கள்டலவும் அடங்க எல்லாமென்றும், சம்பாதித்தற்கு முன்னே உண்டாகிய அறிவானது பின்னே மயங்குதலால் - மருளென்றும், பொருள் உண்டா யிருக்கப் பிறருடைய பசிகண்டிருந்த பாவத்தால் உணவுகள்உண்டாயிருக்கப்பசித்துவருந்தும் பிறப்பு உண்டாமென்றும், சொல்லினார், (உ)

ஈட்டமி வறி யிசைவேண்டா வாடவர் ... *
தோற்ற நிலக்குப் பொறை ... *

(இ-ள்.) இட்டம்-(பிறரின்மிகச்) சம்பாதிப்போமென்று- இவறி-பொருள் சம்பாதிக்கை மாத்திரத்தையே)விரும்பி-இசை-(அதன்ப

யறுகிய) புகழை—வேண்டாவாடவர்- விரும்பாத மக்களது-தோற்றம்-பிறப்பு-நிலக்கு - பூமிக்கு-பொறை-பாரமாம் (அவ்வளவே): (எ-று.) (கருத்து) பொருளைவிரும்பிப் புகழை விரும்பாதவர் பிறப்புப்பூமிக்குப்பாரம் என்பதாம். ❁ புகழ்-இருமைக்கும் உறுதியாகிய அறமாகலால் ஈகையால் அதனைவேண்டாமல் சம்பாதிக்கைத் துன்பத்தையும், காப்பாற்றற் றுன்பத்தையும், வேண்டிய அறிவில்லாமைபற்றி-நிலக்குப்பொறையென்றார். பிறப்பென்றது அதற்குரிய உடம்பினை. (௩)

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா...❋
நச்சப் படாஅ தவன்.. ........... .......... ..........❋

(இ-ள்.) ஒருவரான் - (ஒருபொருளுங்கொடுத்து அறியாமையால்) ஒருவராலும்-நச்சப்படாஅ தவன்- இச்சிக்கப்படாதவன்—(தான்இறந்தவிடத்து) எச்சமென்று- (இங்கே) ஒழிந்துநிற்பதாக-என்னை—எண்ணுங்கொல்-நினைப்பானோ? (எ-று.) (கருத்து) ஒருவராலுமிச்சிக்கப்படாதவ னிறந்தபின் னெதை நினைப்பானோ? என்பதாம். ❁ இங்கே ஒழிந்துநிற்கும் புகழ்-ஈவார்மேலல்லாமல் நில்லாமையால்இவனுக்கு அதனோடு எவ்வளவும் சம்பந்தம் இல்லையென்றற்கு என்னெண்ணுங் கொல்லென்றார் - ஓ-அசை. [இவை மூன்றுபாட்டாலும் அச்செல்வம் பிறர்க்குப்பயன் படா வில்லாமை சொல்லப்பட்டது. (௪)

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய.....❋
கோடியுண் டாயினு மில்.......................❋

(இ-ள்.) கொடுப்பதூஉம்- (பிறர்க்கு) ஈவதும் - துய்ப்பதூஉம்- (தான்) அனுபவிப்பதுமாகிய (இரண்டுசெய்கையும்)-இல்லார்க்கு உடையரல்லாதவர்க்கு - அடுக்கிய-(பலவாக) அடுக்கிய- கோடியுண்டாயினும்-கோடிப்பொருள் உண்டாயினும் இல்-(ஒன்றும்)இல்லை- (எ-று.) (கருத்து) கொடுத்தலுமுண்ணுதலு மில்லாதவர்க்குக்கோடிபொருளிருந்தும்பயனில்லை என்பதாம். ❁ இன்பத்தினும் அறம் சிறந்தமையால் - கொடுத்தல் முன் சொல்லப்பட்டது. ஒன்றுமில்லார்போற் பயனிழத்தலால் இல்லென்றார். (௫)

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்.....❋
றீத லியல்பிலா தான்.......................❋

(இ-ள்.) தான்றுவ்வான் - தான் அனுபவியாதவனாகி- (அதன்மேலும்) தக்கார்க்கு - தகுதியுடையவர்க்கு - ஒன்று - (அவர் வேண்டிய) தொன்றை— ஈதலியல்பிலாதான் - கொடுக்கும் தன்மையில்லாதவன்-பெருஞ்செல்வம் - (அவ்விரண்டிற்கும் செல்வத்திற்கு இடமுடையதாகி

ய)செல்வத்திற்கு-ஏதம்-ஒருநோய். (எ-று.) (கருத்து) தானுமுண்ணா துங்கொடாமலுமிருப்பவன் செல்வம் வியாதிக் கேடாம் என்பதாம். ❀ தக்கார்-தானம் வாங்குதற்கு ஏற்றவர். அனுபவிக்கப்படுத லும் ஈயப்படுதலுமாகிய தொழில்களுக்கு உரியதை அல்லாதாக்கி னமையால்-நோயென்றார். [இவை யிரண்டுபாட்டாலும் அவ்விருமை யும் உடன் சொல்லப்பட்டது.] (௬)

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம் ........ .... ※
பெற்றா டமியண்மூத் தற்று ...................................... .. ※

(இ-ள்.) அற்றார்க்கு-(ஒருபொருளு) மிலராயினார்க்கு- ஒன்று-(அவர்வேண்டிய)தொன்றனை — ஆற்றாதான்- கொடாதவனது- செல்வம்-செல்வமானது-விளக்கக்கூறிகல் — மிகநலம் - (பெண்டிரின்) மிகுந்தநலத்தினை- பெற்றாள் - பெற்றவொருத்தி - (கொடுப்பாரில் லாமையினாலே) தமியள்- (கணவனில்லாமல்)தனியளாய் - மூத்தற் று-மூத்ததன்மைத்து. (எ-று) (கருத்து) கொடாதவன் செல்வமா னது அழகுள்ளவொருத்தி தன்னைக்கொடுப்பாரில்லாமையாற் கண வனில்லாது கிழவியானாற்போலும் என்பதாம். ❀ நலம் வடிவினன் மையும் குணத்தினன்மையும், இவ்விரண்டும்ஒருசேரப்பெறுதல்அ ரிதாகலால்- பெற்றாளென்றார். கொடுப்பாரும் கணவனுமே யல்லா மல் தானும் பயனிழந்து கழிந்தகுமரியோடு உவமை சொன்னமை யால்தானும் ஏற்பானுமேயல்லாமல் செல்வமும் பயனிழந்துகழியு மென்பதாம். (௭)

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு......................... ※
ணச்சு மரம்பழுத் தற்று.................................... ※

(இ-ள்.) வறியவர்க்குச் சமீபனாயிருந்தும்ஒன்றுங்கொடாமையா ல்)-நச்சப்படாதவன்- (அவரால்) இச்சிக்கப்படாதவன் - செல்வம்-செல்வம்-(பெறுதல்)நடுவூருள்-ஊர்நடுவுள்ள- நச்சுமரம் - எட்டிம ரம் — பழுத்தற்று-பழுத்தல்போலும். (எ-று.) (கருத்து) பிறராலிச் சிக்கப்படாதவன் செல்வமானது ஊர்நடுவே எட்டிமரம் பழுத்தல் போலாம்என்பதாம். ❀சமீபத்திருக்கைகளாற்பயனில்லையென்பதாம்

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா திட்டிய..... ........ ※
வொண்பொருள் கொள்வார் பிறர்.... ..................... ※

(இ-ள்.) (ஒருவன்)- அன்பொரீஇ - (கொடாதிருத்தற்பொருட்டு ச்சுற்றத்தாரிடத்தும் நட்பினரிடத்தும்) அன்பு செய்தவனையொழிந் து - தற்செற்று - (வேண்டுவன அனுபவியாமல்) தன்னைவருத்தி— அறன்- (வறியவர்க்குக்கொடுத்தலாதியாகிய)அறத்தை - நோக்கா

து-நினையாமல்-ஈட்டிய-சம்பாதித்த - ஒண்பொருள் - ஒள்ளியபொருளை-கொள்வார் - (கொண்டுபோய்ப் பயன்) கொள்ளுவார்-பிறர்-பிறர். (எ-று.) (கருத்து) அன் பற்றுத்தவிரு வருத்திச் சம்பாதித்த பொருளைப் பிறர்கொள்ளுவர் என்பதாம். ❁ பயனாகிய அறமும் இன்பமும் செய்துகொள்ளாதவனுக்குப் பொருளால் உள்ளது சம்பாதித்தற் றுன்பமேயென்பதுதோன்ற - ஈட்டியவென்றும், அவன் சந்ததி வழியிலுள்ளவர்க்கும் உதவாதென்பதுதோன்ற- பிறரென்றும் சொல்லினர். (௯)

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி ................................................*
வறங்கூர்ந் தனைய துடைத்து ......................................... ......*

(இ-ள்.) சீருடை-புகழுடைத்தாகிய-செல்வர்-செல்வத்தினையுடையவரது-சிறுதுனி- (நிற்குங்காலம்)சிறியவறுமை - மாரி - (உலகத்தையெல்லா நிலைநிறுத்துகிற (மேகம்—உடைத்து - உடையது.(எ-று.) (கருத்து) மிகுந்த செல்வமுடையவர் வறுமையானது மழைவறுமைகொண்ட தன்மையுடையது என்பதாம். ❁ துனிவெறுப்பு அதனைச்செய்தலால் வறுமைதுனியெனப்பட்டது யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறியராகியவிடத்தும், அவ்வறுமை கடிது நீங்குதலால்-பின்னும் செல்வராய்ப் பயன்படுவரென்பதுஉவமானத்தாற்பெறப்பட்டது. படவேநன்றியில்லாத செல்வம் எந்நாளும்பயன்படாதென்பதாயிற்று.] இவை நான்கு பாட்டாலும் அச்செல்வத்தின்குற்றம் சொல்லப்பட்டது.] (௰)



## ௱௨—ஆம்—அதி. நாணுடைமை.



[அஃதாவது-முன்சொல்லப்பட்ட சால்பு பண்புமுதலாகியகுணங்களால் உயர்ந்தோர் தமக்குத் தகாத கருமங்களில் நாணுதலுடையராந் தன்மை. அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

கருமத்தா னாணுத னாணுத் திருநுத ...............................*
னல்லவர் நாணுப் பிற ...............................................*

(இ-ள்.) நாணு - (நன்மக்களது)நாணுவது -கருமத்தால்- (இழிந்த(கருமங்காரணமாக - நாணுதல்- நாணுதலாம். —பிற- அதல்லாமல்மனமொழிமெய்களது ஒடுக்கத்தால்வருகிற நாணங்கள் - திருநுதல்- அழகியநெற்றியையுடைய-நல்லவர்-குலமகளிரது-நாணு- நாண

ங்கள்போலும். (எ-று.) (கருத்து) நாணமானது கருமங்காரணமாக நாணுவதாம் பிறநாணங்கள் பெண்களுடைய நாணங்கள் போலாம் என்பதாம். ☼ பிறகுல மகளிரது நாணென்றதனால் மற்றது நன்மக்களது நாணென்பதும், நாணுதலென்பதனால் கருமத்தினிழிவும், பெற்றாம். திருநுதனல்லவரென்பது - புகழ்ச்சிக்குறிப்பு. [இதனால் நாணினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (க)

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல ........ *
நாணுடைமை மாந்தர் சிறப்பு ........................ *

(இ-ள்.) ஊண்-உண்டியும்-உடை-ஆடையும்-எச்சம் - ஒழிந்தவைகளும்-உயிர்க்கெல்லாம்-(மக்க)ளுயிர்களெல்லாம்-வேறல்ல - பொதுவாம்.-மாந்தர்சிறப்பு -(நன் மக்களுக்குச் சிறப்பாவது) நாணுடைமை-நாணமுடைமையாம். [அவையல்ல.] (எ-று.)(கருத்து)உண்டி ஆடை, மற்றவை யாவர்க்கும் பொதுவாம். நன் மக்களுக்குச் சிறப்பாவது நாணமுடைமையாம் என்பதாம். ☼ ஒழிந்தவை - உறக்கமும், காமமும், அச்சமும்,- சிறப்பு- அவ்வுயிர்களின் வேறுபாடு. (உ)

ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு ............ *
நன்மை குறித்தது சால்பு ........................ *

(இ-ள்.) உயிரெல்லாம்- உயிர்களனைத்தும்-ஊனை- உடம்பை-குறித்த-தமக்கு இருப்பிடமாகக் கொண்டு அதனைவிடாவாம்.- (அதுபோல்)-சால்பு- (நற்குணங்களி) னிறைவானது - நாணென்னுநன்மை-நாணென்கிற நற்குணத்தை- குறித்தது-தனக்கு இருப்பிடமாக்கொண்டு அதனைவிடாது. (எ-று.)(கருத்து)உயிர்களெல்லாமுடம்பைவிடாவாம். நற்குணநாணத்தைவிடாது என்பதாம். ☼ உயிர் உடம்போடு கூடியல்லது பயனடையாத விதம்போல்சால்பு - நாணோடு கூடியல்லது பயனடையா தென்பதாம். (ங)

அணியன்றே நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற் *
பிணியன்றே பீடு நடை ........................ *

(இ-ள்.) சான்றோர்க்கு- பெரியோர்க்கு-நாணுடைமை- நாணமுடைமை-அணியன்றே-ஆபரணமல்லவோ - அஃதின்றேல்- அவ்வாபரணம் இல்லையாயின்-பீடுநடை- (அவர்) பெருமிதநடை - பிணியன்றே-(கண்டவர்க்கு)நோயன்றே. (எ-று.) (கருத்து)பெரியோர்க்கு நாணமுடைமை யாபரணமாம். அஃதில்லாவிடி லவர்நடை பிணியாம் என்பதாம். ☼ அழகுசெய்தலால்- அணியென்றும், பொறுத்தற்கருமையால்- பிணியென்றும், சொல்லினர். [இவை மூன்று பாட்டாலும் அதன் சிறப்புச் சொல்லப்பட்டது.] (ச)

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக் ........ ........ *
குறைபதி யென்னு முலகு ..... ... ............ ..... ... *

(இ-ள்.) பிறர்பழியும் - பிறர்க்குவரும் பழியையும் - தம்பழியும்- தமக்குவரும்பழியையும்- நாணுவார் - (ஒப்பாகமதித்து) நாணுவாரை- உலகு-உலகத்தார் - நாணுக்கு - நாணத்திற்கு - உறைபதியென்னும்-இருப்பிடமென்று சொல்லுவர். (எ-று.) (கருத்து) பிறர்பழியையுந் தம்பழியையுமதித்து நாணுவாரை யுலகத்தார் நாணத்திற்கிருப்பிடமென்பர் என்பதாம். ✽ ஒப்பாகமதித்தல்- பிறர்க்குவந்த பழியையும் தமக்கு வந்ததாகவேநினைத்தல் அக்கருத் துடையவர் பெரியராகலால் அவரை உயர்ந்தோர்யாவரும் புகழ்வ ரென்பதாம். [இதனால் அதனையுடையவரது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௫)

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம் ....... *
பேணலர் மேலா யவர் ........................................ *

(இ-ள்.) மேலாயவர்- உயர்ந்தவர் - வேலி - (தமக்குக்) காப்பாக- நாண்-நாணத்தை - கொள்ளாது - கொள்வதல்லாமல் - வியன்ஞாலம்-பரப்பானபூமியை-பேணலர்- கொள்ளவிரும்பார். (எ-று.) (கருத்து) உயர்ந்தோர் நாணத்தைக் கொள்ளாம லுலகத்தைவிரும்பார் என்பதாம். ✽ பழிபாவங்கள் அடையாமற் காத்தலால் வேலியென்றார். நாணமும் பூமியும் ஒன்றைவிட்டு ஒன்றைக்கொள்ளும்படிநேரிட்டவிடத்து நாணத்தைக் கொள்வதல்லது அப்பழிபாவங்கள்புகும்வழியாகிய பூமியைக்கொள்ள விரும்பாரென்பதாம். மன்னும்ஓவும்- அசைகள்.] (௬)

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா ........... *
னாண்டுறவார் நாணாள் பவர் ........ ......... ....... ...... *

(இ-ள்.) நாணாள்பவர்-நாணத்தை (அதனதுசிறப்பறிந்து) விடாதுநடப்பவர் - (அந்நாணும் உயிருங்கூடி நிற்கமாட்டாத விடத்து) —நாணால் நாண்சிதையாமற்பொருட்டு- உயிர்-உயிரை - துறப்பார் நீக்குவார்.—உயிர்ப்பொருட்டான்-உயிர்சிதையாமற்பொருட்டு— நாண்-நாணினை - துறவார் - நீக்கார். (எ-று.) (கருத்து) நாணத்தைக்கொள்பவர் உயிரைநீக்குவார். நாணத்தைக் கொள்ளாதவர் உயிரை நீக்கார் என்பதாம். ✽ நாண் உயிரினுஞ்சிறந்ததென்பதாம். [இவ்விரண்டுபாட்டானு மவர்செயல்சொல்லப்பட்டது.] (௭)

பிறர்நாணத் தக்கது தானாணா னாயி........................ *
னறநாணத் தக்க துடைத்து ......................................*

(இ-ள்.) பிறர்-கேட்டவரும் கண்டவரும்-நாணத்தக்கது- நாணத்தக்கபழியை- தாநாணுனாயின்- (ஒருவன்) தாநாணாது செய்வானாயின்-(அந்நாணாமை) அறம் - தருமமானது - நாணத்தக்கது - (அவனை)விட்டுநீங்கத்தக்க குற்றத்தை-உடைத்து - உடையது. (எ - று.) (கருத்து) ஒருவனாணாது பழியைச் செய்வானாகி லறுகுற்றத்தையுடையது என்பதாம். ❁ நாணில்லாதவனை அறம்சாராதென்பதாம்.

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு................................❋
நாணின்மை நின்றக் கடை.................................................❋

(இ-ள்.) கொள்கை - ஒழுக்கம்-பிழைப்பின்- (ஒருவனுக்கு)வழுவுமாயின்- (அவ்வழுவு)குலம்-(அவன்` குடிப் பிறப் பொன் றையும்-சுடும்-கெடுக்கும்-நாணின்மை-நாணில்லாமை - நின்றக்கடை - (ஒருவன்கண்ணே) நின்றவிடத்து- (அந்நிலை)நலம்- (அவ) னலம்யாவையும்-சுடும்-கெடுக்கும். (எ-று,) (கருத்து) ஒருவனுக் கொழுக்கம் வழுவுமாயி னவ்வழுவு அவன் குலத்தைக் கெடுக்கும் ஒருவ னாணாது நின்றாலது நன்மையாவற்றையுங் கெடுக்கும் என்பதாம். ❁ நலம்-பிறப்பு கல்வி குணம் செயல் இனம் என் றிவைகளால் வந்தனவெல்லாங் கொள்ளப்படும் ஒழுக்க வழிவைக்காட்டிலும் நாணவழிவு மிகத்தீதென்பதாம். (௯)

நாணகத் தில்லா ரியக்கு மரப்பாவை................................❋
நாணா லுயிர்மருட்டி யற்று....................................❋

(இ-ள்.) அகத்து-(தம்)மனதில்-நாண் - நாணத்தை - இல்லார்-இல்லாதமக்கள்- இயக்கம்- (உயிருடையவர்போன்று சஞ்சரிக்கின்ற) சஞ்சரிப்பு-மரப்பாவை- மரத்தாற் செய்யப்பட்ட பாவை - நாணால்-எந்திரக்கயிற்றினாலாகிய (சஞ்சரிப்பால்)-உயிர் - உயிருடையதாக-மருட்டியற்று மயக்குதல்போலும். (எ-று.) (கருத்து) நாணமில்லாமக்கள் சஞ்சரிப்பு மரத்தாற் செய்யப்பட்ட பாவை கயிற்றாலுயிருடையதாக மருட்டியது போலாம் என்பதாம். ❁ நாணில்லாத மக்களசைவு நாணுடையபாவை யசைவுபோல்வதல்லது உயிரில்லையென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் நாணில்லா ரிழிவு சொல்லப்பட்டது.] (௰)



# ௱௩-ஆம் அதி- குடிசெயல்வகை

அஃதாவது - ஒருவன் தான்பிறந்த குடியை உயரச்செய்தலின்விதம். இது தாழ்வினிடத்து தானுடையவர்க்கு உண்டாவதாகலால்- அதன்பின் வைக்கப்பட்டது.

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்............. ✻
பெருமையிற் பீடுடைய தில் ................................ ✻

(இ-ள்.) ஒருவன்- (தன்குடிசெய்தற்பொருட்டுத்தொடங்கியகருமமுடியாமையால்)- கருமஞ்செய - அக்கருமஞ்செய்தற்கு - கைதூவேனென்னும்-கையொழியேனென்கிற பெருமையின் - முயற்சிப்பெருமைபோல்-பீடுடையது - மேன்பாடுடையபெருமை— இல்- (அவனுக்கு) இல்லை. (எ-று.) (கருத்து) ஒருவன்கருமஞ்செய்தர்குக் கைவிடேனென்னும் பெருமைபோல் மேன்பாடுடைய தில்லை என்பதாம். ☼ குடிசெய்தற் கென்பது அதிகாரத்தால் வந்தது. பலவகைக்கருமஞ் செய்தலாலே செல்வமும் புகழுமடைந்து குடிஉயருமாகலால் - பீடுடையதில்லென்றார். (க)

ஆள்வினையு மான்ற வறிவுமென விரண்டி...................... ✻
னீள்வினையா னீளுங் குடி.................................... ✻

(இ-ள்.) ஆள்வினையும்- முயற்சியும்-ஆன்றவறிவும் - நிறைந்தவறிவும்-என விரண்டின்-என்றுசொல்லப்பட்ட இரண்டினையுடைய- நீள்வினையான்-ஓய்வில்லாத கருமச்செயலால்- குடி - (ஒருவனது)குடி- நீளும்-உயரும், (எ-று.) (கருத்து) முயற்சியும் அறிவுமாகியவிரண்டின் தொழிலாலொருவன் குடியுயரும் என்பதாம். ☼ நிறைதல்-இயற்கையறிவு + செயற்கையறிவோடு கூடிநிரம்புதல். — ஆள்வினை- சோம்பல் அடையாமற் பொருட்டு.- ஆன்றவறிவு - உயர்தற்கு ஏற்ற செயல்களும் அவைமுடிக்கும் விதமும் நாடிப்பிழைபடாமல் எண்ணுதற்பொருட்டு. [இவை யிரண்டு பாட்டாலும் அச்செயற்குக் காரணஞ்சொல்லப்பட்டது.] (உ)

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ.................. ✻
மடிதற்றுத் தான்முந் துறும் .................................. ✻

(இ-ள்.) குடிசெய்வலென்னும்- (என்)குடியினை உயரச் செய்யக்கடவேனென்றுகொண்டு (அதற்கு ஏற்ற கருமங்களின் முயலுகிற) ஒருவற்கு - ஒருவனுக்கு-தெய்வம் - தெய்வமானது— மடி - உடையை தற்று - இறுகவுடுத்திக்கொண்டு-தான்- தான் - முந்துறும் - மு

ன்னேயுற்றுநிற்கும்.(எ-று.) (கருத்து) குடியை யுயரச்செய்வேனெ ன்னுமொருவனுக்குத் தெய்வமுன்னிற்கும் என்பதாம். ❊ முன்ன டப்பார் செயல் ஊழ்மேல் ஏற்றப்பட்டது. (௩)

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்........... ...... ❊
தாழா துஞற்று பவர்க்கு .... ................................... .... ❊

(இ-ள்.) தங்குடியை- தங்குடிக்காந் தொழிலை— தாழாது-விரை ந்து-உஞற்றுபவர்க்கு-முயல்பவர்க்கு-(அத்தொழில் முடிக்கும்வித ம்) சூழாமல்-ஆலோசிக்கவேண்டாமல் - தானே முடிவெய்தும் - தா னே முடிவுபெறும் (எ-று.) (கருத்து) தங்குடிக்கானதொழிலைச்செ ய்வோர்க்குஅது தானே முடிவுபெறும் என்பதாம். ❊ குடி அதற்கா ந் தொழிலுக்கு ஆதலால்ஆகுபெயர்.ஊழ்முந்துறுதலாற்பயன்சொ ல்லியபடி. | இவைஇரண்டுபாட்டாலும் அதற்கு ஊழ் துணையாதல் சொல்லப்பட்டது. (௪)

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச் ................... ❊
சுற்றமாச் சுற்று முலகு .... ... ,.. ......... ... ....... .... ❊

(இ-ள்.) குற்றமிலனாய்- குற்றமானவை செய்திலனாகி—குடிசெய் து-(தன்)குடியைஉயரச்செய்து - வாழ்வானை - வாழ்பவனை —சுற்ற மா-(அவனுக்குச்)சுற்றமாகவேண்டி-உலகு - உலகத்தார் - சுற்றும்- (தாமேசென்று)சூழ்வர். (எ,று.) (கருத்து) குற்றமற்றவனாய் குடி யையுயரச்செய்து வாழ்பவனை யுலகத்தார் சூழ்வர் என்பதாம். ❊ குற்றமாயின- அறநீதிகளுக்கு விரோதமான செயல்கள்.— தாமும் பயனடைதனோக்கி யாவரும் சென்று சார்வரென்பதாம். (௫)

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த ........❊
வில்லாண்மை யாக்கிக் கொளல்.. . ......... ....... ....... ❊

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு- நல்லாண்மை யென்பது - நல்ல ஆண்மையென்று உயர்த்திச்சொல்லப்படுவது - தான்பிறந்த-தானு ற்பவித்த - இல்லாண்மை - குடியை ஆளுதற்றன்மையை —ஆக்கிக் கொளல்-(தனக்கு உண்டாக்கிக் கொள்ளுதல். (எ, று.) (கருத்து) ஒருவனுக்கு காண்மையென்று சொல்லப்படுவது தன் குடியை யுயர்த் திக்கொள்ளுதல் என்பதாம். ❊ போர்த்தொழிலி னீக்குதற்கு நல் லாண்மையென விசேடித்தார். குடியை யாளுதற்றன்மை - குடியி லுள்ளவரை உயரச்செய்து தன்வழிப்படுத்தல். அதனைச்செய்துகொ ள்ளுதல் நல்லாண்மையாம்விதம் வருகிறபாட்டாற் பெறப்படும்.

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து ...... .......❊
மாற்றுவார் மேற்றே பொறை ................................. ❊

(இ-ள்.) அமரகத்து - களத்தினிடத்து - (சென்றவர் பலராயினும் போர்தாங்குதல்,)-வன்கண்ணர்போல-சூரர்(மேலதாகுதல்) போல-தமரகத்தும-குடியினிடத்தும்-(பிறந்தவர்பலராயினும்)-பொறை (அதன்பாரம்)பொறுத்தல்-ஆற்றுவார்மேற்றே - வல்லவர்மேலதேயாம். (எ,று.)(கருத்து)போர்க்களத்தில் வீரர்மேலாகுதல்போலக்குடியிடத்துப்பாரம்பொறுத்தல்வல்லவர்மேலதாம் என்பதாம். ❋ நன்குமதிக்கப்படுவார் அவரேயென்பதாம். [இவை மூன்றுபாட்டானும் அவைசெய்வாரடையும் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௭)

குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து.............. ❋
மானங் கருதக் கெடும்...................................... ❋

(இ-ள்.) மடிசெய்து-(குடியுயரச் செய்தலை நோக்காது காலத்தைநோக்கிச்)சோம்பல்செய்துகொண்டு-மானம் - மானத்தையும்-கருத-நினைப்பாராகில்-கெடும் - (குடி)கெடும் (ஆதலால்) - குடிசெய்வார்க்கு-தன்குடும்பத்தையுயரச்செய்வார்க்கு- பருவம்-காலநியதி இல்லை-இல்லை. (எ,று.) (கருத்து) குடும்பத்தை யுயரச்செய்வார்க்குக்காலநியதியில்லை என்பதாம். ❋ காலநோக்கி மடிசெய்தல் - வெயின்மழை பனிபுடைமைநோக்கிப்பின்னே செய்வோமென்று ஒழிந்திருத்தல்.—மானங்கருதல்- இக்குடியிலுள்ளார்யாவரும் இன்பமுற நான் இக்காலத்துத் துன்பமுறுவேனோவென்று உட்கொள்ளுதல்.-முன் இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும்பொழுது என்றதுகொண்டு இவர்க்கும் வேண்டுமோவென்று நினைக்கினும் அது நினைக்கலாகாதென மறுத்தபடி.] (௮)

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்... ❋
குற்ற மறைப்பா னுடம்பு.................................. ❋

(இ-ள்.) குடும்பத்தை-தன்குடியை - குற்றமறைப்பான்- மூவகைத்துன்பங்களும் அடையாமற்காக்க முயல்பவனது-உடம்பு- உடலம்-இடும்பைக்கே- (முயற்சித்) துன்பத்திற்கே -கொள்கலங்கொல்-கொள்கலமாமவ்வளவோ [இன்பத்திற்காகுத லில்லையோ.] (எ-று.) (கருத்து) தன்குடியைக்காக்க முயற்சி செய்பவ னுடலந் துன்பத்திற்குக் கொள்கலமாம் என்பதாம். ❋ என்குடி முழுதும் இன்பமுற்று உயரவே நான் இருமையும் பெறுதலால் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நல்லதென்றுமுயலும் அறிவுடையவன் அதனை எந்நாளும் விடாமைநோக்கி இடும்பைக்கே கொள்கலங்கொல்லென்றார். இது குறிப்புமொழி ஓ-அசை. [இவையிரண்டுபாட்டானும் அவர் அதுசெய்யுமியல்பு சொல்லப்பட்டது.] (௯)

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று............*
நல்லா ளிலாத குடி.................................*

(இ-ள்.) அடுத்து-(தான்வீழும்போது) முட்டுக் கொடுத்து-ஊன்றும்-தாங்கவல்ல - நல்லாள்-நல்லவாண்மகன் - இலாத- பிறவாத-குடி-குடியாகிய(மரம்)-இடுக்கண் - துன்பமாகிய (கோடரியானது)-கால்-(தன்) முதலை-கொன்றிட- வெட்டிச்சாய்க்க- வீழும்- (ஒரு பற்றில்லாமல்) வீழாநிற்கும். (எ-று.)(கருத்து) தாங்குவாரில்லா தகுடியாகிய மரம் துன்பக்கோடரியானது வெட்டக்கெடும் என்பதாம். ஃமுதல் அதன்வழிக்கு உரியார்.—வளர்ப்பாரைப் பெற்றவழி-வளர்ந்துபயன்படுதலும், அல்லாவழி-கெடுதலும், உடைமையால் மரமாக்கினர். (இதுகுறிப்புருவகம்,) [இதனால் ஆளரில்லாத குடிக்குஉளதாம் குற்றம் சொல்லப்பட்டது.] (௰)



## ௱௪-ஆம்-அதி-உழவு.



அஃதாவது-சிறுபாண்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாகிய உழுதற்றொழில். இதுசெய்விக்கும்போது அயற்றவர்க்கும் உரிததாகும். இதுமுன்னே குடியுயர்தற்கு ஏதுவென்ற முயற்சியாகலால்- குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது.

சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா..........................*
லுழந்து முழவே தலை.....................................*

(இ-ள்.) உலகம்-உலகமானது - சுழன்றும் - (உழுதலால் வருமெய்வருத்தநோக்கிப் பிறதொழில்களைச்செய்து) திரிந்தும்- ஏர்ப்பின்னது-(முடிவிலே ஏருடையார்வழிபதாயிற்று.-அதனால்- அதனாலே-உழந்தும்-எல்லா வருத்தமுற்றும் - தலை-தலைமையாகிய (தொழில்) உழவே-உழுதலேயாம். (எ-று.) (கருத்து) உலகமேருடையார் வழியதாயிற்றுத் தலைமையான தொழிலுழவேயாம் என்பதாம். ஃஏருடையார்க்கு ஆதலால் ஏர் ஆகுபெயர். பிறதொழில்களாலே பொருள்பெற்றவிடத்தும் உணவின்பொருட்டு உழுவாரிடத்துச் செல்லல்வேண்டுதலால்- சுழன்றுமேர்ப்பின்ன துலகமென்றும், வருத்தப்இல்லையாயினும் பிறதொழில்கள் கடையென்பதுதோன்ற- உழந்தும் உழவே தலையென்றும், சொல்லினர். [இதனால்உழவினதுசிறப்புச் சொல்லப்பட்டது.] (௧)

உழுவாருலகத்தார்க் காணியஃ தாற்றா ......... ............... ✻
தெழுவாரை யெல்லாம் பொறுத்து........ ..... ........ ✻

(இ-ள்.) உழுவார்-உழுதல்வல்லவர் - அஃதாற்றாது - அவ்வுழுதலைச்செய்யமாட்டாமல் - எழுவாரையெல்லாம் - (பிறதொழில்களின்மேல்) மேற்செல்வோர் யாவரையும் - பொறுத்து-தாங்குதலால் - உலகத்தார்க்கு-உலகத்தாராகிய (தேர்க்கு) ஆணி- அச்சாணியாவர். (எ-று.) (கருத்து) உழுபவருலகத்தாராகியதேர்க் கச்சாணியாவாரென்பதாம். ❋ உழுவாரென்பது உழுவிப்பார்க்கும் ஆம்.— உலகத்தாரென்றது-இங்கே அவ்வுழவர் நீங்கலானவரை— கலங்காமல் நிறுத்தலின் உழுவார் ஆணிபோலுதலால்ஆணியென்றார். (ஏகதேசவுருவகம்)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்....... .... ✻
தொழுதுண்டு பின்செல் பவர்............ .... ..... ........ ✻

(இ-ள்.) உழுது-(எல்லாரும் உண்ணும்படி) உழுதலைச்செய்து— உண்டு-(அதனால்தாமும்) உண்டு வாழ்வாரே-வாழ்கின்றவரே- வாழ்வார்-(தமக்குரியராய்) வாழ்கின்றவர்.— மற்றெல்லாம்- மற்றவெல்லாரும்-தொழுது - (பிறரைத்) தொழுது-உண்டு- (அதனால்தாமும்) உண்டு-பின்செல்பவர்-(அவரைப்) பின் செல்லுகின்றவர். (எ-று.) (கருத்து) உழுதுண்டுவாழ்பவரே வாழ்பவர். மற்றவர் தொழுதுண்டுவாழ்பவர் என்பதாம். ❋ தாமும் மனிதராய்ப் பிறந்திருந்தும் பிறரைத்தொழுது அவர் சிலகொடுக்கத் தம்முயிர்காத்து அவர் பின் செல்வார் தமக்கு உரியரல்லரென்பது கருத்து. (௩)

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப .... ..... ......... ✻
ரலகுடை நீழ லவர் ....... ... ...... .......... .... ......... ✻

(இ-ள்.) அலகுடை-(உழுதற்றொழிலால்) நெல்லை யுடையராகிய நீழலவர்-தண்ணளி யுடையோர்— பலகுடைநீழலும்-பலவேந்தர்குடைநிழலதாகிய (பூமிமுழுவதையும்) -தங்குடைக்கீழ்-தம் (வேந்தர்) குடைக்கீழ்-காண்பர்-பார்ப்பார்கள். (எ-று.) (கருத்து) உழவுமுயற்சிசெய்வோர் பலவேந்தர் பூமியையுந் தம்வேந்தர் குடை நிழலிற் காண்பர் என்பதாம். ❋ அலகு-கதிர். அது இங்கே நெல்லுக்காயிற்று. நீழல்போலுதலால் நீழலெனப்பட்டது. நீழலவரென்றது-இரப்போர்க்கெல்லாம் ஈதலைநோக்கி. ஒற்றுமைபற்றி- தங்குடையென்றார். குடைநீழலென்பதும் ஆகுபெயர். தம்மரசனுக்கு வெற்றி பெருகி மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்பரென்பதாம். (௪)

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது... .......... ......... ✻
கைசெய்தூண் மாலை யவர்.................................... ✻

(இ-ள்.) கை-(தங்) கையால்-செய்து-(உழுதல்) செய்து ஊண்மாலையவர்-உண்ணுதலை இயல்பாகவுடையவர்- இரவார் -(பிறனொத்தாம்) இரவார்.—இரப்பார்க்கு- (தம்மை)இரப்பவர்க்கு—ஒன்று-அவர்(வேண்டிய)தொன்றை-கரவாது - ஒளிக்காமல்- ஈவர் - கொடுப்பார். (எ-று.) ( கருத்து ) உழுதுண்பவர் யாசியார் இரப் பவர்க் குக் கொடுப்பர் என்பதாம். ✻ கைசெய்தூண் மாலையவரென்பதுஎந்நாளும் அழிவில்லாத செல்வ முடையா ரென்னும் ஏது வை உள்ளே கொண்டு நிற்றது. (௫)

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்........ ...✻
விட்டேமென் பார்க்கு நிலை ........................✻

(இ-ள்.) உழவினார் உழுதலையுடையவர் - கைம்மடங்கின் - கை(அதனைச்செய்யாது) மடங்குமாயின்-விழைவதூஉம் - (யாவரும்)விரும்புமுணவும்-விட்டேமென்பார்க்கு - துறந்தோமென்பார்க்கு - நிலை-(அவ்வறத்திலே) நிற்றலும்-இல்லை-உளவாகா. (எ-று.) (கருத்து) உழவர் கைம்மடங்குமாகில் யாவரும் விரும்பு முணவுந் துறந்தவர்க்கு நிலையுமில்லை என்பதாம். ✻ உம்மை இறுதியிலும்வந்துகூடியது. உணவில்லாமையால் தாமுண்டலும், இல்லறஞ்செய்தலும்,யாவர்க்குமில்லையாயின- அவருறப்புமாத்திரமாகிய கை சும்மா விருக்கின்உலகத்தில் இம்மைமறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம். [இவ்வைந்துபாட்டாலும்அதனைசசெய்வாரதுசிறப்புச்சொல்லப்பட்டது.] (௬)

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்... ...✻
வேண்டாது சாலப் படும் ....................✻

(இ-ள்.) (ஒருநிலத்தினையுழுதவன்)-தொடிப்புழுதி - ஒருபலப்புழுதி-கஃசா-காற்பலமாம்படி-உணக்கின் - (அதனைக்) காயவிடுவனாயின்-(அதனிடத்துச்செய்தபயிர்)- பிடித்தெருவும்- ஒருபிடியில்-அடங்கிடஎருவும்-வேண்டாது - (இட) வேண்டாமல்- சாலப்படும்-பருத்துவிளையும். (எ-று.) (கருத்து) ஒருபலப்புழுதி காற்பல மாகக் காயவிடுவானாகில் பிடியெருவுமில் லாமலப்பயிர் விளையுமென்பதாம்.✻ பிடித்து-பிடியிலுள்ளது-சான்று-சாலவென்றாயது. (௭)

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்.....................✻
நீரினு நன்றதன் காப்பு........................✻

(இ-ள்.) (அப்பயிர்க்கு)-ஏரினும்- அவ்வுழுதலினும்-எருவிடுதல் எருப்பெய்தல்-நன்று-நன்றாகும்.— கட்டபின்- (இவ்விரண்டுஞ்செய்து) களைபிடுங்கியபின்- அதன்காப்பு- அதனைக்காத்தல் - நீரினும்

-நீர்ப்பாச்சலினும்-நன்று-நன்றாகும். (எ-று.) (கருத்து) உழுதலி னுமெருப்போடுகிறது நல்லது களைபிடுங்கியபின் காத்தல் நீர்விடு தலினு நல்லது என்பதாம். ❋ ஏர் உழுதலுக்குஆகுபெயர். ஆல்-அ சை. காத்தல்-பட்டிமாடு முதலானவைகளால் அழிவடையாமற்கா த்தல்—உழுதல்-எருப்பெய்தல்-களைபிடுங்கல் - நீர்ப்பாச்சல் - காத் தல்-என்று இம்முறையினவாகியஐந்தும்வேண்டுமென்பதாம்.(அ)

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்.................. ❋
தில்லாளி னூடி விடும்.................................... ❋

(இ-ள்.) கிழவன்-(அந்நிலத்துக்கு) உரியவன்-செல்லான்-(அதனி டத்து நாள்தோறும்) போய்ப்பார்த்து வேண்டியவை செய்யானா கி-இருப்பின்- (சோம்பி) யிருந்தால்-நிலம் - அந்நிலம்—இல்லாளி ன்-மனைவிபோல் - புலந்து-(தன்னுள்) வெறுத்து-ஊடிவிடும் (அவ னோடு) பிணங்கிவிடும். (எ-று.) (கருத்து) உழுபவன் விளை நிலத்திற் போகாதிருக்கி லந்நிலமவனுடன் பிணங்கிவிடும் என்பதாம். ❋ செ ல்லுதல்-ஆகுபெயர். பிறரை ஏவியிராமல் தான்செல்ல வேண்டுமெ ன்பதுதோன்ற-கிழவனென்றார். தன்னிடத்துவந்து வேண்டியவை செய்யாது வேறிடத்திருந்தவழி மனையாள்போல் பிணங்குமென் றது அவன் போகமிழத்தனோக்கி. [இவை மூன்று பாட்டாலும் அ துசெய்யும் விதம் சொல்லப்பட்டது.] (௯)

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி................... ❋
னிலமென்னு நல்லா ணகும்................................ ❋

(இ-ள்.) இலமென்று-வறியேமென்றுசொல்லி- அசைஇயிருப்பா ரை-சோம்பியிருப்பவரை — காணின்-கண்டால் - நிலமென்னு நல் லாள்-நிலமகளென்று உயர்த்திச் சொல்லப்படுகிற நல்லாள்- நகும்- (தன்னுள்ளே) சிரியாநிற்பள். (எ-று.) (கருத்து) வறியோமென்று சோம்பலாயிருப்பவனை நிலமகள் கண்டால்சிரிப்பள் என்பதாம். ❋ உழுதல்முதலானவைசெய்வோர் யாவர்க்கும் செல்வங் கொடுத்துவ ருகின்றவிதப்பற்றி - நல்லாளென்றும், அதுகண் டிருந்தும், அது செய்யாது வறுமையுறுகின்ற அறிவில்லாமைபற்றி நகுமென்றும், சொல்லினார். [இதனால் அதுசெய்யாதவிடத்து உண்டாம் இழுக்கு ச்சொல்லப் பட்டது.] வருகின்ற அதிகார முறைமைக்குக் காரண முமிது. (௰)



## ௱௫, ஆம், அதி - நல்குரவு.

அஃதாவது-அனுபவிக்கப் படுவன யாவும் இல்லாமை

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி.................✻
னின்மையே யின்னா தது.............................................✻

(இ-ள்.) இன்மையின்- (ஒருவனுக்கு) வறுமை போல்- இன்னாதது-துன்பஞ்செய்வது - யாதெனின்-யாதென்று வினவின் - இன்மையின்-வறுமைபோல்-இன்னாதது - துன்பஞ்செய்வது—இன்மையே -வறுமையே. (எ-று.) (கருத்து) தரித்திரம்போலத் துன்பஞ்செய்வதெதுவெனில் அதுவே என்பதாம். ❀ ஒப்பதில்லை யெனவே மிகுந்ததில்லாமை சொல்ல வேண்டாவாயிற்று. (க)

இன்மை யெனவொரு பாவி மறுமையு.............................✻
மிம்மையு மின்றி வரும்.............................................✻

(இ-ள்.) இன்மையென-வறுமையெனப்படுகிற - ஒருபாவி-ஒப்பற்றபாவி- (ஒருவனிடத்துவரும்போது) - மறுமையும்- மறுமையின்பயனும்-இம்மையும் - இம்மையின்பயனும்-இன்றி (அவனுக்கு) இல்லையாக-வரும்-வருவான். (எ-று.)(கருத்து)தரித்திரமென்னுமொரு பாவியொருவனிடத்துவரும்போது இம்மைமறுமையின்பயனில்லாமல்வருவன் என்பதாம். ❀ இன்மையென ஒருபாவி யென்பதற்கு அழுக்காறெனவொருபாவி யென்றதற்கு உரைசெய்தபடி உரைக்க. மறுமை இம்மை ஆகுபெயர்.—ஈயாமையாலும், அனுபவியாமையாலும், அவையிலவாயின. (உ)

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக.....✻
நல்குர வென்னு நசை..................................✻

(இ-ள்.) நல்குரவென்னும் - வறுமையென்று சொல்லப்படுகிற-நசை-ஆசை—தொல்வரவும் - (தன்னாலே பற்றப்பட்டவருடைய)பழைய குடிவரவினையும் - தோலும் - (அதற்கேற்ற சொல்லினையும் தொகையாக - ஒருசேர-கெடுக்கும்-கெடுக்கும். (எ-று.)(கருத்து)தரித்திரமென்னு மாசையானது பழங்குடிவரவையு மதற்குரியசொல்லையுங் கெடுக்கும் என்பதாம். ❀ நசையில்லாவிடத்து வறுமையும்இல்லையாகலால் நல்குரவை நசையாக்கி-அது அக்குடியிற்பழையோர்க்கு இல்லாத இழிதொழில்களையும் அவமானச்சொற்களையும் உண்டாக்கலால் அவ்விரண்டினையும் ஒருசேரக் கெடுக்குமென்றார்.

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த.... ......*
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்................*

(இ-ள்.) இன்மை-வறுமையானது - இற்பிறந்தார் கண்ணேயும்-உயர்ந்தகுடிப்பிறந்தவரிடத்தேயும்- இளிவந்தசொல்-அவமானச்சொல்-பிறக்கும்-பிறத்தற்கு ஏதுவாகிய சோர்வு - சோர்வினை- தரும்-உண்டாக்கும். (எ-று.) (கருத்து) தரித்திரமானது உயர்குடியிற்பிறந்தவரிடத்து மிழிவுசொற்பிறக்குஞ் சோர்வைத்தருமென்பதாம். ❋ சிறப்பும்மை அவரிடத்து அது பிறவாமைதோன்ற நின்றது. அவமானச்சொல்-எமக்கு ஈடவேண்டுமென்றல். சோர்வு- தாம் படுகிற துன்பமிகுதி பற்றி ஒரோவிடத்தேதங்குடிப்பிறப்பினைமறந்துஅது சொல்லுவதாக நினைத்தல், (ச)

நல்குரவென்னு மிடும்பையுட் பல்குரைத்.............*
துன்பங்கள் சென்று படும்.....................*

(இ-ள்.) நல்குரவென்னும்-வறுமையென்று சொல்லப்படும்-இடும்பையுள் - துன்பமொன்றினுள்ளே -பல்-பலவாகிய-துன்பங்கள்-துன்பங்களும்-சென்று - வந்து-படும்-விளையும். (எ-று.) (கருத்து) வறுமைத்துன்ப மொன்றனுள்ளே பலதுன்பங்களும் வரும்!என்பதாம். ❋ குரை-இசைநிறை.— துன்பமும் தானும் உடனே தோன்றலால்-வறுமையை - துன்பமென்றும், அத்துன்பம் அடியாகச்செல்வர் மனைவாயிலேநோக்கிச் செல்லற்றுன்பமும்- அவரைக்காணற்றுன்பமும் கண்டபின் மறுத்தவிடத்து உண்டாந்துன்பமும்-மறுக்காதவிடத்தும் அவர்கொடுத்தது வாங்கற்றுன்பமும் - அது கொண்டுவந்து அநுபவிப்பவைகளைக் கூட்டுதற்றுன்பமும்- முதலானவைநாடோறும் வேறுவேறாகவருதலால் எல்லாத்துன்பங்களும் உண்டாமென்றும், சொல்லினர். [இவை ஐந்துபாட்டாலும் வறுமையின் கொடுமை சொல்லப்பட்டது.] (ரு)

நற்பொருணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்... ..*
சொற்பொருள் சோர்வு படும்.......................*

(இ-ள்.) நற்பொருள்- மெய்ந்நூற்பொருளை-நன்குணர்ந்து-தெளியவறிந்து - சொல்லினும்-சொன்னாராயினும் - நல்கூர்ந்தார்-வறுமைப்பட்டவரது - சொல்-சொல்லானது - பொருள்சோர்வு-பொருளில்லாமையே - படும்-கூடும். (எ, று.) (கருத்து) வறியவர் மெய்ப்பொருளைச் சொல்லினுமச்சொல் பொருளில்லாமையைத் தரும் என்பதாம். ❋ பொருளில்லாமையைக் கூடுதலாவது - யாம்விரும்பி இவர்சொல்லைக் கேட்டோமாகில் முகங்கொடுத்து இவர்குறைமுடி

க்கவேண்டுமென்று அஞ்சி யாவரும் கேளாமையால்-பயனில்சொல்லாய்முடிதல்.— கல்வியும் பயன்படாதென்பதாம். (சா)

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும் ........... .... .... *
பிறன்போல நோக்கப்படும்........ ............... . *

(இ-ள்.) அறஞ்சாரா-அறத்தோடு பொருந்தலில்லாத- நல்குரவு-வறுமையையுடையவன் - ஈன்றதாயானும்-(தன்னைப்) பெற்றதாயினும்-பிறன்போல- அந்நியன்போல-நோக்கப்படும் - (நினைத்துப்)பார்க்கப்படுவன். (எ-று.) (கருத்து) வறியவன் தன்தாயாலுமந்நியன்போலப் பார்க்கப்படுவான் என்பதாம். ☼ அறத்தோடுபொருந்தலில்லாமை—காரணகாரியங்களுள் ஒன்றோடு மிலையாமை. நல்குரவு ஆகுபெயர். சிறப்பும்மை அவனதுஇயற்கையன்புடைமை விளக்கிநின்றது அவனிடத்தே கொள்வதில்லாமையேயன்றிக்கொடுப்பதுண்டாதலும் உடைமையால் அதுநோக்கிச் சுற்றத்தார் யாவரும் கைவிடுவரென்பதாம். (எ)

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்..................*
கொன்றது போலு நிரப்பு.............. ..............*

(இ-ள்.) நெருநலும்-நேற்றும் - கொன்றதுபோலும்-கொன்றது போன்று (எனக்குத் துன்பங்களைச்செய்த) நிரப்பு-வறுமையானது -இன்றும்-இன்றைக்கும் - வருவதுகொல் - (என்னிடத்து) வரக்கடவதோ. [வந்தால் இனியாது செய்வேன்.] (எ-று.) ஓ-அசைநிலை (கருத்து) நேற்றுக்கொன்ற வறுமையானது இன்றும் வருமோ என்பதாம். ☼ அத்துன்பங்கள்-முன்சொல்லப்பட்டன. நேற்று மிகவும் வருந்தி வயிறுநிறைத்த ஒருவன்சொல்லு. (அ)

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்..............*
யாதொன்றுங் கண்பா டரிது.... ....... .... ..... ....*

(இ-ள்.) நெருப்பினுள்-தீயிற்கிடந்து - துஞ்சலும் - தூங்கலும் - ஆகும்-(மந்திரமருந்துகளால் - ஒருவனுக்குக்) கூடும்--நிரப்பினுள்-வறுமைவந்தவிடத்து - யாதொன்றும்-யாதொன்றாலும் - கண்பாடு தூங்குதல்-அரிது-இல்லை. (எ-று.) (கருத்து) தீயிலும் நித்திரைசெய்யலாம் வறுமையிலே நித்திரைசெய்யக்கூடாது என்பதாம். ☼ நெருப்பினும் வறுமை கொடிதென்ற படியாயிற்று. இதுவும் அவன் சொல்லு. [இவை நான்குபாட்டாலும் வறுமைப் பட்டவருக்குண்டாங்குற்றம் சொல்லப்பட்டது.] (கூ)

துப்புர வில்லார் துவரத் துறவாமை ......................... *
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று ............................ *

(இ-ள்.) துப்புரவில்லார்- அனுபவிக்கப்படும்பொருளில்லாதவர்- (தம்மாலேசெயத்தகுவது முழுதுந்துறத்தலேயாகவும்)— துவரத் துறவாமை - முழுதுந்துறவாதொழிதல் — உப்பிற்குங்காடிக்கும்- (பிறர்வீட்டிலுள்ள) உப்பிற்குங் காடிக்கும் — கூற்று - யமனுவர்- (எ-று.) (கருத்து) வறியவர்கள் துறவாதிருத்தல் அயல்வீட்டுஉப்புக்கும் காடிநீருக்கும் யமனுவார்கள் என்பதாம். ❋ மானமழியாமையால் செயத்தகுவது அதுவேயாயிற்று. முழுதுந்துறத்தல் சுற்றந்தானேவிட்டமையால் ஒருவழியால் துறந்தாராயினார் நின்றதம்முடம்பினையுந் துறத்தலாம். அதுசெய்யாதுகொண்டிருத்தல் - அவ்விரண்டினையும் மாளப்பண்ணுதலால் அதனை அவைகளுக்குக்கூற்றென்றார். [இதனால் அது உண்டானவிடத்துச் செய்வது சொல்லப்பட்டது] (௰)

# ௱௬-ஆம், அதி - இரவு.



இனிமானங்கெடாதவிரத்தல் இரவாமையோடொத்தலால்அவ்விரவினாலும் வீடுபெறுதற்கு உதவி செய்வதாகிய உடம்பைக் காக்கலாமென்கிற அறநூல் வழக்குப்பற்றி முன்துவரத்துறத்தலென்ற இறத்தலைவிலக்குதற்பொருட்டு இரவு சொல்லுகின்றார். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி.......................*
னவர்பழி தம்பழி யன்று..........................................*

(இ-ள்.) (வறுமைப்பட்டவர்)—இரத்தக்கார்-இரத்தற்கேற்புடையவரை—காணின்-கண்டவிடத்து—இரக்க-(அவரிடத்தே) இரக்கக்கடவர்.—கரப்பின்- (அவர்) ஒளித்தாராயின் — அவர்பழி - அவர்க்குப்பழியாம்.—தம்பழியன்று - தமக்குப் பழியாகாது. (ஆதலால்) (எ,று,) (கருத்து) தரித்திரர்கள் கொடுப்பவர்களைக் கண்டால்யாசிக்கக்கடவர்கள் அவரொளித்தாராயின் அவர்க்குப்பழியல்லதுதமக்குப்பழியல்ல என்பதாம். ❋ இரத்தற்கேற்புடையவராவார் - சொல்லுமுன்னே அறிதலுடையராய் மறுமற்கொடுப்பவர்.—அவர் உலகத்தில் அரியராதலால் காணினென்றும், அவரிடத்தே இரந் தார்க்கு இரவால்வரும் அவமானம் இல்லாமையால் இரக்கவென்றும், அவர் கொடுத்தலிலே குறைகாட்டாமையால்-கரப்பினென்றும், காட்டுவாராயின் அப்பழிபரிசுத்தவெண்புடைவையில் அழுக்குப்போல் அவ

ரிடத்தே கடிந்துசொல்லுதலால் அவர்பழியென்றும், ஈதலில்லாதவரி டத்தே இரவல்லாமையால் தம்பழியன்றென்றும், சொல்லினார். (௧)

இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை ........................... *
துன்ப முறாஅ வரின் ........................................... *

(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு—இரத்தல்-இரத்தலும்— இன்பம்- இன்பத்திற்கு ஏதுவாம்.— இரந்தவை - இரந்த பொருள்கள்—(ஈவாரது அறிவுடைமையால்) — துன்பமுறாஅ - (தான்) துன்பமுறாமல்—வரின்-வந்தால். (எ-று.) (கருத்து.) ஒருவனுக்குயாசித்த பொருள்கள் துன்பமடையாமல் வந்தால் யாசித்தலு மின்பமாம் என்பதாம். ※ இன்பம் - ஆகுபெயர். உறாஅவென்பது- கடைக்குறைந்தது. துன்பமாவன - ஈவாரிடத்துக் காலமும் இடமும் அறிந்துசெல்லுதலும்-அவர்குறிப்பறிதலும்-அவரைத்தன்வசப்படுத்தலும்-அவர் மனமிரங்கத்தக்கவை நாடிச்சொல்லலும்- முதலான வைகளால்வருவனவும், மறுத்தவிடத்து வருவனவும், ஆம். அவையுறாமல்வருதலாவது- அவர்முன்னே அறிந்துகொடுக்கக் கொள்ளுதல். [இவை இரண்டுபாட்டாலும் வறுமையால் உயிர்நீங்குமளவில் அவமானமில்லா திரவு விலக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.] (௨)

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின் ....................... *
றிரப்புமோ ரேஎ ருடைத்து................................... *

(இ-ள்.) கரப்பிலா-ஒளித்தலில்லாத-நெஞ்சின்-நெஞ்சினையுடைய—கடனறிவார்முன்-மானமறிவார்முன்—நின்று—நின்று—இரப்பும்-(அவரிடத்தேஒன்றை)இரத்தலும்—ஓரேஎர்- ஓரழகை—உடைத்து-(வறுமைப்பட்டவர்க்கு) உடைத்து. (எ-று.) (கருத்து) ஒளியாதுகொடுப்பவரிடத்து யாசித்தலும் ஓ ரழகுடையது என்பதாம். ※ சிறியசுருக்கந்து வேண்டுமுபர்வென்றதனால் அவர்க்கு அதுகடனெனப்பட்டது. மானமறிதல்- சொல்லத்தொடங்கிச் சொல்லமாட்டாமைக்கு - ஏதுவாகிய அதனியல்பை அறிதல். அவ் வறிவுடையவர்க்குமுன்னே நிற்கைமாத்திரமே போதுமாகையால்- முன்னின்றென்றும், சொல்லுதலால் வருஞ்சிறுமை அடையாமல் ஓரேருடைத்தென்றும், சொல்லினார். உம்மை- அவ்விரவினிழிவுவிளக்கிநின்றது.

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்........................... *
கனவிலுந் தேற்றாதார் மாட்டு ................................ *

(இ-ள்.) கரத்தல்-(தமக்குஉள்ளது)மறைத்தலை—கனவிலும்-சொப்பனத்திலும்—தேற்றாதார்மாட்டு- அறியாதவரிடத்து—இரத்தலும்-யாசித்தலும்— ஈதலேபோலும் - (வறியவர்க்குக்) கொடுத்தலே

போலும். (எ-று.) (கருத்து) சொப்பனத்திலும்உள்ளதைகுணமில்லாதவரிடத்துயாசித்தலும் சொலித்தலே போலாம் என்பதாம். ✲ தான்புகழ்தாராதாயினும் முன்னுண்டாகிய புகழ்கெடவாராமையால்-சாதலேபோலுமென்றார். ஏ-அசை. (ச)

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்.............✲
இரப்பவர் மேற்கொள் வது.......................✲

(இ-ள்.) கண்ணின்று-(சொல்லமாட்டாமல்)முன்னின்றமாத்திரத்தால்—இரப்பவர் - யாசிப்பவர்— (உயிர்காத்தற்பொருட்டு) —மேற்கொள்வது - (இரத்தலை) மேற்கொள்வது — கரப்பிலார்-(அவர்க்கு உள்ளது ஒளிக்காமற்கொடுப்பவர்—வையகத்து - உலகத்து—உண்மையால் - இருக்கின்றபடியினாலே [பிறிதொன்றாலன்று.] (எ-று) (கருத்து) உள்ளபொருளையொளியாதுகொடுப்பவர்உலகிலிருக்கையால யாசிப்பவர் யாசகத்தைமேற்கொள்வது என்பதாம். ✲ அவரில்லையாயின் மானம்விடமாட்டாமையால்உயிரைவிடுவரென்பதாம்.

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை... ..✲
யெல்லா மொருங்கு கெடும்...........................✲

(இ-ள்.) கரப்பிடும்பை - (உள்ளதை)ஒளித்தலாகியநோயை-இல்லாரை- உடையரல்லாரை காணின் - கண்டால்—மானம் விடாமலிரப்பவர்க்கு) —இரப்பிடும்பையெல்லாம்-வறுமையால்வருந்துன்பங்களெல்லாம்—ஒருங்குகெடும்-ஒருசேரக்கெடும்.(எ,று.) (கருத்து)ஒளியாதுகொடுப்பவரைக்கண்டால் யாசிப்பவர்களுக்குத்துன்பஞ்செம் என்பதாம், ✲ ஒளித்தல்-ஒருவனுக்குவேண்டுவதொன்றல்லாமையால்அதனை- நோயென்றும், அந்நோயில்லாத இரக்கத்தக்கவரைக்கண்டபொழுதே அவ்விரப்பவர் மிகுமகிழ்ச்சியினராவராகலால்-எல்லாமொருங்கு கெடுமென்றும், சொல்லினார். இடும்பை-துன்பம். அது நோய்க்கு ஆகுபெயர். (ரு)

இகழ்ந்தெள்ள தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள.........✲
முள்ளு ளுவப்ப துடைத்து..........................✲

(இ-ள்.)இகழ்ந்து-(தம்மை)அவமதித்து—எள்ளாது-இழிவுசொல்லாமல்—ஈவாரை-(பொருள்)கொடுப்பவரை காணின் - கண்டால்—உள்ளம்-(அவ்விரப்பவரது)மனம்—மகிழ்ந்து- மகிழ்தல்செய்து—உள்ளுள்-உள்ளுள்ளே —உவப்பது-மலருந்தன்மையை—உடைத்து உடையது. (எ-று.) (கருத்து) பொருள்கொடுப்பவரைக்கண்டால்யாசிப்பவர்மனம் மகிழ்ச்சியையுடையது என்பதாம். ✲ இகழ்ந்தெள்ளாதெனவே-நன்குமதித்தலும், இனியவைசொல்லலும்-கொள்ளப்

படும்.—அவ்விரப்பவர்க்கு வறுமைத்துன்பம் கெடுவதுமாத்திரமேயன்றி—தம்மை அவர்ஐம்புலன்களாலும் பேரின்பமடைந்தவராக நினைத்தலாலும்-உள்ளுணுவப்பதுடைத்தென்றார். [இவ்வைஐந்துபாட்டாலும் இரக்கத்தக்கவரியல்பு சொல்லப்பட்டது,] (எ)

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால......... *
மரப்பாவை சென்றுவந் தற்று......................... *

(இ-ள்.) இரப்பார்-(வறுமையுற்) றிரப்பவர்--இல்லாயின்-இல்லையாயின்—ஈர்ங்கண்மாஞாலம்-குளிர்ந்தஇடமுடையபெரியபூமியிலுள்ளவரது(செலவுவரவுகள்)—மரப்பாவை—(உயிரில்லாத) மரப்பாவை-சென்றுவந்தற்று-(எந்திரக்கயிற்றால்)சென்றுவருதல்கள்போலும். (எ-று.) (கருத்து) யாசகரில்லாவிடில் பூமியிலுள்ளோர்செலவுவரவுகள் மரப்பாவை சூத்திரத்தாலாடுதல்போலுமாம் என்பதாம். ❋ ஐ-அசை. ஞாலம்-ஆகுபெயர். உவமேயத்துக்கு உவமானத்தோடொத்ததொழில் வருவிக்கப்பட்டது. பூமியிலுள்ளாரொன்றது-இரப்பவரொழிந்தவரை] அவர்க்குஈந்துபுகழும் புண்ணியமும் அடையாமையால் உயிருடையரல்லரென்பதாம்.] (அ)

ஈவார்கணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்......... *
மேவா ரிலாஅக் கடை......................................... *

(இ-ள்.) இரந்துகோள்-(அவரிடத்துச்சென்றுஒன்றனை) இரந்துகொள்ளுதலை—மேவாரிலா அக்கடை-விரும்புவாரில்லாதவழி—ஈவார்கண்-கொடுப்பவரிடத்து—என்-என்ன—தோற்றம்-புகழ்—உண்டாம். [யாதுமில்லை.] (எ-று.) (கருத்து) யாசிப்பவரில்லாவிடிற்கொடுப்பவர்க்கென்ன புகழுண்டாம் என்பதாம். ❋ தோற்றம்-ஆகுபெயர். மேவுவாரென்பது-விகாரமாயிற்று. கொடுத்தல்-வல்லமை வெளிப்படாமையால்-அதனாலே புகழுடையாரென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் உலகிற்கு இரப்பார் வேண்டுமென்பதுசொல்லப்பட்டது.] (௯)

இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை......... *
தானேயுஞ் சாலுங் கரி......................................... *

(இ-ள்.) (ஈவானுக்குப்பொருள்உதவாதவிடத்தே)-இரப்பான்-இரப்பவன்-வெகுளாமைவேண்டும்-(இவன்எனக்குக் கொடுக்கின்றிலனென்று அவனைக்) கோபியாதொழிதல்வேண்டும்.-(அதுவேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசாட்சிவேண்டா)-நிரப்பிடும்பைதானேயும், வறுமையாகிய தந்நோய்தானேயும்-கரி-சாட்சியாதல்-சாலும்-அமையும். (எ-று.) (கருத்து) யாசிப்பவன்கோபியாதிருக்க வேண்டும் என்பதாம். ❋ யாவர்க்குந் தேடவேண்டுதலு

ம், நிலையில்லாமையும், முதலாகியபிறசாட்சிகளும் உண்டென்பது படநின்றமையால்- உம்மை எச்சவும்மை. தனக்கேயல்லாமல் தன்னையிரந்தவர்க்கும் அன்றைக்கன்று பொருள்சம்பாதித்தற்கு அவன் படுந்துன்பத்தைத் தனக்கேயாகவைத்துத் தான்படுகிற துன்பம்தானறிந்து கோபியாதிருக்கக்கடவனென்பதாம். [இதனால் அவர்க்கு அவசியமான ஓரியல்பு சொல்லப்பட்டது.] (ய)



# ரள-ஆம்- அதி- இரவச்சம்.



அஃதாவது-மானங்கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு.....................*
மிரவாமை கோடி யுறும் ........................................*

(இ-ள்.) (ஒருவன்) கரவாது- (தமக்குள்ளதை)ஒளிக்காமல்- உவந்து-(இவர் வரப்பெற்றேமென்று)உள்ளமகிழ்ந்து - ஈயும் - கொடுக்கும் கண்ணன்னார்கண்ணும்- கண்போற்சிறந்தவரிடத்தும்- இரவாமை, இரவாமல் வறுமைப் படுதல்-கோடியுறும் - (இரந்துசெல்வமடைதலிற்) கோடிமடங்கு நன்றாம். (எ-று.) (கருத்து) ஒளியாது கொடுக்குங் கண்ணிற் கொப்பானவரிடத்தும் யாசியாதிருத்தல் கோடிமடங்கு நன்மையாம் என்பதாம். ❁ வறுமை மறைக்கப் படாத நட்பினரிடத்தும் இரக்கலாகாதென்பது படநின்றமையால்உம்மை உயர்வுசிறப்பு, அவ்விரவால் மானங்கெடா தென்பதொன்றேயல்லாமல் அதற்கு மிகுதி கூடாமையால் செய்ய வல்லதோர் முயற்சிசெய்து சீவனஞ்செய்தலே நல்லதென்பது கருத்து. (க)

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து..................*
கெடுக வுலகியற்றி யான். ........................................*

(இ-ள்.)உலகியற்றியான்-இவ்வுலகத்தைப்படைத்தவன்-(இதனிடத்து வாழ்வார்க்குமுயன்று சீவனஞ்செய்தலையல்லாமல்)-இரந்தும்-யாசித்தும்-உயிர்வாழ்தல்வேண்டின்- சீவனஞ்செய்தலை வேண்டிவிதித்தானாயின்- (அக்கொடியோன்)பரந்து - (தானும்அவர்போல்) எங்குஞ்சுழன்று-கெடுக-கெடக்கடவன். (எ-று.) (கருத்து) பிரமன் உலகத்தோரையாசகஞ்செய்யப்படைத்தானாகிலவன்கெடக்கடவன் என்பதாம். ❁ மக்களுயிர்க்கெல்லாம் வாழ்தாளும், அதற்கு வேண்

டுவதாகியஉண்டியும், அதற்கு ஏதுவாகிய செய்தொழிலும், பழவி
னைவசத்தாற் கருவோடுகலந்த அப்போதேஅவன்கற்பிப்பானன்றே
அவைகளுள்சிலவுயிர்க்கு இரத்தலையும்ஒருசெய்தொழிலாகக்கற்பித்
தானாயின் அத்தீவினையால் தானும் அத்துன்பமடைய வேண்டுமெ
ன்பதாம். [இவ்விரண்டுபாட்டாலும் ; அவ்விரவின் கொடுமைசொல்
லப்பட்டது.] (உ)

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்.........*
வன்மையின் வன்பாட்ட தில்.............................*

(இ-ள்.) இன்மை- வறுமையாலேரும்- இடும்பை - துன்பத்தை-
(முயற்சி செய்து நீக்க நினையாமல்)- இரந்து தீர்வா மென்னும்-
இரந்துநீக்கக்கடவோமென்று நினைக்கும்-வன்மையின் - வல்லமை
போல்-வன்பாட்டது- வலிமைப்பாடுடையது-இல் - இல்லை (எ-று.)
(கருத்து) வறுமைத்துன்பத்தை நீக்குவோமென்னும்வலிமைபோ
லவலிமையுடையதில்லை-என்பதாம். ❁ அதுநீக்கற்கு வழியாகியமு
யற்சி இருக்கவழியல்லாத இரவால் நீக்கநினைத்தலால் வன்மையாயி
ற்று.வலிமைப்பாடு - முறட்டுத்தன்மை; அது ஆவதையாலோசியா
து செய்துநிற்றல்.[இதனால் இரவு-வறுமை - தீர்தற்கு வழியன்றெ
ன்பதுசொல்லப்பட்டது.] (ங)

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக் ......*
காலு மிரவொல்லாச் சால்பு.........................*

(இ-ள்)இடமில்லாக்காலும் . அனுபவிக்கவேண்டுவதில்லாமல்வறு
மைப்பட்டவிடத்தும்-இரவு-(பிறரிடத்துச்சென்று) இரத்தலுக்கு-
ஒல்லா-உடன்படாத-சால்பு-நிறைவு - இடமெல்லாம் - உலகமெல்
லாம்-(ஒருசேரஇயைந்தாலும்)கொள்ளாத்தகைத்தே-கொள்ளாத
பெருமையுடைத்தே.(எ-று.) (கருத்து) தரித்திரத்திடத்தும்யாசியா
மையேபெருமை என்பதாம். ❁ அவ் விரத்தலைச் சால்புவிலக்கலா
ல்இரவொல்லாமை அதன்மேல் ஏற்றப்பட்டது. [இதனால் அவ்வழி
யல்லாததைச்சால்புடையார் செய்யாரென்பது சொல்லப்பட்டது.

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த .............*
துண்ணலி னூங்கி னியதில்..........................*

(இ-ள்.) தாள் (வழியாகிய)முயற்சி-தந்தது-(கொண்டுவந்து)தந்
தது-தெண்ணீர்-தெளிந்தநீர்போலும்- அடுபுற்கையாயினும் சமை
த்தகூழேயாயினும்-உண்ணலினூங்கு-(அதனை) உண்ணுதற்குமேல்
இனியது-இன்பந்தருவது-இல்-இல்லை.(எ-று.) (கருத்து) முயற்சியா
ல்வந்தகூழாயினும் அதையுண்ணுதல்போலின்ப முடையதில்லை

என்பதாம். ※முயற்சிதந்தகூழ் அழுத்தமில்லாமல்தெளிந்தநீர்போ ன்றதாயினும் அவமானமாகிய இரவால் வந்ததல்லாமல் தம்முடை யதாகலால் அமிழ்தத்தோடு ஒக்குமென்பதாம்.[இதனால்வழியாலா கியது சிறிதெனினும் அதுசெய்யுமின்பம் பெரிதென்பது சொல்ல ப்பட்டது.] (௫)

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்.................................. ※
கிரவி னிளிவந்த தில்.......................................... ※

(இ-ள்.) ஆவிற்கு-(தண்ணீர்பெறுகிறக்குறிலமையதாகிய)பசுவு க்கு-நீரென்று-(தருமநோக்கி)இதற்குத் தண்ணீர்தரல்வேண்டு மெ ன்று-இரப்பினும்-இரந்துசொல்லும்போதும்-இரவின் - அவ்விரவு போல் நாவிற்கு (ஒருவ) னாவிற்கு - இளிவந்தது - அவமானம்வந் தது-இல்-வேறில்லை. (எ,று.) (கருத்து) பசுவிற்குநீர்விடென்னும்யா சகம்போல நாவிற்கிழிவில்லை - என்பதாம். ※ ஆவைக்காப்பாற்றல் பெரியவறமாகலால் ஆவிற்கென்றும், பொருள்கொடுத்துக்கொள்ள வேண்டாத எளிமைபதாகலால் நீரென்றும்,இரக்கின்றோனுக்கு அவ மானமாவது அச்சொல்லளவேயாகலால் நாவிற்கென்றும், அதுதா னெல்லாவவமானங்களிலும், மேற்படுதலால் இளிவந்ததில் லென்று ம், சொல்லினார்.[இதனால்அறத்தையும் முயன்றுசெய்வதல்லது இர ந்துசெய்யலாகாதென்பது சொல்லப்பட்டது.] (௬)

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்.................................. ※
கரப்பா ரிரவன்மி னென்று..........................................

(இ-ள்.) இரப்பாரையெல்லாம் - யாசிப்பவரையெல்லாம்-இரப்ப ன்- (நான்)இரவாநின்றேன். இரப்பின்-(உமக்கு)இரக்கவேண்டுமா கில்-கரப்பார்-(தமக்குஉள்ளதைஒளிப்பவரை-இரவன்மின்-இரவாதி ருங்கள். (எ-று,)(கருத்து)யாசிப்பாரையெல்லாம்யாசித்தேன் நீங்கள் ஒளிப்பவரிடத்தில் யாசியாதிருங்கள் என்பதாம். ※ இவ்வவமானச் செயலால் ஊட்டிவளர்த்த விடத்தும் உடம்புநில்லா தாகலின் இது வேண்டாவென்பதுதோன்ற,இரப்பினென்றார்,[இதனால்மானங்கெ டவருமிரவு விலக்கப்பட்டது.]என்று-இடைச்சொல் (௭)

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்.................. ※
பார்தாக்கப் பக்கு விடும்........................................ ※

(இ ள்.)(இவ்வறுமையென்னுங்கடலைஇதனாற்கடப்போமென்றுநி னைத்துஒருவனேறிய)-இரவென்னும்-யாசகமென்னும்- ஏமாப்பில்-காவலற்ற-தோணி,மரக்கலம்-(அதனிடத்தேஓடுங்கால்) கரவென்னு ம்-ஒளிக்கலென்னும்-பார்-வன்னிலத்தோடு-தாக்க-தாக்குமாயின்-பக்குவிடும்-பிளந்துபோம். (எ-று.)(கருத்து)யாசகமென்னுந்தோ

ணிஒளித்தலென்னும் வலியதிலந்தாக்கக்கெடும் என்பதாம். ❁முயற்சியாற்கடப்பதனை இரவால்கடக்கலுற்றவன் அதன் ,கடாகாறுமை யால், ஏமாப்பிறேணியென்றார், ஏமாப்பின்மைதோணிமேலேற்றப்பட்டது. அதுகடத்தற்கு ஏற்றதல்லாமையாலும், நிலமறியாது செலுத்தியவழிஉடைதலாலும் அதனிடத்தேஏறலாகாதென்பதாம். (இதுஉருவகம்.) (அ)

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள........................*
வுள்ளதூஉ மின்றிக் கெடும்...............................*

(இ-ள்.) இரவு-(உடையார்முன் இல்லார்சென்று) இரந்துநிற்றலின்கொடுமையை-உள்ள-நினைத்தால்- உள்ளம் - (என்) உள்ளம் - உருகும்-கரைந்துருகாநிற்கும்- கரவு- (இனி அந்நிலையைக் கண்டிருந்தவர்)இல்லையென்றலின் கொடுமையை- உள்ள - நினைத்தால் - உள்ளதூஉம்-அவ்வுருகுமளவுதானும் - இன்றி-இல்லாமல்-கெடும் - அழிந்துபோம். (எ,று.) (கருத்து)யாசிப்பவர்கொடுமையைநினைத்தால்மனமுருகுகின்றது. இல்லையென்னுங்கொடுமையைநினைத்தால் உருகுமளவுமில்லாமற்கெடும் - என்பதாம். ❁ இரவினும் கரவு மிகக்கொடிதென்றபடி. (௯)

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர் ....*
சொல்லாடப் போஒ முயிர்..........................*

(இ-ள்.) சொல்லாட-(ஒளிப்பவர் இல்லையென்று)சொல்லியமாத்திரத்தே-இரப்பவர்-இரப்பவர்க்கு-உயிர்-உயிரானது - போம்-போகாநின்றது-கரப்பவர்க்கு,(இனிச்சொல்லுகின்ற)அவ்வொளிப்பவர்க்கு-(உயிர்பின்னிருத்தலால்) - யாங்கு, எப்புரையுள்- ஒளிக்குங்கொல், (அப்பொழுது) புகுந் தொளித்து நிற்குமோ. (எ-று.) ஓ,அசை-(கருத்து) யாசிப்பவர்க்கில்லையென்றால்உயிர்போகும். ஒளிப்பவர்க்குயிரெங்கேயொளிக்கும்-என்பதாம். ❁உயிர்போதலாவதுஇனியாமென்செய்வோமென்று ஏங்கிச் செயலற்று நிற்றல். கேட்டானைக் கொல்லவல்லதாகிய சொல் சொல்வானைக் கொல்லுதல் சொல்லவேண்டாவாயினும் அதுகாண்கின்றிலம் இது வென்னே வென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும்அவ்விரவின்குற்றமுங்கரவின்குற்றமுஞ்சேர்த்துச் சொல்லப்பட்டன.] (ய)





# ௱அ-ஆம் - அதி - கயமை.



அஃதாவது-முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்பு வகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளைக் குறிப்பினால் யாவர்க்கும் பொருந்த வைத்தமையால் அங்கே குறிப்பாற் சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச் சொல்லியவையும், ஆகியகுணங்களுள் யாதுமிலராகிய கீழோரது தன்மை அதனால் இது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

மக்களே போல்வர் கயவரவரன்ன .............................. *
வொப்பாரி யாங் கண்டதில் .............................. *

(இ-ள்.) கயவர், கீழோர்!-மக்களேபோல்வர், (வடிவால்முழுதும்) மக்களேபோலிருப்பர் - அவரன்ன வொப்பாரி, அவர் அம்மக்களை யொத்தல்போன்றவொப்பு- யாம்-நாம்--கண்டதில்-(வேறிரண்டுசாதிகளிடத்துக் கண்டதில்லை)(எ,று.)(கருத்து)கீழ்மக்கள்வடிவாலேமக்களையொப்பாவர்அவர்களை யொப்பானவரையான்கண்டதில்லைஎன்பதாம். ☼ முழுதுமொத்தல்-தேற்றேகாரத்தாற் பெற்றாம். அவவொன்றது, அவரிடத்தேயுள்ள வொப்புமையை மக்கட் சாதிக்கும் கயச்சாதிக்கும்வடிவொத்தலால்,குணங்களினிருப்பினாலும்இல்லாமையாலும் அல்லதுவேற்றுமை அறியப்படாதென்பதாம். [இதனாற் கயவரதுகுற்றமிகுதிசொல்லப்பட்டது.] (க)

நன்றறி வாரிற் கயவர்திருவுடையர் .............................. *
நெஞ்சத் தவல மிலர் .............................. *

(இ-ள்.) நன்று-(தமக்கு) உறுதியாயினவைகளை - அறிவாரின்-அறிபவரின்-கயவர் - (அவையறியாத) கீழ்மக்கள்- திருவுடையர்- நன்மையுடையராவர் -(அவர்போல்)-நெஞ்சத்து - (தமது) நெஞ்சினிடத்து-அவலமிலர்( அவைகாரணமாக)-கவலையிலர்( ஆதலால்)(எ-று.) (கருத்து) நன்மைகளை யறிபவரினும்நெஞ்சிற் கவலை யில்லாதவராகிய கீழ்மக்கள் நன்மையுடையவர் என்பதாம். ☼ நன்றென்பது,சாதியொருமை. உறுதிகளாவன இம்மை மறுமைவீடுகளுக்குஉரியவாகியபுகழ் புண்ணியஞானங்கள்-இவைகளையறிவோர் இவைசெய்யாநின்றே அதிகமாகச் செய்யப்பெறுகின்றிலோமென்றும், செய்கின்றவைகளுக்கு இடையூறு வருமோவென்றும், இவைகளுக்குமாறாகிய பழிபாவ மறியாமையென்பவைகளில் யாதுவிளையுமோவென்றும், இவ்வழியாலேகவலை யடைவர். (உ)

தேவ ரனையர் கயவ ரவருந்தா........................*
மேவன செய்தொழுக லான்........................*

(இ-ள்.) தேவரனையர்கயவர்-தேவரும் கயவரும் ஒருதன்மையர்-(அதுஎதினாலெனில்) - அவரும்-அக்கயவரும் - (தேவர்போலே தம்மை நியமிப்பாரில்லாமல்)- தாமேவன - தாம் விரும்புமவைகளை - செய்தொழுகலான்-செய்துநடத்தலால். (எ-று.)(கருத்து)தேவருங் கயவருமொப்பாவர் என்பதாம். ❁ உயர்ச்சியும் இழிவுமாகியதங் காரணவேறுபாடு குறிப்பால்தோன்ற நின்றமையால்இதுபுகழ்வார்போன்றுபழித்தபடியாயிற்று. [இதனால் விலக்கப்படுதலில்லாமல் வேண்டியது செய்வாரென்பது சொல்லப்பட்டது.] (௩)

அகப்பட்டி யாவரைக் காணி னவரின்........................*
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்........................*

(இ-ள்.) கீழ்-கீழாயினோன்-அகப்பட்டியாவரை - (தன்னிற்)குறைந்தபட்டியாய் நடப்பவரை-காணின்- கண்டானாயின்-(அவன் அந்நடக்கையிலே)-அவரின் - அவரைக்காட்டிலும் - மிகப்பட்டு - (தான் மேன்பட்டு)-செம்மாக்கும் - (அதனால் தன்மிகுதிகாட்டி)இறுமாப்பான். (எ-று.) (கருத்து) கீழ்மகன்பட்டியாய் நடப்பவரைக் கண்டாலதனினு மேலாகநடப்பான்-என்பதாம். ❁ அகமாகிய மனம்பட்டிபோன்று வேண்டியபடிநடத்தலால் அகப்பட்டியென்றார்.இதனால் அவர் மேன்படும் விதம்சொல்லப்பட்டது.] (௪)

அச்சமே கீழ்கள தாசார மெச்ச........................*
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது........................*

(இ-ள்.) கீழ்களதாசாரம்- கீழோரது ஆசாரம்-(கண்டதுஉண்டாயின் அதற்குக்காரணம்!) - அச்சமே-(அரசனாலே துன்பம்வருமென்றுஅஞ்சும்) அச்சமே-எச்சம்-(அது) ஒழிந்தால்- அவா-அவாவப்படும்பொருள்-உண்டேல்-)அதனால்)உண்டாமாகில்-சிறிது-சிறிதுஉண்டாம்-உண்டாகும்.(எ-று.) (கருத்து)கீழ்மக்கட்காசாரமியல்பாகவில்லை-என்பதாம். ❁ ஆசாரத்தின்காரணத்தை ஆசாரமென்றும்-அவாவப்படுமதனை அவாவென்றும், சொல்லினார்.- கீழ் மக்களுக்கு ஆசாரம்பெரும்பான்மை அச்சத்தாலும் சிறுபான்மை பொருட்பேற்றாலுமல்லாமல் இயல்பாகஉண்டாகாதென்பதாம். [வேண்டியபடி செய்தலேயியல்பு. ஆசாரஞ்செய்தலியல்பன்றென்பது இதனாற் சொல்லப்பட்டது] (௫)

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட........................*
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்........................*

(இ-ள்.) தாங்கேட்ட-தாங்கள்கேள்விப்பட்ட- மறை- இரகசியங்களை - உய்த்து-(இடந்தோறுந்) தாங்கிக் கொண்டு போய்- பிறர்க்கு அந்நியருக்கு- உரைக்கலான்-சொல்லுதலால்- கயவர்- கீழ்மக்கள்- அறைபறையன்னர்- அறையப்படும் பறைபோல்வர். (எ-று.)(கருத்து) கீழ்மக்கள்பறைக்கொப்பாவார் என்பதாம். ❊ மறையாவது-வெளிப்பட்டால் குற்றம் விளையுமென்று பிறனாயமறைத்து ஒருவன் சொல்லியசொல்.-பிறர் - எவருக்கு மறைக்கவேண்டுமோ அவர்.உய்த்தென்றார். அவர்க்கு அதுபெரும்பாரமாதல் நோக்கிப்பறை ஒருவன் கையால் தன்னையறிவித்ததொன்றனை இடந்தோறுங் கொண்டு சென்று அறியாதவர்யாவரையும் அறிவிக்குமாதலால் இது தொழிலுவமம்- இதனால் அவரது செறிவில்லாமை சொல்லப்பட்டது- (௬)

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்............ ❊
கூன்கைய ரல்லா தவர்க்கு ........................ ❊

(இ-ள்.) கயவர்-கீழ்மக்கள்-கொடிறுடைக்கும் - (தங்)[௫]கதுப்பினை நெரிப்பதாக-கூன்-வளைந்த - கையரல்லாதவர்க்கு- கையினையுடையரல்லாதவர்க்கு ஈர்ங்கை (தாம்)உண்டு பூசியகையை (தெறிக்கவேண்டுமென்று இரந்தாலும்) விதிரார்-தெறியார். (எ-று.) (கருத்து)கீழ்மக்களிரப்பவர்க்குக்கொடார் வருத்துவோர்க்குக் கொடுப்பர் என்பதாம். ❊ வளைந்தகை-முறுக்கியகை. (௭)

சொல்லப் பயன்படுவர் சான்றோர்கரும்புபோற்....... ❊
கொல்லப் பயன்படுங் கீழ் ..................... ❊

(இ-ள்.) சான்றோர்-மேலாயினோர்- சொல்ல-(மெலியவர்போய்த் தங்குறையைச்) சொல்லியவளவிலே - பயன்படுவர்- (இரங்கி) பிரயோசனப்படுவர். கீழ்-மற்றைக்கீழாயினோர். கருப்பு போல- கரும்பைப்போல-கொல்ல - (வலியவர்நையநருக்கியவிடத்தே)- பயன்படும் பிரயோசனப்படுவர்.(எ-று.)(கருத்து) மேலோர்வருத்தஞ்சொன்னவுடன் பயன்படுவர் கீழோர்வருத்தினாற்பயன்படுவரென்பதாம். ❊ பயன்படுதல்-உள்ளதுகொடுத்தல். கீழாயினோரது இழிவுதோன்ற-மேலாயினோரையும் உடன்சொல்லினார். [இவையிரண்டுபாட்டாலும் அவர்கொடுக்கும் விதம் சொல்லப் பட்டது.] (௮)

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல் ............ ❊
வடுக்காண வற்றாகுங் கீழ்........................ ❊

(இ-ள்.) கீழ்-கீழாயினோன்-உடுப்பதூஉம்- (பட்டுந்துகிலும்)உடுத்தலையும்-உண்பதூஉம் - (பாலுஞ்சோறும்) உண்ணுதலையும்-காணின்-கண்டால். (அவைபெறுமல்) பிறர்மேல்- அந்நியர்மேல் (குற்ற

யில்லையாகவும்) வடுக்காண-குற்றமுண்டாக்க - வற்றாகும்-வல்லவனு வன். (எ-று.) (கருத்து) கீழ்மகன்பிறருண்டாலும்உமுத்தாலுங்கண டாற் பொருமைகொள்வான் என்பதாம். ✵ உடுப்பதுஉண்பதுஎன் பவை-அவ்வத் தொழிலின்மேல் நின்றன - அவைகளால் - பூணுதல் வாகனமேறல் முதலாகியபிறதொழில்களும்கொள்ளப்படும், அவை களைக் கண்டமாத்திரத்தே பொருமைப்படுதலாலேகாணினென்று ம்-கேட்டவர் இக்குற்றம் அவரிடத்திருக்கலாமென்று உடன்படச் செய்தல் அரிதாகலால்-வற்றாகுமென்றும்- சொல்லினார். [இதனால் பிறர்செல்வம்பொருமை சொல்லப்பட்டது.] (கூ)

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்.................. ........ ✳
விற்றற் குரியர் விரைந்து............. ......................... ✳

(இ-ள்.) கயவர்- கீழோர்- ஒன்று- ஒருதுன்பம்-உற்றக்கால்- (தம்மை)அடைந்தவிடத்து (அதுவேசார்பாக) - விரைந்து-விரைவுற்று- விற்றற்குரியர்-(தம்மைப்பிறர்க்கு) விலைசெய்தற்கு உரியவராவர்- (அதுவல்லாமல்) -எற்றிற்குரியர்-(வேறே) எத்தொழிலுக்குஉரியரா வர். (எ-று.) (கருத்து) கீழோர் துன்பம்வந்தவிடத்துத்தங்களைவிறக வுரியவராவர் என்பதாம். ✵ உணவில்லாமையாகவாவது வேறொ ன்றாகவாவது ஒருதுன்பம்வந்து உற்றமாத்திரத்தென்பது தோன் றஒன் றுற்றக்காலென்றும் - கொள்கின்றார் தங்கீழ்மையை அறிந்து வேண்டாவென்றற்குமுன்னேவிற்றுநிற்றலால்-விரைந்தென்றும்- சொல்லினார்.ஒருதொழிலுக்கும் உரியரல்லரென்பதுகுறிப்பெச்சம்.

---

இரண்டாவது.

# பொருட்பால்-முற்றிற்று.

இனி அப்பொருளைத் துணைக்காரணமாக வுடைத்தாய் இம்மையேபயப்பதாகிய இன்பத்தைச் சொல்லும்படி எடுத்துக் கொண்டார்.





மூன்றாவது.

# காமத்துப்பால்.



அஃதாவது- காமத்தின்பகுதியைப்பற்றிச்சொல்லியது.

இது-புணர்ச்சி- பிரிவு - எனவிருவகைப்படும். புணர்ச்சியைக் களவென்றும்- பிரிவைக்கற்பென்றும் வகுத்தார். (தொல்காப்பியம்.) இன்பமும் பொருளு மறனுமென்றாங் - கன்பொடு புணர்ந்தவைந் திணைமருங்கிற்- காமக்கூட்டங் காணுங்காலை- மறையோர்தேஎத்து மன்றலெட்டனுட் - டுறையமைநல்யாழ்த் துணைமையோரியல்பே. (அகப்பொருள்விளக்கம்.) உளமலிகாதற் களவெனப்படுவ- தொருநான்கு வேதத்திருநான்கு மன்றலுள்-யாழோர் கூட்டத்தியல்பினதென்ப. (இறையனாரகப்பொருள்.) ஒப்புமுருவும்வெறுப்புமென்றாக் - கற்புமேரு நிறையுமென்றாச்-சாயலுநாணுமடனுமென்றா- நோயும்வேட்கையு நுகர்வுமென்றாங்- காவயின்வரூஉங் கிளவியெல்லா - நாட்டியமரபினெஞ்சுகொளினல்லது- காட்டலாகாப் பொருளவென்ப.

---

## களவியல்-

### ௱௯ ஆம்-அதி- தகையணங்குறுத்தல்.



அஃதாவது-பொழில் விளையாட்டாசையால்பெண்கள்கூட்டம் நீங்க அங்குத் தனித்துநின்றவளை வேட்டையாடும்ஆசையால்-இளையர் கூட்டநீங்கத்தனித்துவந்ததலைவன் அவளழகுதனக்குவருத்தமுண்டாக்குதலைச்சொல்லுதல்.

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை ......*
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு ........................ *

[இது தலைவன் தலைவியைக் கண்டையுற்றது.]

(இ-ள்.) கனங்குழை, கனத்த குழையையுடையவிவள் -அணங்குகொல் -தெய்வப்பெண்ணோ-ஆய்மயில்கொல்-தேர்ந்தெடுக்கப்பட்ட மயிலோ-மாதர்கொல்-மானிடப்பெண்ணோ- என்னெஞ்சு- என்மனதுமாலும்-இப்படிப்பட்டவளென்றறியாதுமயங்காநின்றது (எ-று.) (கருத்து) இவள்தெய்வப்பெண்ணோ-மயிலோ-மானிடப்பெண்ணோ-இன்னாளென்றறியா தென்மனமயங்குகின்றது என்பதாம். ❁ஓ, அ.

கைச-கனங்குழை-, ஆகுபெயர். (அகப்பொருள்விளக்கம்.) மடமானோக்கி வடிவுங்கண்டே-விடமுஞ்சிறந்தழி யெய்துவதையம். (௧)

நோக்கினா ளோக்கெதிர் நோக்குதா க்கணங்கு .... *
தானைக்கொண் டன்ன துடைத்து .... .... ......... *

[இது] தலைவன் மானிடமாதென்று துணிந்து அவள்பார்வையாலாகிய வருத்தஞ் சொல்லியது.] இ-ள்.) நோக்கினாள்-அழகையுடையவள்-நோக்கெதிர்-என்பார்வைக்கெதிர-நோக்குதல்-பார்க்குதல்-தாக்கணங்கு-தெய்வப்பெண்-தானைக்கொண்டன்னது - போர்க்குச்சேனையைக் கொண்டுவந்ததுபோலுந் தன்மையை உடைத்து-உடையது - (எ-று) (கருத்து) இவளென்பார்வைக்கெதிரேபார்க்குதல் ஒருதெய்வப்பெண் ம்பார்செய்யச் சேனையைகொண்டுவந்தது போலும் தன்மையுடையது-என்பதாம். ❁ (அகப்பொருள்விளக்கம்.) எழுதியவல்லியுந் தொழில்புனைகலனும்- வாடியமலருங்கூடியவண்டு-நடைபயிலடியும் புடைபெயர்கண்ணு - மச்சமும்பிறவுமவன்பானிகழுங்- கச்சமிலையங்கடிவனவாகும். இது துணிவிலக்கணம். (௨)

பண்டறியேன் கூற்றென் பதனையினி யறிந்தேன் .. .. ........ *
பெண்டகையாற் பேரமர்க் கட்டு .... ..... .................... *

இதுவுமது. (இ-ள்.) கூற்றென்பதனை - யமனென்றுசொல்வதை-பண்டறியேன்- முன்கேட்டறிந்ததல்லதுகண்டறிந்திலன்-இனியறிந்தேன்-இப்பொழுதுகண்டறிந்தேன்-(அது) பெண்டகையால் - பெண்குணங்களுடனே- பேரமர் - பெரியவையாய்ப் போர்செய்கின்ற கட்டு-கண்களையுடையது. (எ-று.) (கருத்து) தலைவன் தலைவியினுடைய கண்களையே யமனென்றுகூறினான். என்பதாம். ❁ பெண்டகையாவது-நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு. என்னு நாற்குணங்களாம்.

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் .. ..... *
பேதைக் கமர்த்தன கண் .... .................. ........ ........ *

இதுவுமது. (இ-ள்.) பெண்டகை - பெண்குணங்களையுடைய-பேதைக்கு-பெண்ணிற்கு-கண்-கண்கள்- கண்டார் - கண்டவரது - உயிருண்ணும்- உயிரையுண்ணும்-தோற்றத்தால்- தோற்றத்தோடுகூடி-அமர்த்தன-மாறுபட்டிருந்தன. (எ,று.) (கருத்து) இப்பெண்ணின் கண்கள் கண்டவர்களுயிரையுண்ணுங் காட்சியாக மாறுகொண்டிருந்தன என்பதாம். (௪)

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர .......... ......... *
னோக்கமிம் மூன்று முடைத்து ............................ .. *

இதுவுமது. (இ-ள்.) மடவரல்-இப்பெண்ணினுடைய - நோக்கம்

பார்வையானது - கூற்றமோ - (என்னைவருத்தலால்)யமனோ - கண்ணோ-(என்மேலோடுதலால்)கண்ணோ - பிணையோ - (அஞ்சுதலால்) பெண்மானோவறிகிலேன்-இம்மூன்றும்- இம்மூன்று குணங்களையும்-உடைத்து உடையதாயிருக்கின்றது. (எ-று.) (கருத்து) இவள்பார்வை யமனோ கண்ணோ மானோ அறியேன். என்பதாம். (ரு)

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்.......... *
செய்யல மன்னிவள் கண்........................ *

இதுவுமது. (இ-ள்.)) கொடும்புருவம் - வளைந்தபுருவங்கள் - கோடாமறைப்பின்- செவ்வையாயிருந்துமறைத்தால் - இவள்கண்கள்-இவளுடையகண்கள்-நடுங்கஞர்-நடுங்குதற்கு ஏதுவாகிய துன்பத்தை -செய்யல- (எனக்குச்) செய்யமாட்டாவாம். (எ-று.) (கருத்து) இவளுடையகண்கள் புருவங்களால்மறைக்கப்பட்டாலெனக்குத் துன்பத்தைச்செய்யாவாம். என்பதாம். மன்-ஒழியிசை. (கூ)

கடாஅக் களிற்றின்மேற் கட்படாமாதர்.................. *
படாஅ முலைமேற் றுகில்........................ *

இது அவளுடைய முலைகளாலாகிய வருத்தஞ்சொல்லியது. (இ-ள்.) மாதர்- இப்பெண்ணினுடைய-படாஅமுலைமேற்றுகில்-சாயாத முலைகள்மேலிட்டசீலையானது - கடாஅக்களிற்றின்மேல்-மதயானையின்மேலிட்ட-கட்படாம்-முகச்சீலையையொக்கும்.)(எ-று)கருத்து இவள்முலைகளின்மேலே தரித்த வத்திரமானது யானைமுகத்தின்மேலேதரித்த வத்திரத்தை யொக்கும் என்பதாம், (எ)

ஒண்ணுதற்கோஒ வுடைந்ததே ஞாட்பினு ................... *
ணண்ணாரு முட்குமென் பீடு ........................ *

இது அவளது நெற்றியாலாகிய வருத்தஞ் சொல்லியது. (இ-ள்.) ஞாட்பினுள்-போர்க்களத்துள்-நண்ணாரும்-பகைவரும்-உட்கும்-அஞ்சும்-என்பீடு-என்னுடைய வலிமையானது-ஒண்ணுதற்கு, இவளுடைய பிரகாசநெற்றிக்கு-உடைந்தது-அழிந்தது. (எ, று.)(கருத்து) என்னுடைய வலிமையானது இவளுடைய நெற்றிக் கழிந்தது, என்பதாம். ❋ ஓ் ஓ வியப்பிற் குறிப்பு. (அ)

பிணையேர் மடநோக்கு நாணுமுடையாட்.................. *
கணியெவனோ வேதில தந்து........................ *

இது. ஆபரணத்தாலாகிய வருத்தஞ்சொல்லியது.
(இ-ள்.பிணையேர்மடநோக்கு-(புறத்தில்)பெண்மான்போன்றபார்வையும்- நாணம்-(அகத்தில்)நாணத்தையும்- உடையாட்கு-உடையவளுக்கு-ஏதிலதந்து-வேறுபரணங்களையுண்டாக்கி- அணி-அணி

தல்-எவன் - என்னபயனுடையது. (எ,று.) (கருத்து) இவட்குப்பார் வையு நாணமுமாபரணங்களாயிருக்க வேறுபரணங்களை யணிதலெ ன்னபயன் என்பதாம். ஓ, அசை. (௯)

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற் ............... *
கண்டார் மகிழ்செய்த லின்று ...................................... *

இது-தலைவி குறிப்பறியலுற்ற தலைவன் சொல்லியது. (இ-ள்.) அடுநறா காய்ச்சப்பட்ட மதுவானது-உண்டார்கணல்லது - உண்ட வரிடத்தல்லாது- காமம்போல்-காமத்தைப்போல கண்டார் கண்ட வரிடத்து,மகிழ்செய்தல்-மகிழச்செய்தலை - இன்று - உடையதல்ல. (எ-று.) (கருத்து) மதுவுண்டால் மகிழ்ச்சிகாமங்கண்டால்மகிழ்ச்சி தரும் என்பதாம். (௰)

# ௱௰-ஆம், அதி-குறிப்பறிதல்.

அஃதாவது - தலைவன் தலைவி குறிப்பை அறிதலும், தோழி குறிப்பை அறிதலும், அத்தோழி அவ்விருவர் குறிப்பையும் அறி தலும்ஆம். தலைவி யழகைக்கண்டு வருந்திய தலைவன் தலைவியைக், கூடும்போது இது வேண்டுமாதலால் தகையணங் குறுத்தலின்பின் வைக்கப்பட்டது. உ-ம். தொல்காப்பியம் - நாட்ட மிரண்டுமறிவுட ன்படுத்தற்கு - கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்- குறிப்பே கு றித்துக்கொள்ளுமாயி-னுங்கவைநிகழு மென்மனார் புலவர்.

இருநோக் கிவளுண்க ணுள்ளதொருநோக்கு ............... *
நோய்நோக்கொன் றந்நோய்மருந்து ......... ...... *

இது தலைவன் தலைவி யுள்ளக் குறிப்பை அவள் பார்வையால் அறி ந்தது. (இ-ள்.)இவளுண்கண் இவளுடைய(மை)யுண்டகண்களில்-உ ள்ளது- இருக்கின்றபார்வையானது-இருநோக்கு- இரண்டுபார்வை யாயிற்று. ஒருநோக்கு-ஒருபார்வையாவது - நோய்நோக்கு - நோ ய்செய்யும்பார்வையாம் ஒன்று- மற்றொரு பார்வை யானது - அந் நோய்மருந்து-அந்நோய்க்குமருந்தானபார்வையாம். (எ-று.) (கரு த்து) இவள்பார்வையானது இரண்டு ஒன்று நோய்செய்யும்பார்வை மற்றொன்று அந்நொய்க்கு மருந்தான பார்வைஎன்பதாம். (௧)

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற் ... ....... .... *
செம்பாக மன்று பெரிது ......................... ......... *

[இதுவுமது] (இ-ள்.) கண்-(இவளுடைய) கண்கள்-களவுகொள்ளுஞ்சிறுநோக்கம் - நான்காணாமல் என்னைப்பார்க்கின்ற சிறியபார்வை-காமத்தில் * மெய்யுறுபுணர்ச்சியில்-செம்பாகமன்று-ஒத்தபாதியளவல்ல-பெரிது- (அதனினும்) மிகும். (எ-று.) (கருத்து) இவள் குறும்பார்வை காமத்தினு மதிகம் என்பதாம். ☼ நான்பார்த்தபோது நாணித்தலைகுனிந்து பாராவிடத்தே உற்றுப்பார்த்தும்வருதலாலே கண்களவுகொள்ளுமென்றும், அது உண்டாங்காலம் சிறிதாகலால்- சிறுநோக்கமென்றும், அப்பார்வைஉட்கருத்து உள்ளவிடத்தே உண்டாவதாகலால் இனி இவளைக்கூடுதல்நிச்சயமென்றற்குசெம்பாகமன்று பெரிதென்றும், சொல்லினான். (௨)

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்..... .......*
யாப்பினு ளட்டிய நீர்..... ..... ........*

[இது தலைவன் தலைவிக்குறிப்பைப் பார்வையாலும், நாணினாலும், அறிந்தது.] (இ-ள்.) அவள்-அம்மாது-நோக்கினாள்-பார்த்தாள்-நோக்கி-பார்த்து - இறைஞ்சினாள்-தலைகுனிந்தாள்-அஃது அச்செய்கைக்கு ஏதுவாகிய குறிப்பானது-யாப்பினுள் - (எம்மிருவரிடத்தும்தோன்றிய) அன்பாகிய பயிருள்-அட்டியநீர் - (அதுவளரும்படி) வார்த்தநீராயிற்று. (எ-று.) (கருத்து) அவள்பார்த்தாள் பார்த்துத்தலைகுனிந்தாள் அவள்குறிப்பு இருவரன்பும் வளருந் தண்ணீராம் என்பதாம். ☼ யாப்பு-கட்டு-யாப்பினாலாகிய அன்பை - யாப்பென்றார். [ஏகதேசவுருவகவணி.] (௩)

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்கால் .........*
றானோக்கி மெல்ல நகும்..... ........*

[இது தலைவன் தலைவிகுறிப்பை நாணினாலும்- மகிழ்ச்சியாலும், அறிந்தது] (இ-ள்.) யானோக்குங்காலை-நான்பார்க்கும்போது- நிலனோக்கும். நிலத்தைப்பாராநிற்கின்றாள்-நோக்கால் -பாராதபோது தானோக்கி-தான்பார்த்து - மெல்லநகும்- (தன்னுள்ளே) மகிழாநிற்பள் - (எ-று.) (கருத்து) யான்பார்க்கும்போது பூமியைப்பார்க்கிறாள் யான்பாராதபோது தான்பார்த்து நகைக்கின்றாள். என்பதாம். ☼ மெல்லநகுதல் வெளிப்படாமல் மகிழ்தல். (௪)

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்..... .... ...*
சிறக்கணித்தாள் போல நகும் ... .............. ....*

---

* மெய்யுறுபுணர்ச்சி-மெய்தொட்டுப்புணரும்புணர்ச்சி. உள்ளப்புணர்ச்சிமுன்னமேயிருக்கையால் இப்படிச்சொல்லப் பட்டது.

[இதுவுமது.] (இ-ள்.) குறிக்கொண்டு - (நேரே) குறிக்கொண்டு - நோக்காமையல்லால் - பாராமைமாத்திரமேயல்லது - ஒருகண் - ஒருகண்ணை - சிறக்கணித்தாள்போல - சுருங்கினவள்போல - நகும் (என்னைப்பார்த்துத் தன்னுள்ளே) - மகிழாநின்றாள். (எ-று.) (கருத்து) நேரேபாராமல் ஒருகண்ணைச்சுருக்கினவள்போல் பார்த்து நகைக்கின்றாள். என்பதாம். ☼ சிறங்கணித்தல் - சிறக்கணித்தாளெனச்செய்யுள் விகாரமாயிற்று. சிறங்கணித்தல் - சுருக்குதல். அதுவும் வெளிப்படத் தோன்றாமையால் - போலவென்றார். பார்த்தென்பது வருவிக்கப்படுதலால் - சொல்லெச்சம் - இனி இவளை அடைவது நிச்சயமென்பது குறிப்பெச்சம். (௫)

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ.............*
லொல்லை யுணரப் படும்.................*

[இது - தோழிதூரப்படுத்திய விடத்தே அவளது குறிப்பை அறிந்ததலைவன் தன்னுள்ளேசொல்லியது.] - (இ-ள்.) உறாஅதவர்போல் - (புறத்திலே) அயலார்போல் - சொலினும் - (கடுஞ்சொல்) சொல்லினும் - செறாஅர்சொல் - (உள்ளே) பகையாதவர்சொல் - (பின்பிரயோசனப்படுதல்) - ஒல்லையுணரப்படும் - (குறையிரந்தவராலே) கடிதில் அறியப்படும். (எ-று.) (கருத்து) புறம்பாகக்கடுஞ்சொல்சொல்லினும்உள்ளே பகையாதவர்சொல் சீக்கிரமறியப்படும் என்பதாம். ☼ கடுஞ்சொல் - இவ்விடம்மிகுந்த காவலையுடையது வாரதேயுமென்று சொல்லுகை முதலானவை - செறாஅவெனவே அருளுடைமைபெறப்பட்டது. (௬)

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு........*
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு...............*

[இதுவுமது] (இ-ள்.) செறாஅச்சிறுசொல்லும் - பின் இனிதாவதாய்முன்னே இன்னாதாகியசொல்லும்! - செற்றார்போனோக்கும், (உள்ளேபகையாதிருந்தேபுறத்தே) பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும், உறாஅர்போன்றுற்றார் - அயலோர்போலிருந்துநட்பாயினவர்க்கு குறிப்பு - ஒருகுறிப்புப் பற்றிவருவனவாம். (எ-று.) (கருத்து) உள்ளன்பாகச்சொல்லுங் கடுஞ்சொல்லும் - பகையாதுபார்க்குங்கோபப்பார்வையும் ஆசைக்குறிப்பால்வரும் என்பதாம். ☼ குறிப்பு - ஆகுபெயர். இவைஉள்ளே ஒருபயன்குறித்துச்செய்கின்றவைஇயல்பல்லவாகலால் - இவைகளுக்குஅஞ்சவேண்டாவென்பதாம்

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்......*
பசையினள் பைய நகும்.........................*

[இதுவுமது.] - (இ-ள்.) யானோக்க-நான்பார்த்து நோக்கியவிடத்து - பசையினள்- (அதுதெரிந்து இரங்கினவளாகி- பைய நகும்-உள்ளே நகாநின்றாள் - (அதனால்)-அசையியற்கு-அசைந்த சாயலையுடையவளுக்கு - ஆண்டு - அந்நகையினிடத்து - ஓர்- ஒருநன்மைக்குறிப்பு.- உண்டு-உண்டு. (எ-று.) (கருத்து) தான்பார்த்தவிடத்திலிரங்கிப்பார்த்து நகைக்கிறாளதனாலே நலமுண்டென்பதாம். ஓர்-ஆகுபெயர் அக்குறிப்பு இனிப்பழுதாகாதென்பதாம். (௮)

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்.... ... .... *
காதலார் கண்ணே யுள.................. ............*

[இது. தோழிமதியுடன்பட எண்ணித்தன்னுள்ளேசொல்லியது.] (இ-ள்.) ஏதிலார்போல- முன்னறியாதவர் போல - பொது நோக்கு நோக்குதல் (ஒருவரையொருவர்) பொதுப்பார்வையாகப்பார்த்தல், காதலார்கண்ணே-ஆசையையுடைய இவ்விருவரிடத்தும்- உள-உண்டாகின்றன. (எ-று. (கருத்து) அயலார்போலப்பொதுப்பார்வைபார்த்தலாசை யுள்ளவரிடத்துண்டுஎன்பதாம். ஃபார்த்தல் இருவருமதுமறைத் தண்டோர் மகிழ்ச்சிபோல் உள்ளத்துள்ளே மகிழ்தலால், அதுபற்றிக்காதலாரென்றும், அதுபுறத்துவெளிப்படாமையாலேதிலாரென்றும். சொல்லினான். (௯)

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்வாய்ச்சொற்க...... *
ளென்ன பயனு மில.................................. ........ *

இதுவுமது.] - இ-ள்.) (காமத்திற்குரிய விருவருள்)- கண்ணொடு (ஒருவரது) கண்களோடு கண்ணிணை - (ஒருவர்) கண்கள்-நோக்கொக்கின்-பார்வையால் ஒக்குமாயின் வாய்ச்சொற்கள் (உண்மை தோன்றச்சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள் - என்னபயனும்- ஒருபயனும்- இல, உடையனவல்ல. (எ-று.) (கருத்து) இருவர்பார்வையுமொக்குமாயின் வாய்ச்சொற்கள்பயனில்லனஎன்பதாம். ஃபார்வையாலொத்தல்.- ஆசைப்பார்வை யுடையனவாதல்.- வாய்ச்சொற்கள்- மனத்தில்லாமல் வாயளவிலே தோன்றுகின்றசொற்கள். (௰)



## ௱௰௧, அதி - புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது-அப்படிக்குறிப்பறிந்து புணர்ந்ததலைவன் அப்புணர்ச்சியைமகிழ்ந்து சொல்லுதல். அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும். (உ-ம.)-அகப்பொருள்விளக்கம். இரந்துபின் னிற்றற் கெண்ணலு மிரந்து-பின்னிலைநிற்றலு முன்னிலையாக்கலு மெய்தொட்டுப்பயிறலும் பொய்பாராட்டலு-மிடம்பெற்றுத்தழாஅலும்வழிபாடு மறுத்தலு-மிடையூறுகிளத்தலுநீடுநினைந் திரங்கலு-மறுத்தெதிர்கோடலும் வறிதுநகைதோற்றலு-முறுவற்குறிப் புணர்த்தலுமுயங்குதலுறுதலும்-புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலு மிறவு-முணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு..........*
மொண்டொடி கண்ணே யுள.......................*

[இது தலைவன் * இயற்கைப் புணர்ச்சிமுடிவிலே சொல்லியது.]

(இ-ள்.) கண்டு-(கண்ணாலே)கண்டும்-கேட்டு-(செவியாலே)கேட்டும்-உண்டு-(நாவாலே)உண்டும்-உயிர்த்து-(மூக்காலே)மோந்தும்-உற்று-(மெய்யாலே) தீண்டியும்-அறியும்-அநுபவிக்கப்படுகிற-ஐம்புலனும்-ஐம்புலனும்-ஒண்டொடிகண்ணே-இவ்வொளிபொருந்திய வளையையுடையவளிடத்தே-உள-உண்டாயின.(எ-று.)(கருத்து) கண்ணாற்கண்டுங் காதாற்கேட்டும் நாவாலுண்டு மூக்கான்மோந்து மெய்யாற்றீண்டியும் அநுபவிக்கப்படும் ஐம்புலன்களும் ஒள்ளியவளையல்களையுடையவளிடத்தே உள்ளன என்பதாம். ※ உம்மை, முற்றும்மை.-தேற்றேகாரம் வேறோரிடத்தில்லாமை விளங்க நின்றது.- வேறுவேறு காலங்களிலே வேறுவேறு பொருள்களாலே அநுபவிக்கப்படுகிற புலங்களெல்லாம் ஒருகாலத்தே இவளிடத்தே நின்றால் அநுபவிக்கப்பட்டன வென்பதாம். (க)

பிணிக்கு மருந்து பிறம னணியிழை .................. *
தன்னோய்க்குத் தானே மருந்து..........................*

[இது, தலைவன் ✡ இடந்தலைப்பாட்டிலே சொல்லியது.] (இ-ள்.)

---

* இயற்கைப்புணர்ச்சி-ஒருராசகுமாரன் வேட்டைக்குப் போய்மலைச்சோலையிலே விளையாடவந்து தனித்துநின்ற குறக்கன்னியைக் கண்டு கூடியது.

✡ இடந்தலைப்பாடு இரண்டாந்தடவை முன்கூடியவிடத்தே தலைவன் தலைவியைக் குறித்துச் சென்று கூடியது

பிணிக்கு - (வாதமுதலாகிய) பிணிகளுக்கு மருந்து, மருந்தாவன! பிற, (அவைகளுக்கு நிதானமானவை யல்லாமல்) விரோதமாயகுணத்தையுடையவையாம்.- (அப்படியல்லாமல்) - அணியிழை - இவ்வணியினையுடையவள்!- தன்னோய்க்கு - தன்னாலாகிய பிணிக்கு-தானேமருந்து, தானேமருந்தாயினும். (எ-று.) (கருத்து) முப்பிணிகளுக்குமருந்துகள் வேறேயுள்ளன. ஆபரணத்தையுடையவள் தன் காமநோய்க்குத்தானே மருந்தானாள் என்பதாம். ❁ இயற்கைப்புணர்ச்சியைநினைத்துமுன்வருந்தினானாகலால், தன்னோயென்றும்-அவ்வருத்தம் தணித்து வந்துநின்ற அவளைமுன்கூடியவிடத்தே சென்று எதிர்பட்டுத் தீர்ந்தானாதலால், தான்மருந்தென்றும்- சொல்லினான். இப்பிணியும் எளியவைகளால் தீரப்பெற்றில மென்பதுபட நின்றமையால், மன் ஒழியிசையிலே வந்தது. (உ-ம்.) அகப் பொருள் விளக்கம். இயற்கைப்புணர்ச்சிதெய்வத்தினெய்துழி-முயற்சியின்றி முடிவதாகும். (௨)

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்........*
றாமரைக் கண்ணா னுலகு........ ........*

[பேரின்பத்திற்குரியநீ இச்சிற்றின்பத்துக்கு இப்படிப்பட்டவனாகுதல் தகாதென்ற பாங்கனுக்குத் தலைவன்சொல்லியது.] (இ-ள்.) (ஐம்புலன்களையும் அநுபவிப்பவர்க்கு) - தாம்வீழ்வார்- தாம்விரும்புமகளிரது-மென்றோள், மெல்லியதோள்களிடத்துத் துயிலும் -துயிலின், துயில்போல்-தாமரைக்கண்ணானுலகு - (அவைகளைத்துறந்தயோகிகளால்அடையப்படுவதாகிய) கமலக்கண்ணனது உலகம் இனிதுகொல் வருந்தாமலடையக்கூடுவதோ. (எ-று.) (கருத்து) தாம்விரும்பிய பெண்களின் மெல்லியதோள்களிடத்துத் துயில்போலவிஷ்ணுவினுலகம் இன்பமாகுமோ! என்பதாம். ❁ அநுபவிப்பவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. இப்படிப்பட்டதுயிலைவிட்டுத்தவயோகங்களால் வருந்தவேண்டுதலாலே எம்போல்வார்க்கு ஆகாதென்னுங் கருத்தால் இனிதுகொலென்றான். (௩)

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்........*
தீயாண்டுப் பெற்றா ளிவள்..... ... ........*

[தலைவன் * பாங்கற்கூட்ட முடிவிலே சொல்லியது.] (இ-ள்.) நீங்கின் (தன்னை) நீங்கியபோது-தெறூஉம் - சுடாநிற்கும்-குறுகுங்கால்,நெருங்கும்போது - தண்ணென்னும்-குளிராநிற்கும்.-தீ, (இப்ப

---

* பாங்கற்கூட்டம்-மூன்றாந்தடவை தலைவன் தனதுதோழனைத் துணையாகக்கொண்டு தலைவியைக்கூடியது.

டிப்பட்டதீயை- (எனக்குத் தருவதற்கு)-யாண்டு-எவ்வுலகத்திலே -இவள்-இவள்!-பெற்றாள் - அடைந்தாள். (எ-று.) (கருத்து) தன்னை யகன்றவிடத்துச் சுடாநிற்கும், தன்னைநெருங்குமிடத்துக் குளிரா நிற்கும் இப்படிப்பட்ட தீயையிவள் எவ்வுலகத்திற்பெற்றாளோ.என்பதாம். ❋ கூடாமுன் துன்பமடைதலால், நீங்கிற்றெறூஉமென்றும் கூடியபின் இன்பமடைதலால் குறுகுங்காற் றண்ணென்னு மென்றும் இப்படிப்பட்டதீ உலகிலில்லாமையால், யாண்டுப் பெற்றாளென்றும்-சொல்லினான். (௪)

வேட்டபொழுதி னவையவை போலுமே...... ............*
தோட்டார் கதுப்பினா டோள்......... ...........*

[இது தலைவன் * பாங்கியிற்கூட்டமுடிவிலேசொல்லியது.] (இ-ள்.) (எப்பொழுது பெற்றுக்கூடினும்) தோட்டார்கதுப்பினாள்-பலராலிறைந்த கூந்தலையுடையவளது-தோள் - தோள்கள் - வேட்ட பொழுதின்-(மிகவும் இனியபொருள்களைப்பெற விரும்பியபொழுது-அவையவைபோலுமே, அவ்வப்பொருள்கள்போல்வந்து இன்பஞ்செய்யும். (எ-று.) (கருத்து) பூவையணிந்தகூந்தலை யுடையவளது தோள்கள் இச்சித்தபொழுது அவ்வப்பொருள்கள்போலுமின்பஞ்செய்வனவாம் என்பதாம். ❋ தோடு-இதழ்- அதுபூவுக்கு ஆகுதலால் ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி இடந்தலைப்பாடு - பாங்கற்கூட்டம்-இவைகளிலே முன்னமே அத்தோள்கள் அனுபவிக்கப்பட்டிருந்தும்-பின்னும் புதியவைபோலிருந்து நெஞ்சம்பிணித்தலால்அவ்வாராமைபற்றி இப்படிச்சொல்லினான். (௫)

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக் ....... ......*
கமிழ்தி னியன்றன தோள்...... ........ ........ ...*

(இதுவுமது.) இ-ள். உயிர்-(தன்னைப்பெறாதுவாடியஎன்) னுயிர்-உறுதோறு-(பெற்று) உறுந்தோறும் - தளிர்ப்ப-தளிர்க்கும்படி தீண்டலால் - தீண்டுதலால்-பேதைக்கு-இம்மங்கைக்கு-தோள்-தோள்கள்;-அமிழ்தினியன்றன, (தீண்டப்பட்ட) அமிழ்தினாலே செய்யப்பட்டன-(எ-று.) (கருத்து) என்னுயிர் தளிர்க்கும்படி தீண்டுதலால் இப்பெண்ணிற்குத்தோள்கள் அமிழ்தாற் சமைக்கப் பட்டன.என்பதாம். ❋ ஏதுவாகலால் தீண்டல் அமிழ்திற்கும் பொருந்தியது -வாடியஉயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி - அத்தோள்களை அமிழ்தினியன்றனவென்றான். தளிர்த்தல்-இன்பத்தாலேதழைத்தல். (௬)

---

* பாங்கியிற்கூட்டம்-நாலாந்தடவை தோழியைத்துணையாகக்கொண்டு கூடியது.

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்று ......................*
லம்மா வரிவை முயக்கு........ ........ ........ ........ ........*

இது நீ இவளைக் கல்யாணஞ்செய்துகொண்டு உலகோர் தம்மில் லிருந்து தமதுபங்கை உண்கிற இல்லறத்தோடு பொருந்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது. (இ-ள்.) அம்மாவரிவைமுயக்கு- அழகியமாமை நிறத்தையுடைய மாதின்புணர்ச்சியானது-(இன்பந்தருதலில்) - தம்மிலிருந்து-தமக்குரியமனையிலிருந்து தமது, (உலகோர்) தம்முயற்சியால்வந்தபொருளை -பாத்து-(தென்புலத்தார்-முதலாகிய ஐவர்க்கும்) பகுந்துகொடுத்து-உண்டற்று-(தமதுபங்கை) உண்பதுபோல் இன்பஞ்செய்கின்றது. (எ-று.) ஆல்-அசை. (கருத்து) இப்பெண்ணின் புணர்ச்சியானது தம்முயர்சியால்வந்தபொருளைத்தென்புலத்தோர் முதலைவர்க்கும்பகுத்துக்கொடுத்துத்தன் பங்கையுண்டதுபோலுமின்பஞ்செய்கின்றது என்பதாம். ✻ தொழிலுவமம். இல்லறஞ்செய்தாரடையும் சுவர்க்கவின்பத்தை எனக்கு இப்புணர்ச்சியே தருமென்று கல்யாணத்திற்கு உடன்படாதவன் சொல்லியபடியாயிற்று. மாமை பொன்னிறம். (எ)

வீழு மிருவர்க் கினிதே வளியிடை ........ ........ ........*
போழப் படாஅ முயக்கு ........ ........ ........ ........*

இது-ஒத்த அன்புடைய உமக்கு ஒரு போதும் விடாதபுணர்ச்சியே இனிதாகலால் விவாகஞ் செய்துகொள் ளென்ற தோழிக்குச் சொல்லியது. (இ-ள்.) (நீசொல்லுகின்றதுஒக்கும்) வளியிடைபோழப்படாஅ-(ஒருபொழுதும் நெகிழாமையால்) காற்றால் இடையறுக்கப்படாத-முயக்கு - புணர்ச்சியானது - வீழு மிருவர்க்கு (ஒருவரையொருவர்) விரும்புகிற இருவர்க்கும் - இனிதே-இனிதேயாகும். (எ-று.) (கருத்து) காற்றலிடையறுக்கப்படாத புணர்ச்சியானது இருவருக்குமின்பமாகும்.என்பதாம். ✻ முற்றும்மைவிகாரத்தாற்றொக்கது-ஏகாரம்-தேற்றம். இங்கே இருவரில்லாமையால் அதுஒவ்வாதென்பது கருத்து. களவுப்புணர்ச்சியை மகிழ்ந்து விவாகத்துக்கு உடன்படாதவன் சொல்லியபடி. (அ)

ஊடலுணர்தல் புணர்த லிவைகாமங் ........ ........ ........*
கூடியரா பெற்ற பயன் ........ ........ ........ ........*

இது மறைக்கவேண்டாமையால் நமிநீங்க லில்லாத புணர்ச்சியே இன்பப்பயனுடையதாகலால் விவாகஞ்செய்துகொள்ளென்றதோழிக்குச்சொல்லியது. (இ-ள்.) ஊடல், (புணர்ச்சி இனிதாதற் பொருட்டுவேண்டு) மூடலும்-உணர்தல், (அதனைஅளவறிந்து)நீங்குதலு

ம்-புணர்தல்-அதன்பின் உண்டாகின்ற) அப்புணர்ச்சியும் என்கிற இவை, இவையல்லவா-காமங்கூடியார் (விவாகஞ்செய்துகொண்டு) காமத்தை இடைவிடாதடைந்தவர் பெற்றபயன் பெற்றபயன்கள் (எ-று.) (கருத்து) ஊடலும் அதனை நீங்கலும் புணர்ச்சியும் விவாகஞ்செய்துகொண்டவர் பெற்றபலன் என்பதாம். ❋ ஆடவர்க்குப்பிரிவென்பதொன்று உண்டாவதல்லாமல் - அதுதான் பரத்தையரிடத்தாதலும் அதனை அறிந்தமகளிர் ஊடிநிற்றலும், அவ்வூடலைத் தவறுசெய்த அவர்தாமே தந்தவரில்லாமை சொல்லி நீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்தவன்பினராய்க்கூடலும், அல்லவா. முன்விவாகஞ்செய்துகொண்டு அடைந்தவர்பெற்றபயன். அப்பயன் இருதலைப்புள்ளினோருயிராகியமாருவன்புடைய எமக்குவேண்டாவென அவ்விவாகஞ்செய்து அடைதலை இகழ்ந்துசொல்லியபடி. (கூ)

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ் ........ ....... ❋
செறிதோறுஞ் சேயிழை மாட்டு......... ....... ❋

இது- தலைவியைப்புணர்ந்து உடன்கொண்டுபோகின்றதலைவன் தன்னுள்ளே சொல்லியது. (இ-ள்.) செறிதோறும், புணரப்புணர- சேயிழைமாட்டு, செய்ய ஆபரணத்தையுடைய இவளிடத்து-காமம் காதல்-அறிதோறு (நூல்களாலும் நுட்பவறிவாலும் பொருள்களை) அறியவறிய-அறியாமை, (முன்னை) யறியாமை கண்டற்று, காணப்படுதல் போலே காணப்படுகின்றது. (எ,று.) (கருத்து) இவளிடத்துப் புணரப்புணரவுண்டாமாசையானது நூலாலு மறிவாலும் பொருள்களை யறியவறிய முன்னறியாமைகண்டாற் போலக்காணப் படாநின்றது என்பதாம். ❋ களவிலேபலவிடையீடுகளால் தன்கருத்தின் படி அனுபவிக்கப்பெறாமல் வருத்தமுற்றவன் உடன்கொண்டுபோம்போது அதுதீர்தலால், செறிதோறுமென்றான். அறிவிற்கு எல்லையில்லாமையால் மேலும்மேலும் அறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுதல்போல் புணர்தற்கு எல்லையில்லாமல் மேலுமேலும் புணரப்புணர முன்னைப்புணர்வு புணராமையாய் முடிகின்றதெனத் தன்னாராமை சொல்லியபடி இப்புணர்ச்சிமகிழ்தல் தலைவியிடத்துக் குறிப்பாலல்லதுசொல்லால் நிகழாது-ஆல்-அசை. (ய)





# ௱௰௨-ஆம், அதி-நலம்புனைந்துரைத்தல்.



அஃதாவது-தலைவன் தலைவிநலத்தினை வருணித்துச் சொல்லியது- இதுபுணர்ச்சியின் மகிழ்ந்தவிடத்து நிகழ்வதாகலால் அதன் பின்வைக்கப்பட்டது. (உ-ம். அகப்பொருள்விளக்கம்.) கலந்துழி

மகிழ்தலு நலம்பாராட்டலு, மெற்புற வணிதலு மென்
றுமிம்மூன்றும், போற்றியதெய்வப் புணர்ச்
சியின்விரியே.

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு ............ *
மென்னீரள் யாம்வீழ் பவள் ............ *

இது-தலைவன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலேசொல்லியது. இ-ள். அனிச்சமே, அனிச்சப்பூவே - வாழி- வாழ்வாயாக. நன்னீரை,(மென்மையாலே நீ எல்லாப்பூவினும்) நல்லகுணமுடையை. (அப்படியிருந்தாலும்)-யாம்வீழ்பவள், எம்மால்விரும்பப்பட்டவள்- நின்னினுமென்னீரள். உன்னிலுமெல்லிய குணத்தையுடையள். (எ-று.) கருத்து. அனிச்சப்பூவே வாழ்வாயாக. நீ எல்லாப்பூவிலும் நற்குணமுடையை எம்மால் விரும்பப் பட்டவள் உன்னிலு மெல்லிய குணத்தையுடையள் என்பதாம். ❋ அனிச்சம்-ஆகுபெயர் - வாழியென்பது உடன் பாட்டுக்குறிப்பு. இனிநானே மெல்லிய குண முடையேனென்னுஞ் செருக்கையொழிவாயாக வென்பதாம், அப்பொழுது பரிசித்துஅறிந்தானாதலால், பரிசத்தினினிமையையே பாராட்டினான்.

மலர்காணின் மையாத்தி நெஞ்சேயிவள்கண் ............ *
பலர்காணும் பூவொக்கு மென்று ............ *

இது-தலைவன் இடந்தலைப்பாட்டிலே சொல்லியது. (இ-ள்.) நெஞ்சே-மனமே-இவள்கண் - (யானேகாணப்பெற்ற)இவள் கண்களை பலர்காணும் - பலராலும் காணப்படுகிற - பூவொக்குமென்று- மலர்கள் ஒக்குமென்று நினைத்து-மலர்காணின்-(தாமரை குவளை நீலமுதலாகிய) மலர்களைக்கண்டால்-மையாத்தி- மயங்காநின்றாய் உனக்கு அறிவிருந்தவிதமென்ன.(எ-று.) (கருத்து. மனமேயிவள் கண்களைப்பலரால் காணப்படும் பூ வொக்குமென்று நினைத்துத் தாமரை குவளை நீலமுதலிய மலர்களைக் கண்டால் மயங்காநின்றாய் நின்னறிவிருந்தவாறென. என்பதாம். ❋ மையாத்தல். இங்கே ஒப்பாகாத வைகளை ஒக்குமென்று கொள்ளுதல். இயற்கைப்புணர்ச்சி நீங்கியதுமுதலாகத்தலைவி கண்களைக் காணப்பெறாமையால் அவைகளோடு சிறிதொத்திருக்கிறமலர்களைக் கண்டவிடத்தெல்லாம் அவைகளிடத்து ஆசை

செய்து வந்த தலைவன் இப்பொழுது அக்கண்களின் நலமுழுதும் தானே தனியாளை இடத்தெதிர்ப்பட்டு அனுபவித்தானாகலான் அம்மலர்கள் ஒப்பாகாமைகண்டு ஒப்புமைகருதிய நெஞ்சை இகழ்ந்து சொல்லியபடி. (௨)

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்.................*
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு ...... ...........*

இது கூட்டுதலுற்ற பாங்கனுக்குத் தலைவன் தலைவியினியல்பு சொல்லியது. (இ-ள்.) வேய்த்தோளவட்கு-மூங்கில்போலுந்தோள்களையுடையவளுக்கு-மேனி-நிறம்-முறி-தளிர்நிறமாயிருக்கும் - முறுவல்-பல்லானது-முத்தம் - முத்தாயிருக்கும் நாற்றம் - இயற்கைவாசனையானது - வெறி - நல்லவாசனையாயிருக்கும். உண்கண்-(மை)யுண்டகண்கள்-வேல் - வேல்களாயிருக்கும். (எ-று.) (கருத்து) மூங்கில்போலுந்தோள்களை யுடையவளுக்குமேனி தளிர்பல்முத்தம் கண்கள்வேல் கள்போலும். என்பதாம். ❊ முறிமுறுவல், ஆகுபெயர். உருவகவகையாலே சொல்லினமையால, புணர்ந்துரையாயிற்று. உன்னாலே நினைக்கப்பட்டவளை அறியேனென்று தூரப்படுத்திய தோழிக்குத் தலைவன் சொல்லியதாம். (௩)

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு.............. .........*
மாணிழை கண்ணொவ்வே மென்று ........ .............. *

இது பாங்கற் கூட்டத்திலே சென்றுசார்தலுறுந் தலைவன் சொல்லியது. (இ-ள்.) குவளை-குவளைமலர்கள்காணின் - பார்க்கிற தொழிலையுடையவையாயிருந்தால்- மாணிழைகண் - மாட்சிமைப் பட்டஆபரணங்களையுடையவளது கண்களை - ஒவ்வேமென்று - நிகரேமென்று நினைத்து-கவிழ்ந்து- (அந்நாணத்தினாலே) தலைகுனிந்து- நிலன்-நிலத்தை-நோக்கும்- பார்க்கும். (எ-று.) (கருத்து) குவளை மலர்கள் பார்க்கில் இவள் கண்ணினிற்கொப்பாகேமென்று கவிழ்ந்து நிலத்தைப்பார்க்கும் என்பதாம். ❊ நிறத்தாலேயன்றி, தொழிலானும் ஒவ்வாதென்றற்கு, காணினென்றும்-கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடையவாமென்பதும் தோன்ற,'கவிழ்ந்'தென்றும்-சொல்லினான். காணலும் நாணலும் இல்லாமையால் இறுமாந்து ஆகாயத்தைநோக்கினவென்பதாம். (௪)

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாணுசுப்பிற்கு......*
நல்ல படாஅ பறை ............... ................................ *

இது-தலைவன்*பகற்குறியிலேபூவணிகண்டுசொல்லியது. (இ-ள்.)

* பகற்குறி-பகலிலே ஓரிடம் குறிவைத்து வந்து கூடல்.

(இவள் தன்மென்மை நினையாமல்) அனிச்சப்பூ - அனிச்சமலரை கால்களையாள்- தாள்களையாளாகி-பெய்தாள்-சூடினாள் - நுசுப்பிற்கு (இனியிவ)ளிடைக்கு-நல்ல- நல்லவையாகிய- பறை - பறைகள்படா அ,ஒலியா.(எ- று.) (கருத்து) இவள் தன்மென்மை நினையாமல் அனிச்சமலரைக் காம்புகளையாளாகிச் சூடினாளாகையா லிடை முரியும். என்பதாம், ❋ இம்மலர்த்தாளின் பாரம் பொறாமையால் இடைமுறியும் முறிந்தால் அதற்குச் செத்தவர்க்கு உரியநெய்தற் பறையே ஒலிக்கும் என்பதாம். மனிதர்க்கு உரியசாவும் பறையொலித்தலும் குறிப்பால் இடையின்மேல் ஏற்றப்பட்டன. ஒலியா-ஒலிக்கும். (௫)

மதியு மடந்தை முகனு மறியா...... *
பதியிற் கலங்கிய மீன்...... *

இது-* இரவுக்குறியிலே தலைவன் சந்திரனைக்கண்டு சொல்லியது.] இ-ள். மீன்.தாரகைகள்; (வேறுபாடு பெரிதாயிருக்கவும்) மதியும், (தமது) சந்திரனையும்-மடந்தைமுகனும், (எமது) மாதுமுகத்தையும்- அறியா,இது சந்திரன் இதுமுகமென்று) அறியமாட்டாமல்- பதியின், (தம்) நிலையினின்றும்- கலங்கிய- கலங்கித்திரியாநின்றன. (எ,று.) (கருத்து) வானத்துமீன்கள் வேறுபாடு பெரிதாகவும் தம்மதியினையு மெம்மடந்தை முகத்தினையுமிதுமதியிது முகமென்றறியமாட்டாது தன்னிலையினின்று கலங்கித்திரியா நின்றன. என்பதாம். ❋ ஓரிடத்து நில்லாமல் எப்போதும் உலாவுதல் பற்றி, பதியிற்கலங்கியவென்றான். வேறுபாடு பின்பாட்டிற்சொல்லப்படும். (௬)

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல...... *
மறுவுண்டோ மாதர் முகத்து...... *

இதுவுமது. (இ-ள்.) (அத்தாரகைகள் அப்படிக்கலங்குதற்குக்காரணம்யாது) அறுவாய்நிறைந்த - முன்குறைந்தவிடம் வந்துநிறைந்த-அவிர்- விளங்குகிற - மதிக்குப்போல - சந்திரனிடத்துப்போல- மாதர்முகத்து-இம்மாதர் முகத்தினிடத்து - மறு - களங்கமானது உண்டோ-உண்டோ. (எ-று.) (கருத்து) அம்மீன்களிங்ஙனங் கலங்குதற்குக்காரணம் யாது முன்குறைந்தவிடம் வந்துநிரம்பியே விளங்குமதிக்கண்போல இம்மாதர் முகத்துமறுவுண்டோ.என்பதாம். ❋ தேய்ந்துவளர்தலும்- களங்கமும்-இல்லாமைபற்றி,வேறுபாடு அறியலாயிருக்க அறிந்திலவென்று இகழ்ந்துசொல்லியபடி.] (௭)

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்...... *
காதலை வாழி மதி...... *

* இரவுக்குறி இரவிலேதலைவிமனையருகுள் வந்துகூடல்.

இதுவமது. (இ-ள்.) மதி-சந்திரனே-வாழி-வாழ்வாயாக-மாதர்முகம்போல் பெண்கள்முகம்போல-ஒளிவிட வல்லையேல்-(நானிங்கிழும்படி)ஒளிவீசவல்லாயாகில்-காதலை-(நீயுப்ள்ளன்ஞல்)இச்சிக்கப்படுதலையுடையையாவாய். (எ-று.) கருத்து. சந்திரனேவாழ்வாயாகபெண்கள்முகம்போல ஒளிவீசவல்லாயாகில் நீயுமென்னு விச்சிக்கப்படுதலையுடையையாவாய். என்பதாம். ✽ மறு,உன்னிடத்திருத்தலால்அது மாட்டாய் மாட்டாமையால் என்னுல்இச்சிக்கவும்படாயென்பதாம். வாழி, இகழ்ச்சிக்குறிப்பு. (அ)

மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற் .................... ✽

பலர்காணத் தோன்றன் மதி .............................. ✽

இதுவுமது. (இ-ள்.) மதி-சந்திரனே - மலரன்னகண்ணாள்-இம்மலர்போலுங் கண்களையுடையவளது-முகம்-முகத்தை- ஒத்தியாயின்-ஒக்கவேண்டுவையாகில் - (இதுபோல்யான்காணத்தோன்று) பலர்காணத்தோன்றல்-பலர்காணத்தோன்றுமதே. (எ-று) (கருத்து) சந்திரனேமலர்போலுங் கண்களையுடையவள் முகத்தையொக்க வேண்டுவையாகில் இதுபோல யான்காணத்தோன்று பலர்காணத் தோன்றுதொழி. என்பதாம். ✽ தானேமுகத்தி னலமுழுதும்கண்டு அனுபவித்தானுகலா லிங்கேயும் பலர்காணத் தோன்றலை இழிவுபடுத்துச் சொல்லினான். பலர்காணத்தோன்றில் உனக்கு அம்முகத்தோடு ஒப்புஉண்டாகா தென்பதாம். (கூ)

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத் ...................... ✽

ரடிக்கு நெருஞ்சிப் பழம் ............................... ✽

இது-✽உடன் போக்குச்சொன்ன தோழிக்குத் தலைவன் அதனருமையைச்சொல்லி மறுத்தது.(இ-ள்.) (உலகத்தாரால்மென்மைக்கு எடுக்கப்பட்ட)-அனிச்சமும்,அனிச்சமலரும் - அன்னத்தின் றூவியும்,அன்னப்பறவையினிறகும்-மாதரடிக்கு,மாதர்களடிக்கு, நெருஞ்சிப்பழம்நெருஞ்சிப்பழம்போல்வருத்தஞ்செய்யும்எ-று.(கருத்து.)அனிச்சமலரும் அன்னப்பறவையினிறகும்மாதர்களடிக்குநெருஞ்சிப்பழம்போல்வருத்தஞ்செய்யும்.என்பதாம். ✽ முள்வலிதாதலால்பழமென்றார். இப்படிப்பட்டஅடிகள்கூர்ங்கல்லும்வெப்பமுமுள்ள பாலைவழியைஎப்படிக்கடப்பாளென்பதுகுறிப்பாலே பெறப்பட்டது.செம்பொருளேயன்றிக்குறிப்புப் பொருளும்அடி நலனழியாமையாகலின் இதுவும் இவ்வதிகாரத்ததாயது. (ய)



---

✽உடன்போக்குதலைவன் விட்டாரறியாமல்தலைவனுடன்செல்லுதல்



# ௱௰௩-ஆம்-அதி-காதற்சிறப்புரைத்தல்,



அஃதாவது-தலைவன்றன்னாசைமிகுதியைச்சொல்லலும், தலைவிதன்னாசைமிகுதியைச்சொல்லலும் ஆம். இதுபுணர்ச்சியும்நலனும்பற்றிநிகழ்கின்றதாகலால் அவற்றினதிகாரங்களின்பின்வைக்கப்பட்டது.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி................ *
வாலெயி றூறிய நீர்........................................ *

இது - தலைவன் இயற்கைப் புணர்ச்சி முடிவிலே தன்னயப்பை அறிவித்தது. (இ-ள்.) பணிமொழி- இம்மெல்லியசொல்லையுடையவளது-வாலெயிறூறியநீர்- வெண்பல்லி லூறிய நீரானது - பாலொடு தேன்கலந்தற்றே - பாலுடனே தேனைக்கலந்த கலவைப்போலும்- (எ-று,) (கருத்து) இம்மெல்லிய மொழியினை யுடையாளது வாலிய பற்களிலூறிய நீரானதுபாலுடனே தேனைக்கலந்தகலவைபோலும். என்பதாம். ※ பாலொடுதேனென்றதனால் - அதன்சுவைபோலுஞ்சுவையுடைத்தென்பதாயிற்று. வேறுவேறறியப்பட்ட சுவையையுடையபாலும் தேனும் கலந்தவிடத்து அக்கலவை இன்னதென்றுஅறியக்கூடாதஇனியசுவையையுடையதாமாகலால்- அச்சுவை நீர்க்குமடைவிக்க] (௧)

உடம்பொ டுயிரிடை யென்ன மற்றன்ன........................ *
மடந்தையொ டெம்மிடை நட்பு.................................. *

இது-தலைவன் பிரிவிலுண்டாகிய அச்சத்தைச் சொல்லியது. (இ-ள்.)மடந்தையொடெம்மிடை-இம்மாதோடெம்மிடத்துஉண்டாகிய-நட்பு-நட்புக்கள்-உடம்பொடுயிரிடை - உடம்போடு உயிரிடத்து-என்ன-எப்படிப்பட்டவை-அன்ன - அப்படிப்பட்டவையாகும். (எ-று.) (கருத்து) உடம்போடு உயிரிடையுளவாகிய நட்புக்களெத்தன்மையவோ அத்தன்மையவே இம்மடந்தையோடு எம்மிடையுளவாகிய நட்புக்கள். என்பதாம். ※ எப்படிப் பட்டவையெனப்பன்மையாற் சொல்லியது. இருவகைநட்புக்களும் ஆதிதொடங்கி வேறுபாடில்லாமல் கலந்துவருதல் இன்பத்துன்பங்களை ஒக்கஅனுபவித்தல். அவசியம் வேண்டுதல் என்றிவைகளைநோக்கி- ஊழினாலேகூட்டப்பட்டபுணர்ச்சியாகலால் அப்பொழுது உணர்ச்சி யில்லாதிருந்தவள் பின்னே உடையளாமென்றே ஆகியவிடத்தே இவன் எவனோவென்றும் என்னிடத்தே அன்புடையனோவென்றும், பின்னும்இ

வனைக் கலத்தல் கூடுமோவென்றும் அவளுள்ளத்தே தோன்றும் அவ்வகுறிப்பால் அறிந்து அன்வதிரச்சொல்லியபடி. மற்று-அசை. (௨)

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந் ...............*
திருநுதற் கில்லை யிடம்..... ............ ......... ...........;............*

இது-இடந்தலைப்பாட்டிலே தலைவிநீங்கும்போது தலைவன்சொல்லியது. (இ-ள்.) கருமணியிற்பாவாய்- (என்கண்ணிற்) கருமணியிலிருக்கின்றபாவையே-நீ- நீ - போதாய் - (அவ்விடம்விட்டுப்போவாயாக- (போகா திருப்பாயாகில்) யாம்வீழும், எம்மால் விரும்பப்படுகின்ற-திருநுதற்கு, அழகியநெற்றியையுடையவளுக்கு - இடம்,இடம் - இல்லை-இல்லை. (எ,று.) (கருத்து) என்கண்ணிற் கருமணியினிடத்துறையும்பாவையே- நீ-அவ்விடம்விட்டுப்போவாயாக. போகாதிருப்பாயாகில் எம்மால்விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு இருக்கவிடமில்லையாம். என்பதாம். ※ நான்காணுமல் இருக்கமாட்டாமையால்இவள்புறத்துப்போந் தன்மையளல்லாமல் என்கண்ணுள் இருக்குந்தன்மையள் இருக்கும்போது உன்னோடு கூடியிருக்க இடம்போதாமையால் உன்னினுஞ்சிறந்த இவளுக்கு அவ்விடத்தைக்கொடுத்து நீபோய்விடுவயாக வென்பதாம்.] (௩)

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத..... ......... ..........*
லதற்கன்ன ணீங்கு மிடத்து............................*

இது-பகற்குறியிலே புணர்ந்து நீங்குந் தலைவன்சொல்லியது. (இ-ள்.) (எனக்கு) ஆயிழை-ஆராய்ந்து கொள்ளப்பட்ட ஆபரணத்தையுடையவள்-(புணருமிடத்து) உயிர்க்கு-உயிருக்கு - வாழ்தலன்னள்-(உடம்போடுகூடி) வாழ்தல்போலாகின்றாள்-நீங்குமிடத்து-பிரியுமிடத்து-அதற்கு- அவ்வுயிர்க்கு - சாதலன்னள் - அவ்வுடம்பினீங்கிப்போதல் போலாகின்றாள். (எ-று.) (கருத்து) தெரிந்தவாபரணத்தையுடையாள் எனக்குப்புணருமிடத் துயிர்க்குடம்போடுகூடி வாழ்தல் போலும், பிரியுமிடத்து அவ்வுடம்பினின்றுயிர் பிரிதல் போலும். என்பதாம். ※ எனக்கென்பதும், புணருமிடத்தென்பதும், அவாய்நிலையால்வந்தன. வாழுங்காலத்து வேறுபாடில்லாமல்வழிநிற்றலாலும், சாங்காலத்துவருத்தஞ் செய்தலாலும் அவைகளை அவள்புணர்வு பிரிவுகளுக்கு உவமையாக்கினான். (௪)

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே.....,.........*
னொள்ளமர்க் கண்ணாள் குணம்..... ......... ......................*

இது- * ஒருவழித் தணந்துவந்தபோது எம்மைநினைத்து மறிவிரோவென்ற தோழிக்குத்தலைவன்சொல்லியது. (இ-ள்.) யான்-நான்-

ஒள்ளமர்க்கண்ணாள் குணம்- ஒளியினவாகிப் போர்செய்கிற கண்களையுடையவளது குணங்களை-மறப்பின்- மறந்தேனாயின் - உள்ளுவன்-நினைப்பேன்-மறப்பறியேன்-(ஒருபோதும்)மறத்தலறியேன். [ஆகலால்நினைத்தலு மறியேன். (எ-று.)(கருத்து) ஒள்ளியவாய் போர்செய்யுங்கண்களினை யுடையாள் குணங்களை நான்மறந்தேனாயின் நினைப்பேன் ஒருபொழுதுமறத்தலையறியேனாகலால்நினைத்தலையுமறியேன்.என்பதாம். ※ நினைத்தலு மறியேனென்னும் பொருள்கொள்ள நிற்கையால் மன் ஒழிபிசையில்வந்தது. இதுவரைக்கும் தலைவன் சொல்லியது பின் தலைவிசொல்வது.] (௫)

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார் ........ ........ *
நுண்ணிய ரெங்காதலவர் ........................ *

இது- ※ஒருவழித்தணத்தலில்தலைவனைத்தோழிஇயற்பழிப்பாளென்று அஞ்சி அவள் கேட்கத் தலைவி தன்னுள்ளே சொல்லியது. (இ-ள்.) (தாம் காணாமை பற்றித் தூரத்திலே போயினாரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர்.)எங்காதலவர்- எம்முடையதலைவர்-கண்ணுள்ளில்-(எமது கண்ணுள்ளேநின்றும்)போகார் போகார்-இமைப்பின்-(அறியாமல்)இமைத்தேமாயின் பருவரார்- (அதனால்) வருந்துவதுஞ்செய்யார்- (ஆகலாலே)நுண்ணியர் - (காணப்படாத)நுண்ணியர். (எ-று) (கருத்து) தாங்காணாமைபற்றித் தூரத்திற்போயினாரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர் எம்முடைய நாயகர் எங்கண்ணுள்ளேநின்றும்போகார் நாமறியாமலிமைத்தோமாகில் அதனால் வருந்துவதுஞ்செய்யார் ஆதலாற் காணப்படார், நுண்ணியர். என்பதாம். ※ இடைவிடாத நினைவின் முதிர்ச்சியால் எப்போதும்முன்னேதோன்றலால் கண்ணுள்ளிற்போகாரென்றும், இமைத்தபோதும் அதுநிற்றலால்- இமைப்பிற் பருவராரென்றும், சொல்லினாள். (௬)

கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணு ........ .... ........ *
மெழுதேங் கரப்பாக் கறிந்து........................ *

இதுவுமது. (இ-ள்.) காதலவர்-எம்மேலாசையுள்ளதலைவர் - கண்ணுள்ளாராக-(எங்) கண்ணுள் இருக்கின்றாராகலால் - கண்ணுமெழுதேம்-கண்ணினை (மையினால்) எழுதுவதுஞ்செய்யேம்- கரப்பாக்கறிந்து-(அவ்வளவுகாலமும்அவர்) மறைதலையறிந்து.(எ-று)(கருத்து) எம்முடைய நாயகர் எங்கண்ணுள் ளிருக்கின்றாராகலால் கண்ணின்

---

※ ஒருவழி தணத்தல் தலைவன் யாதேனுமொருகாரியங் குறித்துப் பிரிதல்.

மையெழுதேம். அவர்மறைதலையறிந்து. என்பதாம். ❁ எம்மால் இடைவிடாமற் காணப்படுகின்றவரைப் பிரிந்தாரென்று நினைக்கும்விதம் என்னவென்பது குறிப்பெச்சம். (எ)

நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல் ....................... *
லஞ்சுதும் வேபாக் கறிந்து ..... ..... ................. ..... .. *

இதுவுமது.(இ-ள்.)காதலவர்-எமதுதலைவர்-நெஞ்சத்தாராக-நெஞ்சுளிருக்கின்றாராதலால் (உண்ணும்போது) வெய்துண்டல் - சூடுள்ளதாக உண்ணுதற்கு-அஞ்சுதும்-அஞ்சாநின்றேம்-வேபாக்கறிந்து-(அவர் அதனாலே சூடுறுதலை அறிந்து.(எ-று.) (கருத்து) எம்முடையநாயகர் நெஞ்சுள்ளிருக்கின்றாராகையாற் உண்ணும்போதுவெய்தாக உண்டலையஞ்சுவோம். அவர்அதனால் வெய்துறுதலை யறிந்து. என்பதாம். ❁ எப்பொழுதும் என்னெஞ்சிலிருக்கிறவரைப்பிரிந்தாரென்றுநினைக்கும் விதம் என்னென்பது குறிப்பெச்சம். (அ)

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே ..................... *
யேதில ரென்னு மிவ்வூர் ................................ ..... . *

இது- * வரைவிடைவைத்துப் பொருள் வயிற்கட்பிரிந்தவிடத்துத்தலைவி பொறுத்திறத்தற் பொருட்டுத்தோழி தலைவனை இயற்பழித்தவிடத்தே அவள் இயற்படச்சொல்லியது. (இ-ள்) இமைப்பின்-(என்கண்) இமைக்குமாயின்-கரப்பாக்கறிவல்-(உள்ளிருக்கிறகாதலர்) மறைதலறிந்துஇமையேன்- அனைத்திற்கே-அவ்வளவுக்கே-இவ்வூர்-இவ்வூர்—ஏதிலரென்னும் - (தூங்காதநோய்செய்தார்) அன்பிலரென்னும்.(எ,று) (கருத்து) என்கண்ணிமைக்குமானால்உள்ளிருக்கின்றகாதலர் மறைதலையறிந்து இமையேன் அவ்வளவிற்கவரைத்துயிலா நோய்செய்தா ரன்பிலரென்று சொல்லாநிற்கு மிவ்வூர்.என்பதாம்.❁ தன்கருத் தறியாமைபற்றிக் கோபித்துச் சொல்லலால் தோழியையவேறுபடுத்தி ஊடினாள். ஒருபோதும்பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்குந்தன்மையையல்லையென்பதாம். (௯)

உவந் துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ.... ... *
ரேதில ரென்னு மிவ்வூர் ................................ ...... *

இதுவுமது. (இ-ள்.) (காதலர்)உள்ளத்துள்-மனதுள் - என்றும்-எப்பொழுதும்-உவந்து-மகிழ்ந்து-உறைவர் - வாசஞ் செய்யாநிற்பர்-(அதனையறியாமல்)-இவ்வூர்- இவ்வூர் - இகந்துறைவர், பிரிந்திராநின்றார்-ஏதிலரென்னும்- அன்பிலரென்று (அவரைச்) சொல்லுகி

---

* வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் கல்யாணத்துக்குப் பொருள் சம்பாதிக்கப் பிரிதல்.

ன்றது. (எ-று.) (கருத்து) காதலர் எப்பொழுதும் என்னுள்ளத்துள்ளே மகிழ்ந்துவாசஞ்செய்யாநிற்பர். அதனையறியாதவரைப்பிரிந்துவாசஞ்செய்யாநின்றார். அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர். என்பதாம். ✲ உவந்துறைவ ரென்றதனால் அன்புடைமை கூறினாள். பிரியாமையும் அன்பும் உடையவரை இலரென்று பழிக்குந்தன்மையை யல்லவென்பதாம். (௰)



# ௱௰௪-ஆம்,அதி-நாணுத்துறவுரைத்தல்.



அஃதாவது- தூரப்படுத்தப்பட்டுப் பொறுதவனாகியதலைமகனும் ✲ அறத்தொடு நிற்பிக்கத்தொடங்கிய தலைவியும், தமது நாணமிழத் தலைச்சொல்லுதலாம் இது காதல்மிகுந்த விடத்துநிகழ்வதாகலால் காதற் சிறப்புரைத்தலின் பின்வைக்கப் பட்டது.

காமமுழந்து வருந்தினார்க் கேம. ...................................*
மடலல்ல தில்லை வலி.... ............................................*

தூரப்படுத்தப்பட்டுப் பொறுதவனாகிய தலைவன்சொல்லியது.

(இ-ள்.)காமமுழந்து-(அரியமகளிரோடு)காமத்தை அனுபவித்து-(பின் அதுபெறுமல்)-வருந்தினார்க்கு- துன்பமடைந்தஆடவர்க்கு-ஏமமடலல்லது-(முன்னும்)காப்பாய்வருகின்ற✲ மடன்மாவல்லது வலி-வலியது-இல்லை-(இனி எனக்கு)இல்லை. (எ-று.)(கருத்து) அரியமகளிரோடுகாமத்தை அநுபவித்துப்பின்னதுபெறாது துன்பமடைந்தஆடவர்க்கு முன்னுங்காப்பாய் வருகின்றமடலல்லது இனிவலியதில்லை.என்பதாம். ✲ஏமமாதல்,அத்துன்பநீங்கும்வகை அவ்வனுபவத்தைக் கொடுத்தல். வலி,ஆகுபெயர்.முன்னும்ஆடவராயினார் இன்பமடைந்து வருகிறவழியிருக்கவும் உன்னை அதற்குத் துணையென்றுநினைத்து வீணாக முயன்றநான் இப்போது துணையல்லாமை அறிந்தேனாகலால் இனியாயினும் அவ்வழியால் அதனைஅடைவேனென்பதுகருத்து. (௧)

நோனா வுடம்பு முயிரு மடலேறு.......................*
நாணினை நீக்கி நிறுத்து ..................... *

இது-நாணமுடைய உமக்கு மடன்மாவேறுகைமுடியாதென முதனை விலக்கலுற்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.( இ-ள். )

---

✲ மடன்மா-பனைமடலாலே செய்யப்பட்ட குதிரை.

நோனா-(அவ்வருத்தத்தைப்)பொறாத - உடம்பமுயிரும் - உடலும் உயிரும்-மடலேறும் - (அதற்குச்சாலப்பாகியமடன்மாவை) ஏறநினையாநின்றன. நாணினை - (அதனைவிலக்குவதாகிய)நாணத்தை நீக்கிநிறுத்து-ஒழித்துவிட்டு. (எ-று) (கருத்து)அவ்வருத்தத்தினைப் பொறாத உடம்புமுயிரும் அதற்குச்சாலவாகியமடன்மாவினை யூரக்கருதாநின்றன. அதனை விலக்குவதாய் நாணினையகற்றி. என்பதாம். ❁ அறிவுறுகலானவை முன்னே நீங்கவும்நாணநீங்காது நின்றது. அதுவும் இப்பொழுது நீங்கிற்றென்றற்கு, உடம்பமுயிருமென்றாள். அவைதாந்தம்முள் நீங்காமைப்பொருட்டு மடலேறுமென்றது, அவள் தம்பொருமையறிந்து கடிதிலே உடன்படுதல்குறித்து. (௨)

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்-
காமுற்றா ரேறு மடல்...............................*

இது நாணமேயன்றி நல்லாண்மையும் உடைமையால் மடலேறுகை முடியாதென்ற தோழிக்குச்சொல்லியது. (இ-ள்.) நாணொடு நல்லாண்மை, நாணத்தையும் மிகுந்தஆண்மையையும்-பண்டு முன்னே உடையேன், உடையேனும்-(அவைகாமத்தால் நீங்குதலால்) காமுற்றாரேறுமடல், காமமிகுந்தவரேறுமடலை - இன்று, இப்போது உடையேன், உடையேன். (எ-று.) (கருத்து) நாணத்தையுமாண்மையையுமுன்னமே யுடையேன் அவைகாமத்தால் நீங்குதலால்காமமிக்காரேறு மடலினையுடையேன் என்பதாம். ❁ நாண், இழிவானவைசெய்யுமிடத்து விலக்குவது. ஆண்மை - ஒன்றற்குந்தளராதநிற்றல். அவைமுன்னுள்ளன. இன்றுள்ளதுஇதுவேயாகலால், கடிதிலேமுடியு மென்றபடி. (௩)

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு.................... ..........*
நல்லாண்மை யென்னும் புணை.........................*

[இ-ள்-நாணமும் நல்லாண்மையும்காமவெள்ளத்திற்குப் புணையாதலால அதனுள் அவைநீங்குவன வல்லவென்றதோழிக்குத் தலைவன் சொல்லியது.] (இ-ள்.) (நான் தன்னைக்கடத்தற்குக் கொண்ட) நாணொடு நல்லாண்மையென்னும்புணை, நாணமும் நல்லாண்மையுமாகியபுணைகளை-காமக்கடும்புனல் - காமமாகியகடியவெள்ளமானது-உய்க்குமே, (என்னிற்பிரித்துக்)கொண்டுபோகின்றது. (எ-று.)(கருத்து) நாணமும் ஆண்மையுமாகிய புணைகளைக்காமவெள்ளமானது கொண்டுபோகின்றது என்பதாம். ❁ அவை செய்ய மாட்டாத மற்றை நீரினீக்குதற்கு, கடும்புனலென்றான். இந்நீர்க்கு அவைபுணையாகா அதனுல் அவை நீங்குமென்பதாம். (௪)

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு.........*
மாலை யுழக்குந் துயர்...............................*

[இது - இப்பொறுக்கமாட்டாமையும்-மடலும் உமக்கு எப்படி வந்ததுவென்ற தோழிக்குத்தலைவன்சொல்லியது.] (இ-ள்.) மாலையுழக்குந்துயர்-மாலைக்காலத்து அனுபவிக்குந் துன்பத்தையும்-மடலொடு- அதற்கு மருந்தாகிய) மடன்மாவையும்- (முன் அறியேன்) தொடலைக்குறுந்தொடி -மாலைபோல் தொடர்ந்தசிறிய வளையலையுடையவள்-தந்தாள்- (இப்பொழுது எனக்குத்தந்தாள். (எ-று.) (கருத்து) மாலைப்பொழுதினிடத்து அநுபவிக்குந் துன்பத்தையும்-அதற்குமருநதாகியமடலினையும், முன்னறியேன் இப்பொழுதெனக்கு வளையலையுடையவள் தந்தாள் என்பதாம். ❊ காமம், மற்றைப்பொழுதுகளிலும் உண்டாயினும் மாலையிலே மலர்தலால், மாலையுழக்குந் துயரென்றும்-மடலும் அது பற்றிவந்த தாகலால் அவ்விரிவும் அவளாலே தரப்பட்டவென்று - அவள்தான்நீசொல்லியதே செல்லுகிற இளமையினளென்பது தோன்ற, தொடலைக்குறுந் தொடியென்றும், சொன்னான். இவைஅவள்தந்தவையாகலால் உன்னால் நீங்குமென்பது கருத்து. (௫)

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற.................*
படலொல்லா பேதைக்கென் கண்........................*

[இது-மடலூறும்பொழுது இன்றைக்கும் கழித்ததென்றதோழிக்குத்தலைவன் சொல்லியது.] (இ-ள்.) பேதைக்கு, (உன்மாதுகாரணமாக) என்கண், எனதுகண்கள் ! படலொல்லா-(ஒருபோதும்) தூங்குதல் பொருந்தாவாம். (அதனால்) யாமத்தும், (எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும்- மன்றமடலூர்தல், மடன்மாவேறலையே - உள்ளுவேன், நினைப்பேன். (எ-று.) (கருத்து) உன்மாதுகாரணமாகவென் கண்கள் ஒருபோது நித்திரைசெய்யாவாய். அதனால் யாவரு நித்திரைசெய்யும் பாதியிராத்திரியில் மடன்மாவேறுதலை நினைப்பேன் என்பதாம். ❊ பேதையென்றது-மடமைபற்றி-இனிக்குறை முடிப்பது நாளையெனல்வேண்டா வென்பதாம்.] (௬)

கடலன்ன காம முழந்து மடலேறாப் ........ .... .........*
பெண்ணிற் பெருந்தக்க தில்..................................*

[இது - முன்பாட்டிலே பேதையென்றது பற்றி அறிவில்லாதமகளிரினும் அறிவுடைய ஆடவரன்றே பொறுக்கத்தக்கவொன்றதோழிக்குத்தலைவன்சொல்லியது.] (இ-ள்.)கடலன்னகாமமுழந்தும்-கடல்போற் கரையற்ற காமநோயை அனுபவித்தும்- மடலேறா-மடன்

மாவேளுமல் (பொறுத்திருக்கிற) பெண்ணின் பெண் (பிறப்புப்) போல்- பெருந்தக்கது, மிகுந்ததகுதியையுடையபிறப்பு இல்- (உலகத்தில்) இல்லை. (எ-று.) (கருத்து) கடல்போலக்கரையற்ற காமநோயினை அனுபவித்து மடலேறுதலைச்செய்யாதிருக்கிற பெண் பிறப்புப்போலத் தக்கபிறப்புலகத்திலில்லை என்பதாம். ※ பிறப்பிவ்வேடத்தால் அவ்வடக்கம் எனக்கு இல்லையாகின்றது. நீ அந்த அறிகின்றிலை யென்பதாம். இதுவரைக்குந் தலைவன்சொல்லியது. பின்னே தலைவிசொல்வது. (எ)

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம ........ ........ ※
மறையிறந்து மன்று படும். ... ...... ..... ............. ※

[இது-காமப்பசியால் அறிக்கப்பட்டுக் காமம்பெருகியபோது தலைவிசொல்லியது.] (இ-ள்.) (இவர்) நிறையரிய(ரென்னாது (நிறையால் (நாம்மேற்கொள்ளுதற்கு) அரியமொன்று அஞ்சாமலும்-மன்னளிய ரென்னாது, மிகவும் அளிக்கத்தக்கவரொன்று இரங்காமலும்- காமம், (மகளிரது) காமமும் - மறைபிறந்து, (அவர்)மறைத்தலைக்கடந்து- மன்றுபடும், சபையிடத்துவெளிப்படுவதாயிருந்தது. (எ-று.) (கருத்து) இவர் நிறையால்நாமேற்கொள்ளுதற்கு அரியமொன் றஞ்சுதல் செய்யாது மிகவுமளிக்கத்தக்கா ரென்றிரங்குதல்செய்யாது மகளிர் காமமும் அவர்மறைதலைக்கடந்துசவையிடத்து வெளிப்படு மாயிருந்தது என்பதாம். ※என்னுதென்பது முன்னுங்கூட்டி, மகளிரென்பது-வருவிக்கப்பட்டது. இங்கே மன்றென்றது, தந்தைமுதலாகிய தன் குடும்பத்தார் கூட்டத்தை. உலகத்துப்பெண்களது காமத் தியல்பு சொல்லுவாள்போல்தன் காமம்பெருகியபடிசொல்லி இனி அறத்தோடுநிற்றல் வேண்டுமென்பது குறிப்பித்தபடியாயிற்று.] (அ)

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம .... .... ....... ※
மறுகின் மறுகு மருண்டு .... ... ........... ......... ※

[இதவுமது.] இ-ள். (நான்முன் அடங்கியிருக்கையால்) எல்லாரும், யாவரும்-அறிகிலாரென்று, (என்னை) அறிந்திலர்- (இனி அப்படி அடங்கியிராமல் தானேவெளிப்பட்டு அறிவிப்பே)னென்று நினைத்து-என்காமம்-எனதுகாமமானது. மறுகில்,) இவ்வூர்வீதியில்- மருண்டு, மயங்கி-மறுகும், சுழல்கின்றது. (எ-று.) (கருத்து) யான்முன்னடங்கிநிற்றலால் எல்லாரும் என்னையறிந்திலர். இனியவ்வாறு நில்லாது தானேவெளிப்பட்டு அறிவிப்பேனென்று நினைத்து என்காமம் இவ்வூர்வீதியில் மயங்கிச்சுழல்கின்றது என்பதாம். ※ மயங்குதல் ※ அம்பலாதல். மறுகுதல் ☆ அலராதல் இவ்விரண்டுமாயிற்று.

---

※ அம்பல்-சிலரறிந்துதம்மிற்பேசல். ☆ அலர்-பலரறிந்துதூற்றல்.

இனி ※ அறத்தோடு நிற்றல்வேண்டுமென்பதாம். (௯)

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்............... ※
யாம்பட்ட தாம்படா வாறு ........................ ※

[இது- ※ செவிலிக்கு அறத்தோடு நின்றுவைத்து நான்நிற்கும் விதம் என்னென்று நகைசெய்ததோழியோடுபுலந்துதலைவிதன்னுள்ளே சொல்லியது.] (இ-ள்.) யாம்,நாம்-கண்ணிற்காண- (கேட்கும்படியுமன்றிக்) கண்ணாற்காணும்படி - அறிவில்லார், புத்தியில்லாதவர்-நகுப, (எம்மைச்) சிரிக்கின்றார்- (அவர் அப்படிச் செய்கின்றது) யாமபட்ட, யாம் அடைந்தநோய்களை-தாம்படாவாறு-தாம்அடையாமையால். (எ-று.) (கருத்து) நாம்கேட்கும்படியல்லாமல் கண்ணாற்காணும்படி எம்மை அறிவில்லார் சிரிக்கின்றார். அவ ரங்ஙனஞ் செய்கின்றது நாமடைந்த நோயைத் தாமடையாமையால் என்பதாம். ※ கண்ணினென்றது, முன்கண்டறியாமையுணர நின்றது.அறத்தொடு நின்றமை யறியாமல் மணஞ்செய்யுமாட்கிமைப்படுகின்றிலளென்று பிணங்குகின்றாளாகலால்,அயலாளாக்கிச்சொல்லினாள்.



## ௱௰௫-ஆம்-அதி-அலரறிவுறுத்தல்.

அஃதாவது-களவொழுக்கம் வேண்டிய தலைவன்பிறர்சொல்லுகின்ற அலர்தனக்கு ஆகின்றவிதத்தைத் தோழிக்கு அறிவித்தலும் மணமாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைவியும் தோழியும் அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலும், ஆம். இதுநாணுத் துறந்த வழி நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்............................ ※
பலரறியார் பாக்கியத் தால்.................................. ※

இது - இரவுக்குறி தப்பிப்போய் மறுநாள்வந்த தலைவனை அலர் கூறிமணம் வினவியவிடத்துத் தோழிக்குத் தலைவன்சொல்லியது. (இ-ள்.) அலரெழ- (உன்மாதுக்கும்எமக்கும்உண்டாகியநட்பு)அலரெழ-(இவ்வூரில்) அலராயெழுதலால் - ஆருயிர் - (அவளைப்பெறாது

※ அறத்தொடு நிற்றல் காமத்தைவெளிப்படுத்தல்.
※ செவிலி - வளர்த்த தாய்.

வருந்துகிறஎன்)னரியவுயிரானது - நிற்கும் - (அவளைப்பெற்றது போல்)நிலைபெறும். அதனை- அந்நிலைபேற்றை- பாக்கியத்தால்-நல் வூழால்-(நானே அறிவதல்லது)பலர்-தூற்றுகின்ற) பலரும் - அறியார்-தெரியார். (எ-று.) (கருத்து) உன்மாதுக்கும் எமக்குமுண்டாகியநட்பு அலராயெழுதலால் என்னரியவுயிரானது அவளைப்பெற்றதுபோல நிலைபெறும். அந்நிலைபேற்றைத் தெய்வத்தால்நானேயறிவதல்லது பலருமறியார். என்பதாம். ❁இரவுக்குறிதப்பித்தலைவியை அடையப்பெறாத வருத்தமெல்லாந்தோன்ற, ஆருயிரொன்றும்-அப்படி அரியவளை எளியவளாக்கி எடுக்கின்றமையால அது அவ்வாருயிர்க்குப்பற்றுக்கோடாய் நிற்கின்றதென்றதற்கு, அலரொழிவாருயிர்நிற்குமென்றும், பற்றுக்கோடாதலை அவ்வயலார். அறிந்தால்தூற்றுதொழிவர் ஒழியவே ஆருயிர்போமாகலால் அவரறியாதிருக்கிறது, பாக்கியத்தாலென்றும்-சொல்லினான். பலருமென்கிற முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (௧)

மலரன்ன கண்ணா ளருமை யறியா........................... ❁
அலரெமக் கீந்ததிவ் வூர் ........................................... ❁

இதுவுமது. (இ-ள்.) மலரன்ன கண்ணாள்- மலர்போலுங்கண்களையுடையவளது- அருமை - (அடைதற்கருமையை)- அறியாது-தெரியாது-இவ்வூர்-(அவளை எளியவளாக்கி) இந்தவூரானது - அலர்-(அவளோடு)அலர்கூறலை எமக்கு - எமக்குந்தது - உபகரித்தது.(எ-று.) (கருத்து) மலர்போலுங் கண்களை யுடையவளது அருமை யறியாது இவ்வூர் அவளையெளியளாக்கி அவளோடலர்கூறுதலை யெமக்குபகரித்தது. என்பதாம். ❁ அருமை - குறிபிழைத்தலாலும், இடையீடுகளாலும், ஆகியது ஈந்ததென்றான் அதற்குச் சார்பாகலால். அலர்தூற்றுவாரை அவர்செய்த உதவிபற்றி இவ்வூரென்றான். (௨)

உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்.............................. ❁
பெறாஅது பெற்றன்ன நீர்த்து............................................❁

இதுவுமது. (இ-ள்.) ஊரறிந்தகௌவை-(எங்களுக்குப்புணர்ச்சி உண்டாயிருக்கையை) இவ்வூர் அறிதலால் விளைந்த அலரானது- உறாஅதோ-எனக்குஉறுவதொன்றன்றோ-(அதுகேட்டஎன்மனமானது)பெறாஅது-(புணர்ச்சியைப்)பெறாதிருந்தே-பெற்றன்ன நீர்த்து- பெற்றதுபோலுங்குணமுடைத்து.(ஆகலால்)(எ-று)(கருத்து) எங்களுக்குப் புணர்ச்சியுண்டாயிருக்கையை இவ்வூரறிதலான்விளைந்தவலரெனக்குறுவதொன்றன்றோ அதுகேட்டஎன்மனம் அப்புணர்ச்சியைப்பெறாதிருந்தே பெற்றதுபோலும் குணமுடைத்துஎன்பதாம்.❁

பெற்றன்ன நீர்மை-பெற்றவழிஉண்டாகிற இன்பம்போலு மின்பமு டைமை-நீர்த்தென்பதற்கு ஏற்கமனம் வருவிக்கப்பட்டது. (௩)

கௌவையாற் கௌவிது காம மதுவின்றேற்*
றவ்வென்னுந் தன்மை யிழந்து*

இதுவுமது. (இ-ள்.) காமம்-(என்)காமம்-கௌவையால்-(இவ்வூர்) எடுக்கின்ற அலரால்-கௌவிது-அலர்தலையுடைத்தாயிற்று- அதுவின்றேல்-அவ்வலர் இல்லையாயின் - தன்மையிழந்து தனதுதன்மையிழந்து தவ்வென்னும் சுருங்கிப்போகும். (எ-று.) கருத்து என்காமம் இவ்வூரொடுக்கின்றவலரால் அலர்தலையுடைத்தாயிற்று. அவ்வலரில்லையாயில் தன்னியல் பிழந்துசுருங்கும். என்பதாம். ❋ அலர்தல்- மேலுமேலுமிகுதல்.-தன்மை- இன்பந்தருதல்- தவ்வென்னுமென்றது குறிப்புமொழி. (௪)

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்*
வெளிபடுந் தோறு மினிது*

[இதுவுமது.] இ-ள். (கள்ளுண்பார்க்கு)-களித்தொறும்-களிக்குந்தோறும்-கள்ளுண்டல்-கள்ளுண்டல்-வேட்டற்று - இனிதாம்விதம் போல்-(எனக்கு)-காமம்-காமமானது-வெளிப்படுந்தோறும் - அலராந்தோறும்-இனிது-இனிதாகாநின்றது.(எ-று.) (கருத்து)கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங் கள்ளுண்டலினிதாமாறுபோலஎனக்குக்காமம் அலராந்தோறு மினிதாகின்றது. என்பதாம்.❋ வேட்கப்பட்டதற்றாலென்பது-வேட்டற்றாலென நின்றது. வேட்கை மிகுதியால் அலரும் இன்பம் செய்கிறதென்பதாம். (௫)

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்*
திங்களைப் பாம்புகொண் டற்று*

இது-இடையீடுகளாலும், இரவுக்குறிதப்பலாலும், தலைவனைக்கூடப்பெறாததலைவிஅவன் * சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரை அறிவித்துமணஞ்செயல் விரும்பியது. (இ-ள்.) கண்டது (தலைவனை நான்)காணப்பெற்றது-ஒருநாள்- ஒருநாளேயாகும்-அலர்-(அதனாலுண்டாகிய)அலரானது - (அவ்வளவினதன்றி) -திங்களைப் பாம்புகொண்டற்று-சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல்உலகெங்கும்பரந்தது.(எ-று.) (கருத்து) தலைவனை நான்காணப்பெற்றது ஒருநாளேயாம். அதனாலுண்டான அலரானது அவ்வளவில்லாமல் சந்திரனைப்பாம்புகொண்ட அலர்போலெங்கும் பரந்தது. என்பதாம்.❋ அலராகியகாரியத்தைக் காரணமாக உபசரித்து, பாம்புகொண்டற்றென்றாள்.-பூமிநிழல்பாம்பெனப்பட்டது. இரா

குவென்னும் வடநூல்வழக்குப்பற்றி. அதுசந்திரனைமறைத்தல், கணி தசித்தாந்தங்களிலேகாண்க. இருவழியும்மன்னும் உம்மும் அசைநி லைகள்-காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகா துமணஞ்செய்து கொள்ளுதல் வேண்டுமென்பதாம் (௬)

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன் ............... *
நீராக நீளுமிந் நோய். ............... *

இது-மணஞ்செயல் நீளப்பொறாத தலைவியைத் தலைவன் சிறைப் புறத்தானாதலறிந்ததோழி ஊரவரலரையும். தாய்சொல்லையும்நோ க்கிநீபொறுத்தல்வேண்டுமெனச் சொல்லெழுப்பியவிடத்து அவள் சொல்லியது (இ-ள்.) இந்நோய்-இக்காமநோயாகிய (பயிர்) ஊரவ ர்கௌவை-இவ்வூரிலுள்ள மகளிர்எடுக்கின்றஅலரானது - எருவாக-எ ருவாக-அன்னைசொல்-(அதுகேட்டுக்கோபித்துத்)தாய்சொல்லுகின் றகடுஞ்சொல்லானது நீராக-தண்ணீராக - நீளும் - வளராநின்றது (எ-று) (கருத்து) இக்காமநோயாகிய பயிர் இவ்வூரின் மகளிரெடுக் கின்றஅலரானது எருவாகதாய்சொல்லானது நீராக வளர்கின்றது. என்பதாம். * ஊரவரென்பது, தொழிலால் ஆணொழித்துநின்றது. (ஏகதேசவுருவகம்.) சுருங்குதற்கு ஏதுவாகின்றவை தாமேவிரிதற் குஏதுவாகின்றன வென்பதாம். மணஞ்செய்வோனாதல் பயன். (எ)

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற் *
காம நுதுப்பே மெனல் ............... *

இதுவுமது. (இ-ள்.) கௌவையால்-(அயலவர்எடுக்கின்ற) அலரா லுண்டாகின்ற-காமம்-காமத்தை-நுதுப்பேமெனல்- அவிப்பேமெ ன்றுநினைத்தல்-நெய்யால்-நெய்யினாலே-எரி-நெருப்பை-நுதுப்பே மென்றற்று, அவிப்பேமென்று நினைத்தலோடொக்கும். (எ-று.) (கருத்து) அயலாரெடுக்கின்ற அலராலுண்டாங் காமத்தை அவிப் பேமென்றுநினைத்தல் நெய்யால் நெருப்பை அவிப்பே மென்றுநி னைத்தலோடொக்கும். என்பதாம் * காமம்வளர்தற்குக்காரணமாகி யஅலரால் அதை அவித்தல்கூடாதென்பதாம். (அ)

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார் ............... *
பலர்நாண நீத்தக் கடை ............... *

இது - மணஞ்செயற்குப்பொருள் சம்பாதிக்கத் தலைவன்பிரிந்த போது பொறுதவளாகியதலைவி அவன்வந்துசிறைப்புறத்தானாதல றிந்து அலரஞ்சிப்பொறுத்தல் வேண்டுமென்றதோழிக்குச்சொல்லி யது. (இ-ள்.) தம்மைகண்டநாளில்) அஞ்சலோம்பென்றார்-(உன்னை

* சிறைப்புறம்தலைவியைக்காவல்செய்த விடத்தின்புறம்.

விட்டுநீங்கேன்) அஞ்சுதலொழியென்றவோ - பலர்நாண-(இன்று) கண்டவர் பலரும்நாணும்வகை- நீத்தக்கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின்-அலா-(அயலவர்தூற்றுகிற) அலருக்கு - நாணவொல்வதோ- (நாம்) நாணக்கூடுமோ.(எ-று.)(கருத்து)தம்மைக்கண்டநாளில்உன்னைவிட்டு நீங்கேன் அஞ்சுதலொழியென்றவோ இன்றுகண்டார் பலரும்நாணும்வகை நம்மைத்துறந்தபின் நாமேதிலார்கூறும் அலருக்குநாணக்கூடுமோகூடாது. என்பதாம். ❁ கண்டார் நாணுகிறநிலைமையேமாகிய நாம்நாணுதல் எவ்விடத்ததென்பதாம். (௰)

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங் ......... . *
கௌவை யெடுக்கு மிவ்வூர் ........ ................ .......... *

இது - தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிதலைவிக்குச் சொல்வாளாய் அலரறிவித்து அவனுடன் போதற்கு ஆசைகொள்ளச்சொல்லியது. (இ-ள்.).யாம்-நாம்-வேண்டுங்கௌவை-(உடன்போதற்குக்காரணமாதல் பற்றிமுன்னமே) இச்சிப்பதாகிய அலரை - இவ்வூர் இந்தவூர்-எடுக்கும்-(தானே எடுக்கின்றது. காதலர் - (இனித்) தலைவர் வேண்டின்-(நாம்)வேண்டினால்-தாம்-தாமும் - நல்குவர் - அதற்கு உடன்படுவர்- (ஆதலால் இவ்வலர்நமக்கு நன்றாய் வந்தது. (எ-று.) (கருத்து) உடன்செல்லுதற்குக் காரணமாக நோக்கிநாமுன் விரும்புவதாகிய அலரையிவ்வூர்தானே யெடாநின்றது இனிக்காதலர் தாமும்யாம்வேண்டியக்காலத்தனை இனிதுநேர்வாராதலின் இவ்வலர் நமக்கு நன்றாய்வந்தது. என்பதாம். ❁ உம்மை வருவிக்கப்பட்டது நம்மிடத்துஆசையுடைமையால் மறுமொன்பதுதோன்ற. காதலொன்றுள்.

களவியல்-முற்றிற்று.

# கற்பியல்

இனிக்கற்புப் பதினெட்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலேபிரிவாற்றாமை சொல்லுகின்றார்- (உ-ம்) இறையனாரகப் பொருள்,கற்பினுட்பிறவேகடிவரையின்றே,ஓதல்காவல பகைதணிவினையே -வேந்தர்க்குற்றுழிப் பொருட்பிணி பரத்தையென் - றாங்கவ்வாறே யவ்வயிற்பிரிவே. தொல்காப்பியம் - கற்பெனப்படுவது கரணமொடு புணரக்-கொளற்குரிமரபிற் கிழவன்கிழத்தியைக்- கொடைக்குரிமரபினோர் கொடுப்பக்கொள்வதுவே. அகப்பொருள் விளக்கம் - பொற்புடைநெறிமைசிறப்பிற் கற்பெனப்படுவது-மகிழ்வுமூடலு மூடலுணர்த்தலும்-பிரிவும் பிறவு மருவிய தாகும்.

## ௱௰௬-ஆம் - அதி - பிரிவாற்றாமை.



அஃதாவது-மணம்செய்துகொண்டபின் தலைதவன் அறம்பொருளின்பங்களின்பொருட்டுத் தலைவியைப்பிரிந்து தூரத்திலும், அவ்விடத்திலும், செல்லுநாளில் அப்பிரிவை அவள்பொறுக்க மாட்டாதவளாந் தன்மையாம். அதுஇங்கேபிரிவை அறிவித்த தலைவனுக்குத்தோழிசொல்லலும். தோழிக்குத்தலைவி அவன்குறிப்பால் அறிந்து சொல்லலும், பிரிவை அறிவித்தவிடத்துச் சொல்லலும், பிரிந்தவிடத்து ஆற்றுவிக்குமிடத்துத்தோழிக்குச்சொல்லலும், என நால்வகையாலே சொல்லப் படும்.

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின் ......... ..... *
வல்வரவு வர்ழ்வார்க் குரை.............................. *

இது-பிரிந்துகடிதில் வருவேனென்ற தலைவனுக்குத் தோழிசொல்லியது. (இ-ள்.)செல்லாமையுண்டேல்-(நீஎம்மைப்)பிரியாமையுண்டாயின்-எனக்கு எனக்கு-உரை-(அதனைச்)சொல்லு. மற்றஅது நீங்க-நின் வல்வரவு-(பிரிந்துபோய்)நின்விரைந்துவருதலை-வாழ்வார்க்கு, (அப்பொழுது)உயிர்வாழ்வார்க்கு- உரை, சொல்லு. (எ,று.) (கருத்து)நீயெம்மைப்பிரியாமையுண்டாயி னதனையெனக்குச் சொல்லஃதொழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லுவையாயினதனையப்பொழு துயிர் வாழ்வார்க்குச் சொல்லென்பதாம். ※ தலைவிடையொழித்து உனக்கென்றுள் தான் அவள் என்கிறவேற்றுமையில்லாமையால், நீ பிரிந்திருக்குங்காலமெல்லாம்பொறுத்திருந்து அவ்வரவுகாணும் வலிமையுடையளல்லள் பிரிந்தபொழுதே இறந்துபடுவளென்பதாம். அழுங்குவித்தல், பயன். (க)

இன்கணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்............ *
புன்க ணுடைத்தாற் புணர்வு...... ... .. ....... ............ *

இது-தலைவனது பிரிவைக் குறிப்பால் அறிந்ததலைவி தோழிக்குச்சொல்லியது.) (இ-ள்) (தழையுமாலையுங் கொண்டுபின் னின்றநாளில்) அவர்பார்வல், அவரது பார்வைமாத்திரமும்; (புணர்ச்சிக்குறித்தமையால்)இன்கணுடைத்து,(நமக்கு) இன்பமுடைத்தாயிருந்தது.இன்று அப்புணர்ச்சிதான் நடந்துகொண்டிருக்கவும்) புணர்வு, அப்புணர்ச்சி.பிரிவஞ்சும்.பிரிவொன்றஞ்சுகிற- புன்கண். அச்சத்தினை-உடைத்து, உடைத்தாயிற்று. (அவரன்பினிலைமைஇது)(எ,று.) கருத்து. தழையுங்கண்ணியுங்கொண்டு பின்னின்றஞான்றவர் நோக்குமாத்திரமும்புணர்ச்சி குறித்தமையா னமக்கின்பமுடைத்தாயிருக்குமின்றப்புணர்ச்சி தானிகழாநிற்கவு மது பிரிவொன்றஞ்சுமச்சத்தினையுடைத்தாயிற்றவரன்பினிலைமையிதுவென்றவாறென்பதாம். ※

ஆல், அசை. பார்வலென்றவதனாலே, புணர்ச்சி பெறுமல்தலைவன் பின்னின்காலம் பெறப்பட்டது. புன்கண். துன்பம். அது காரணத்தின்மே லாயிற்று. அவ்வச்சத்தினை யுடைத்தாதலாவது, புணரும்போது தன்னை மிகப்புகழ்தலாலும், அணிதிருத்தலாலும், தலைவன் பிரிதற் குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல்பயன். (உ)

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்........................ *
பிரிவோ ரிடத்துண்மை யான்..... ............................ *

[இதுவுமது](இ-ள்.)அறிவுடையார்கண்ணும்,(பிரியேனென்றசொல்லையும் - தம்பிரிவு பெறுமைமையயும்)அறிதலுடையவராகியகாலரிடத்தும் - ஓரிடத்து, ஒரோவழி - பிரிவு. பிரிவானது உண்மையான்,உண்டதலால்- தேற்றம், (அவர்சொல்லும் தலையளியும்பற்றி நம்மேல் அன்புடையரென்று தெளியுந்) தெளிவு அரிது, அரிதாயிருந்தது. (எ-று.)(கருத்து)பிரியேனென்றசொல்லு நம்பிரிவாற்றுமையு மறித லுடையராய்காதலர் கண்ணு மொரோவழிப்பிரிவுநிகழ்தலானவர் சொலலுந்தலையளியும் பற்றிநம்மாட்டன்புடையரெனத்தெளுந் தேற்றமரிதாயிருந்த தென்பதாம். ❊ அரோ, அசைநிலை. உம்மை. உயரவுசிறப்பு. (ரு)

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற் ... ....* 
றேறியார்க்குண்டோதவறு ................ ..................*

[இதுமது]இ-ள்)அளித்து, (எதிர்ப்பட்டநாளே) தலையளிசெய்து-அஞ்சலென்றவர்,(உன்னைவிட்டுப்பிரியேன்)அஞ்சாதிருவென்றவர்தாமே- நீப்பின், (பின்னே) பிரிவாராயின்- (அவர்க்கல்லாமல்) தெளித்தசொல் (அவரால்) தெளிவிக்கப்பட்டசொல்லை-தேறியார்க்கு,(மெய்) யென்றுதெளிந்தவர்க்கு- தவறு,குற்றம்!உண்டோ-உளதோ-எ-று(கருத்து)எதிர்ப்பட்டஞான்றே தலையளிசெய்துநின்னிற்பிரியேனஞ்சலென்றவர்தாமேபின்பிரிவாராயினவர்க் கன்றியவர்தெளிவித்தசொல்லைமெய்யெனத்தெளிந்தார்க்குக் குற்றமுண்டோவென்பதாம்.❊தேறிய.றொன்றது,தன்னைப்பிறர்போற்சொல்லியது-சொல்லும் செயலும் ஒத்திராமைக்குற்றம்அவர்க்கு உண்டாம்அதுஉண்டாகாதபடிஅழுங்கச்செய்யென்பதுகருத்து (சு)

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்............. .....*
நீங்கி னரிதாற் புணர்வு .... ...............................*

[இதுவுமது] (இ-ள்.) ஓம்பின், (என்னுயிரைச்செல்லாமற்) காப்பாற்றுவையாயின் - அமைந்தார், அவனைஆளுதற்கு) அமைந்தவர்

து - பிரிவு, செலவையோம்பல்; அழுங்குவிப்பாயாக. மற்று, அழுங்குவிப்பாரில்லாமல் அவர்-அவர் நீங்கின், செல்வாராயின் - அவரால்ஆளப்பட்ட உயிரும் செல்லுமாதலால்-புணர்வு (பின்புஅவரைக் கூடுதல்! அரிது.(எனக்கு) அரிதாம். (எ-று.) (கருத்து) என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயி னதனையாளுதற் கமைந்தாருடைய செல்வினை யழுங்குவிப்பாயாக வழுங்குவிப்பாயன்றி யவர்செல்வராயி னவரா லாளப்பட்ட வுயிருஞ்செல்லுஞ் சென்றற்பின் னவரைக்கூடுத லெனக்கரிதா மென்பதாம். ஆல், அசை - ஆளுதற் கமைதல், தலைவராதற்குஊழால் ஏற்புடையராதல். (௫)

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர் ..............*
நல்குவ ரென்னு நசை......................................*

[இது]தலைவன் பிரிவை அறிவித்தவாறுவந்து சொல்லியதோழிக்குத் தலைவிசொல்லியது.] (இ-ள்-) அவர், தமதுபிரிவு;பெருமையறிந்த) அத்தலைவர்தாமே. (நம்முன்னின்றும்) பிரிவுரைக்கும், தம்பிரிவை அறிவிக்கும்-வன்கண்ணராயின்! அருளில்லாமையையுடையராயின் - (அத்தன்மையரானபின்பு) நல்குவரென்னுநசை, (நம்பொறுமையை அறிந்துவந்து) தலையளிசெய்வாரென்னுமாசை! அரிது.விடப்படும் (எ-று.) (கருத்து) நங்கவ்வுக்கடுமை யறிந்த தலைவர்தாமேநம்முனின்று தம்பிரிவினையுணர்த்தும்வன்கண்மையுடையராயினராயினத் தன்மையராய்ப்பின்பு நம்மாற்றாமை யறிந்துவந்துதலையளிசெய்வரென் றிருக்குமாசைவிடப்படு மென்பதாம். அருமை-பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பில்லாமற்பிரிவென்னுஞ் சொல்லும் அறிவித்தலும்-வல்லராயினார், பிரிந்துபோய் அன்புடையராகி நம்மை நினைந்துவந்து அளித்தல்.எவ்விடத்த தென்பதாம். அழுங்குவித்தல்பயன். (௬)

துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை ..........*
யிறையிறவா நின்ற வளை ......................................*

[இதுவுமது.] இ-ள். துறைவன், நெய்தநிலத்தலைவன்-துறந்தமை (என்னைப்) பிரியலுற்றமையை - (அவன்அறிவிக்காமல்தாமேஅறிந்து)முன்கையிறை, என்)முன்கையிறையினின்றும்-இறவாநின்றவளை, கழலாநின்றவளையல்கள்! தூற்றாகொல், (எனக்கு)அறிவியாவோ. [அவன் அறிவிக்க அறிந்துவந்து நீஅறிவித்தல்வேண்டுமோ.] எ-று. (கருத்து) துறைவனென்னைப் பிரியலுற்றமையை யவனுணர்த்தாமற்றாமேயுணர்ந்துதன் முன்கையினிறையினின்றுங் கழலாநின்றவளைகளெனக்கறிவியாவோ வவனுணர்த்த வுணர்ந்துவந்து நீயறிவித்தல் வேண்டுமோ வென்பதாம். முன்னே நிகழ்ந் தமையால், துற

ந்தமையென்றும், கேட்டவளவில் மெலிந்து பொறாமையால் இறவாநின்றவென்றும், சொல்லினுள் அழுங்குவித்து அதுவந்து சொல்லுந்தன்மையை யல்லாத நீயும் இவ்வளவே செய்தனவே செய்தாயென்றுபிணங்கிச்சொல்லியபடி. (௭)

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு ............................ *
மின்னா தினியார்ப் பிரிவு... .. ............................ ......... *

[இதுவுமது.] இ-ள். இனனில்லூர், (மகளிர்க்குத் தங்குறிப்பறிகிற தோழிபரில்லாத வேற்றூரினிடத்து- வாழ்தல், வாழுதல்; இன்னாது, துன்பஞ்செய்வதாகும்- (அதன்மேலும்) இனியார்ப்பிரிவு-(தங்) காதலனைப்பிரிதல்.- அதனினும், அவ்வாழ்தலைக்காட்டிலும்- இன்னாது, துன்பஞ்செய்வதாகும். எ-று. (கருத்து) மகளிர்க்குத்தங்குறிப்பறியுந் தோழிபரில்லாத வேற்றூரின்கண் வாழ்தலின்னாததனின் மேலுந்தங்காதலனைப் பிரிதலதனினு மின்னாதென்பதாம். ❊ தலைவன்செல்லுதலை அழுங்குவித்துவாராது உடன்பட்டு வந்தமைபற்றிப் பிணங்குகின்றாளாகலால்-இனனில்லூரென்றாள். உலகநடைசொல்லுகின்றாள்போல் தனக்குஅவ்வாழ்வும பிரிவும் உண்டாயிருக்கை சொல்லியபடி, (௮)

தொடிற்சுடி னல்லது காமநோய் போல ................ ......... *
விடிற்சுட லாற்றுமோ தீ ............................ ......... *

இ-து. காமம் தீயேபோல் நின்றவிடத்தைச் சுடுமாதலால் நீபொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. இ-ள். தீ, நெருப்பானது.-தொடின், தன்னைத்தொட்டால்- சுடில் சுடலல்லது, சுட்டாற்சுடலல்லது-காமநோய்போல, காமமாகிய நோயைப்போல-விடின், (தன்னை-விட்டுநீங்கினால்-சுடலாற்றுமோ, (தப்பாது)சுடல்வல்லதோ. (எ-று) (கருத்து,) தீத்தன்னைத்தொட்டாற் சுடுமாயிற்சுடுகையல்லதுகாமமாகியநோயபோலத்தனையகன்றாற்றப்பாது சுடுதலை வறனெரு மாட்டாது. என்பதாம். ❊ சுடினென்றது -மந்திரமருந்துகளாலே-தம்பிக்கப்படாதாயினென்றபடி காமத்திற்கு அதுவும் இல்லையென்றற்கு-சும்மாசுடலென்றாள். நீங்கல்- அனுபவியாமை. சுடல்-மூன்றும்கூட்டப்பட்டது. தீயினும் கொடியதனை தான்பொறுக்குப்விதம்எனனை யென்பதாம். (௯)

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்......... ......... *
பின்னிருந்து வாழ்வார் பலர் ........... ............. ......... *

[இது தலைவியர் பலரும் பிரிவைப் பொறுத்திருப்பர் நீஅதுசெய்கின்றிலையென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.] இ-ள். நீசெ

ல்லுகின்றது ஒக்கும்.) அரிதாற்றி, பிரிவை அறிவித்த விடத்து அதற்கு உடன்பட்டு-அல்லனோய், (பிரியும்போதுஉண்டாகிற) துன்பநோயையும்- நீக்கி, ஒழித்து-பிரிவாற்றி, (பிரிந்தால்) அப்பிரிவையும் பொறுத்து-பின்னிருந்து, பின்னும்இருந்து- வாழ்வார், உயிர்வாழு மகளிர், பலர் (உலகத்திற்) பலர். எ-று. (கருத்து) நீசொல்லுகின்றதொக்கும்பிரிவுணர்த்திய வழியதற் குடம்பட்டுப் பிரியங்காணிகழுமல்லனோயினையு நீக்கிப் பிரிந்தாற் பிரிவுதன்னையு மாற்றிப் பின்னுமிருந்துயிர் வாழுமகளிருலகத்துப் பலரென்றவாறு. ❋முன்னிலுஞ்சிறக்கத்தலையளிபெற்று இன்பத்தை அநுபவிக்கிற சமயத்தில் அதனையிழந்து துன்பத்தை அநுபவித்தற்கு உடன் படுதல் அரியதொன்றாகலால்-அரிதாற்றியென்றும், செல்லுந் தேசத்திலே அவருக்கு யாது சம்பவிக்குமோவென்றும், அவர்வருமளவும் நாம்பொறுத்திருக்கும் விதம் என்னென்றும் அவர்வரவுதான் மறுபடி என்றைக்குவந்து கிடைக்குமோவென்றும் இவ்விதங்களாலேதோன்றுகிறகவலை மனத்தைவிட்டு நீங்காதாதலால் அல்லனோய் நீக்கியென்றும், பிரிந்தால்வருமளவும் உள்ளே தோன்றுகிற காமவேதனையும்புறத்தில் வீணையிசை சந்திரன் தென்றல் இவைமுதலாய்வந்து அதனைவளர்ப்பவையும் பொறுத்தல் அருமையாகலால் பிரிவாற்றி யென்றும் தாம், காதலை விட்டிருக்கமாட்டாத மகளிருள் இவையெல்லாம் பொறுத்து பின்னும் இருந்து உயிர்வாழவல்லவர் ஒருவரும் இல்லையென்பது குறிப்பினாலேதோன்ற பின்னிருந்து வாழ்வார் பலரென்றும்சொல்லினாள். பிரிவிலே நிகழ்பவைகளைப் பிரிவென்றாள். ஆற்றி நீக்கி ஆற்றின்பவை ஓசைவகையால் அவைகளினருமையுணர நின்றன பிரிவையுமென்னு மும்மைவிகாரத்தாற் றொக்கது யானும்இறந்துபடுவேனென்பது கருத்து, (௰)

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## ௱௧௭-ஆம், அதி-படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது- பிரிவுபொறுக்கமாட்டாதவளாகிய தலைவி தான் உறுகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலின் அந்நினைவால்மெலிந்து இரங்கலாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

மறைப்பேன்மன் யானிஃதோ நோயையிறைப்பவர்க்*
ஊற்றுநீர் போல மிகும்.............................*

[இது காமநோயை வெளிப்படுத்துதல் உன்நாணத்திற்குத் தகா

தென்றதோழிக்குச்சொல்லியது. (இ-ள்)யான் நான் நோயை,இந்
நோயை மறைப்பேன் (பிறரறிதற்கு நாணி) மறையாநின்றேன்-(நி
ற்கவும்)-இஃதோ,இந்நோயோ-இறைப்பவர்க்கு, (நீர்வேண்டுமென்
று இறைப்போர்க்கு- ஊற்றுநீர்போல, ஊற்றுநீரைப்போல-மிகு
ம், மிகும்- எ-று. (கருத்து) இந்நோயைப் பிறரறித னாணியானம
றையாநின்றேனிற்கவு மிஃதந்நாணவரை நில்லாதிறைப்பவர்க் கூற்
றுநீர்மிகுமாறுபோல் மிகாநின்றதென்பதாம். ☼ அம்மறைத்தலா
லே பயனில்லையாதென்பதுபட நிற்கையால் மன்- ஒழியிசை இனிஅதற்
கு அடுத்ததுசெயல் வேண்டுமென்பதாம். (௧)

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க் ......*
குரைத்தலு நாணுத் தரும் ........................*

[இது. இவ்விடத்தோர் அறியாமல் மறைத்தலாயினும் அவ்விட
த்தோர் அறியத் தூதுவிடுதலாயினும் செயல்வேண்டுமென்ற தோ
ழிக்குத் தலைவிசொல்லியது.]இ-ள். இந்நோயை, இக்காமநோயை,
கரத்தலுமாற்றேன், (இவ்விடத்தோர் அறியாமல்) மறைத்தலும் வ
ல்லேனாகின்றிலேன்- (ஆகாக்கால் - நோய்செய்தார்க்கு,இந்நோயை
ச்செய்தார்க்கு- (சொல்லென்பையாயின்) உரைத்தலும், சொல்லலு
ம்! நாணுத்தரும், (எனக்கு) நாணந்தரும், (இனி என்செய்வேன்)
(எ-று.) (கருத்து) இந்நோயையீண்டையா ரறியாமல்மறைத்தலும்
வல்லேனாகின்றிலே னாகாக்கா னோய்செய்தார்க்குரைக்கவெண்ணின
துவுமெனக்குநாணினைத்தராநின்றதினியென்செய்கோமென்பதாம்
☼ஒருவேளைக்கு ஒருவேளை மிகுதலால்கரத்தலுமாற்றேனென்றும்
தூரதேசத்திலே போயிருப்பவர்க்கு இது சொல்லித் தூதுவிட்டா
ல் இன்னும் சாவாதிருக்கிறாளென்பது தோன்றுமென்னுங் கருத்
தால் நாணுத்தருமென்றும்சொல்லினாள். (௨)

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென் ............*
னோனா வுடம்பி னகத்து .........................*

[இதுவுமது.] இ-ள். காமமும், காமநோயும்,- நாணும்,(அதுசெ
ய்தவர்க்குச்) சொல்லவொட்டாத நாணும்! என்னோனாவுடம்பினகத்
து- (தம்மைப்) பொறுத என்னுடம்பினிடத்து- உயிர்,உயிர்-காவா
காவடித்தண்டாகத்தூங்கும், (அதனிருதலையிலும் தொங்குகின்றன
எ-று. (கருத்து) காமநோயுமதனைச் செய்தவர்க் கறிவித்தலொவ்லா
தநாணுந்தம்மைப் பொறுதவென் னுடம்பின்கண்ணே யுயிர்காத்த
ண்டாகவவ்விருதலையினுந் தூங்காநின்றனவென்பதாம்.
☼பொறுமை, மெலிவினாலாகியது.-தூங்குமென்றது, ஒன்றினொன்
று மிகாமல் இரண்டும்ஒத்ததிரமென்பது தோன்றநின்றது - தூதுவி

டப்பண்ணுகிற காமமும் ஒழியப்பண்ணுகிற நாணுந்தம்முள் ஒத்து உயிரை இறச்செய்கின்றன. யான்அவைகளுள் ஒன்றில்நிற்கமாட்டாமையால் இது இறந்தே விடுமென்பதாம். (௩)

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து............ *
மேமப் புணைமன்னு மில் ............ *

[இது-தலைவியர் காமக்கடலில் வீழார் வீழினும் அதற்கு ஏற்றபுணையால் நீந்திக்கடப்பரென்ற தோழிக்குச்சொல்லியது.]இ-ள். (யாவர்க்கும் )உண்டாய்வருகின்ற (இரண்டினுள்ளும்) -காமக்கடல், காமக்கடலே- உண்டு, (எனக்கு) உண்டாகின்றது.- அதுநீந்தும். அக்கடலைக்கடக்கும்- ஏமப்புணை, காப்பாகியபுணை- இல், (எனக்கு) இல்லை. (எ-று.) (கருத்து) யாவர்க்கு முளவாய்நின்ற விவ் விரண்டினுள்ளுமெனக்குண்டாகின்றது காமக்கடலேயதனை நீந்துமாறாகியபுணையில்லையென்பதாம். ❋ மன்னிரண்டும் உம்மிரண்டும் அசைநிலைகளாதுவிட்டுஇதற்குப் புணையாதற்குரிய நீயும் ஆறுயில்லையென்பது கருத்து. (௪)

துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு............ *
நட்பினு ளாற்றுபவர் ............ *

[இது தூதுவிடாமைநோக்கி தோழியோடுதலைவிபுணங்கிச்சொல்லியது] இ ள். நட்பினுள், (இன்பஞ்செயதற்கு உரிய) நட்பினிடத்து - துயர்வரவு; துன்பத்தின்வரவினை - ஆற்றுபவர், செய்யவல்லவர்.; துப்பின், (துன்பஞ்செய்தற்குஉரிய-) பகைமையிடத்து எவனாவர்கொல், என்னசெய்வாரோ. (எ று.) (கருத்து) இன்பஞ்செய்தற்குரியநட்பின்கண்ணே துன்பவாவினைச் செய்யவல்லவர் துன்பஞ்செய்தற்குரிய பகைமைக்கண்ணென செய்வர்கொல்லோவென்பதாம் ❋அப்டகைஇங்கேகாணுமையால்அவர்செய்வதும்அறியப்பெற்றிலேனென்பது படர்கையால் மன் ஒழிபிசை துடர்வருதலை விலக்கலாயிருக்க அதுசெல்கின்றிலையென்று பிணங்குகின்றமையால் தோழியைத் துயர்வரவு செய்தவளாக்கியும் பிறளாக்கியும் சொல்லினாள். (௫)

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்............ *
றுன்ப மதனிற் பெரிது............ *

(இது) காமத்தினால் இன்பமடைந்தவர்க்கு அதனினாகிய துன்பமும் வருமென்றதோழிக்குச் சொல்லியது.) (இ-ள்,)காமம்-காமம் (புணர்ச்சியால் இன்பஞ்செய்யும்போது)-இன்பம்-அவ்வின்பம் -கடல்-கடல்போலே- (பெரிதாம்)மற்றஃது-இனி - அக்காமந்தானே அடுங்கால் (பிரிவினாலே) துன்பஞ்செய்யும்போது-துன்பம் அத்து

ன்பம்!-அதனிற்பெரிது-அக்கடலினும்பெரிதாம்.(எ,று,)(கருத்து)
காமம்புணர்வா லின்பஞ்செய்யுங்கா லவ்வின்பங் கடல்போலப் பெரி
தினியதுதானே பிரிவாற்றுன்பஞ் செய்யுங்காலத்துன்பமக்கடலினு
ம்பெரிதாமென்பதாம் ✻ அடுங்கா லென வந்தமையால் அதற்கெ
திரான இன்பஞ்செய்யும்போது என்கிற சொல்வருவிக்கப்பட்டது.
பெற்றவின்பத்தோடுஒத்துவரிற் பொறுக்கக் கூடும் இது அப்படிப்
பட்டதல்லவென்பதுகருத்து. (௬)

இா மக் கடும்புன லீந்திக் கரைகாணேன்................✻
யாமத்தும் யானே யுளன்....................✻

[இது- காமக்கடலை நிறைபுணையாக நீந்தலரிமென்ற தோழிக்கு
த் தலைவிசொல்லியது] (இ-ள்) காமக்கடும்புனல் காமமாகியகடலை
நீந்தி(யும்) கரைகாணேன் (அதற்குக்) கரைகாண்கின்றிலேன் (அக்
காணுமைக்காலந்தான் எல்லாரும் நித்திரைசெய்யும் பாதியிரவாயி
ற்று யாமத்தும்-அப்பாதியிரவிலும்-யானே-(அதற்குஒருதுணையி
ல்லாமல்)யானேயாயினேன்-(ஆகியும்)உளேன்-இறவாதிருக்கிறேன்
(ஈதொரு தீவினைப்பயன் இருந்தவிதம் என்.) (ன்-று.) (கருத்து)
காமமாகிய கடலைநீந்தாதேனல் லெணீந்தியு மதற்குக் கரைகாண்கி
ன்றிலெனக்காணுக காலந்தானெல்லாருந் துயிலுமனா யிருளாயிற்ற
வ்வனாயிருட்கண்ணு மதற்கொருதுணையின்றி யானே யாயினேனுயு
மிறந்துபட்டுயர்ந்து போகாதுளேனு கானிஃறே னீதொருவினைப்ப
யனிருந்தவாறென்பதாம். ✻ உம்மை மூன்றுங் கூட்டப் பட்டது
யானேயாயினே னென்றது. நீ துணையாயினு யில்லையென்னுங் குறி
ப்பிற்று. (எ)

மன்னுயி ரெல்லாந் துயுற்றி யளித்திரா.........................✻
வென்னல்ல தில்லை துணை.........................✻

இது-தலைவி இரவின் கொடுமை செல்லி இரங்கியது.] இ-ள். இரா
இவ்விரவு! அளித்து-அன்புடைத்தா யிருந்தது- மன்னுயிரெல்லாம்-
(உலகத்தி)னிலைபெற்ற உயிர்களையெல்லாம்- துயிற்றி- தானே தாங்
கச்செய்தலால்-என்னல்லது-என்னையல்லது- துணை-(வேறு) துணை
யை- இல்லை-(உடைத்தாயிற்) றில்லை. (எ-று.) (கருத்து) இவ்விராவ
ளித்தாயிருந்த துலகத்துநிலைபெறுகின்றவுயிர்களெல்லாந்தானேது
யில்ப்பண்ணுதலா லென்னையல்லது வேறுதுணை யுடைத்தாயிற் றில்
லை. என்பதாம். ✻ துணையோடுஒன்றுகின்றஉயிர்களையெல்லாம்விட்டு
இறந்துபடுஞ் சமயமுடையேனுகிய என்னையே துணையாகக் கொள்
ளுதலால் அறிவுடைத்தன்றென்பது பற்றி, அளித்தென்றாள். இசந்
தச்சிக்குறிப்பு. (அ)

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா ......... ✻
ணெடிய கழியு மிரா ......... ✻

இதுவுமது. இ-ள். (காதலரோடுநாம் இன்புற்றநாள்களிலே குறியவையாயிருந்த) இந்நாள்,(அவர்பிரிவைப்பொறுக்கமாட்டாத) இந்நாள்களிலே-நெடிய,நெடியவையாய்-கழியும், செல்கின்ற-இரா,இரவுகள்)கொடியார்,அக்கொடியவரது-கொடுமையின் கொடுமைக்கு மேலே-தாம், தாம் - கொடிய, கொடுமை செய்யாநின்றன. எ - று. (கருத்து) காதலரோடு நாமின்புற்றமுன்னாள்களிற்குறிய வாய்ப்பிரிவாற்றோக்கின்றவிந்நாள்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்கொடியாரது கொடுமைக்குமேலே தாங்கொடுமை செய்யாநின்றவென்பதாம். ✻ தன்பொருமைநினையாது பிரிதலால்,கொடியாரென்றாள்.கொடுமை, கடிதிலே வாராமல் நீட்டித்தல்.அவர்பிரிவாலும்-நீட்டிப்பாலும், உண்டாகிய பொருமைக்கு முகங்கொடாமையன்றி முன்னையினெடியவாய்க்கொடியவாகாநின்றனவென்பதாம்.

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர் ......... ✻
நீந்தல மன்னோவென் கண் ......... ✻

[இது - நின்கண்களில்பேரழகு அழிதலால் அழா திருவென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]இ-ள்.உள்ளம்போன்று- மனம் போன்று-உள்வழி, (காதலர்) இருக்கிற நாட்டிற்கு-செல்கிற்பின்,(கடிதிலே)செல்லவல்லனவாயின் -என்கண்,எனதுகண்கள், வெள்ளநீர் வெள்ளமாகிய(தத்)நீரை)நீந்தல,நீந்தா.(எ-று.) (கருத்து) மனம் போலக்காதலருள்ள தேயத்துக்கடிதிற் செல்ல வல்லனவாயி னென் கண்களிங்ஙனம் வெள்ள மாயெ தந்நீரை நீந்தா வென்ப தாம். ✻அதுமாட்டாமையால் இனி அவைகளுக்கு நீந்துதலே உள்ளதென்பது படநின்றமையால்,மன்,ஒழியிசை.ஓ,அசைமனத்திற்குச்செலவு நினைவேயாகலால்,உள்ளம்போன்றென்றும். மெய்க்குநடந்துசெல்லவேண்டுதலால், கண்கள் அதனோடு போய்க் காதலனைக்காணல்கூடாதென்னுங் கருத்தால்,செல்கிற்பினென்றும்-சொல்லினாள்.இதனால்வருகிற அதிகாரமும் தோற்றுவாய்செயப்பட்டது. (ய)



## ளயஅ-ஆம்-அதி-கண்விதுப்பழிதல.



அஃதாவது-கண்கள் தலைவனைக்காணுதற்குவிரைதலாலே வருந்துதல். இதுபடராலே மெலிந்தவிடத்து நிகழ்வதாகலால் அதன்பின்வைக்கப்பட்டது.

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோ ……… *
தாங்காட்ட யாங்கண் டது …… … … … … … ……… *

[இ-து-நின்கண்கள் அழுது அழகை இழக்கின்றன நீபொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.] இ-ள். தண்டா நோய்,இத்தீராத (காம) நோயை-யாம், நாம்- கண்டது,அறிந்தது தாம், தாம்-காட்ட,(காதலரைஎமக்குக்)காட்டலாலன்றோ-கண்டாம் (அன்று அதுசெய்த) கண்கள்தாம்-கலுழ்வது,(இன்றுஎம்மைமக்காட்டச்சொல்லி) அழுகிறது)எவன்கொல், யாதுநினைத்து.எ-று.கருத்து இத்தணியா நோயினையாமறிந்தது காதலரைத்தாமெமக்குக் காட்டலானன்றோவன்றத் தொழில்வாய் கண்களின்றெமைக்காட்டச்சொல்லி அழுகின்றதென் கருதி.என்பதாம். * காட்டவென்பதற் கேற்றசெயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. இன்றுந்தாமே காட்டுதலல்லது யாம் காட்டுதல் எவ்விடத்ததென்பதாம். (௧)

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப் …… *
பைத லுழப்ப தெவன் ……… … … … … *

[இதுவுமது.] இ-ள். தெரிந்துணரா-(மேல்விளைவதனை) ஆராய்ந்தறியாமல்- நோக்கிய- (அன்றுதலைவனைப்)பார்த்த- உண்கண், (மையுண்டகண்கள்-(இன்றுஇதுநம்மால்வந்ததாதலால் பொறுத்தல்வேண்டுமென்று)பரிந்துணரா- கூறுபடுத்தி அறியாமல்- பைதலுழப்பது,துன்பமனுபவிப்பது-எவன், யாதுநினைத்து. (எ-று.) (கருத்து.) மேல்விளைவதனை யாராய்ந்தறியாதன்று காதலரை நோக்கி நின்றவுண்கண்களின்றிது நம்மால்வந்ததாகலிற் பொறுத்தல்வேண்டுமெனக் கூறுபடுத் துணராது துன்ப முழப்ப தென்கருதி யென்பதாம். *விளைவது பிரிந்துபோய் வாராமையால்,காணுதற் கரியராக வருந்துதல். முன்னேவருவதை அறிந்து காவாதார்க்கு அதுவந்த வழிப் பொறுத்தலன்றே-உள்ளது அதுவும் செய்யாது வருந்துதல் மிகுந்த அறியாமையாலாகிய செயலென்பதாம். (௨)

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு ……… ……… *
மிதுநகத் தக்க துடைத்து ……………………… *

[இதுவுமது.] இ-ள். (இக்கண்கள்) கதுமெனத்தாநோக்கி, (அன்றுகாதலரைத்)தாமேவிரைந்துநோக்கி-தாமேகலுழும், (இன்றும்) தாமேயிருந்து அழுகின்ற- இது,இவ்வறியாமைச்செயல்- நகத்தக்கது,(நம்மாலே)சிரிக்கத்தக்க இயல்பை-உடைத்து-உடையது(.எ-று.) (கருத்து) இக்கண்களன்றுகாதலரைத்தாமேவிரைந்துநோக்கியின்றுந்தாமே யிருந்தழுகின்றவிது நம்மாற்சிரிக்கத்தக்க வியல்பினையுடைத்தென்பதாம். * கண்களென்பது- அதிகாரத்தால்வந்தது-அ.

ச்செயல்-வருமுன்னேகாப்பார்க்கு நகைவிளைக்குமாதலால்- நகத்தக்கதுடைத்தென்றாள். (௫)

பெயலாற்றா நீருலர்ந்த வுண்க ணுயலாற்றா............ *
வுய்வினோ யென்க ணிறுத்து.......................... *

(இதுவுமது.) இ-ள். உண்கண், (இத்தன்மை) யுண்டகண்கள்-உயலாற்றா, (நான்பிழைக்கமாட்டாமைக்கு ஏதுவாகிய-உய்வினோய்- ஒழிவில்லாத நோயை - என்கண், என்னிடத்து- நிறுத்து, நிறுத்தி - பெயலாற்றா; (தாமும்) அழமாட்டாதவண்ணம்- நீருலர்ந்த, நீர்வற்றிவிட்டன. (எ-று) (கருத்து) உண்கண்கள் யானுய்யமாட்டாமைக் கேதுவாகிய வொழிவில்லாத நோயையென் கண்ணே நிறுத்தித் தாமுமழுதலைமாட்டாவாம் வண்ணம் நீர் வற்றிவிட்டன வென்பதாம். ❁ நிறுத்தல் பிரிதலும் பின்கூடாமையுமுடையானை எனக்குக்காட்டி அதனால்நோயை நிலைபெறச் செய்தல் முன்னெமக்குத் துன்பங்கள்செய்தலால் பின்தமக்குத் துன்பங்கள் தாமே வந்தன, வென்பதாம். (௬)

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்................ *
காமநோய் செய்தவென் கண்............................ *

[இதுவுமது] இ-ள்.) (எனக்கு) கடலாற்றாகடலும்சிறிதாம்வண்ணம் (பெரிதாகிய) காமநோய் காமநோயை செய்த செய்த என்கண் எனது கண்கள் (அத்திவிபினாலே) படலாற்றா (தாமும்) தூங்குகிலவாகி பைதலுழக்கும் துன்பத்தையும் அனுபவிக்கின்றன எ-று) (கருத்து) எனக்குக்கடலுஞ்சிறிதாம் வண்ணம்பெரிதாய் காமநோயைச்செய்த வென்கண்களத் தீவினையாற் றுமுந்துயி லிலவாய்த் துன்பமுமுழவாநின்றன வென்பதாம். ❁ காமநோய் * காட்சியால்வந்ததாகலால், அதனைக்கண்கள் செய்ததாக்கிச்சொல்லினாள். துன்பம் அழுதலாலாகியது. (௭)

ஓஒவினிதே யெமக்கிந்நோய் செய்த கண்..................... *
டாஅ மிதற் பட்டது...................................... *

[இதுவுமது.] (இ-ள்.) எமக்கு'எமக்கு - இந்நோய், இக்காமநோயை-செய்த, செய்த- கண், கண்கள் - தாம், தாமும் - இதற்பட்டது, இத்தூங்காமல் அழுதலிலேபட்டது! ஓஒவினிதே, மிகவும் இனிதாயிற்று (எ-று.) (கருத்து) எமக்கிக்காமநோயினைச் செய்த கண்கடாமுந் துயிலாதழுதற்கண்ணேபட்டனமிகவுமினிதாயினவென்பதாம். ❁ ஓஒவென்பது, மிகுதிப்பொருளில் வந்குறிப்புச்சொல், தம்மால் வருத்தமடைந்த எமக்கு அவ்வருத்தம் தீர்த்ததுபோன்றதென்பதாம்

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து.................. *
வேண்டி யவர்க்கண்ட கண்.......................................... *

[இதுவுமது.](இ-ள்.)விழைந்து-விரும்பி- இழைந்து- உட்குழைந்து வேண்டி-வேண்டி- அவர்க்கண்டகண்- (அன்று) அத்தலைவனைப்பார்த்தகண்கள்-உழந்துழந்து - (இன்று தூங்காமல் அழுதற்றுன்பத்தை)அனுபவித்து அனுபவித்து-உண்ணீர் - (தம்) முள்ளிருக்கிறநீர்-அறுக-அற்றுப்போகுக. (எ-று.) (கருத்து) விழைந்துண்ணெகிழ்ந்துவிடாதேயன்றவனைக் கண்டகண்களினித் துயிலாதழுங்கலாகிய துன்பத்தினை யுழந்துழந்து தம் மகத்துள்ளாகிய நீரற்றே போகவென்பதாம். ☼ அடுக்கு; இடைவிடாமையில் வந்தது. (எ)

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்.............. *
காணா தமைவில கண்............................................ *

இது-காதலர் பிரிதற்போகவில்லை அவர் இங்கே இருக்கிறார்அவனைப்பார்க்குமளவும் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்.) பேணாது- (மனத்தால்) விரும்பாதிருந்து-பெட்டார்- (சொல்லுமாத்திரத்தால்) விரும்பியவர் - உளர்மன்- (இங்கே)யிருக்கின்றார். அவ்விருத்தலாலே பயன்யாது-கண்-கண்கள் மற்று-அவர்க்காணாது - அவனைக்காணாமல்-அமைவில-பொறுக்கின்றில. (எ-று.) (கருத்து)நெஞ்சால்விழையாது வைத்துச்சொன்னமாத்திரத்தால் விழைந்தவரிவ்விடத்தேயுள ரவ்வுண்மையாற் பயன்யாதவனைக்கண்கள் காணாதமைகின்றன வில்லையாயி னென்பதாம். ☼ செபலாற்பிரிந்து நின்றமையால், பேணாதென்றும் - முன்னே நலம்பாராட்டி*பிரிவச்சமும்,*வனபுறையும் சொல்லினாராதலால், பெட்டாரென்றும்-சொல்லினாள். மன், ஒழியிசை. மற்று, வினைமாற்று ஒ; அசைநிலை-யான்பொறுக்கவும் கண்கள் அவனைக்காணுதற்கு விரும்புகின்றனவென்பதாம். (அ)

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை.................. *
யாரஞ ருற்றன கண் ................................................ *

இது - நீயும்பொறுத்து உன்கண்களும் தூங்கல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. (இ-ள்.) வாராக்கால்-(காதலர்)வாராதநாள்களிலே-துஞ்சா-(அவர்வரவுபார்த்துத்)தூங்காவாம். வரின்- வந்தநாள்களிலே-துஞ்சா-(அவர்பிரிவனென்று அஞ்சித்) தூங்காவாம். (ஆகலால்) ஆயிடை- அவ்விருவழியும்-கண்-எனதுகண்கள்- ஆரஞருற்றன- பொறுத்தற்கரிய துன்பத்தையுடையனவாம்,(எ-று.) (கருத்து) தூங்

லர்வாராத ஞான்றவர்வரவுபார்த் தத்துயிலாதுவந்த ஞான்றவர்பிரி வஞ்சித்துயிலாவாகலா னவ்விருவழியு மென்கண்கள்பொறுத்தற்கரி ய துன்பத்தினை யுடையவென்பதாம். ※ இனி அக்கண்களுக்குத்தூக் கம்ஒருநாளும் இல்லையென்பதாம். (௬)

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ................... ※
லறைபறை கண்ணா ரகத்து........ ......... ............... ※

[இது-காதலனா இவ்வூரார் இயற்பழியாமல் அவர்கொடுமையை மறைத்தல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.] இ-ள். எம் போல், எம்மைப்போலும்- அறைபறை கண்ணார், அறைபறையாகி ய கண்ணையுடையவர் - அகத்து, (தமது) நெஞ்சிலடக்கிய - மறை பெறல் - இரகசியத்தை அறிதல்; ஊரார்க்கு - இவ்வூரி லுள்ளவர்க்கு அரிதன்று-எளிது (எ,று,) (கருத்து) எம்மைப்போலு மறையாகி றைபறையாகியகண்ணினை யுடையாதந் நெஞ்சின கண்டங்கியம றையையறிதலிவ்வூரி லுள்ளார்க்கெளிதென்பதாம். ※ ஆல் - அசை மறையென்றது இவ்விடத்து மறைக்கப்படுவதனை-உள்ளே நிகழ்வ தைப் புறத்திலுள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலாலே பறையோ டொற்றுமை யுடைமையால் அறைபறையாகிய கண்ணென்றாள், யான் மறைக்கவும் இவைவெளிப்படுத்துகின்றன வென்பதாம். (௰)

# ௱௰௯-ஆம்-அதி-பசப்புறுபருவரல்.

அஃதாவது - பசப்புறுதலாலாகிய வருத்தம். பசப்பாவது- பிரிவுபொறுமையால் வருவதோர் நிறவேறுபாடு. இது தலைவ னைக்காணப்பெறாத விடத்து நிகழ்வதாகலால் கண்விதுப் ப ழிதலின் பின்வைக்கப்பட்டது.

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்.........※
பண்பியார்க் குரைக்கோ பிற.............................. ※

[இது - முன்பிரிவிற்கு உடன்பட்ட தலைவி அதுபொறுமை பசப் புநிற மடைந்தவிடத்துத் தன்னுள்ளேசொல்லியது.] இ-ள். நயந்த வர்க்கு-(என்னை) விரும்பியதலைவர்க்கு-நல்காமை - பிரிவை - நேர்ந் தேன் (அப்போது) உடன்பட்டநான் - பசந்த-(அதனைப் பொறு

※பிரிவச்சம் - பிரிதற்கு அஞ்சுதல் ※ வன்புறை - கைவிடேனென்று பலவிதவுறுதி சொல்லல்.

மல் இப்பொழுது) பசப்புநிறமடைந்த - என்பண்பு-என்னியல்பை-யார்க்கு-எவர்க்கு-உரைக்கோ-சொல்வேன் (எ-று.) (கருத்து) என்னை நயந்தவர்க்கது பொழுது பிரிவை யுடம்படடயானதனை யாற்றுதிது பொழுதுபசந்த வென்னியல்பினை யார்க்குச்சொல்லுவேனென்பதாம். ❁ பிறவென்றது, அசைநிலை, தான்உடன் படாத விடத்துப்பிரி வொழிதல் குறித்துப்பிரிவைத் தனக்குஅறிவித்தா ராகலால், அவரன்புடையரொன்னுங் கருத்தால், நயந்தவரொன்றும்- இதுவே உடன்பாடாகமேலும் பிரிவுநிகழுமாகலால் இனி அவரைக்கூடுதல் அரிதென்னுங்கருத்தால், நல்காமை யென்றும், முன்னே உடன் படுதலும்பின்னேபொறுமல் பசத்தலும் பிறர்செய்தவை யல்லவென்றற்கு, பசந்தவென்பண்பென்றும், யான் செய்துகொண்ட துன்பத்தை இனி ஒருவர்க்குச்சொல்லுதலும் பழியாமென்னுங்கருத்தால், யார்க்குரைக்கோவென்றும், சொல்லினள். (க)

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென் ......... *
மேனிமே லூரும் பசப்பு .......................... *

இது-பொறுளென்று கவலையுற்ற தோழிக்குத்தலைவி பொறுப்பேனென்பது தோன்றச் சொல்லியது. (இ-ள்.) (நான் பொறுத்திருக்கவும்) பசப்பு-இப்பசப்புநிறம்-அவர்-அவர் - தந்தாரென்னுந்தகையால்-(என்னை) உண்டாக்கினுரொன்னுங் களிப்புமிகுதியால் - என்மேனிமேல் என்னுடம்பின்மேல்-இவர்தந்து-ஏறி- ஊரும் - செலுத்தாநின்றது- (எ-று.) (கருத்து) யானுந்தியுளே னுகவுமிப் பசப்புத்தானென்னையுண்டாக்கினு ரவரொன்னும்பெருமிதத்தானென்மேனியை மேல்கொண்டு செலுத்தாநின்றதென்பதாம். ❁ இது உரிமைபற்றி ஊர்கின்றது இதற்கு நீ கவலைப்படாதே யென்பதாம். (உ)

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு .... ............ *
நோயும் பசலையுந் தந்து .... ..................... *

இது - அழகு நாணமுங் கெடாமல் நீ பொறுத்தல் வேண்டுமென்றதோழிக்குத் தலைவி சொல்லியது. (இ-ள்.) (பிரிகின்றபொழுதே) நோயம்பசலையும்-இக்கைம்மாறு-(அவ்விரண்டிற்கும்) தலைமாறுக - நோயம்பசலையும்-இக்கைம்மாறு-(அவ்விரண்டிற்கும்) தலைமாறாக - காமநோயையும் பசலையையும்-தந்து-(எனக்குத்) தந்து- சாயலுநாணும்-(என்மேனி) யழகையும்-நாணத்தையும் - அவர் - அவர் - கொண்டார்-கொண்டுபோயினுர். (எ-று.) (கருத்து) பிரிகின்றஞான்றேயவ்விரண்டிற்குந் தலைமாறுக விக்காமநோயினையும் பசலையையுமெனக்குத்தந்தெனமேனி யழகினையும் நாணினையு மவர்கொண்டு நீங்கினுரொன்பதாம். ❁ நோய்க்கு, நாணும் பசலைக்கு, சாயலும்- ஆதலால்-எதிர் நிரனிறை- அடக்குந்தோறுமிகுதலால்நோய், நாணுக்குத்த

லேமாருயிற்று, இனிஅவர் தந்தாலல்லது அலைவஉண்டாதலும்-இவை இலவாதலும்-கூடாவென்பதாம். (௩)

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்..................... *
கள்ளம் பிறவோ பசப்பு.............................................. *

இது- பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும், அவர் நற்குணங்களையும்- அறிவாயாகையால் அவர் விரைந்து வருவாரென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்-) யான்-நான்-உள்ளுவன் - (அவர் சொற்களை மனத்தால்) நினைக்கின்றேன் - உரைப்பது - வாயால்சொல்லப்படுவதும்)-அவர்திறம்-அவர்நற்குணமே- (அப்படிச் செய்யாநிற்கவும்)பசப்பு-பசலைநிறம்- (வந்துநின்றது) - கள்ளம் - (இது)வஞ்சனையாயிருந்தது. (எ-று) (கருத்து) அவர்சொற்களை யான்மனத்தானினையாநிற்பேன் வாக்காலுரைப்பது மவர்நற்றிறங்களையேயங்ஙனஞ் செய்யாநிற்கவும் பசப்புவந்துநின்ற திதுவஞ்சனையா யிருந்ததென்பதாம். ✲ பிறவும்,ஓவும்-அசைநிலைகள். மெய்- மற்றைமனவாக்குகளின் வழியுள்ளதாகலால்- அதனிடத்தும் வருந்தன்மையதன்றாயிருக்கவந்தபடியால் இதன்செயல் கள்ளமா யிருந்ததென்று தான் பொறுக்கின்றமை சொல்லியபடியாயிற்று. (௪)

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்.......... ..... *
மேனி பசப்பூர் வது........................................... .. *

[இது-தலைவர் பிரிந்து சமீபமாயிருக்கவும் நீபொறுக்கின்றிலையென்றதோழிக்குத் தலைவிமுன்னே நிகழ்ந்தது சொல்லியது.] (இ ள்.) உவக்காண்-அக்காலத்து-எங்காதலர்-எமதுதலைவர்- செல்வார்-(பிரிந்து)செல்வாராக- என்மேனி - எனதுவடிவம் - பசப்பூர்வது பசலைநிறமடைவது-இவக்காண்-இங்கேயன்றோ. (அப்படிப்பட்டது இன்றுவேறென்றுமோ.) (எ-று.)(கருத்து) பண்டுநங்காதலருஞ்செல்வராக வென்மேனிப்பசப்பூர்வ திங்கேயன்றோவப் பெற்றியதின்று பிறிதொன்றுமோ வென்பதாம். ✲ உவக்காண் இவக்காணென்பன ஒட்டிநின்றவிடைச் சொற்கள். அவர்செலவும் பசப்பினதுவரவும்பகலிரவுகளின் செலவு வரவுகள் போல்வதை அறிந்திருந்தும்அறியாதாய்போல் நீ சொல்லுகின்றது என்னையென்பதாம். (௫)

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்.......... *
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு ................................ *

இதுவுமது. (இ-ள்.) விளக்கு - விளக்கினது - அற்றம்பார்க்கும் சோர்வுபார்த்து நெருங்கிவருகிற - இருளேபோல் - இருளைப்போலவே-பசப்பு-இப்பசலைநிறம்- கொண்கன் - தலைவனது - முயக்கு-

புணர்ச்சியினது- அற்றம்பார்க்கும் - சோர்வுபார்த்து நெருங்கிவரு ம். (எ-று.) (கருத்து) விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவருமி ருள்போலக் கொண்கனது முயக்கினது மெலிவு பார்த்து நெருங்கி வருமிப்பசப்பென்பதாம். ※ முன்பிரியா திருக்கவும் தனக்குச்சமய ம்பார்த்துவருகிறபசப்புப்பிரிவுபெற்றால்என்னசெய்யாதென்பதாம்.

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி.........※
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.............※

இதுவுமஃது. (இ-ள்.) புல்லிக்கிடந்தேன் - (முன்னொரு நாளிலேகா தலனைத்)தழுவிக்கிடந்தநான் - புடைபெயர்ந்தேன்- (அறியாது)ச ற்றுவிலங்கினேன்.-அவ்வளவில்-அவ்விலங்கிய வளவிலே - பசப்பு-ப சலைநிறமானது - அள்ளிக் கொள்வற்றே - அள்ளிக் கொள்ளப்படும் பொருள்போல் வந்துநிறைந்தது. (எ-று) (கருத்து) முன்னொருநா ன்று காதலனைப்புல்லிக் கிடந்தயானறியாது புடை பெயர்ந்தேனப் புடைபெயர்ந்தவளவிலே பசப்பள்ளிக்கொள்ள வதுபோலவந்துசெ றிந்ததென்பதாம். ※ கொள்ளவென்பது- குறைந்துநின்றது அப்பு டைபெயர்ச்சி மாத்திரத்திற்கு அப்படியாகியது- இப்பிரிவிடத்தது ஆகும்விதம் சொல்லவேண்டுமோ வென்பதாம். (எ)

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்...........※
துறந்தா ரவரென்பா ரில்.............※

இது - நீ இப்படிப்பசப்பு நிறமடைவது தகாதென்ற தோழியோ டுபிணங்கிச் சொல்லியது. (இ-ள்.) இவள்-இவள் பசந்தாளென்பதல் லால்-(பொறுத்திராமல்)பசலைநிற மடைந்தாளென்று (என்னைப்ப ழிசொல்லுவதல்லது-இவளை-இம்மாதை-அவர் - அவர் - துறந்தாரெ ன்பார்-துறந்துபோனாரென்று சொல்லுவார்.-இல்-இல்லை. (எ-று.)(க ருத்து) இவளாற்றியிராதுபசந்தாளென்றென்னைப்பழிகூறுதலல்லதி வளையவர்துறந்து போயினாரொன் றவனைக்கூறுவா ரொருவருமில்லை யென்பதாம். ※ தன்னையே நெருங்குதல்பற்றிப் பிணங்குகின்றமை யால் என்பாரெனவேறு படுத்திச்சொல்லினாள். (அ)

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்..........※
நன்னிலைய ராவ ரெனின்.............※

இதுவுமஃது. (இ-ள்.) நயப்பித்தார்-(இப்பிரிவையானே)உடன்படு ம்-வகைசொல்லியவர்-நன்னிலையராவரெனின் - (இன்றுஉன்கருத்தா ல்-நல்லநிலையினராவராயின்-என்மேனி-என்னுடம்பு - பட்டாங்(கா க)பட்டதுபட-பசக்க-பசலைநிறமடையக்கடவது. (எ-று.)(கருத்து) இப்பிரிவையானேயுடம்படும் வகைசொல்லியவரின்றுநின் கருத்தா

னல்லநிலையினராவராயி னென்மேனிபட்டது படப்பசப்ப தாகவெ ன்பதாம். ❁ நன்னிலையராதல்-நன்மைக்கண்ணே நிற்றலையுடையரா தல்-பட்டாங்காகவென்ன ஆக்கம்வருவித்துச் சொல்லப்பட்டது.-முன் இப்பிரிவின் கொடுமையறியாத என்னை இதற்கு உடன்படுத்திப்பிரிந் தவர் தவறிலராகவேவேண்டுவது என்மேனியும் பசப்புமடாதுசெய் யில்என்னவென்பது படநிற்கையால் மன்ஒழியிசையில்வந்தது. (௯)

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்........*

நல்காமை தூற்றா ரெனின் ...... ................ .......... .......*

இது-தலைவிபொறுத்தற்பொருட்டுத் - தோழிதலைவனையியற்பழி த்தவிடத்து அவள் இயற்படச்சொல்லியது. (இ-ள்.) நயப்பித்தார்- (அன்று) குறைநயப்பித்துக் கூடினவர்க்கு- நல்காமை (இன்று) அ ருளாமையை- தூற்றாரெனின் நட்புற்றோர்) -தூற்றாராயின் - பசப் பென பசப்புத் தாளுயினுளென்று (ஒற்றுமையால் தாம்) சொல் ல - பேர்பேறுதல் பேனாப்பெறுதல் - நன்றே- (எனக்கு) நன்றாம் எ-று. (கருத்து) அன்றுதாங்குறை நயப்பித்துக் கூடினவர்க்கின்று நல்காமையை நட்டோர் தூற்றாராயிற் பசப்புளாயினுளென வேற் றுமையானின்றிப் பசப்புற்றாளாயினுளென வொற்றுமையாற் றாஞ் சொல்ல வப்பெயரைப் பெறுதலெனக்குநன்றென்பதாம். ❁ நட்பு ற்றாரென்பது வருவிக்கப்பட்டது பாங்கி பழித்தற்குப் பொறுமற் பிணங்குகின்றாளாதலால் இகழ்ச்சிக்குறிப்பால் சொல்லினாள். அவ ரை அருளிலரென்னாது இன்னும் பசலை அடைந்தாள் இவளென்ப தே நான்பொறுக்கும் வழியென்பதாம் (௰)



## ௱௨௰-ஆம், அதி-தனிப்படர்மிகுதி

அஃதாவது தனியாகியதுன்பமிகுதியாம். அதுபசப்புற்றவரு ந்தினவளுக்கு உரியதாகலால் பசப்புறு பருவரலின் பின்வைக் கப்பட்டது.

தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர் பெற்றாரோ.....*

காமத்துக் காழில் கனி... ... ........... ..........*

இது-காதலர் உன்னினும்பொருதவராய்க் கடிதில்லே வருவார் நீ அவரோடு பேரின்பத்தை அனுபவிப்பா யென்றதோழிக்குசசொல் லியது. (இ-ள்.) தாம்வீழ்வார் தம்மாலே விரும்பப்பட்டகணவர் -த

ம்வீழ தம்மைவிரும்ப- பெற்றவர் பெற்றமகளிர்- காமத்து காமா
ஞபவத்தினது காழில் வித்தில்லாத- கனி பழத்தை- பெற்ருரோ பெ
ற்ருரன்றே எ-று. (கருத்து) தம்மாற் காதலிக்கப்படுங் கணவர் தம்
ண்மைக் காதலிக்கப்பெற்ற மகளீர் பெற்ருரன்றே காமநுகர்ச்சியென்
னும் பாலில்லாதபழத்தினை யென்பதாம். ❁ காமம் ஆகுபெயர் காமத்
தினது கனியென்றதில் என துயிரொன்பதுபோல் ஆருவது ஒற்றுமை
ப்பொருளில் வந்தது முன்னை நல்வினையில்லாதவிடத்துப் பெறக்கூ
டாமையால் பெற்ருரொன்றும் அவராலே தடையில்லாமல் அநுப
விக்கப் படுதலால் காழில்கனியென்றும் சொல்லினுள். 'நங்காதலர்பி
ரிதலேயல்லாமல் பின்வாராமையு முடைமையால அக்கனி நாம்பெ
ற்றிலே மென்பதாம். (௧)

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு · *
வீழ்வா ரளிக்கு மளி............................... *

இதுவுமது. இ-ள். (அறமும்பொருளும் இன்பமும்நோக்கிப்பிரி
ந்தால்) வீழ்வார்க்கு தம்மை)விட்டிருக்கமாட்டாதமகளிர்க்கு-வீழ்
வார் (அவரை) விட்டிருக்கமாட்டாதகணவர்- அளிக்கும் அளவறிந்
துவந்துசெய்கிற- அளி-தலையளி-வாழ்வார்க்கு (தன்னையேநோக்கி)
உயிர்வாழ்வார்க்கு - வானம் மழை - பயந்தற்று அளவறிந்துவந்து
பெய்வதுபோலும். எ-று. (கருத்து) அறமும்பொருளு நோக்கிப்பிரி
ந்தாற்றம்மையின்றியமையாமகளீர்க்கவரையின்றியமையாக் கண
வரளவறிந்துவந்து செய்யுந் தலையளி தன்னையேநோக்கியுயிர்வாழ்
வார்க்கு வானமளவறிந்து பெய்தாற்போலுமென்பதாம் ❁. நங்கா
தலர் நம்மை விரும்பாமையால் அத்தலையளியில்லையாகலால் மழை
வறந்தவிடத்து அதனுல் வாழாதார்போல் இறத்தலே நமக்கு உள்ள
தென்பதாம். (௨)

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே........... .... *
வாழுந மென்னுஞ் செருக்கு............................*

இதுவுமது. இ-ள். வீழுநர் - (தம்மால்) விரும்பப்படுகிற கணவ
ரால்- வீழப்படுவார்க்கு விரும்பப்படுகிற மகளிர்க்கு- (காதலர் பிரி
ந்தாலும் நம்மை நினைந்து கடிதில் வருவார்) வாழுநமென்னும் (வந்
தால் நாம் இன்புற்று) வாழ்வோமென்றிருக்கிற- செருக்கு தருக்கு
அமையுமே ஏற்புடைத்தாம். எ-று (கருத்து) தாம்விழைபுங் கணவ
ரால்விழையப்படு மகளீர்க்கேற்புடைத்துக் காதலர் பிரிந்தாராயி
னு நம்மை நினைத்துக் கடிதின் வருவர் வந்தாலு மின்புற்று வாழ்து
மென் றிருக்குந் தருக் கென்பதாம். ❁ நாம் அவரால் விரும்ப
ப்படாமையால் நமக்கு அமைவு இறந்து படுதலேயென்பதாம். (௩)

வீழப்படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்..........❋
வீழப்படாஅ ரெனின்...........................❋

இது- காதலனை இயற்பழித்தலுக்கு அஞ்சி அவரது அருளில்லாமையை மறைத்தால் நீ தெய்வத்தன்மை பொருந்திய கற்புடையையாகலால் கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுவாயென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்) வீழப்படுவார் கற்புடைமகளிராலே) நன்கு மதிக்கப்படுவாரும் தாம் வீழ்வார் தம்மால் விரும்பப்படுகிற கணவரால் - வீழப்படாஅரெனின் விரும்பப்பட்டாராயின்- கெழீஇயிலர் தீவினையுடையரேயாவர். எ-று. ❋ கற்புடைமகளிரானன்கு மதிக்கப்படுவாருந் தாம்விரும்புங் கணவரான் விரும்பப்படாராயிற் றீவினையாட்டியரென்பதாம். ❋ உம்மை விகாரத்தால் தொக்கது. கெழீஇயின்மை நல்வினையில்லாமை. தீவினையுடையேனுக்கு அந்நன்கு மதிப்பால் பயனில்லையென்பதாம். (௪)

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ.❋
தாங்காதல் கொள்ளாக் கடை...................❋

இது- அவர்மேலே காதலுடைமையால் அவர்கருத்தறிந்து பொறுத்தாயென்ற தோழிக்குச் சொல்லியது. (இ-ள்) நாங்காதல்கொண்டார் நம்மாலே காதல்கொள்ளப்பட்டவர். நமக்கு நமக்கு - எவன் என்னவின்பத்தை செய்ப செய்வார். (அப்படியே) தாங்காதல்கொள்ளாக்கடை தாமும் (நம்மிடத்துத்)காதல்செய்யாதவிடத்து எ-று (கருத்து) நம்மாற் காதல்செய்யப்பட்டவர் நமக்கென்ன வின்பத்தைச் செய்வரவ்வாறே தாமுநங்கட்காதல்செய்யாவழியென்பதாம் ❋ அக்காதலுடைமையால் நாம்பெற்றது துன்பமேயென்பதாம். (௫)

ஒருதலையா னின்னாது காமங்காப் போற..........❋
விருதலை யானு மினிது...........................❋

இதுவுமது. இ-ள். (மகளிர் ஆடவர் எனப்படுகிற இரண்டிடங்களிலும்) காமம் ஆசையானது ஒருதலையான் ஓரிடத்தில் (உண்டாயின்) இன்னாது துன்பஞ்செய்வதாம். காப்போல காவடிப்பாரம்போல்-இருதலையானும் இரண்டிடங்களிலும் (ஒத்திருக்குமாயின்)(அது) இனிது இன்பஞ்செய்வதாம். எ-று (கருத்து) மகளிராடவரென்னு மிருதலையினும் வேட்கை யொருதலைக்கண்ணேயாயி னஃதின்னாது காவினதுபாரம்போல விருதலைக்கண்ணு மொப்பினஃ தினிதென்பதாம். ❋ ஆனுருபுகள்கண்ணுருபின்பொருளில்வந்தன. கா அதன்பாரத்துக்கு ஆகுபெயர். என்னிடத்து உண்டாகியவாசை அவரிடத்துமுண்டாயின்நான் இப்படித்துன்பமனுபவித்தல்கூடுமோவென்பதாம்.

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம.............*
னொருவர்க ணின்றொழுகு வான்...........................*

இதுவு மது. (இ-ள்) (காமத்தை அனுபவித்தற்குரிய இருவரிடத்தும் ஒத்திருத்தலில்லாமல்) ஒருவர்கணின்று ஒருவரிடத்தே நின்று -ஒழுகுவான் போர்செய்கின்றவனாகிய - காமன் (அவ்விடத்துப்பசப்பாலாகிய) பருவரலும் நோயையும் பைதலும் துன்பமிகுதியையும் காணான்கொல் அறியானோ. எ-று. (கருத்து) காமநுகர்தற்குரிய விருவரிடத்து மொப்ப நிற்றலையொழிந் தொருவரிடத்தே நின்றுபோதுகின்ற காமக்கடவு ளவ்விடத்துப் பசப்பானாய் பருவரலும்படாமிகுதியு மறியான் கொல்லோவென்பதாம். ❋ விருப்பு வெறுப்பில்லாமல் எல்லாரிடத்தும் நிகழ்ந்தவை அறிதற்குரிய காமக்கடவுளும் என்னிடத்து வேறுபட்டான் இனிப்பிழைக்கும்வழியாதென்பதாம்.

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து...........*
வாழ்வாரின் வன்கணா ரில்...........................*

இது- தலைவனது தூதுவரக் காணாத தலைவிசொல்லியது.(இ-ள்.) வீழ்வாரின் (தம்மால்) விரும்பப்படுங் காதலரிடத்திருந்து-இன்சொல் ஓரின்சொலளவும்- பெறாஅது பெறாது வாழ்வாரின் (பிரிவுபொறுத்து) உயிர்வாழ்கின்ற மகளிர்போல்- வன்கணார், தைரியமுடையவர் உலகத்து உலகில் - இல் இல்லை. எ-று (கருத்து) தம்மால் விரும்பப்படுங் காதல் திறத்துநின்று மோரின்சொலளவும் பெறாதே பிரிவாற்றி யுயிர்வாழ்கின்ற மகளிரைப்போல வன்கண்மையுடையாரிவ்வுலகத்திலில்லையென்பதாம். ❋ காதலரிடத்துச்சொல் எதுவாயினும் எனக்கு இனிதாமென்னுங் கருத்தால் இன்சொலென்றாள். உம்மை விகாரத்தால் தொக்கது. நான்வன்கணே னாதலால் அதுவும் பெறாது உயிர்வாழ்கின்றேனென்பதாம். (௮)

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்..............*
டிசையு மினிய செவிக்கு...................................*

இதுவுமது. இ-ள். நசைஇயார் (என்னால்) விரும்பப்பட்டதலைவர்- நல்காரெனினும் (எனக்கு) அருள்செய்யாராயினும்- அவர்மாட்டு அவரிடத்து- இசையும் எச்சொற்களும் செவிக்கு என்காதுகளுக்கு- இனிய இன்பஞ்செய்வனவாம். எ-று (கருத்து) என்னா னச்சப்பட்ட காதலரென்க ணன்பிலரோயாயினு மவர்திறத்தி யாதானுமோர்சொல்லு மென்செவிக்கினிப வென்பதாம். ❋ இழிவு சிறப்பும்மை அவர் வாராரென்னுஞ் சொல்லாயினும் இனிதாய் அமையுமே

ன்பது படநின்றது. அச்சொல்லும் பெற்றிலே னென்பதாம். (௯)

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச் ........... ✻
செறாஅஅய் வாழிய நெஞ்சு ........................✻

இது- தலைவனது தூதுவரப் பெறாமல் தான் தூதுவிட நினைத்த வள் நெஞ்சொடு சொல்லியது. இ-ள். உறாஅர்க்கு (உன்னோடு உறா தவர்க்கு- உறுநோய் (உனது) மிகுந்தநோயை உரைப்பாய் சொல் லலுற்ற- நெஞ்சு நெஞ்சே (நீபொறாயாயினும் அரிதாகிய அதனை விட்டு) கடலை (உனக்குத் துயரஞ்செய்கின்ற) கடலை செறாஅஅய் தூர்க்கமுயற்சிசெய். (அது எளிது) எ-று. (கருத்து) நின்னோடுறா தார்க்கு நின்னுறுநோயுரைக்கலுற்ற நெஞ்சே நிற்றாயாயின் மரிதா யவதனையொழிந்து நினக்குத் துயரஞ்செய்கின்றகடலைத்தூர்க்கமுய ல்வாயாக வஃதெளிதென்பதாம். ❊ சொல்லலுற்றது அளவிறந்த நோயாகலாலும்- கேட்போர் உறவிலராகலாலும்- அது முடியாது முடிந்தாலும் பயன் இல்லையென்பது கருதாமல் முயல்கின்றாய் என் கிற குறிப்பால் வாழியவென்றார். (௰)



# ௱உ௰க-ஆம்-அதி- நினைந்தவர்புலம்பல்.



அஃதாவது- முன்கூடிய காலத்தி னின்பத்தை நினைந்து பாசறையிடத்துத் தலைவன் தனிமையடைதலும்- தலைவிதனிமையடைதலும் - ஆம். இது படர்மிகுதி தன்னிடத்ததாக நினைந்த தலைவிக்கும் உரித்தாகலால் இச்சம்பந்தம் பற்றித் தனிப்படர் மிகுதியின் பின்வைக்கப்பட்டது.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற் ............... ✻
கள்ளினுங் காம மினிது ................................... ✻

இது- தூதாய்ச்செல்லும் பாங்கனுக்குத் தலைவன் சொல்லியது. இ-ள். (முன் அநுபவித்த நாளையின்பத்தை) உள்ளினும் (பிரிந்தவிடத்து) நினைத்தாலும்- (அப்பொழுது பெற்றதுபோல்) தீராப்பெரு மகிழ்செய்தலால் நீங்காப் பெருமகிழ்ச்சியைத்தருதலால்-கள்ளினும் (உண்டபோதல்லது மகிழ்ச்சிசெய்யாத) கள்ளைப்பார்க்கிலும்- காமம் காமமானது இனிது இன்பந் தருதலையுடைத்து. எ-று. (கருத்து) முடியக்கூடிய ஞான்றை யின்பத்தினைப் பிரிந்தழி நினைந்தாலு மதுபொழுது பெற்றாற்போல நீங்காத மிக்கமகிழ்ச்சியைத் தருத லானுண் ஒழியல்லது மகிழ்செய்யாக்களினுங் காமமின்பம் பயத்தி

துடைத்தென்பதாம். ✲ தனது தனிமையும்- தலைவியைமறவாமை யும்-சொல்லியபடி. (க)

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம்வீழ்வார் ... ✲
நினைப்ப வருவதொன் றில் .... ... ........ ணை .......✲

இதுவுமது. இ-ள். தாம்வீழ்வார் தம்மால் விரும்பப் படுவாரை நினைப்ப (பிரிவினிடத்து) நினைந்தால்- (அந்நினைந்தவர்க்கு) - வருவதொன்று, (அப்பிரிவால்) வருவதோர் துன்பம் - இல், இல்லையாம் - (அதனல்) காமம், காமம்-எனைத்து, எவ்வளவாயினும் - ஒன்றினிதே காண், இன்பந்தருவதொன்றேகாண், எ-று. (கருத்து) தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கணினைந்தாலந் நினைவார்க்குப் பிரிவான்வருவதோர் துன்பமுமில்லையா மதனுற் காமமெத்துணையேனுமினியதொன்றேகாணென்பதாம். ✲ புணர்ந்தவிடத்தும் பிரிந்தவிடத்தும், சமமாகஇனிதென்றற்கு - எனைத்துமினிதென்றான் உம்மை தொக்கது. தான்பொறுத்திருந்தவகை சொல்லியபடி. (உ)

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்......✲
சினைப்பது போன்று கெடும்..... ... .... ........ ..... ✲

இது - தலைவனை நினைந்து வருந்துகின்ற தலைவி தோழிக்குச்சொல்லியது. இ-ள். (எனக்கு) தும்மல் - தும்மல் - சினைப்பதுபோன்று அரும்புதல் போலேதோன்றி- கெடும் - கெடுகின்றது - (அதனல்) நினைப்பவர்போன்று- (தலைவர்) என்னை நினைப்பவர்போன்று-நினையார் கொல்- நினையாரகயல்வேண்டும். எ-று. (கருத்து) எனக்குத் தும்மலெழுவதுபோன்று தோன்றிக் கெடாநின்றததனுற் காதலரென்னை நினைப்பார்போன்று நினையாராக வேண்டுமென்பதாம். ✲ தூரத்துள்ளாராகிய உறவினர் நினைந்தவிடத்து நினைக்கப்பட்டவர்க்குத்தும்மல் தோன்றுமென்கிற உலகநடைபற்றித் தலைவன் எடுத்துக்கொண்ட தொழில்முடிவதுபோன்று முடியாமையறிந்தவள் சொல்லியதாயிற்று. (ங)

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்✲
தோஒ வுளரே யவர் ......................... .........✲

இதுவுமது. (இ-ள்.) எந்நெஞ்சத்து- எமதுநெஞ்சத்தில்- அவர்- அவர்- ஓவுளரே- (எப்பொழுதும) உள்ளவராயே யிருக்கின்றார்-(அப்படியே) அவர்நெஞ்சத்து- அவரதுநெஞ்சிலும்-யாமும் - நாமும் உளேங்கொல்-உள்ளோமாகின்றேமோ (ஆங்கமோ) எ-று.(கருத்து) எம்முடைய நெஞ்சத்தவரெப்பொழுது முளரோ யாயிராநின்று ரவ்வகையே யவருடைய நெஞ்சத்தி யாமுமுள்ளமாதுமோ வாகாமோ

வென்பதாம். ❋ ஒகாரம் இங்கே இடைவிடாமையை உணர்த்திநின்
றது. யாம்இருந்தும் தொழில் முடியாமையால் வரவில்லையோ அது
முடிந்தும் யாம் இல்லாமையால் வரவில்லையோவென்பதுகருத்து.

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணர்கொ ❋
லெந்நெஞ்சத் தோவா வரல் ... ... ... ... ... ... ❋

இதுவுமது. (இ-ள்.) தந்நெஞ்சத்து - தமது நெஞ்சிடத்து- (யா
ப் செல்லாமல்) எம்மை எம்மை - கடிகொண்டார் - காவல்கொண்ட
தலைவர்- எந்நெஞ்சத்து- எமது நெஞ்சினிடத்து- ஓவாவரல்-ஒழியா
மல் (தாம்) வருதலுக்கு - நாணர்கொல்-நாணரோ. எ-று.(கருத்து)
தம்முடைய நெஞ்சின்கண் யாஞ்செல்லாமைக்காவல்கொண்டகாதல
ர்தா மெம்முடைய நெஞ்சின்கண் ணொழியாது வருதலை நாணர்கொ
ல்லோ வென்பதாம். ❋ ஒருவரைத் தம்மிடத்துவர ஒருகாலும் உட
ன்படாமல் தாம் அவரிடத்துப் பலகாலும்செல்லுதல்நாணுடையார்
செயலல்லாமையால் நாணர்கொலென்றாள். (ரு)

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரோடியா ... ❋
னுற்றநா ளுள்ள வுளேன் ... ... ... ... ... ❋

இது - அவரோடு கூடியநாளை யின்பத்தைநினைந்து வருந்துகின்
றாய் அதுமறத்தல் வேண்டுமென்றதோழிக்குத் தலைவிசொல்லியது-
(இ-ள்.)யான்-நான்-அவரோடு-அவரோடு-உற்றநாள்-புணர்ந்தநாளை
இன்பத்தை-உள்ள நினைத்தலால்-உளேன் -(இத்துன்பவெள்ளத்தில்)
உயிர்வாழ்கின்றேன்- மற்று - அதுஇல்லையாயின்- யான்-நான் - என்
னுளேன் - வேறே எத்தால் உயிர்வாழ்வேன். எ-று. (கருத்து)யானவ
ரோடு புணர்ந்த ஞான்றை யின்பத்தை நினைதலா னித்துன்ப வெள்
ளத்து முயிர்வாழ்கின்றே னதுவின்றாயின் வேறெற்றானுயிர்வாழ்வே
னென்பதாம். ❋ நாள் ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுண்டு அவை
பெற்றிலேனென்பது படநின்றமையால்மன் - ஒழியிசை. அவை அவ
னது தூதுவருதல் தனது தூதுசெல்லுதல் முதலானவை. அவையா
வும் இல்லாமையால் அதுவல்லாமல் எனக்குப் பற்றுக்கோடுஇல்லை
யென்பது கருத்து. (சா)

மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே ... ... ❋
னுள்ளினு முள்ளஞ் சுடும் ... ... ... ... ... ❋

இதுவுமது- மறப்பறியேன்- (அவ்வின்பத்தை) மறத்தலறியேனு
ம்-உள்ளினும்- இன்றுநினையாநிற்கவும்- (பிரிவானது) உள்ளம்- (எ
ன்) னுள்ளத்தை-சுடும்-சுடுகின்றது-(அப்படிப்பிரிவுபொறுத நான்)
மறப்பின்- மறந்தால்- எவனுவன்-எத்தால் இறவாதிருப்பேன். எ-று
(கருத்து) அவ்வின்பத்தை மறத்தலறியேனு யின்றுள்ளா நிற்கவும்

பிரிவென் னுள்ளத்தைச் சுடாநின்ற தங்ஙனம் பிரிவாற்றாத யான்மறந்தா லிறந்துபடாது ளெனுவதெற்றுமென்பதாம். ❊ மன்னென்பது- இங்கேயும் அவ்வொழியிசை. கொல்- அசை. (௭)

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ………*
காதலர் செய்யுஞ் சிறப்பு……………*

இது- இத்துன்பமறிந்துவந்து தலைவர் உனக்கு இன்பஞ்செய்வாரென்ற தோழிக்குச் சொல்லியது. (இ-ள்) காதலர் - தலைவரானவர்- எனைத்து நினைப்பினும்- (நான்தம்மை) எவ்வளவு மிகநினைத்தாலும் காயார்- அதற்குக் கோபியார் - செய்யுஞ்சிறப்பு - (அவர்எனக்குச் செய்யு மின்பமாவது- அனைத்தன்றோ- அவ்வளவன்றோ. எ-று. கருத்து தம்மை யானெத்துணையு மிகநினைந்தாலு மதற்கு வெகுளார் காதலரெனக்குச்செய்யு மின்பமாவ தவ்வளவன்றோ வென்பதாம். ❊ கோபியாமை அந்நினைத்தற்கு உடன்பட்டு நெஞ்சினிற்றல். தனக்கு அவ்வின்பத்திலும் சிறந்தது இல்லாமையால் அதனைச் சிறப்பென்றாள்- தோழிசொல்லிய வதனைக் குறிப்பால் இகழ்ந்துசொல்லியபடி.. (௮)

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா ……*
ரளியின்மை யாற்ற நினைந்து…………*

இது- தலைவன் தூதுவரக்காணாதுவருந்துகின்றவள் திடஞ்சொல்லுகின்ற தோழிக்குச் சொல்லியது- இ-ள்- வேறல்லமென்பார்-(முன்னெல்லா நாமிருவரும்) வேறல்லேமென்றுசொல்லுவாரது- அளியின்மை அருளில்லாமையை- ஆற்றநினைந்து- மிகவும்நினைந்து- என்னின்னுயிர் எனது இனிதாகிய வுயிர் - விளியும் - கழிகின்றது. எ-று. (கருத்து) முன்பெல்லா நாமிருவரும் வேறல்லமென்று சொல்லுவா ரதளியின்மையை மிகவுநினைந் தெனதினியவுயிர்கழியாநின்றதென்பதாம். ❊ அளியின்மை- பின் வருவாராதலுமாய்ப் பிரிதலும்- பிரிந்துவாராமையும்- அங்கே நின்றவிடத்துத் தூதுவிடாமையும்- முதலாயின. பிரிவுபொறுத்தல் வேண்டுமென்று திடஞ்சொன்னவளுக்கு என் னுயிர்பிரிவைக் குறித்தல்ல அவரன்பில்லாமையைக் குறித்துக் கழிகின்றதென்று எதிரழிந்து சொல்லியபடி. (௯)

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்……*
படாஅதி வாழி மதி…………*

இது- அத்திடஞ் சொல்லியவளுக்கு எதிரழிந்தவள் காமமிக்க அதிக துக்கத்தினாலே சொல்லியது. (இ-ள்.) மதி- சந்திரனே- விடாஅது (என்னெஞ்சை) விடாதிருந்தே- சென்றாரை- (விட்டுப்)போயினாரை (கண்ணினால்- கண்ணளவாலாயினும்- காண- எதிர்ப்படும்வகை பட

அதி (நீ) மறையாதிருப்பாயாக. எ-று. (கருத்து) மதியே யென்னெஞ்சினிடைவிடா திருந்தேவிட்டுப் போயினாராயா னென்கண்ணளவாயினு மெதிர்ப்படும்வகை நீ படா தொழிவாயாகவென்பதாம்❋ கண்ணளவா லெதிர்ப்படுதலாவது மதியிருவராலும் படுதலால் இருவர் கண்களும் அதனிடத்தே சேர்தல். குறையுறுகின்றாளாகலின் வாழியென்றாள். (௰)



# ௱௨௨-ஆம்- அதி கனவுநிலையுரைத்தல்



அஃதாவது- தலைவி தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லியது அக்கனவு* நனவினிடத்து நினைவு மிகுதியாலே கண்டதாகலால் இதுநினைந்தவர்புலம்பலின்பின் வைக்கப்பட்டது

காதலர் தூதொடு வந்த கனவினுக்.......................... *
யாதுசெய் வேன்கொல் விருந்து ........ .... .. *

இது - தலைவன் தூதுவரக்கண்ட தலைவிசொல்லியது. இ-ள். (யான் வருந்துகிறதை அறிந்து அதுதீரவிடுத்த)காதலர்-தலைவரது-தூதொடு- தூதைக்கொண்டு- வந்த- (என்னிடத்து)வந்த- கனவினுக்கு கனவினுக்கு- விருந்து-விருந்தாக-யாதுசெய்வேன், யாதுசெய்வேன்-எ று. (கருத்து) யான்வருந்துகின்ற தறிந்தது தீரக்காதலர் விடுத்த தூதினைக்கொண்டென்மாட் டுகெந்தசணவினுக் கியான்விருந்தாக யாதினைச்செய்வேனென்பதாம். ❋சொல் - அசை. விருந்தென்றது-விருந்திற்குச்செய்யும் உபசாரத்தை அது நனவிலேகாணுமையால் யாதுசெய்வேனென்றாள். (௧)

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க் .... .....*
குயவுண்மை சாற்றுவேன் மன் ..... .. .......... ..... .... *

இது-தூதுவிடநினைத்த தலைவிசொல்லியது- இ-ள்) கயலுண்கண்-(தூங்காதழிகின்ற)என்கயல்போலும் முண்கண்கள்-யான் - நான் இரப்ப-இரந்தால்- துஞ்சின் - தூங்குமாயின் - கலந்தார்க்கு(கனவிலேகாணப்பட்ட)தலைவர்க்கு- உயவுண்மை - பொறுத் திருக்கிறதன்மையை-சாற்றுவேன்-யானேவிரியச்சொல்லுவேன்.(எ-று)(கருத்து) துஞ்சாதுவருந்துகின்ற வென்கயலேபோலு, முண்கண்கள் யானிரந்தாற்றுஞ்சுமாயிற் கனவிடைக்காதலனைக் காண்பேன் கண்டாலவர்

*நனவு-சாக்கிரம் அதுவிழித்திருக்குங்காலம்-

க்கியோனாற்றியுளேனாயதன்மை யானே விரியச்சொல்லுவே னென்பதாம். ※ கயலுண்கணென்றாள்- கழிந்தநலத்திற் கிரங்கித் தூதர்க்கு யாம்சொல்லாமல் அடக்கப்படுவனவும்; சொல்லு மவைகளுள்ளும் சுருக்கப்படுவனவும்; ஆகிய இவைகளின் பரப்பெல்லாம் தோன்றச் சொல்லுவேனென்னுங் கருத்தால் சாற்றுவேனென்றாள். இனி அவையுந் துஞ்சுவன வல்ல சாற்றுவதும் கூடாதென்பதுபடநின்றமையால் மன் ஒழியிசை. முன்னுங் கண்டவள் சொல்லிய தாகலால் கனவுநிலை யுரைத்தலாயிற்று. (௨)

நனவினா னல்கா தவரைக் கனவினாற் ...... *
காண்டலி னுண்டென் னுயிர் ...... *

இது பொறுக்கமாட்டாளென்று கவலையுற்ற தோழிக்குப் பொறுப்பனென்பதுதோன்றத்தலைவிசொல்லியது. (இ-ள்.) நனவினான், நனவில்வந்து-நல்காதவரை-அருள்செய்யாததலைவரை - கனவினான் - கனவிடத்து-காண்டலின்- காணுதலால் - என்னுயிர் - என்னுயிரானது-உண்டு- நீங்காதிருக்கின்றது. (எ,று.) (கருத்து) நனவின்கண்வந்து தலையளிசெய்யாதவரை யான்கனவின்கட் காண்டலானே யென்னுயிருண்டாகாநின்றதென்பதாம். ※ ஆனுருபுகள் கண்ணுருபுப்பொருளில் வந்தன. அக்காணுதலாலே பொறுத்திருக்கின்றேனாகின்றேன். நீ கவலவேண்டாவென்பதாம். (௩)

கனவினா னுண்டாகுங் காம நனவினா ...... *
னல்காரை நாடித் தரற்கு ...... *

இதுவுமது. (இ-ள்.) நனவினான் - நனவில்வந்து - நல்காரை-அருள்செய்யாதவரை-நாடித்தரற்கு - (அவர்போனவிடந்) தேடிக்கொண்டுவந்து தருதலால்-கனவினான்-அக்கனவில்- காமம் - இன்பமானது-உண்டாகும்-(எனக்கு)உண்டாகின்றது. (எ-று.) (கருத்து) நனவின்கண்வந்து தலையளிசெய்யாதாரை யவர்சென்றுழிநாடிக் கொண்டுவந்து கனவுதருதலா லக்கனவின் கண்ணே யெனக்கின்பமுண்டாகாநின்றதென்பதாம். ※ காமம்- ஆகுபெயர். இயல்பாக அருள்செய்யாரை அவர்போன தேயம் அறிந்துபோய்க் கொண்டுவந்து அருள்செயவித்த கனவால் பொறுப்பனென்பதாம். (௪)

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான் ...... *
கண்ட பொழுதே யினிது ...... *

இதுவுமது. (இ-ள்.) நனவினான்-(முன்னே)நனவினிடத்து - கண்டதூஉம்-(தலைவனைக்)கண்டு அனுபவித்த வின்பமும் - ஆங்கே-அக்கண்டபொழுதே- (இனிது) இனிதாயிற்று. கனவுந்தான் - (இன்று)

கனவினிடத்துச் (கண்டு அனுபவித்தவின்பமும்) கண்டபொழுதே இக்கண்டபொழுதே-இனிது- இனிதாயிற்று. (அதனால் எனக்கு இரண்டுமொத்தன.) (எ-று.) (கருத்து) முன் நனவின் கணவனாக கண்டு நிகழ்ந்தவின்பந் தானுமினிதாயிற் றப்பொழுதே யின்று கனவின்கட்கண்டு நுகர்ந்தவின்பமுமது கண்டபொழுதே யினிதாயிற் றதனாலெனக்கிரண்டு மொத்தனவென்பதாம். ❁ இனி தென்பது முன்னும்கூட்டப்பட்டது. கனவு, ஆகுபெயர். முன்னும்யான்பெற்றது இவ்வளவே இன்னும் அதுகொண்டு பொறுப்பே னென்பதாம். (௫)

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற் ............ ❁

காதலர் நீங்கலர் மன் ................................ ❁

இதுவுமது. (இ-ள்.) நனவெனவொன்று - நனவென்றுசொல்லப்படுகின்றவொருபாவி-இல்லையாயின் - இல்லாவிட்டால் - கனவினால்-கனவினிடத்து வந்துகூடிய-காதலர்-தலைவர் - நீங்கலர் - (என்னைப்)பிரியார். (எ-று) (கருத்து) நனவென்றுசொல்லப்படுகின்றவொருபாவியில்லையாயிற் கனவின்கண்வந்து கூடியகாதல ரென்னைப் பிரியாரென்பதாம். ❁ ஒன்றென்பது, அதன்கொடுமை விளக்கிநின்றது. அது நடுவே புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்த தென்பதுபட நின்றமையால். மன், ஒழியிசை. கனவிலே பெற்றுப் பொறுக்கின்றமைசொல்லியபடி. (௬)

நனவினா னல்காக் கொடியார் கனவினா ............ ❁

னென் னெம்மைப் பீழிப் பது ............ ❁

இது. விழித்துத் தலைவனைக்காணாத தலைவிகனவிற் புணர்ச்சிநினைந்து பொறுமற் சொல்லியது. (இ-ள்.) நனவினான்-(ஒருதினமாயினும்)நனவில்வந்து- நல்கா - அருள்செய்யாத - கொடியார் - பாதகர்-கனவினான்-(தினந்தோறும்)கனவில்வந்து- எம்மை - எம்மை - பீழிப்பது-வருத்துவது-என்-எந்தச்சம் பந்தம்பற்றி. (எ-று.) (கருத்து) ஒருஞான்று நனவின்கண் வந்து தலையளி செய்யாத கொடியவர் நாடோறுங் கனவின்கண்வந்து நம்மைவருத்துவ தெவ் வியைபுபற்றியென்பதாம். ❁ தன்னைத்தனியே விட்டுப் பிரிதலும், பின்னினைந்துவாராமையும்-நோக்கி கொடியாரென்றும்-கனவிலே தோளின்மேலராய் விழித்தபோது மறைதலால் அதனாலும் துன்பயாகின்ற தென்றற்கு. பீழிப்பதென்றும்- சொல்லினாள். உலகத்தார், நனவிலே இல்லாதது கனவிலும் இல்லையென்பார் யாம் அதுகண்டிலமென்பதாம். (௭)

துஞ்சுங்காற் றோள்மேல ராகி விழிக்குங்கா ............ ❁

னெஞ்சத்த ராவர் விரைந்து ............ ❁

இது-தான்பொறுத்தற் பொருட்டுத் தலைவனை இயற்பழித்ததோழிக்குத் தலைவி இயற்படச்சொல்லியது. (இ-ள்.) (என்னெஞ்சுவிடாமல் உறைகின்றகாதலர்-துஞ்சுங்கால் (யான்) தூங்கும்போது - தோண்மேலராகி-தோளின்மேலுள்ளவராகி- விழிக்குங்கால் - (பின்)விழிக்கப்போது - விரைந்து - விரைவுற்று - நெஞ்சத்தராவர்-(பழைய) நெஞ்சினுள்ளவராவர்.(எ-று,)(கருத்து)என்னெஞ்சுவிடாதுறைகின்றகாதலர்யான்றுஞ்சும்பொழுதுவந் தென்றோண்மேலராய்ப்பின்விழிக்கும்பொழுதுவிரைந்துபழையநெஞ்சின் கண்ணராவரென்பதாம்.❁புணர்ச்சிவிட்டுமறைகிற கொடுமைபற்றிவிரைந்தென்றாள். ஒருகாலும்என்னைவிட்டுநீங்கியறியாதவரைநீநோவறுதகா தென்பதாம்.

நனவினா னல்காரை நோவர் கனவினாற்………………………❋
காதலர்க் காணா தவர்……………………………❋

[இதுவுமது.] இ-ள்,தமக்கு ஒருகாதலர்இல்லாமையாலே - கனவினான்- கனவிலே - காதலர்க்காணாதவர் - அக்காதலரைக்காணலறியாதமகளிர்! நனவினால்- (தாமறிய) நனவில்வந்து- நல்காரை - அருள்செய்யாத (எனது) காதலரை-நோவர் - (அன்பிலரென்று) நோவர்நிற்பர்(.எ-று,)(கருத்து) தமக்கொரு காதல ரில்லாமையி னவரைக்கனவிற்கண்டறியாத மகளீர் தாமறிய நனவின்கண்வந்து நல்காதவரையன்பிலரென்று நோவாநிற்பரென்பதாம். ❁ இயற்பழித்ததுபொறாது பிணங்குகின்றாளாகலால், பன்மைதோன்றச்சொல்லினாள் தமக்கும் தலைவருளராகஅவரைக் கனவிலே கண்டுஅறிவாராயின்நமது தலைவர் கனவினிடத்துதாம் அறியவந்து அருள் செய்தலறிந்து நோகாரென்பதாம். (௯)

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்………………………❋
காணார்கொ லிவ்வூ ரவர்……………………………❋

இதுவுமது. (இ-ள்.) இவ்வூரவர்-இவ்வூரின்மகளிர்-நனவினால்-நனவினிடத்து-நந்நீத்தாரென்பர் - நம்மைவிட்டு நீங்கினாரென்று(தலைவர்மேலேகொடுமை)சொல்லாநிற்பர்-கனவினான் - கனவினிடத்து-காணார்கொல் - (அவர்நீங்காது வருதலைக்) கண்டறியாரோ. (எ-று.) (கருத்து.) இவ்வூரின்மகளீர் நனவின்கணம்மைநீத்தாரென்று நங்காதலரைக்கொடுமைகூறுநிற்பாவாகனவின்கணீங்காதுவருதல்கண்டறியாரோ வென்பதாம். ❁ எனக்குந் தனக்கும்வேற்றுமையில்லையாயின்யான்கண்டது தானுங்கண்டு அமைவள் அதுகாணாது அவர்மேலே கொடுமைசொலலுகின்றமையால்-;அயலாளேயாமென்னுங் கருத்தால் இவ்வூரவரென்றாள். (௰)

இது-தான்பொறுத்தற் பொருட்டுத் தலைவனை இயற்பழித்ததோழிக்குத் தலைவி இயற்படச்சொல்லியது. (இ-ள்.) (என்னெஞ்சுவிடாமல் உறைகின்றகாதலர்- துஞ்சுங்கால் (யான்) தூங்கும்போது - தோண்மேலராகி-தோளின்மேலுள்ளவராகி- விழிக்குங்கால் - (பின்)விழிக்கும்போது - விரைந்து - விரைவுற்று - நெஞ்சத்தராவர்-(பழைய) நெஞ்சினுள்ளவராவர்.(எ-று,)(கருத்து)என்னெஞ்சுவிடாதுறைகின்றகாதலர்யான்றுஞ்சும்பொழுதவந் தென்றோண்மேலராய்ப்பின்விழிக்கும்பொழுதுவிரைந்துபழையநெஞ்சின் கண்ணராவரென்பதாம்.※புணர்ச்சிவிட்டுமறைகிற கொடுமைபற்றிவிரைந்தென்றாள். ஒருகாலும்என்னைவிட்டு நீங்கியறியாதவரை நீர்நோவதுதகாதென்பதாம்.

நனவினா னல்காரை நோவர் கனவினாற்..................※
காதலர்க் காணா தவர்....................................※

[இதுவுமது.] இ-ள்,தமக்கு ஒருகாதலர்இல்லாமையாலே- கனவினான்- கனவிலே - காதலர்க்காணாதவர்- அக்காதலரைக்காணலறியாதமகளிர்! நனவினால்- (தாமறிய) நனவில்வந்து- நல்காரை - அருள்செய்யாத (எனது) காதலரை-நோவர் - (அன்பிலரென்று) நோவர் நிற்பர்(.எ-று,)(கருத்து) தமக்கொரு காதல ரில்லாமையி னவரைக் கனவிற்கண்டறியாத மகளிர் தாமறிய நனவின்கண்வந்து நல்காதவரையன்பிலரென்று நோவாநிற்பரென்பதாம். ※ இயற்பழித்ததுபொறாது பிணங்குகின்றாளாகலால், பன்மைதோன்றச்சொல்லினள் தமக்கும் தலைவருளராகஅவரைக் கனவிலே கண்டு அறிவாராயின்நமது தலைவர் கனவினிடத்துதாம் அறியவந்து அருள் செய்தலறிந்து நோகாரென்பதாம். (௬)

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்......................※
காணார்கொ லிவ்வூ ரவர்..........................................※

இதுவுமது. (இ-ள்.) இவ்வூரவர்-இவ்வூரின்மகளிர்-நனவினால்-நனவினிடத்து-நந்நீத்தாரென்பர் - நம்மைவிட்டு நீங்கினாரென்று(தலைவர்மேலேகொடுமை)சொல்லாநிற்பர்-கனவினான் - கனவினிடத்து-காணார்கொல் - (அவர்நீங்காது வருதலைக்) கண்டறியாரோ. (எ-று.) (கருத்து.) இவ்வூரின்மகளீர் நனவின்க ணம்மைநீத்தாரென்றுநங்காதலரைக்கொடுமைகூறுநிற்பாவாகனவின்கணீங்காதுவருதல்கண்டறியாரோ வென்பதாம். ※ எனக்குந் தனக்கும்வேற்றுமையில்லையாயின்யான்கண்டது தானும்கண்டு அமைவள் அதுகாணாதுஅவர்மேலே கொடுமைசொலலுகின்றமையால்-;அயலாளேயாமென்னுங் கருத்தால் இவ்வூரவரென்றாள். (௭)

## ௱௨௩-ஆம்-அதி - பொழுதுகண்டிரங்கல்.



அஃதாவது - மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக் கண்டு தலைவி இரங்குதல். கனவுமுந்துறுதவினையில்லையென்பது பற்றிப்பகற்பொழுதுபொறுத்திருந்ததலைவிக்கு உரியதாகலால் இதுகனவுநிலையுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது

இது-பொழுதொடு பிணங்கிச் சொல்லியது. (இ-ள்.) பொழுது- பொழுதே-நீ-நீ-மாலையோவல்லை - (முன்னாள் களின்வந்த) மாலையோவல்லை.-மணந்தார்- (அந்நாள்களிலே காதலரைக்கூடிய) மகளிரது-உயிருண்ணும்-உயிரையுண்ணுகிற வேலை- முடிவுகாலமாயிருந்தாய். (எ-று.) (கருத்து)பொழுதே நீ முன்னாட்களின்வந்த மாலையோவெனி னல்லையாயிருந்தவாற்றுனந்நாட் காதலரை மணந்தமகளிருயிரையுண்ணு மிறுதிக்காலமாயிருந்தா யென்பதாம். ☼ முன்னாள்-கூடியிருந்தநாள். அந்நாள் மணந்தா ரெனவேயின் பிரிந்தாராதல் பெறப்பட்டது. வாழியென்பது குறிப்புச்சொல். (௧)

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை

இது-தலைவிதன்னுளனுபவத்தை மாலைப் பொழுதின் மேலிட்டுச்சொல்லியது. (இ-ள்.) மருண்மாலை - மயங்கிய மாலையே - (நீயும்)- புன்கண்ணை - (எம்போல்) ஒளியிழப்பை யுடையையா யிருந்தாய் வாழி-வாழ்வாயாக - நின் றுணை - உனது துணையும் - எங்கேள்போல்- எமது துணைபோல் வன்கண்ணதோ- இரக்கமில்லாமை யுடையதோ. (சொல்லு.) (எ-று.) (கருத்து) மயங்கின்மாலாய்நீயுமெம்மைப்போலப்புன்கணுடையையாயிருந்தாய் நின் றுணையு மென் றுணைபோலவன்கண்மையுடையதோ கூறுவாயாக வென்பதாம். ☼ மயங்குதல்-பகலும், இரவும்-தம்முள்ளேகலத்தல்-ஒளியிழத்தல் பற்றித் துணையும் உண்டாக்கிச் சொல்லினாள்.-துணையுமென்னு மும்மை விகாரத்தால் தொக்கது.-எமக்குத் துன்பஞ்செய்தாய் நீயும் இன்பமுற்றிலையென்னுங் குறிப்பால் வாழியென்றாள். (௨)

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்

இது - பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்

மையது. (இ-ள்.) (தலைவர் கூடியநாளெல்லாம்) - பனியரும்பி-(என் முன்னே) நடுக்கமடைந்து- பைதல்கொண்மாலை- பசந்துவந்தமாலையானது-துனியரும்பி-(எனக்கு) உயிர்வாழ்தலில் வெறுப்புண்டாகி-துன்பம்-(அதற்குஉண்டாகிற) துன்பம்-வளர-(ஒருகாலைக்கொருகால்)மிக-வரும்-வருகின்றது.(எ-று) கருத்து) காதலர்கூடியநாளெல்லாமென்முன்னடுக்கமெய்திப் பசந்துவந்தமாலையிந்நாளெனக்கிறந்துபாடுதோன்றியதற்குள் தாந்துன்பமொருகாலைக் கொருகால் மிகவளராநின்றதென்பதாம். ※ குளிர்ச்சிதோன்ற மயங்கிவரு மாலையென்னுஞ் செம்பொருள்-குறிப்பால் அறியநின்றது. யான் பொறுக்கும்வழி என்னென்பது குறிப்பெச்சம். (௫)

காதலரில்வழி மாலை கொலைக்களத் ............ ............ ※
ஏதிலர் போல வரும் ............ ............ ※

இதுவுமது. (இ-ள்.) மாலை-(தலைவர் உள்ளபொழுதெல்லாம் என்னுயிர்தளிர்க்கவந்த)மாலை- காதலரில்வழி-தலைவரில்லாத இப்பொழுது-கொலைக்களத்து-கொலைசெய்கிறகளத்து- ஏதிலர்போல - கொலைஞர்போல-வரும்-(அவ்வுயிரைக்கொள்ளுதற்கு)வருகின்றது. (எ-று.) (கருத்து) காதலருள்ளபொழுதெல்லாமென்னுயிர் தளிர்ப்பவந்த மாலை யவரில்லாதவிப்பொழுதொழிந்து நிற்றலேயன்றிக் கொல்லுங்களரியிற் கொலைஞர்வருமாறுபோல வவ்வுயிரைக் கோடற்குவாராநின்றதென்பதாம். ※ ஏதிலர் - அருள்யாதுமிலார். முன்னெல்லாம் எனக்குநட்பாயின்பஞ்செய்துவந்தபொழுதும் இன்று என்மேற்பகையாய்த் துன்பஞ்செய்து வருகின்றது யான் பொறுக்கும்வழி என்னென்பதாம். (௬)

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன் கொல்யான்... ※
மாலைக்குச் செய்த பகை ............ ............ ※

இதுவுமது. (இ-ள்.) (காலையும்-மாலையும் அவர் கூடிய நாள்-போலல்லாமல் இன்று வேறுபட்டு வருகின்றன. அவைகளுள்) காலைக்கு-காலைப்பொழுதிற்கு-செய்த-(என்னாலே) செயப்பட்ட- நன்று-உபகாரம்-என்-யாது-யான்-நான்- மாலைக்கு - மாலைப்பொழுதிற்கு-செய்த-செயப்பட்ட-பகை-அபகாரம்-எவன்-யாது,(எ-று.)(கருத்து) காலையுமாலையு மவர்கூடியஞான்றுபோ லாதிஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன வவற்றுள்யான் காலைக்குச்செய்த வுபகாரம் யாதுமாலைக்குச்செய்த வபகாரம் யாதென்பதாம். ※ கொல்லிரண்டும்-அசைகள். கூடியநாளிலே பிரிவாரென்று அஞ்சப்பண்ணியகாலை அதுநீங்கி இந்நாளிலே கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வருகின்றதென்னுங்கருத்தால் நன்றென்கொலென்றும், கூடியநாளிலேஇன்பஞ்செ

ய்கமாலை அதுநீங்கி இந்நாளிலே அளவில்லாத துன்பஞ்செய்யாநி ன்றதென்னுங் கருத்தால்- பகையென்கொமலென்றும், சொல்லினாள், பகை-ஆகுபெயர். தன்னோடு ஒத்தகாலைபோலிராமல்மாலை-தன்கொ டுமையால் துன்பஞ்செய்கின்றதென்பதாம். (௫)

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத................ *
காலை யறிந்த திலேன் ........ ............. ............... .... ... *

இது-இன்று இப்படிப்பட்டவளாகின்றநீ அன்று அவர்பிரிவிற்கு எப்படி உடன்பட்டாயென்றதோழிக்குத்தலைவிசொல்லியது.(இ-ள்.) மாலை (முன்னெல்லாம் எனக்குநட்பாய் இன்பஞ் செய்துவந்த)மாலை-நோயசெய்தல் - (இன்றுபகையாய்த்) துன்பஞ்செய்தலை - மணந்தார்-தலைவர்-அகலாதகாலை - பிரிதற்குமுன்னே - அறிந்திலேன்- அறியப்பெற்றிலேன், (எ-று.) (கருத்து) முன்னெல்லாமெனக்குநட்பாயின்பஞ்செய்துபோந்தமாலையின்று பகையாய்த்துன்பஞ்செய்தலைக்காதலர் பிரிவதற்குமுன்னே யறியப்பெற்றிலேனெனபதாம். ❊ இப்படிவேறுபடுதல் அறிந்திலேன் அறிந்தேனாயின் அவர்பிரிவிற்கு உடன்படேனென்பதாம், (௬)

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி............ ....... *
மாலை மலருமிந் நோய் ....... ...... ...... ........ ........... ...... *

இது - மாலைப்பொழுதில் இப்படிப்பட்டவளாகுதற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத்தலைவிசொல்லியது. (இ-ரு.) இந்நோய் இக்காமநோயாகிய (பூ) - காலையரும்பி - காலைப்பொழுதில் அரும்பி-பகலெல்லாம் போதாகி-பகற்பொழு தெல்லாம் பெரியஅரும்பாய்முதிர்ந்து - மாலைமலரும் - மாலைப்பொழுதில் மலர்கின்றது (எ-று.) (கருத்து) இக்காமநோயாகியபூக் காலைப்பொழுதின்கணரும்பிப் பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய்முதிர்ந்துமாலைப்பொழுதின்கண் மலராநிற்கு மென்பதாம். ❊ தூங்கியெழுந்தபொழுதாகலால், கனவிலேபுணர்ந்தமை நினைந்துபொறுத்தல்பற்றி- காலையரும்பியென்றும், பின்பொழுது செல்லச்செல்ல அது மறந்துபிரிவுநினைத்துப் பொறுளாதல்பற்றி-பகலெல்லாம்போதாகியென்றும், தத்தந்துணைகளை - நினைத்துவந்துசேரும் விலங்குகளையும் மக்களையும், கண்டுதான் அக்காலத்து அனுபவித்த இன்பததை நினைந்து பொறாமைமிகுதல் பற்றி-மாலைமலருமென்றும், சொல்லினாள். (௭)

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்......... .......... *
குழல்போலுங் கொல்லும் படை......... .................. *

இதுவுமது. (இ-ள்.) ஆயன்குழல் - (முன்னெல்லாம்இன்பஞ்செ

யீத) இடையனது வேணுநாதம் அழல் போலும்- (இப்போது) நெருப்புப்போலே சுடுவதாகி-மாலைக்குத்தூதாகி - மாலைக்குத்தூது மாகி- அம்மாலைவந்துஎன்னைக்கொல்லுமிடத்து) கொல்லும்படை- கொலைசெய்யும் படையுமாயிற்று. (எ-று.) (கருத்து) முன்னெல்லா மினிதாய்ப் பொருந்தவாயன்குழலின் றழல்போலச் சுடுவதாய் மாலைக் குத் தூதுமாய் வந்தென்னைக் கொலவுழிக்கொல்லும்படையுமாயி ற்றென்பதாம். ❁ பின்வந்தபோலுமென்பது, உரையசை.-முன்னே வரவை அறிவித்தலால் தூதாயிற்று.- கொல்லுதற்கருவியாதலால், ப டையாயிற்று.-தானேசுடவல்ல மாலை இந்தத்துணையையும்பெற்றால் என்னசெய்யாதென்பதாம், (அ)

பதிமருண்டு பைதலுழக்கு மதிமருண்டு.......... ............ *

மாலை படர்தரும் போழ்து........ .................... *

இதுவுமது. (இ-ள்.) (இதற்குமுன்னெல்லாம் யானே மதிமயங்கி நோயுழந்தேன்) மதிமருண்டு - (இனிக்கண்டாரும்) மதிமருளும் வகை-யாலை-மாலைக்காலம்- படர்தரும்போழ்து - வரும்பொழுது- பதி-இவ்வூரெல்லாம்-மருண்டு-மயங்கி- பைதலுழக்கும் - நோயை அனுபவிக்கும். (எ-று.) (கருத்து) இதற்கு முன்னெல்லாம் யானேம யங்கிநோயுழந்தே னினிக்கண்டாரு மதிமருளும் வகை மாலைவரும் பொழுதிப்பதியெல்லா மயங்கிநோயுழைக்கு மென்பதாம். ❁ பின்ம ருண்டென்பது, மருளவென்பதன் பொருளில்வந்தது. கூற்றமாகநி னைத்துச் சொல்லினளாகலால், மாலைபடர்தரும் போழ் தென்றாள்- யான் இறந்து படுவனென்பதாம். (கூ)

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை.......... *

மாயுமென் மாயா வுயிர்....... .......................... *

இதுவுமது. (இ-ள்.) என்மாயாவுயிர்-(பிரிவைப்பொறுத்து) இற வாதிருந்த என்னுயிரானது - பொருண்மாலையாளரை - பொருளி யல்பேதமக்கியல்பாக வுடையவரை-உள்ளி-நினைந்து- மருண்மாலை- இம்மயங்குமாலையிலே-மாயும்-மாய்கின்றது. (எ-று.) (கருத்து) காத லர் பிரிவைப்பொறுத்திறந்து படாதிருந்தவென்னுயிரின்றம் பொ ருளியல் பேதமாக்கியல்பாக வுடையவரை நினைந்திம்மயங்குமாலைக்க ண்ணேயிறந்து படாநின்றதென்பதாம். ❁ வருதற்குக் குறித்தபரு வம் கழியவும்-பொருண்முடிவுநோக்கி வாராமையால்- சொல்வேறு படாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப் பொருளியல்பே தம்மி யல்பாயினர். காலம் இதுவாயிற்று. இனிச்சொல்லுகின்றவிதத்தால் பயன் இல்லையென்பதாம்- (ய)



# ௱௨௰௪-ஆம், அதி - உறுப்புநலனழிதல்.



அஃதாவது - தலைவியினுடைய கண்ணும் - தோளும் - நெற்றியும், முதலாகிய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது இரக்கமிகுந்தவிடத்து நிகழ்வதாகலால் - பொழுதுகண்டிரங்கலின் பின்வைக்கப்பட்டது.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி ........ *
நறுமலர் நாணின கண்.......................... *

இது - பொறுமைமிகுதியால் வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது. (இ-ள்.) சிறுமை, இப்பொறுமை - நமக்கொழிய, நம்மிடத்துநிற்க - சேட்சென்றார் - நெடுந்தூரத்திலே சென்றதலைவரை உள்ளி - நினைத் தழுதலால்) - கண் - (உன் கண்கள் - (ஒளியிழந்து) - நறுமலர் - (முன்னே தமக்குநாணின) நல்ல மலர்களுக்கு - நாணின - (இன்று) நாணிவிட்டன. எ-று.) (கருத்து) இவ்வாற்றுமை நங்கண்ணேநிற்பத் தாஞ்சேணிடைச்சென்ற காதலரை நீநினைந்தழுதலா னின்கண்களொளியிழந்துமுன்றமக்கு நாணியநறுமலர்கட்கின்று தாநாணிவிட்டனவென்பதாம். ❁ உள்ளுதலென்பது - காரியத்துக்கு ஆகுதலால் - ஆகுபெயர் - இவைகண்டார் அவரைக் கொடியரென்று சொல்லுவர் நீபொறுத்தல் வேண்டுமென்பதுகருத்து. (௧)

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்................ *
பசந்து பனிவாருங் கண்.............................. *

இதுவுமது. (இ-ள்.) பசந்து - நிறம்வேறுபட்டு - பனிவாருங்கண் நீர்வார்கின்றகண்கள் - நயந்தவர் - (தம்மால்) விரும்பப்பட்டவரது - நல்காமை - அருள்செய்யாமையை - சொல்லுவபோலும் - (பிறர்க்குச் சொல்லுவபோலும் - (இனிநீபொறுத்தல்வேண்டும்). எ-று. (கருத்து) பசப்பெய் தன்மேல் நீர்வார்கின்றநின்கண்கணம்மானயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச்சொல்லுவபோலாநின்றனவினி நீயாற்றல்வேண்டுமென்பதாம். ❁ சொல்லுவபோலல் அதனை அவர் அறிதற்கு அநுமானமாக்குதல். (௨)

தணந்தமை சாலவறிவிப்ப போலு........................ *
மணந்தநாள் வீங்கிய தோள்.......................... *

இதுவுமது. (இ-ள்) மணந்தநாள் - (தலைவர்) கூடியநாளில் - வீங்கிய (இன்பமிகுதியால்பூரித்த) தோள் - (நினது) தோள்கள் - தணந்தமை - (இன்றுஅவர்) பிரிந்தமையை - சாலவறிவிப்பபோலும் - விளங்க

அறிவிப்பவைபோல் வாடுகின்றன. (இதுதகாது) எ-று. (கருத்து) காதலர்மணந்த ஞான்றின்மிகுதியாற் பூரித்த நின்றோளின்றவர் பிரிந்தமை விளங்கவுணர்த்துவபோல் மெலியாநின்றன விது தகாதென்பதாம். ❁ அன்றும்அப்படிப்பூரித்து. இன்றும் இப்படிமெலிந்தால் இரண்டுங்கண்டவர் கடிதில்அறிந்து அவலா தயோக்யெரொன்பாரொனபதாம். (ரு)

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்...... ✻
தொல்கவின் வாடிய தோள்.......................... ✻

இதுவுமது. (இ-ள்) துணைநீங்கி- (அன்றும்) துணைவர் நீங்குதலால் -(அவராலே பெற்ற செயற்கையழகுமாத்திரமல்லாமல்) -தொல்கவின்- பழைய இயற்கையழகும்- வாடியதோள்- இழந்த இத்தோள்கள்- (இன்று அதற்குமேலே) -பணைநீங்கி-(தம்) பெருமையிழந்து- பைந்தொடி- பசும்பொன்வளைகள்- சோரும்-கழலுகின்றன. (இவை இப்படிச்செய்யுந்தன்மையனவல்ல) எ-று. (கருத்து) அன்று தந்துணைவர் நீங்குதலால் வராற்பெற்ற செயற்கை யழகேயன்றிப்பழைய வியற்கையழகு மிழந்த வித்தோள்களின்றதற்குமேலே தம்பெருமைபிழந்து வளை கழலாநின்றன விவை யிங்ஙனஞ்செயற்பாலவல்லவென்பதாம்- ❁ அன்றும் பிரிந்தாரொன்று அவரன்பில்லாமையுணர்த்தி இன்றும் குறித்த பருவத்தில் வந்திலரொன்று அவர் பொய்மையுணர்த்துகின்றன. இனி அவைகளைச் சொல்லுகிறவர்மேல் குறையுண்டோவென்பதாம். (சு)

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு ✻
தொல்கவின் வாடிய தோள்...................... ✻

இதுவுமது. (இ-ள்) கொடியார்- (தழுவுங்கையிலகினும் பொறுதவளுக்கு இப்படிக்கால நீட்டிப்பில் என்னுமென்றுநினையாத) கொடியவரது- கொடுமை- பொல்லாங்கை- உரைக்கும்-சொல்லுகின்றன - தொடியொடு-வளைகளுங் கழன்று- தொல்கவின்வாடியதோள் பழைய இயற்கையழகு மிழந்த இத்தோள்கள் - (இனி அதனைமறக்கும்வழியாது.) எ-று. (கருத்து) கவ்வுக்கை நெகிழினுமாற்றாதாட்கிங்ஙனங் காலநீட்டித்ததென்னுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தான்சொல்லாநின்றன வளைகளுங் கழன்று பழைய வியற்கை யழகுமிழந்த வித்தோள்க ளினியதனை யாமறைக்குமாறென்னையென்பதாம். ❁ அவரோடு கலந்த தோள்களே சொன்னால் அயலார் சொல்லுதல்சொல்லவேண்டுமோவென்பதாம். (எ)

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக் ....✻
கொடிய ரெனக்கூற னொந்து ....................... ✻

இது - தான்பொறுத்தற் பொருட்டுத் தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்) (யான்பொறுக்கவும் என்வசப்படாமல்) தொடியொடு- வளைகள் கழலும்படி- தோணெகிழ - தோள்கள் வாட- (அவற்றைக்கண்டு) - அவரை- அவரை - கொடியரெனக்கூறல்- (நீ)கொடியரென்றுசொல்லலை- நொந்து- பொறாமல்-நோவல்- (என்னுள்ளே) நோகின்றேன்- எ-று. (கருத்து) யானாற்றவுமென்வயத்தவன்றித்தோடிகழலுமாறுதோள்கண்மெலிய வவற்றைக் கண்டுநீயவரைக் கொடியரெனக்கூறுதலைப் பொறாதி யானென்னுள்ளேநோவாநின்றே னென்பதாம். ☼யான் பொறுதலை னாகின்றது- அவர் வாரா திருத்தற்கல்ல நீசொலலுகின்றதற்கென்பதாம். (௬)

பாடுபெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென் ... *
வாடுதோட் பூசலுரைத்து ................ *

இது- அவ்வியற்பழித்தல்பொறாததலைவி தன்னெஞ்சிற்குச்சொல்லியது. (இ-ள்) நெஞ்சே- மனமே - கொடியார்க்கு - (இவளாலே கொடியாரென்று சொல்லப்பட்டவர்க்கு -என்வாடுதோள் -என்வாடுகின்ற தோளினால் விளைகிற- பூசல்- ஆரவாரத்தை- உரைத்து -சொல்லி-பாடு- ஒருமேன்பாட்டைப்பெறுதியோ-அடையவல்லையோ(வல்லையாயின் அதனையொப்பது இல்லை. எ-று. (கருத்து) நெஞ்சேயிவள் கொடியாரென்கின்றவர்க்கு நீசென்றென் மெலிகின்றதோளினால் விளைகின்றவாரவாரத்தைச்சொல்லியொரு மேம்பாடெய்தவல்லையோ வல்லையாயினதனையொப்பதில்லையென்பதாம். ☼கொடியார்க்கென்பது- கொடியரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல் வாடுதோளென்பது- அவைதாமே வாடாநின்றவென்பது தோன்ற நின்றது. உன்சொல்லைக் கேட்டவுடன் அவர்வருவர் வந்தால் இவையெல்லாம் நீங்கும் நீங்கலால் அது எனக்குக்காலத்தினாற்செய்த நன்றியாம் ஆகலால் அதன்பயனெல்லாம் அடைவாயென்னுங் கருத்தால் பாடுபெறுதியோவென்றாள். (எ)

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது ............... *
பைந்தொடிப் பேதை நுதல் .................... *

இது- தொழில் முடிந்துத் திரும்பிவருகின்ற தலைவன் முன்னடந்ததை நினைத்துத் தன்னுள்ளேசொல்லியது. (இ-ள்.) முயங்கிய கைகளை (தன்னை இறுகத்) தழுவியகைகளை - (இவளுக்கு நோமென்று நினைத்து)-ஊக்க, (ஒருதினம்) தவர்த்தினேனாக (அம்மாத்திரமும் பொறாமல்) பைந்தொடிப்பேதைநுதல், பசியவளைகளையணிந்தபேதையது நெற்றியானது- பசந்தது, நிறம்வேறுபட்டது. அப்படிப்பட்ட நெற்றி இப்பிரிவிற்கு யாதுசெய்யுமோ) (எ-று.)(கருத்து)தன்

ளை முயங்கியகைகளை யூக்குரோமென்று கருதியொரு ஞான்றி யானெகிழ்ந்தேனாக வத்துணையும் பொறாது பைந்தொடி யணிந்த பேதையது நுதல்பசந்ததப் பெற்றித்தாகிய நுதலைப் பிரியாதுசெய்யுமோவென்பதாம். ※ இனிக்கடிதிலே செல்லவேண்டுமென்பது கருத்து. (௮)

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற .... ... ※
பேதை பெருமழைக் கண்... ......................... .. ※

இதுவுமது. (இ-ள்). அப்படித் தழுவியகைகளைத் தளர்த்தலால்)-முயக்கிடை, அப்புணர்ச்சிக்கு நடுவே- தண்வளிபோழ, சிறுகாற்று நுழைந்ததாக- (அவ்வளவிடையூறும்பொறாமல்) பேதைபெருமழைக்கண், பேதையினது பெரியகுளிர்ந்தகண்கள்- பசப்புற்ற, பசலைநிறமடைந்தன. (அப்படிப்பட்டகண்கள்- மலைகளும் காடுகளும் நாடுகளும் ஆகிய இவ்விடையீடுகளையெல்லாம் எப்படிப் பொறுத்தன.) (எ-று.) (கருத்து) அங்ஙனங் கைகளை யூக்குதலானமுயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக வத்துணையிடை யீடுபொறாதுபேதையது பெரிய மழைக்கண்கள் பசப்புற்றன வத்தன்மையவானகண் கண்மலைகளுங் காடுகளுமாய வவ்விடையீடுகளையெல்லாம் யாங்ஙனம்பொறுத்தனவென்பதாம். ※ தண்மை இங்கே மென்மைமேல்நின்றது. போழவென்றது- உடம்பிரண்டும் ஒன்றுன்று தோன்றநின்றது(௯)

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே..........※
யொண்ணுதல் செய்தது கண்டு......................※

[இதுவுமது,](இ-ள்,)கண்ணின்பசப்போ- (சிறுகாற்று நுழையவந்த)கண்களின்பசப்போ! - பருவரலெய்தின்று- துன்பமடைந்தது, ஒண்ணுதல் -(தனக்கு அயலாகிய) ஒளிபொருந்திய நெற்றியால்-செய்தது- விளக்கப்பட்ட பசப்பை-கண்டு- பார்த்து. எ-று.) (கருத்து) தண்வளிபோழ்வந்தகண்ணின்பசப்புத் துன்பமுற்றது தனக்கயலாய வொண்ணுதல் விளைத்தபசப்பைக்கண்டென்பதாம். ※ அது கைகளைத் தளர்த்திய வளவிலே பசந்தது. யான் - கைகளையும் தளர்த்தி மெய்களும் நீங்கி அக்காற்று உள்ளே நுழையுமட்டும்பசந்திலே னென்று தன்வன்மையும், அதன்மென்மையும், கருதி வெள்கிற்றென்பதாம். ஆகவே அவளுறுப்புகள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும்பார்க்கடிதிலே செல்லுவோ மென்பது கருத்தாயிற்று. (௰)





# ௱௨௫-ஆம். அதி- நெஞ்சொடுகிளத்தல்



அஃதாவது - பிரிவுபொறுமை மேற்படத் தனக்கு ஓர்பற்றுக்கோடு காணாததலைவி தன்னெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல். இஃது உறுப்புக்கள் தமது நலனழிந்தவழி நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்குமருந்து.......... .... .. ... ...*

[இது- தன்பொறுமை தீருந்திறநாடியது. (இ-ள்)நெஞ்சே, மண்
மே- எவ்வநோய், ஒன்றாலுந் தீராதநோயை- தீர்க்குமருந்து, தீர்க்
குமருந்தாவது - ஒன்று, ஒன்றை - (நான்அறியும்படியாக) எனைத்
தொன்றும், எப்படிப்பட்ட தொன்றாயினும் - நினைத்து, அறிந்து-
சொல்லாயோ, (எனக்குச்) சொல்லாயோ .எ-று. (கருத்து)நெஞ்சே
யிவ்வெவ்வநோய் தீர்க்கு மருந்தா வதொன்றினையா னறியு மாற்றலி
னெத்தன்மையதி யாதொன்றாயினு நீயறிந்தெனக்குச்சொல்லென்ப
தாம். ☸ உயிரினுஞ் சிறந்த நாணினைவிட்டுச் செய்வது யாதொன்
றாயினு மென்றற்கு எனைத்தொன்றுமென்றாள். (க)

காதலவரில ராகநீ நோவது.................................*
பேதைமை வாழியென் னெஞ்சு .............................*

இது- தலைவி தலைவனைக் காணுதலிலே ஆசைமிகுதியால் சொல்லி
யது. (இ-ள்) என்னெஞ்சு- என்துநெஞ்சே- வாழி, வாழ்வாயாக-அ
வர், அத்தலைவர்- காதலிலராக, (நம்மேல்) ஆசையிலராகவும்-நீநோ
வது, நீ (அவர் வரவுபார்த்து) வருந்துதற்குக்காரணம்-பேதைமை
(உன்) னறியாமையேயாம். (வேறொன்றுஇல்லை) எ-று. (கருத்து)
என்னெஞ்சேவாழ்வாயாகவவர்நங்கட்காதலிலராகவுநீயவர்வரவுநோ
க்கிவருந்துதற்கேது நின்பேதைமையே பிறிதில்லையென்பதாம். ☸ த
ம்மைநினையாமையால்நம்மிடத்துஆசையிலரென்பதறியலாம்அதை
யறியாமை மேலும் அவரிடத்துப்போக நினையாது அவர்வரவுபார்
த்து வருந்துகின்றாய் இது நீ செய்துகொள்ளுகின்றதென்னுங் கரு
த்தால் பேதைமையேயென்றாள். வாழி இகழ்ச்சிக்குறிப்பு. யாம் அவரி
டத்துச் செல்லுதலே அறிவாவதென்பதாம். (உ)

இருந்துள்ளி யென்ப ரிதனெஞ்சே பரிந்துள்ளல்.*
பைதனோய் செய்தார்கணில்.......... .... .... ...*

இ-துவுமது (இ-ள்) நெஞ்சே, மனமே - இருந்து, (அவரிடத்துக்கும் போகாமல் இங்கேயும் இறந்திடாமல்) இருந்து- உள்ளி,(அவர் வரவை) நினைந்து- பரிதல் (நீ) வருந்துகின்றது என், என்னை - பைதனோய் செய்தார்கண் இத்துன்பநோய் செய்தவரிடத்து - பரிந்து, (நமக்கு) இரங்கி உள்ளல், (வர) நினைத்தல்- இல், உண்டாகாது.எ-று. (கருத்து) நெஞ்சே யவர்பாற்செல்வதுஞ் செய்யாதீண்டிறந்து படுவதுஞ் செய்யாதிருந்தவர் வரவு நினைந்து நீவருந்துகின்றதென் னை யிட்பையுளோய் செய்தார்மாட்டுநமக்கிரங்கிவரக் கருதலுண்டா காதென்பதாம். ※ நம்மிடத்து அருளுடையவ ரல்லாமையால் தாமாகவாரார் நாம் அவரிடத்துக்குச் செல்லுதலே இனித்தகுவதென் பதாம். (௫)

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்...※
தின்னு மவர்க்காணலுற்று... ...... ............ ... .....※

இதுவுமது. (இ-ள்) நெஞ்சே, மனமே (நீ அவரிடத்துச் செல்லவுற்றாயாயின்)-கண்ணுங் கொளச்சேறி,இக்கண்களையும் உடன்கொண்டுசெல்லு- (அல்லாமல் நீ மாத்திரம்செல்வாயானால்) இவை, இக்கண்கள்- அவர்க்காணலுற்று, அவரைக்காணல்வேண்டி- என்னை -தின்னும், (நீகாட்டென்று) தின்பவைபோல்வருத்தும்.எ-று. (கருத்து) நெஞ்சே நீயவர்பாற் செல்லலுற்றாயாயினிக் கண்களையுமுடன்கொண்டுசெல்வாயாகவன்றி நீயே செறியாயினிவைதாங் காட்சி விருப்பினலவனைக் காண்டல்வேண்டி நீகாட்டென் றென்னைத் தின்பனபோன்று நலியாநிற்குமென்பதாம். ※ கொளவென்பது - கொண்டென் பொருளில்வந்தது அந்நலிவுதீர்க்க வேண்டுமென்பதாம். என்றது தானும்செலல்குறித்து. (௬)

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா....※
முற்றா லுறா அ தவர்.... .... .. .... .. ...... ...... .. ※

இதுவுமது. நெஞ்சே, மனமே- யாம், நாம்-உற்றால். (தம்மை) விரும்ப- உறாஅதவர், (தம்மை) விரும்பாத தலைவனை - செற்றாரென, வெறுத்தாரொன்று நினைந்து- கைவிடல், (பிணங்கிக் கைவிட்டிருக்கும்வழி- உண்டோ, (நமக்கு) உண்டோ (இல்லை)எ-று. கருத்து) நெஞ்சேயாந் தம்மை யுறத்தா முறாத நங்காதலனை வெறுத்தாரொன்றாகருதிப் புலந்துகைவிட்டிருக்கும் வலிநமக்குண்டோ வில்லையென்பதாம். ※ அவ்வலியில்லாமையால் அவரிடத்துக்குச் செல்வதே நமக்குத் தகுவதென்பதாம். (௭)

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற்புலந்துணராய்※
பொய்க்காய்வு காய்தியென்னெஞ்சு................※

இது- தலைவன் கொடுமை நினைந்து செல்லுதற்கு உடன்படாத நெஞ்சினைக் கோபித்துச் சொல்லியது. (இ-ள்) என்னெஞ்சு, எனது நெஞ்சே - (யான் தம்மோடு பிணங்கினால்)- கலந்து, புணர்தலால்- உணர்த்துங்காதலர், (அப்பிணக்கை) நீக்கவல்ல தலைவரை - கண்டால் பார்த்தால்- புலந்து (பொய்யாகவாயினும் ஒருதரம்) பிணங்கி-உணராய், (பின்) அதனை நீங்கமாட்டாய்-(அதுவுமாட்டாத நீ இப்போது) பொய்க்காய்வு காய்தி, (அவரைக் கொடியரென்று) பொய்க்காய்வாக்காய்கின்றாய்- (இனி அதனையொழிந்து) அவரிடத்துச் செல்லத்துணி.) எ-று. (கருத்து) என்னெஞ்சே யான்றம்மோடுபுலந்தாலப் புலவியைக் கலவிதன்னானே நீக்கவல்லகாதலரைக்கண்டாற்பொய்யேயாயினுமொருகாற்புலந்துபின்னதனை நீங்கமாட்டாயதுவுமாட்டாத நீயிப்பொழுதவர்கொடியரெனப் பொய்க்காய்வு காயாநின்றாயினியிதனையொழிந்தவர்பாறசொல்லத்துணிவாயாக என்பதாம் ❋ புணர்தலால் உணர்த்தலாவது கலவியின்பத்தைக்காட்டி அதனால் மயக்கிப் புலவிக்குறிப்பையொழித்தல். கண்டால் வெறுக்கமாட்டாத நீகாணாதவழி வெறுக்கின்றதனால் பயன் இல்லையென்பதாம்.] (சு)

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே..................❋
யானோ பொறேனிவ் விரண்டு..................................❋

[இது- நாணம் தடுத்தலாலேஅச்செல்லுதலொழிபந்தலைவிசொல்லியது.]இ-ள். நன்னெஞ்சே - நல்லமனமே - காமம்விடுவென்று ஒன்று நாணம் விடமாட்டாயாகில்) காமவிருப்பத்தை- விடு- நாண்விடொன்று)ஒன்று(காமவிருப்பத்தைவிடமாட்டாயாகில்)நாணத்தை- விடு- (இரண்டும்விடாமை உன்கருத்தாகில்)இவ்விரண்டு(ஒன்றற்கொன்று பகையாகிய) இவ்விரண்டையும் - யானோ, தானோ பொறேன், (ஒருசேரத்) தாங்கவல்லேனல்லேன். எ-று. (கருத்து) நல்லநெஞ்சே காமவேட்கையை விடு ஒன்றினது விடமாட்டாயாயினாணினைவிடு அன்றியே யிரண்டும்விடாமை நின்கருத்தாயினொன்றற்கொன்று மறுதலையா யவ்விரண்டினையுமுடன் றாங்கும் வலியானில்லேனென்பதாம். ❋ யானோவென்னும் பிரிநிலை யோகாரம். நீபொறுப்பினுமென்பதுபடநின்றது. நன்னெஞ்சேயென்றது-இரண்டையும் விடாமல் பெண்மையை நிலைபெறச்செய்தலால்நல்லையென்னுங்குறிப்பாயிற்று. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதலபோதாமையால் அதற்கு ஆகின்றிலே னென்பதாம். இரண்டுமென்பதன் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (எ)

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்..........❋
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.................❋

இதுவுமது. இ-ள். என்னெஞ்சு, எனதுநெஞ்சே - அவர், அவர்-(இப்பொருமை அறியாமையால்) பரிந்து, நொந்துவந்து - நல்காரென்று- அருள் செய்யாராயினரென்று நினைந்து- (அதை அறிவித்தற்பொருட்டு) - பிரிந்தவர்பின், (நம்மைப்) பிரிந்துபோகிய தலைவர்பின்னே யேங்கி, துன்பமுற்று- செல்வாய், போகலுற்றநீ - பேதை, ஒன்றுமறியாய். எ-று. (கருத்து) என்னெஞ்சே யிவ்வாற்றுமை யறியாமையினொந்துவந்து தலையளி செய்யாராயினரென்று கருதி யஃதறிவித்தற்பொருட்டு நம்மைப்பிரிந்துபோ யவர்பின்னேங்கிச் செல்லலுற்ற நீயாதுமறியாயென்பதாம். ❁ பொருமையறிந்திருந்தும் அருள்செய்யாமல் போயினரைக் காணாதவிடத்தே நாம்போய் அறிவித்தமாத்திரத்தில் அருள்செயவருவரென்று நினைத்தமையால் பேதையென்றாள். (௮)

உள்ளத்தார் காதலவராக வுள்ளிநீ ......... ......... *
யாருழைச் சேறியென் னெஞ்சு ......... ......... * .

இதுவுமது. இ-ள். என்னெஞ்சு, எனதுநெஞ்சே- காதலவர், அன்பர்-உள்ளத்தாராக,(உன்) னுள்ளிருப்பவராக-(முன்னெல்லாங்கண்டிருந்தும்) நீ! உள்ளி, (இப்பொழுதுபுறத்தேதேடி) யாருழை, யாரிடத்து- சேறி, செல்லுகின்றாய். எ-று. (கருத்து) என்னெஞ்சே காதலர் நின்னகத்தாராக முன்பெல்லாங்கண்டுவைத் திப்பொழுதுநீபுறத்துத்தேடிச் செல்கின்றது யாரிடத்தென்பதாம். ❁ உன்னுளிருக்கிறவரைப் புறத்துத் தேடிச்செல்லல் நகையுடைத்து அதை யொழியென்பதாம். (௯)

துன்னத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா......*
வின்னு மிழத்துங் கவின் ......... ......... *

இது- அவரைமறந்து பொறுத்தல்வேண்டுமென்பது தோன்றச்சொல்லியது. இ-ள். துன்னு, (நம்மைக்) கூடாத வண்ணம் - துறந்தாரை, துறந்துபோயினரை- நெஞ்சத்துடையேமா, (நாம்) உள்ளுடையேமாக-(முன்னிழந்தபுறத்தழகேயன்றி) இன்னும் - இன்னமும்-கவின்-(அகத்)தழகையும் - இழத்தும் - இழப்பேம். எ-று.) (கருத்து) மேன்மைக் கூடாவண்ணந் துறந்துபோயினரை நா நமக்குளுடையேமாக முன்னிழந்த புறக்கவினே யன்றிநின்றவக் ககவினையுமிழப்பேமென்பதாம். ❁ அவர் நம்மைக்கூடாமல் துறந்தாராகவும்- நாம் அவரை மறக்கமாட்டேமாகவும்- போனமெய் யழகேயன்றி நின்றநிறையும் இழப்போமென்பதாம். (௰)

## ௱உகூ-ஆம்-அதி-நிறையழிதல்

அஃதாவது - தலைவிமனதிலே அடக்கப்படும் மறைகளை ஆசைமிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விடுதல். அது அழிதற்குக் காரணம் நெஞ்சொடு சொல்லுதலால் - இது நெஞ்சொடுகிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு ............... *
நாணுத்தாழ் வீழ்த்த கதவு ............... *

இது - நாணும் நிறையும் அழியாமல் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்.) நாணுத் தாழ்வீழ்த்த - நாணாகிய தாழினைக்கோத்த - நிறையென்னுங்கதவு - நிறையென்று சொல்லப்படுகிறகதவை - காமக்கணிச்சி - காமவேட்கையாகிய குந்தாலி - உடைக்கும் - முறிக்கின்றது. (இனி அவை நிற்றலும் இல்லையானொறுத்தலும் இல்லை.) (எ-று.) (கருத்து) நாணாகிய தாளினைக் கோத்த நிறையென்னுங் கதவினைக் காமவேட்கையாகியகணிச்சிமுறியாநின்றதினி யவைநிற்றலுமில்லை யானுற்றலுமில்லை யென்பதாம். ❋ நாணுள்ளவளாந்தும் நிறைஅழியாதாகலால் அதனைத் தாழாக்கியும் - உள்ளிருப்பவைகளைப் பிறர்கொள்ளாமற் காத்தலால் - நிறையைக்கதவாக்கியும் வலியவையாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டினையும் ஒருசேரநீக்கலால்தன்காமவேட்கையைக்கணிச்சியாக்கியுஞ்சொல்லினாள்

காமமெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை ... *
யாமத்து மாளுந் தொழில் ............... *

இது - நெஞ்சினிடத்துத் தோன்றியகாமம் நெஞ்சால் அடக்கப்படுமென்ற தோழிக்குத்தலைவிசொல்லியது. (இ-ள்.) யாமத்தும் - (எல்லாருந்தொழிலொழிகிற) நடுராத்திரியிலும் - என்னெஞ்சத்தை - என்மனத்தை - தொழில் - தொழிலிலே - ஆளும் (தண்டித்து) ஆளுகின்றது (ஆதலால்) காமமெனவொன்று - காமமென்று சொல்லப்பட்ட ஒன்று - ஓ - ஐயோ - கண்ணின்று - கண்ணோட்டமில்லாதாயிருந்தது. (எ-று.) (கருத்து) எல்லாருந் தொழிலொழியுமிடை யாமத்துமென்னெஞ்சத்தை யொறுந்துத் தொழில் கொள்ளாநின்றதாதலாற்காமமென்றுசொல்லப்பட்ட வொன்று கண்ணோட்டமின்றியிருந்ததென்பதாம். ❋ தொழிலிலே ஆளுதல், தலைவனிடத்துச் செல்லவிடுதல் - தானைத் தொழில்கொள்ளுதல், உலகநடையல்லாமையால் - காமமெனவொன்றென்றும் - அது தன்னைக் கொள்ளுகின்றது அளவறியாதுகொள்ளுதலால் - கண்ணின்றென்றும் - சொல்லினாள். காமந்தன்னாலே அடக்கப்படாமை சொல்லியபடி. (உ)

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்...... *
தும்மல்போற் றோன்றி விடும்.......................... ............*

இது- மகளிர் காமம் மறைக்கப்படுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது. (இ-ள்.) காமத்தை-இக்காமத்தை- யான் - நான்- ஓ ஐயோ-மறைப்பேன்- (என்னுள்ளே) மறைக்கநினைப்பேன். (அதனால்) குறிப்பின்றி-(இது) என்கருத்தின்வழிவாராமல்- தும்மல்போல்-தும்மலைப்போல- தோன்றிவிடும் - வெளிப்பட்டேவிடுகின்றது. (எ-று.) (கருத்து) இக்காமத்தை யானென்னுள்ளே மறைக்கக்கருதுவேனதனிஃதென கருத்தில்வாராது தும்மல்போல வெளிப்பட்டேவிடாநின்றதென்பதாம். ※ மன், ஒழியிசையில்வந்தது. எப்படித்தும்மல்அடங்குகின்றதில்லையோ அப்படியே காமம் அடங்குகின்றதில்லையென்பதாம். (௩)

நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம...... *
மறையிறந்து மன்று படும்.... .... ......... .... ..... ..........*

இதுவுமது. (இ-ள்.) யான்-நான்-ஓ- ஐயோ - நிறையுடையேனென்பேன்- (இதுகாறுமென்னை) நிறையுடையேனென்று நினைத்திருப்பேன். (அதனால் என்காமம் என்துகாமம்- மறையிறந்து- மறைத்தலைக்கடந்து-மன்றுபடும் பலருமறியப்படுகின்றது. (எ-று.) (கருத்து.) இன்றுகாறுங்கெல்லாம யானென்னை நிறையுடையனென்றுகருதியிருந்தேனதனானின்றென் காமமறைத்தலைக் கடந்து மன்றின்கண்வெளிப்படாநின்றதென்பதாம். ※ மன்-ஒழியிசையில் வந்தது, இனி இக்காமமானது என்னளவினதல்லவென்பதாம். (௪)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ :... *
யுற்றா ரறிவதொன் றன்று..................... .... .............*

இது- நம்மை மறந்தவரை நாமும் மறந்துவிடுவேமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்.) செற்றார்பின்- தம்மை நீங்கிப்போனவர்பின்-செல்லா-செல்லாது தாமமும்நீங்கிநிற்கிற- பெருந்தகைமை-நிறையுடைமையானது - காமநோயுற்றார் - காமநோயடைந்தவரால் அறிவதொன்றன்று- அறியப்படுவதொன்றன்று. (எ-று.) (கருத்து) தம்மையகன்று சென்றார்பின் செல்லாது தாமு மகன்றுநின்றுநிறையுடைமை காமநோயினையுறுதா ரறிவதொன் றன்றியுற்றாரறிவதொன்றனறென்பதாம். ※ இன்பத்தோடு கழியுங் காலத்தைத் துன்பத்தோடு கழியும்படிசெய்தலாலே; செற்றாரென்றாள். பின்செல்லுதல், மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை, ஆகுபெயர். காமநோயுறாதார், மானமுடையார். நன்றெனவறியாரிடத்து

ம்சென்றேநிற்கும் யான் அறிவதொன் றன்றென்பதாம். (௫)

செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ ...................... *
வெற்றென்னை யுற்ற துயர்........................................ *

இதுவுமது. (இ-ள்.) செற்றவர்பின் - (என்னை நீங்கிச்) சென்றவர் பின்னே-சேறல்வேண்டி - (யான்) செல் லல்வேண்டுத லால் - என்னை யுற்றதுயர்-என்னையடைந்த துன்பமானது - எற்று - எத்தன்மையது அளித்து - மிகநன்று. (எ-று.) (கருத்து.) என்னையகன்று சென்றார் பின்னே யான்சேறலைவேண்டுதலா லென்னையுற்றதுய ரொத்தன்மை காலதன்றென்பதாம். ※ அரோ-அசை. அளித்தென்பது. இகழ்ச்சிக் குறிப்பு இக்காமநோயானது நான் சொல்லவும் கேட்கவும் ஆவதொன்றன்று மிகக்கொடியதென்பதாம். (௬)

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற் .................. *
பேணியார் பெட்ப செயின்............................................ *

இது - பரத்தையிடத்துப் பிரிந்துவந்த தலைவனோடு நிறையழிவினாலேகூடிய தலைவி நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச்சொல்லியது. (இ-ள்.) பேணியார்-(நம்மால்) விரும்பப்பட்ட தலைவர்-(வந்து)காமத்தால்-காமத்தினாலே - பெட்ப - (நாம்)விரும்பியவைகளை-செயின்-செய்யுமளவில்-நாணெனவொன்றோ - நாணென்று சொல்லப்பட்ட ஒன்றையுமோ-அறியலம் - அறியமாட்டேமாயிருந்தது. (எ-று.) (கருத்து) நம்மால்விரும்பப்பட்டவர்வந்துகாமத்தானும் விரும்பியவற்றைச் செய்புமளவினானெனு ளொன்றும்றிய மாட்டேமாயிருந்தே னென்பதாம். ※ விரும்பியவை-வேட்கைமிகுதியினாலே நினைத்திருந்த கலவிகள், நிறையழிவால்அறியாமற்கூடியதன்குற்றநோக்கிஅவளையுந்தன்னோடுசேர்த்துக்கொண்டுசொன்னாள்.

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்.................. *
பெண்மை யுடைக்கும் படை........................................ *

இதுவுமது. (இ-ள்.) நம்பெண்மை-நமதுநிறையாகிய- (அரணத்தை)உடைக்கும்-அழிக்கிற-படை-ஆயுதம் - பன்மாயக்கள்வன். பல பொய்கள் பேசவல்ல கள்வனுடைய -பணிமொழியன்றோ- தாழ்ந்த சொற்களன்றோ-(ஆனபின் அதுநிற்கும்விதம்யாது.)(எ-று)(கருத்து) நந்நிறையாகிய வரணையழிக்குந் தானை பலபொய்களை வல்ல கள்வனுடைய தாழ்ந்தசொற்க ளன்றோவான பின்னது நிற்குமாறென்னை யென்பதாம். ※ பெண்மை, இங்கேதலைமைபற்றி நிறைமேல் நின்றது. வந்தால்- பிணங்கக்கடவேமென்றும், பிணங்கினால்அவன் சொற்களாலும், செயல்களாலும், நீங்கேமென்றும்-இவைமுதலாகஎண்ணிக்கொண்டிருந்த யாவையும் காணுமல்கலவியிலேதன்னினும்முற்பட்டு

ம்படிவந்துதோன்றினனென்றற்கு, பன்மாயக்கள்வனென்றாள். பணி மொழிதம்மினும்அதிக வன்புடையோ னாகச் சொல்லுஞ் சொற்கள்- அவன் அப்படிப்பட்டவனாகச் சொற்கள் அவையாக நமது நிறைஅழியாதொழிபுமோவென்பதாம். (௮)

புலப்ப லெனச்சென்றேன் புல்லினேனெஞ்சங்…………… ❋
கலத்த லுறுவது கண்டு ……………………………… ❋

இதுவுமது. (இ-ள்.) (அவர்வந்தபொழுது)புலப்பலென - பிணங்கக்கடவேனென்று நினைத்து-சென்றேன் - அவரெதிர் நில்லாமல்வேறோரிடத்திலே (போயினேன்.போகியும்) நெஞ்சம் - (என்)னெஞ்சமானது- (நிறையினில்லாமல் கீழறுத்துக் கொண்டுபோய்) கலத்தலுறுவது,(அவரோடு)கலத்தலைத் தொடங்குவதை - கண்டு - அறிந்து- புல்லினேன்-(இனி அதுவாயாதென்று)தழுவினேன்(எ-று.)(கருத்து) அவர்வந்தபொழுது புலக்கக்கடவேனென்று கருதி முன்னில்லாதுபிரிந்தோரிடத்துப் போயினேன் போயும்மென்னெஞ்ச நிறையினில்லாதவரைப் போயவரோடு கலத்தறுடங்குதலை யறிந்தினியது வாயாதென்றுபுல்லினே னென்பதாம். ❋ வாயாமை- பிணங்குதற்குக் காரணமாகியநெஞ்சுதானே கலத்தற்குக்காரணமாய்நிற்றலால் அந்நினைப்பு முடியாமை. (௯)

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ……………… ❋
புணர்ந்தூடி நிற்பே மெனல் ……………………………… ❋

இதுவுமது. (இ-ள்,) நிணந்தீயிலிட்டன்ன - நிணத்தைத் தீயிலிட்டால் அது உருகுமாறுபோல் தந்தலைவனைக்கண்டால் நிறையழிந்து உருகுகின்ற-நெஞ்சினார்க்கு- நெஞ்சினை யுடைய மகளிர்க்கு-ஊடி- (யாம்) பிணங்கி-புணர்ந்து- (பின்) புணர்ந்து - நிற்பேமெனல்-(அந்நிலையிலே) நிற்கக்கடவேமென்று நினைத்தல்- உண்டோ - உண்டாகுமோ. (எ-று.) (கருத்து) நிணத்தைத்தீயிலிட்டா லஃதுருகுமாறுபோலத் தங்காதலனைக்கண்டானிறையழிந்துருகுநெஞ்சினையுடையமகளிர்க் கியாமுடிப்பின் புணரா தந்நிலையே நிற்கக்கடவோமென்றுகருதுதலுண்டாமோ வாகாதென்பதாம். ❋ யான் அத் தன்மையேனாகலால் எனக்கு அது இல்லையாயிற்றென்பதாம். (௰)





# ௱௨௭-ஆம்-அதி-அவர்வயின்விதும்பல்.

அஃதாவது-தூரதேசப்பிரிவிலே தலைவனும், தலைவியும், ஆசைமிகுதியால் ஒருவரையொருவர் காணுதற்குவிரைதல். இதனுள் தலைவிசொல் நிறையழிவால்உண்டாதலால் அச்சம்பந்தம்பற்றி அதன்பின் வைக்கப்பட்டது.

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற............*
நாளொற்றித் தேய்ந்த விரல்.......................*

இது-தலைவிகாணற்குவிரைதலால்சொல்லியது- இ-ள் விரல்என்-விரல்கள்-அவர் சென்றநாள்-அவர்-தம்மைப் பிரிந்துபோயநாள்களை-ஒற்றி-சுவரிலே குறிவைத்துத்-தொட்டெண்ணுதலால்-தேய்ந்த-தேய்ந்தன. (அதுவேயன்றி)கண்ணும் - (என்) கண்களும் வாளற்று-(அவர்வரும்வழிபார்த்து)ஒளியிழந்து-புற்கென்ற - புல்லியவாயின. (இவ்வாறாகியும் அவர்வரவுண்டாயிற்றில்லை) (எ-று.) (கருத்து) அவர் நம்மைப்பிரிந்துபோய நாள்கள் சுவரின்கணிழைத்தவற்றைத் தொட்டெண்ணுதலா லென்விரல்கடேய்ந்தன வதுவேயன்றி யவர்வரும்வழிபார்த்தென் கண்களு மொளியிழந்து புல்லியவாயின் விவ்வாறாயு மவர் வரவுண்டாயிற்றில்லை யென்பதாம். ❋ நாள், ஆகுபெயர். புல்லியவாதல் நுட்பமான வைகளைக் காணமாட்டாமை. இனியான்காணும் விதம்யாதென்பதாம். நாளெண்ணலும்- வழிபார்த்தலும்-ஒருகாற்செய்தொழியாமல் எப்போதும் செய்தலால் விதுப்பாயிற்று.]

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்..............*
கலங்கழியுங் காரிகை நீத்து ........ .. ...................*

இது - பொருளைமிகுதலால் எப்பொழுதும் நினையாதே சிறிது மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குத்தலைவிசொல்லியது. (இ-ள்.) இலங்கிழாய்-விளங்காநின்ற ஆபரண முடையாய்- இன்று - (இறந்துபடுகின்ற) இந்நாளில்-மறப்பின் - (தலைவனை) மறப்பேனாயின் - (மேல்-மறுபிறப்பிலும்-காரிகை-அழகானது-நீத்து-(என்னைவிட்டு)- நீங்க-என்றோள்-எனதுதோள்கள்-கலங்கழியும் - வளையல்கள் கழலப்பெறுவனவாம். (எ-று.) (கருத்து) விளங்காநின்ற விழையினை யுடையாய் காதலனையின்றி யான் மறப்பேனாயின் மேலுங்காரிகை யென்னைநீப்பவென்றோள்க ளவளைகழலவன வாமென்பதாம். ❋ இலங்கிழாயென்பது, இதற்கு நீயாதும் பரிகின்றாயில்லையென்னுங் குறிப்பிற்று. நீத்தென்பது, நீப்பவென்பொருளில்வந்தது. இச்சமயத்திலே அவ

னை நினைந்தால் மறுமையிலே அவனை அடைந்து இன்புறலாம் அத
னால் மறக்குந்தன்மையே னல்லேனென்பதாம். (௨)

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்.... ............ ... *
வரனசைஇ யின்னு முளேன்.... ........ ............ ..... ..... *

இதுவுமது. (இ-ள்.) உரனசைஇ- இன்பத்தைவிரும்பாமல்) வெற்
றியைவிரும்பி-உள்ளந்துணையாக - (நாம்துணையாதலை இழந்து)தம்
மனவெழுச்சிதுணையாக-; சென்றார்- போயினவர் - வரனசைஇ-(அ
வைகளை இழந்து இங்கு) வருகலை விரும்புதலால் - இன்னும் - இவ்
வெல்லையிலும்-உளேன்-; உயிரோடிருக்கிறேன். (எ-று.) (கருத்து) இ
ன்பநுகர்தலை நச்சாது வெறலை நச்சிநாந்துணையாதலையிழந்துதம்மு
க்கந் துணையாகப்போயினார் வெற்றையிகழ்ந்தீண்டுவருதலை நச்சுதலா
னயானிவ் வெல்லையினுமுளே னாயினேனென்பதாம். ❁ உரன்-ஆகு
பெயர். அவ்வாசையால் உயிர்வாழ்கிறேன் அது இல்லையாயின் இற
ந்துபடுவேனென்பதாம். (௩)

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்..... ...........|..... .............. *
கோடுகொ டேறுமென் னெஞ்சு ..................... ...... *

இதுவுமது. (இ-ள்.) பிரிந்தார் - நீங்கிய காமத்தாராகி நம்மைப்)
பிரிந்துபோனவர்-கூடியகாமம் - கூடிய காமத்துடனே வரவுள்ளி-
(நம்மிடத்து)வருதலை நினைத்தலால்- என்னெஞ்சு - எனதுமனமான
து-வருத்தமொழிந்து - கோடுகொடேறும் - மேன்மேலும் பருத்
தெழுகின்றது. (எ-று.) (கருத்து) நீங்கியகாமத்தாராய் நம்மைப்பி
ரிந்துபோயவர்கூடிய காமத்துடனே நங்கண் வருதலை நினைந்தென்
னெஞ்சு வருத்தமொழிந்து மேன்மேற் பணைத்தெழாநின்றதென்ப
தாம். ❁ போர்க்குப்பிரியும்போதுகாமவின்பநோக்காமையும் - அ
துமுடிந்தவிடத்து அதுவே நோக்கலும் தலைவனுக்கு இயல்பாதலால்
கூடிய காமமோடென்றாள் - பருத்தெழுதலாகிய காமத்தினது தொ
ழில் - நெஞ்சின்மேல ஏற்றப்பட்டது. அவ்வரவை நினையாமற் போ
வேனாயின் இறந்து படுவேனென்பதாம்.] .(௪)

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி.... ..... ....... *
னீங்குமென் மென்றோட் பசப்பு...................... ....... *

இது - தலைவனது வரவுசொல்லிப் பொறுதவளாய் நிறம்வேறுப
டாதே என்ற தோழிக்குச்சொல்லியது. (இ-ள்.) கண்ணார-(என்) கண்
களாருமவகை- கொண்கனை - (என்)கணவனை - காண்க- (நான் கா
ண்பேனாக-கண்டபின்-(அப்படிக்)கண்டபின்பு - என்மென்றோள் எ
ன்மெல்லியதோளிலுள்ள, பசப்பு-பசலை- நீங்கும் - (தானே) நீங்கும்
(எ-று.) (கருத்து) என்கண்களாரும்வகை யென்கொண்கனையான்கா

ணபேனுக வங்ஙனங்கண்டபின்னேன் மெல்லியதோளின்கட்பசப்பு
த்தானே நீங்குமென்பதாம். ❊ காண்கவென்றது.இங்கே வேண்டிக்
கொள்ளுதற் பொருளிலே வந்தது. அது வேண்டுமென்பதுபடநின்
றமையால் மன்னுழியிசை கேட்ட வளவிலே நீங்கா தென்பதாம்.

வருகமற் கொண்கனொருநாட் பருகுவன் .......... ....... *
பைதனோயெல்லாங் கெட,... ....... ....... ............. *

இதுவுமது. (இ-ள்.) கொண்கன் -(இத்தனைநாளாக வாராதிருந்த) தலைவன்-ஒருநாள்-ஒருதினம்- வருக - (என்னிடத்து) வருவானாக-(வந்தால்) பைதனோயெல்லாம் - துன்பஞ்செய்கின்ற இந்நோயெல்லாம்-கெட-நீங்க - அவ்வமிர்தத்தை - பருகுவன் (ஐம்பொறிகளாலும்) உண்பேன், (எ-று.) (கருத்து) இத்துணைநாளும்வாராதகொண்கனொருநாளென்கண்வருவானாக வந்தாற்பையுளைச்செய்கின்றவிந்நோயெல்லாங்கெட வவ்வமிர்தத்தை வாயில்களைந்தாலும் பருகக்கடவேனென்பதாம். ❊ வருகவென்றதற்கும், மன்னென்றதற்கும், முன்சொல்லப்பட்டபடியேகொள்க. அக்குறிப்பு அவ்வொரு நாளைக்குள்ளேஇனிவாக்கடவநோய்களையும் கெடுப்பனென்பதாம். (௬)

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின் ....................... ... . ..... *

இதுவுமது. (இ-ள்.) கண்ணன்னகேளிர் - கண்போற் சிறந்தநண்பர்-வரின்- வருவாராயின் - புலப்பேன்கொல் - (அவர்வரவு) நீட்டித்தமைக்குறித்துப்)பிணங்குவேனோ- புல்லுவேன்கொல்-(என்பொறுக்கமாட்டாமையைக்குறித்துத்) தழுவுவேனோ - கலப்பேன்கொல்-(இவ்விரண்டும் வேண்டுதலால் இவ்விருசெயல்களையும்) கலப்பேனோ (யாதுசெய்யக்கடவேன்.) (எ-று.) (கருத்து)கண்போலச் சிறந்தகேளிர்வருவராயி னவர்வரவுநீட்டித் தமைநோக்கியான் புலக்கக்கடவேனோவன்றியென்னாற்றாமைநோக்கிப் புல்லக்கடவேனோ வீவ் விரண்டும்வேண்டுதலா லவ்விருசெயல்களையும் விரவக்கடவேனோ யாதுசெய்யக்கடவே னென்பதாம். ❊ ஓ-அசை. பிணங்குதலும், தழுவுதலும்;ஒருபொழுதிலே கூடாமையால் கலப்பேன்கொ லென்றாள்.மூன்றனையுஞ்செய்தல் கருத்தாகலால் விதுப்பாயிற்று. (௭)

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து............. *
மாலை யயர்கம் விருந்து ........ ......... ......... .......... *

இது - அரசனுக்குத் துணையாகப் பிரிந்ததலைவன் தொழின்முடிவு நீட்டித்தவிடத்தே தலைவியைநினைந்து தன்னுள்ளே சொல்லியது. (இ-ள்.) வேந்தன்-அரசன்-வினைகலந்து- போர்செய்தல் புரிந்து

வென்றீகவெல்வானாக-(யாமும்)மனைகலந்து - மனைவியைச்சென்று கூடி-மாலை-(அவ்விடத்து)மாலைக்கு-விருந்து - விருந்தினை - அயர்கம்-செய்யக்கடவேம். (எ-று.) (கருத்து) வேந்தன்வினைசெய்தலைப் புரிந்துவெல்வானாகயாமு மனைவியைச்சென்று கூடியாண்டைமாலைப்பொழுதிற்கு யாம்விருந்தயர்வேமாக வென்பதாம. ❋ மனை-ஆகுபெயர். போர்செய்தற்கண்வந்த மாலைக்கு எதிர் கொள்ளுதல் அலங்கரித்தல் முதலியவை இல்லாமையால்மனைகலந்து மாலைக்குவிருந்தயர்குமென்றான்-இதுதொழின்முடியு முன்சொல்லலால்விதுப்பாயிற்று.

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்......❋
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு .............................❋

இதுவுமது. இ-ள். சேட்சென்றார்-தூரதேசத்திற்சென்றதங்காதலர்- வருநாள்வைத்து - (திரும்பி)வரக்குறித்தநாளை உட்கொண்டு-ஏங்குபவர்க்கு - (அதுவருமளவும் உயிரைத்தாங்கி வருந்துமகளிர்க்கு) ஒருநாள்! ஒருநாளானது-எழுநாள்போல் - பலநாள்போல் - செல்லும்-நெடிதாகக்காட்டும். (எ,று.) (கருத்து) சேணிடைச்சென்றதங்காதலர்மீண்டு வரக்குறித்த நாளையுட்கொண்டது வருந்துணையு முயிர்தாங்கிவருந்துமகளிர்க் கொருநாட் பலநாட்போல நெடிதாகக்காட்டுமென்பதாம். ❋ ஏழென்பது அதற்குமேலாய் மிக்கபன்மை குறித்துநின்றது. தலைவிவருத்தம் பிறர்மேலிட்டுச் சொல்லியபடி (௯)

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா .....❋
முள்ள முடைந்துக்கக் கால் .......................❋

[இதுவுமது.] இ-ள்; காதலி - உள்ளமுடைந்து-நம்பிரிவுபொறாமல்)உள்ளமுடைந்து-உக்கக்கால் - இறந்தவிடத்து - பெறினென்னாம்- (நம்மைப்) பெறக்கடவளானால் என்னபயன்! பெற்றக்காலென்னாம்-(அன்றிப்)பெற்றால்என்னபயன் உறினென்னாம். (அன்றி) மெய்யுறக்கலந்தால் என்னபயன் - (இவையொன்றாலும்பயன்! இல்லை.) (எ-று.) (கருத்து) காதலி நம்பிரிவினை யாற்றாதுள்ள முடைந் திறந்துபட்டுழி நம்மைப்பெறக்கடவளாகு லென்னன் றியேபெற்றாலென்னன்றியே, மெய்யுறக்கலந்தாற் றானென்றறியே மெய்யுறக் கலவாதொழிந்தாற்றானென்னிவையொன்றானும்பயனில்லையென்பதாம் ❋ இம்மூன்றும் உடம்போடுணர்த்திச்சொல்லப்பட்டன. அதன்மேலும் முன்னைவழக்க மிருத்தலால் அதற்கு முன்னே நாம்; செல்லவேண்டுமென்பது கருத்தாகலால் விதுப்பாயிற்று. (௰)





# ௱உ௰அ. ஆம் - அதி - குறிப்பறிவுறுத்தல்.



அஃதாவது- தலைவன் தலைவிதோழி என்றிவர்கள் ஒருவர்குறிப்பை ஒருவர்க்கு அறிவுறுத்தல். இது பிரிந்து போகியதலைவன் வந்துகூடியவிடத்தே நிகழ்வதாகலால் அவர்வயின் விதும்பலின்பின் வைக்கப்பட்டது.

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க................ *
ணுரைக்க லுறுவதொன் றுண்டு .................... ............ *

இது - பிரிந்து கூடியதலைவன் ஆசைமிகுதியினாலே புணர்ச்சித்தொழிலைப்புதிது புதிதாகப் பலநாளும் பாராட்டல் கண்டு தலைவி இன்னும் பிரிவனென்று அஞ்ச அதை அவன் குறிப்பால் அறிந்து அவளுக்குச்சொல்லியது. (இ-ள்.) கரப்பினும்-(சொல்லாது)மறைத்தாயாயினும்- ஒல்லா, அதற்கு உடன்படாமல்- கையிகந்து, (உன்னைக்) கைகடந்து- நின்னுண்கண், உன் (மை) புண்டகண்களே - உரைக்கலுறுவது, (எனக்குச்) சொல்வது- ஒன்று ஒருகாரியம்! உண்டு, உண்டாயிருக்கின்றது- (இனிஅதனை நீயேதெளியச்சொல்லு எ-று.(கருத்து) நீ சொல்லாது மறைத்தாயாயினு மதற்குடன்படாதே நின்னைக்கடந்து நின்னுண்கண்களே யெமக்குச் சொல்லலுறுவதொருகாரியமுண்டாயிராநின்ற தினியதனை நீயே தெளியச்சொல்வாயாகவென்பதாம். ※ கரத்தல் நாணால் அடக்குதல். தன்னிடத்துப் பிரிதற்குறிப்புஇருக்கிறதாக நினைந்து வேறுபட்டவளது வேறுபாடு குறிப்பால் அறிந்து அவளுக்குத் தன்பிரியாமைக் குறிப்பை அறிவுறுத்தபடி. (௧)

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது ... .. ,...... ..... .. *

இது- நாணத்தால் அவள் அது சொல்லாதவிடத்து அவன்தோழிக்குச் சொல்லியது. (இ-ள்) கண்ணிறைந்தகாரிகை, (என்) கண்ணிறைந்தஅழகையும்- காம்பேர்தோள், மூங்கில் போன்றதோள்களையும்உடைய- பேதைக்கு, (உன்னுடையமாதுக்கு - பெண்ணிறைந்த நீர்மை, பெண்பாலாரிடத்து நிறைந்த அறியாமை- பெரிது, (அவ்வளவினதன்றி) மிகுந்தது. எ-று. (கருத்து) என் கண்ணிறைந்த வழகினையும் வேயையொத்த தோளினையுமுடைய நின்பேதைக்குப் பெண்ணியல்பா நிறைந்த மடமை யவ்வளவன்றிமிகுந்ததென்பதாம். ※ தன்னிடத்து இல்லாத பிரிவினைத் தன்னிடத்து ஏற்றி அதற்கு அஞ்சுதலால் இப்படிச் சொல்லினான். (௨)

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை ....... ✻
யணியிற் றிகழ்வதொன் றுண்டு ......... ✻

இதுவுமது. (இ-ள்) மணியில், கோக்கப்பட்ட படிகமணிக்குளிருந்து - திகழ்தரும், (புறத்தே) காணப்படுகிற - நூல்போல், நூலைப்போல - மடந்தை, இம்மடந்தையினது - அணியில், அழகுக்குளிருந்து - திகழ்வது, (புறத்தே) காணப்படுவதாகிய - ஒன்று, ஒருகுறிப்பு உண்டு, உண்டு - எ - று. (கருத்து) கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக்கிடந்து புறத்துப் புலனாநூல்போல விம்மடந்தை யணியகத்து புறத்துப் புலனாகின்றதோர் குறிப்புண்டென்பதாம். ✻ அணி புணர்ச்சியாலாகிய அழகு. அதற்கு ளிருத்தலாவது - அதனோடு உடனிகழ்வதல்லாதிருந்தும் உடனிகழ்தல். அதனையான் அறிகின்றிலேன் நீ அறிந்து சொல்லவேண்டுமென்பதுகருத்து. (௩)

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை .. ✻
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு ........ ✻

இதுவுமது. (இ-ள்.) முகைமொக்குள் அரும்பினதுமுகிழ்ப்பினுள் - உள்ளது உளதாய்ப் - (புறந்தோன்றாத) நாற்றம்போல் - வாசனைபோல் - பேதை - (உன்)மாதினது - நகைமொக்குள் (என்னோடு நகைக்க எண்ணுகிற) நகையதுமுகிழ்ப்பினுள் - உள்ளது உளதாய்ப் (புறந்தோன்றாத) ஒன்று ஒருகுறிப்பு-உண்டு உண்டு. எ-று.(கருத்து) முகையதுமுகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப்புலனாகாத நாற்றம்போல்நின்பேதை யென்னோடு நகக்கருதி நகையதுமுகிழ்ப்பினுளதாய்ப்புறத்துப் புலனாகாததோர்குறிப்புண்டென்பதாம். ✻ முகிழ்ப்பு முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை- புணர்ச்சியின்பத்தால் நிகழ்வது.

செறிதொடி செய்திறந்த கள்ளமுறுதுயர் ....... ✻
தீர்க்கு மருந்தொன் றுடைத்து ........ ✻

இதுவுமது. (இ-ள்.) செறிதொடி நெருங்கிய வளைகளையுடையவள் செய்து- (என்னிடத்து இல்லாதபிரிவை) நினைந்து - இறந்த கள்ளம் (அதுகாரணமாக என்னைமறைத்துப்) போனகுறிப்பு - உறுதுயர், (என்) மிகுந்த துயரை - தீர்க்குமருந்தொன்று, தீர்க்காநின்றமருந்தொன்று - உடைத்து- உடையது. எ-று. (கருத்து) நெருங்கிய வளைகளையுடையாளென்கணில்லாததொன்றினை யுட்கொண்டது காரணமாக வென்னைமறைத்துப்போன குறிப்பென்மிக்கதுயரைத்தீர்க்கு மருந்தாவதொன்றனையுடைத்தென்பதாம். ✻ மறைத்தற்குறிப்பு தானும் உடன்போக உட்கொண்டது. உறுதுயர்-நன்றிசெய்யத்தீங்குவிளைதலாலும்- அதுதான்தீர்க்குந்திறம்பெருமையாலும் உளதா

யது. மருந்து- பிரியாமைதோழியால் தெளிவித்தல். நீ அதுசெய்தல்வேண்டுமென்பதாம். (ரு)

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தலரிதாற்றி..... ..... ..... *
யன்பின்மை சூழ்வ துடைத்து.... ... ... .... . *

இது-தலைவன் குறிப்பறிந்த தலைவி அதனை அறுதெளிவிக்கச்சென்றதோழிக்கு அறிவித்தது.] இ-ள். பெரிதாற்றி, (தலைவர்வந்துதம்பிரிவினாலாகிய துன்பத்தை) மிகவுமாற்றி- பெட்பக்கலத்தல்) நாம்) மகிழும் வண்ணம் கூடுகின்ற புணர்ச்சியானது- அரிதாற்றி, பின்னும் அத்துன்பத்தை) அரிதாகப் பொறுத்திருந்து - அன்பின்மை (அவரது) அன்பிலலாமையை - சூழ்வது; நினையுந் தன்மையை (உடைத்து, உடையது. எ-று. (கருத்து) காதலர்வந்துதம்பிரிவினாலுய துன்பத்தை மிகவுமாற்றி நாம்மகிழும்வண்ணங் கலக்கின்ற கலவியிருந்த வாற்றான் மேலுமத்துன்பத்தினை யரிதாக வாற்றியிருந்தவானன்பின்மையை நினையுந்தன்மையுடைத்தென்பதாம். ※ பிரிதற் குறிப்பினாலே செய்கின்றதாகலால் முடிவிலே துன்பஞ் செய்வதாகின்றதென்பதாம். (சு)

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு...... ... *
முன்ன முணர்ந்த வளை ....... ....... ... ... . ........ *

இதுவுமது. (இ-ள்) தண்ணந்துறைவன், குளிர்ந்த துறையையுடையவன்- தணந்தமை, (நம்மை மெய்யினாலேகூடியிருந்தேமனத்தினாலே) பிரிந்தமையை-நம்மினும் (அவன்குறிப்பால்அறிதற்குரிய நம்மினும்-வளை-இவ்வளையல்கள்!- முன்னம்முன்னமே - உணர்ந்த- அறிந்தன (எ-று.) (கருத்து) குளிர்ந்த துறையையுடையவனம்மை மெய்யாற் கூடியிருந்தேமனத்தாற் பிரிந்தமையையவன் குறிப்பானறிதற்குரிய நம்மினுமிவ்வளைக்கண்முன்னேயறிந்தனவென்பதாம். ※ கருத்து நிகழ்ந்ததாகலால் தணந்தமையென்றாம்; யான் தெளிய அறிதற்குமுன்னே தோள்கள் மெலிந்தனவென்றற்கு- அதனைவளைமேலேற்றி அதையும் உணர் வுடைத்தாக்கிச்சொல்லினான். (எ)

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு ..... ..... *
மெழுநாளே மேனிபசந்து ....... ....... ....... ...... *

இதுவுமது. (இ-ள்) எங்காதலர், எமதுதலைவர் -நெருநற்று, நேற்றே - சென்றார், பிரிந்துபோயினார். யாமும், நாமும் மேனிபசந்து, (அப்பிரிவுக்கு) உடம்பு வேற்றுநிறமடைந்து - எழுநாளேம், எழுநாளுடையேமாயினேம். எ- று. (கருத்து) எங்காதலர் பிரிந்து போயினார் நெருநற்றேப் பிரிவிற்கியாமு மேனி பசந்தேழுநாளு

டையே மாயினேமென்பதாம். ❊நேற்றுச்செய் த அருளினால் பிரிவு நிச்சயிக்கப்பட்ட தென்றற்கு, நெருநற்றுச் சென்றாரென்றும் அதனைச் சந்தேகித்துச் செல்கின்றது எழுநாள் உண்டாகலால் அன்றே மேனிபசந்ததென்றற்கு, மேனிபசந்தெழு நாளே மென்றும் சொல்லினாள். இவைதலைவனது பிரிதற்குறிப்பை அறிவித்துநின்றது.

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.................... ❊

இது- தலைவி குறிப்பறிந்ததோழி அதனைத் தலைவனுக்கு அறிவித்தது: (இ-ள்) (யான் அதுதெளிவித்தவிடத்தே தெளியாதவர் பிரிய நான் இங்கேயிருந்தால்) தொடிநோக்கி, (இவை நில்லாவென்று தன்) வளையல்களைப்பார்த்து- மென்றோளுநோக்கி, (அதற்கு ஏதுவாக இவை மெலியுமென்று) மெல்லிடதோள்களையும்பார்த்து-அடிநோக்கி,(பின் இவ்விரண்டும் உண்டாகாமல் நீர்நடந்துகாத்தல்வேண்டுமென்று தன்) னடிகளையும் பார்த்து-ஆண்டு,அவ்விடத்து-அவள்செய்தது, அவள்செய்தகுறிப்பு அஃது, உடன் போக்காயிருந்தது. எ-று.(கருத்து) யானது தெளிவித்தவழித்தெளியாதவர்பிரிய யானீண்டிருப்பி னிவைநில்லாதெனத்தன் றொடியைநோக்கி யதற்கேதுவாக விவைமெலியுமெனத் தன்மென்றோள்களையு நோக்கிப் பின்னரவ்விரண்டு நிகழாம நீர் நடந்துகாத்தல்வேண்டுமெனத்தன்னடியைநோக்கி யங்ஙனமவள்செய்த குறிப்புடன் போக்காயிருந்த தென்பதாம். ❊செய்தகுறிப்பு, செய்தற் கேதுவானகுறிப்பு. அஃதென்றாள், செறிதொடி செய்திறந்த கள்ளமென்றாளாகலின். பிரிதற்குறிப்புண்டாயின் அது அழுங்குதல்பயன். (௯)

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லியிரவு............................ ❊

இது- தன்பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்குத் தலைவன் அறிவித்தது. இ-ள். (மகளிர்) காமநோய், (தம்) காமநோயை- கண்ணினாற்சொல்லி, (தோழியர்க்கும்வாயாற்சொல்லாது) கண்ணினாற்சொல்லி,(தோழியர்க்கும்வாயாற்சொல்லாது)கண்ணினாற்சொல்லி- இரவு (அது தீர்த்தல்வேண்டுமென்று அவனாயிரவாமல் உடன் போதல் குறித்துத் தம்மடியினை)யிரத்தல் - பெண்ணினால், (தமக்குஇயல்பாகிய) பெண்மைமேலும்- பெண்மையுடைத்தென்ப, ஒரு பெண்மையை யுடைத்தென்று (அறிந்தோர்) சொல்லுவர். எ-று. (கருத்து) மகளிர் தங்காமநோயினைத் தோழியர்க்கு வாயாற்சொல்லாது கண்ணாற் சொல்லியது தீர்க்கவேண்டுமென்றவனாயிரவாதுடன்போகத்

குறித்துத் தம்மடியினை யிரத்தற் றமக்கியல்பாகிய பெண்மைமே லு மொரு பெண்மை யுடைத்தன்று சொல்லுவ ரறிந்தோரென்பதாம். ☼ தலைமகளது உடன்போதற்றுணிவுதோழியாலேதெளிதலால் தான் பிரியாதிருக்குங் குறிப்பினை அறிவித்தற்கு அவன் பெண்மையைப்பிறர்மேலிட்டுவியந்துசொல்லினான். (௰)



## ௱உகூ-ஆம்-அதி-புணர்ச்சிவிதும்பல்.

அஃதாவது - தலைவனும் தலைவியும் புணர்ச்சிக்கண்ணேவிரைதல். மேலேபுணர்ச்சிமிகுதிபற்றித் தலைவன் பிரிதற்குறிப்பை அறிவுறுத்த தலைவி அவனிடத்தே நிகழாது ஆசைமிகுதியினாலே பின்னும் தன்னிடத்தே நிகழ்தலால் இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்......... ..... .....*
கள்ளுக்கில் காமத்திற் குண்டு ... ......... ... .....*

இது- பிரிதற்குறிப்பினனாகிய தலைவனோடு நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்று நகையாடிய தோழிக்குத் தலைவிசொல்லியது (இ-ள்.) உள்ளங்களித்தலும், நினைத்தவளவிலே களிப்படைதலும் காணமகிழ்தலும், கண்டவளவிலே மகிழ்ச்சியடைதலும்-கள்ளுக்கு, கள்ளுண்டார்க்கு - இல், இல்லை. காமத்திற்கு, காமமுடையார்க்கு- உண்டு, உண்டு- எ-று. (கருத்து) நினையுந் துணையானே களிப்பெய்தலுங் கண்ட துணையானே மகிழ்ச்சியெய்தலுங் கள்ளுண்டார்க்கில்லைக் காமமுடையார்க்குண்டென்பதாம். ☼ களித்தல், உணர்வழியாதது. மகிழ்தல், அவ்வுணர்வழிந்தது. இவ்விரண்டும் உண்டவிடத்திலேயல்லாமல் இல்லாமையினாலே, கள்ளுக்கில்லென்றாள். அப்படிப்பட்ட காமமுடைய நான் பிணங்கல் எவ்விடத்ததென்பதாம். (௧)

தினைத் துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின் ... ............... ....... .... ...*

இதுவுமது. (இ-ள்.) காமம், காமமானது- பனைத்துணையு நிறைய பனையளவினுமிக- வரின், (மகளிர்க்கு) உண்டாமாயின் - தினைத்துணையும், தினையளவும்- ஊடாமை, (தந்தலைவரோடு) பிணங்காமை- வேண்டும், (அவரால்) விரும்பப்படும். (எ-று.)(கருத்து)மகளிர்க்குக்காமம் பனையளவினு மிகவுண்டாமாயினவர் தங் காதலரோடு தினையளவு மூடுதல்செய்யாமை வேண்டப்படுமென்பதாம். ☼ ஊடினால் வருத்தமிகுமென்று பிறர்க்கு உறுதிசொல்லுவாள் போன்று தன் விரைவு சொல்லியபடி. (௨)

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்...*

காணா தமையல கண்.....................*

இதுவுமது- (இ-ள்.) பேணாது, (நம்மை) அவமதித்து - பெட்பவே (தான்) வேண்டுமவைகளையே- செய்யினும், செய்தாலும் - கொண்கனை, கணவனை- கண், (என்) கண்கள்- காணாது, பாராமல்- அமையல்; அமைகின்றனவில்லை. எ-று. (கருத்து) நம்மை யவமதித்துத்தான்வேண்டியனவே செய்யுமாயினுங் கொண்கனை யென்கண்கள் காணாதமைகின்றன வில்லையென்பதாம். ※ தன்வினாவுகண்களின்மேல் ஏற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனொடு பிணங்கும்வழியாதென்பதாம். (௫)

ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து ...*

கூடற்கட் சென்றதென் னெஞ்சு.............*

இதுவுமது. (இ-ள்.) தோழி-தோழியே - (அன்பரைக்காணுதற்கு முன் அவர் செய்தகுற்றத்தைத் தன்னொடு எண்ணி) ஊடற்கட் சென்றேன், (அவரோடு) பிணங்குதலிலே சென்றேன். என்னெஞ்சு- என்மனது, (கண்டபின்) அதுமறந்து அதைமறந்து- கூடற்கட்சென்றது, புணர்தலிலே சென்றது. எ-று. (கருத்து) தோழிகாதலரைக்காணு முன்னவர்செய்த தவற்றைத் தன்னொடுநினைந் தியானவரோடூடுதற் கண்ணே சென்றன் கண்டபி னென்னெஞ்சுதனைமறந்து கூடுதற்கண்ணே சென்றதென்பதாம். ※ செல்லுதற் றொழிலினது நிகழ்ச்சி, நினைத்தநெஞ்சிற்கும் ஒத்தலால், அதுமறந்தென்றாள். அச்செல்லுதலால் பயன் ஒன்றும் இல்லையென்பது படநின்றமையால; மன், ஒழியிசை. அச்சமயத்திலே நெஞ்சு கீழறுத்துக்கொண்டுபோகலால் அது முடிந்ததில்லையென்பதாம். (௬)

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற்கொண்கன்

பழிகாணேன் கண்ட விடத்து.........................*

இதுவுமது. இ-ள். (முன்னெல்லாங்கண்டிருந்தும்) எழுதுங்கால் எழுதும்போது- கோல், அஞ்சனக்கோலினியல்பை-காணா, காணமாட்டாத- கண்ணேபோல், நேத்திரம்போல் - கொண்கன்பழி, கணவனதுகுற்றத்தை- (அவனைக் காணாதவிடத்தெல்லாம்கண்டிருந்தும்) கண்டவிடத்து, (அவனைக்) கண்டவிடத்து - காணேன், காணமாட்டேன். எ-று. (கருத்து) முன்னெல்லாங் கண்டிருந்தெழுதுங்காலத் தஞ்சனக்கோலி னியல்பு காணமாட்டாத கண்ணேபோலக் கொண்கனது தவற்றைக் காணுவிடத்தெல்லாங் கண்டிருந்தவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேனென்பதாம். ※ கோல், அதனியல்புக்கு ஆகு

தலால் ஆகுபெயர். இயல்பு, கருமை. என்னியல்பு இதுவாகலால், மேலும் அதுமுடியாதென்பதாம். (௫)

காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற். ........*
காணேன் றவறல் லவை ... ........ ........ ....... *

இதுவுமது. இ-ள். (நான்) காணுங்கால், (கணவனைக்) காணும் பொழுது- தவறாய, (அவன்) குற்றங்களானவைகளை- காணேன், காண்கின்றிலேன். காணாக்கால், (அவனைக்) காணாதபொழுது- தவறல்லவை குற்றங்களல்லாதவைகளை- காணேன், காண்கின்றிலேன். எ-று. (கருத்து) கொண்கனையான் காணும்பொழு தவன்றவறாயவற்றைக் காண்கின்றிலேன் காணாதபொழுதவையல்ல பிறவற்றைக் காண்கின்றிலேனென்பதாம். ※ கணவனென்பது, அதிகாரத்தால்வந்தது. முன்பு நான் உன்னோடுசொல்லிய தவறுகள் இப்போது காணாமையாலே பிணங்கிலேனென்பதாம். (௬)

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்... ..... .....*
பொய்த்த லறிந்தென் புலந்து........... ..... .... .... *

இதுவுமது. (இ-ள்) உய்த்தலறிந்து, (தம்மை யீர்த்துக்கொண்டு போதலறிந்திருந்து- புனல்பாய்பவரேபோல், ஓடுகின்ற) நீரிலேபாய்வோர்செயல்போல்- பொய்த்தலறிந்து, (பிணக்கு) முடிவுபோகாமை யறிந்திருந்து-புலந்து, (கணவனோடு) பிணங்கி-என், (பெறுவது) யாது. எ-று. (கருத்து) தம்மை யீர்த்துக்கொண்டு போதலறிந்து வைத்தொழுகுகின்ற புனலுட்பாய்வார் செயற்போலப் புலவிமுடி போகாமையறிந்து வைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென்னென்பதாம். ※ பாய்பவரென்பது ஆகுபெயர்- பொய்த்தல், புரைபடுதல். பிணங்கினாலும் பயன் இல்லையென்பதாம். (௭)

இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக் .......*
கள்ளற்றே கள்வநின் மார்பு ............... ... ........ *

இது- தலைவிபுணர்ச்சி விரைவறிந்ததோழி தலைவனுக்குச் சொல்லியது. (இ-ள்.) கள்வ- கள்வனே-நின்மார்பு (எங்களுக்கு) உனதுமார்பு-களித்தார்க்கு-(தன்னையுண்டு)களித்தவர்க்கு-இளித்தக்க- அவமானமடையத்தக்க-இன்னாசெயினும்- இனிமையில்லவைகளைச்செய்தாலும்-கள்ளற்றே- (அவராலேமேலும்மேலும் விரும்பப்படுவதாகிய) கள்ளைப்போலும். (எ-று.) (கருத்து) தன்னையுண்டுகளித்தார்க்கிளிவரத்தகக வின்னாவற்றைச் செய்யினுமவரான் மேன்மேலும் விரும்பப்படுவதாய கள்ளைப்போலுமெங்கட்கு நின் மார்பென்ப தாம். ※ அவ்வினிமை யில்லவை, நாணில்லாமை, ஒழுக்கமில்லாமை, உணர்வி

ல்லாமை, நிறையில்லாமை, இவைமுதலாயின. எங்களுக்கு நாணில்லாமை முதலியவைகளைச் செய்யினும் எங்களாலே மென்மேலும்விரும்பப்படுகின்றதென்பதாம். கள்வமென்றதும், அதுநோக்கி. (௮)

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்.......... .......... *
செவ்வி தலைப்படு வார் ........................................ *

இது-தீராப்பிணக்கிலே தலைவன் சொல்லியது. (இ-ள்.) காமம்-காமவின்பம்-மலரினும்-பூவினும்-மெல்லிது-மெல்லியதாயிருக்கும் (அப்படி மெல்லியதாயிருக்கையை அறிந்து) அதன்செவ்வி - அதன்பக்குவத்தை-தலைப்படுவார்-பெறுவோர் - சிலர்-(உலகத்திலே) சிலர். (எ-று.) (கருத்து) காமவின்பமலரினு மெல்லிதாயிருக்குமங்ஙன மெல்லிதாதலை யறிந்ததன்செவ்வியைப் பெறுவாருலகத்துச்சிலரென்பதாம். ❋ தொட்டவளவிலே வாசனைப்பக்குவமழிவதாகிய மலர் எல்லாவற்றினும் மெல்லியதென்பதை விளக்கலால் உம்மைசிறப்பின்கண்வந்தது. குறிப்பும்-வேட்கையும் - அனுபவிப்பும்- இன்பமும்- ஒருகாலத்திலேஒத்து அனுபவித்தற்குரியவரிருவர் - அதற்குவேற்றகாலமும்- இடமும், உபகரணங்களும் - பெற்றுக்கூடி அனுபவிக்கவேண்டுதலால், அதன்செவ்வி தலைப்படுவார் சிலரென்றும்-அவைகளுள் யாதானும் ஒன்றாலே சிறிதுவேறுபடினும் வாடுதலால்-மலரினுமெல்லிதென்றும் சொல்லினான். குறிப்பு, ஒவ்வாமையால் யானதுபெறுகின்றிலேனென்பதாம். தலைமகள் ஊடலொழிவதுபயன்.

கண்ணிற் றுனித்தே கலங்கினள் புல்லுத.......... .... *
லென்னினுந் தான்விதுப் புற்று ........................... *

இதுவுமது. (இ-ள்.) (என்காதலி முன்னொருநாள் புணரச்சென்ற என்னோடு) கண்ணிற்றுனித்தே-(தன்) கண்மாத்திரத்தாலே பிணங்கி-புல்லுதல்-புணர்தலிலே-என்னினும் - என்னைப்பார்க்கிலும்- தான்விதுப்புற்று-தான்விரைவுற்று- கலங்கினள் - (அதனையும் அப்பொழுதே) மறந்துகூடிவிட்டாள். (அதனால்நான் இப்படி வருத்தமுறவிரையாமல் பிணங்கி நிற்கின்ற இவள் அவளல்லள்.) (எ-று.) (கருத்து) காதலிமுன்னொருஞான்று புல்லல் விதுப்பினாற்சென்றவென்னோடு தன்கண்மாத்திரத்தா லூடிப்புல்லுதலை யென்னினுந் தான் விதும்பலாலது தன்னையுமப்பொழுதே மறந்துகூடிவிட்டாளாதலால் யானித்தன்மையேனாக விதுப்பின்றியூடிநிற்கின்றவிவளவளல்லவென்பதாம். ❋கண்மாத்திரத்தாலே பிணங்கல், சொன்னிகழ்ச்சியில்லாமலது நிகழ்ந்தவளவேயாதல். அவளாயின் இப்படி ஊடற்கண்ணே நீடாளென்பதுபயன். (௰)



# ௱௩௰-ஆம் அதி - நெஞ்சொடுபுலத்தல்

அஃதாவது-காரணம் உண்டாகிய விடத்தும் பிணங்கநினையாமல் புணர்ச்சியைவிரும்புகின்ற நெஞ்சுடனே தலைவிபிணங்குதலும், தலைவன் பிணங்குதலுமாம்.
அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே......... *
நீயெமக் காகா தது ...................... ........................ ...*

இது - தலைவனிடத்துத் தவறு உண்டாகிய விடத்தும் பிணங்க நினையாத நெஞ்சிற்குத் தலைவிசொல்லியது. (இ-ள்.) நெஞ்சே-(எனது) மனமே - அவர்நெஞ்சு - அவரதுமனம் - அவர்க்காதல்கண்டும்-(நம்மைநினையாமல்)அவர்க்காய்நிற்றல் கண்டிருந்தும் - நீயெமக்காகாதது-நீ (அவரையேநினைத்து) எமக்காய் நில்லாமைக்குக் காரணம் எவன்-யாது. (எ-று.) (கருத்து) நெஞ்சேயவருடைய நெஞ்சுநம்மைநினையாதவர்க்காய்நிற்றல் கண்டுவைத்து நீயெமக்காய் நில்லாதவாநினைத்தற் காரணம்யாதென்பதாம். ✻ அவர்க்காதல்-அவர்நினைத்தற்கு உடன்படுதல். எமக்காகாதென்றது பிணங்கற்குஉடன்படாமையை. ஒருகாரியம் தாமாக அறிந்துசெய்ய மாட்டாதவர்செய்வாரைக் கண்டாயினும்செய்வர் நீ அதுவும்செய்கின்றிலையென்பதாம்.

உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச் ........... .......... *
செறாரெனச் சேறியென் னெஞ்சு........................ *

இதுவுமது. (இ-ள்.) என்னெஞ்சு-எனதுமனமே- உறாஅதவர்க்கண்டகண்ணும் (நம்மிடத்து) அன்பில்லாததலைவரை (உள்ளபடி) அறிந்தவிடத்தும் செறாரென -(நாம்போனால்) கோபியாரென்பதுபற்றி-அவரை-அவரிடத்து- சேறி - செல்கின்றாய் - (உனக்கு இப்படிப்பட்டதும் ஓரறியாமையுண்டோ. (எ-று.) (கருத்து) என்னெஞ்சேமேலுநம்மாட் டன்புடையராகாதவரையுள்ளவாறறிந் தவ்விடத்து நாஞ்சென்றால் வெகுளாரென்பதுபற்றி நீயவர்மாட்டுச் செல்லாநின்றாயிப் பெற்றியது மேலுமோரறியாமை யுண்டோ வென்பதாம். ✻ அவரையென்பது-வேற்றுமைமயக்கம். பழமையான தாட்சிணியம்பற்றிக் கோபியா ரென்பது கருத்தாகச் சென்றால் நீ நினைத்தது முடியுமோவென்பதாம். (௨)

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ ...... *
பெட்டாங் கவர்பின் செலல் ........ ......... .................. *

இதுவுமது. (இ-ள். நெஞ்சேநீ - மனமேநீ - (என்னிடத்து நில்லாமல்) பெட்டாங்கு-விரும்பியபடியே- அவர்பின்செலல் - அவரிட

த்தே செல்லுதற்குக் (காரணம்) கெட்டார்க்கு நட்டாரில்லென்ப தோ - கெட்டவர்களுக்கு நட்புற்றவர் (உலகத்திலே) இல்லையென்கிறநினை வோ. (உன்னியல்பாகசொல்லு) (எ - று.) (கருத்து) நெஞ்சேநீயெ ன்மாட்டு நில்லாதுவிரும்பியவராவர்மாட்டுச் செல்லுதற்குக்கா ரணங்கெட்டார்க்கு நட்டாருலகத்திலையென்னு நினைவோ நின்னிய ல்போகூறுவாயாக வென்பதாம். ❁ என்னைக் கைவிட்டவரிடத்தே 'செல்லுதல் நீ முன்னமே பழகியதென்றற்கு - பெட்டாங்கென்றும் தான் இப்பொழுது மானமிலளாதலாலேகெட்டார்க்கென்றும், சொ ல்லினாள். செலல் ஆகுபெயர். தளர்விடத்து உடன்வருந்துறுதலுடை ரதுதொடர்பாயிற்று. உனதுதொடர்பென்பதாம். (௩)

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே............ ❁

துனிசெய்து துவ்வாய்காண் மற்று............................! ❁

இதுவுமது. (இ-ள்.) நெஞ்சே-மனமே - (நீயவரைக்கண்டபொ ழுதேஇன்பமனுபவிக்க நினைப்பதல்லது) துனிசெய்து - (அவர்தவ றுநோக்கிப்)பிணக்கையுண்டாக்கி - மற்றுத்துவ்வாய் - (அதனை அள வறிந்து)பின் அனுபவிக்கநினையாய் (ஆதலால்).இனி - இனி - அன் ன-அப்படிப்பட்டவைகளை-நின்னொடு-உன்னுடனே-சூழ்வார்- எண் ணுவோர்-யார்-யாவர் (தான் அதுசெய்யேன்.) (எ-று.) (கருத்து) நெ ஞ்சேநீயவரைக் கண்டபொழுதே யின்பநுகரக் கருதுவதல்ல தவர்த வறுநோக்கிமுன்புலவியை யுண்டாக்கியதனையளவறிந்துபின்னுகரக் கருதாயாகலி னினியப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடெண்ணுவார் யாவர்யானதுசெய்யே னென்பதாம். ❁ அப்படிப்பட்டவைபிணங் குந்திறங்கள். காண்-உரையசை. முன்னெல்லாம் பிணங்க எண்ணியி ருந்து பின்புணர்ச்சிக்குவிரைதலால் இப்படிச்சொல்லினாள். (௪)

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு................................. ❁

மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு ................................. ❁

இது - தூதாகச் சென்றதோழி கேட்கத் தலைவி சொல்லியது. (இ-ள்.) (தலைவனைப்பெறுதநாளினும்) பெறாஅமையஞ்சும்-அப்பெ றாமைக்குஅஞ்சாநிற்கும்-பெறின் - பெற்றநாளினும் - பிரிவஞ்சும்- (அவரது)பிரிவைநினைந்து அஞ்சாநிற்கும்.(ஆதலால்) என்னெஞ்சு -என்மனமானது-அறாஅவிடும்பைத்து- (எந்நாளும்) நீங்காததுன்ப முடைத்தாயிற்று. (எ-று.) (கருத்து) காதலனைப்பெறாதஞான்றுமவ ப்பெறாமைக் கஞ்சாநிற்கும் பெற்றஞான்றுமவர்பிரிவினையுட்கொ ண்டதற் கஞ்சாநிற்குமாகலா னென்னெஞ்செஞ்ஞான்றுநீங்காவிடும் பையை யுடைத்தாயிற்றென்பதாம். ❁ காதலனைப் பெற்றிருந்துபு ணர்ச்சியை இழத்தல் உறுதியன்றென்கிற கருத்தால்- தூதுக்குஉடன்

படுகின்றாளாகலால் பெறாமையஞ்சுமென்றும்-புணர்ச்சியானமையி னால் இன்னும் இவர்பிரிவாராயின் யாதுசெய்வோமென்பது நிகழ்தலால் பெறிற்பிரிவஞ்சுமென்றும், இவ்விரண்டுமல்லாமல் வேறேயில்லாமையால் அறாவிடும்பைத்தென்றும், சொல்லினாள். (௫)

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத் ...................... *
தினிய விருந்ததென் னெஞ்சு .......................... *

இதுவுமது. (இ-ள்.) என்னெஞ்சு - என் மனமானது- இருந்தது- (இங்கே இருந்தது- தனியேயிருந்தது - அன்பரைப்பிரிந்திருந்து நினைத்தக்கால்- (அவர் கொடுமைகளை நான் தன்னோடு) நினைத்தக்கால் (அச்சமயமறிந்து)என்னை - என்னை- தினிய - தின்பதுபோல் துன்பஞ்செய்தற்பொருட்டே, (எ-று.) (கருத்து) எந்நெஞ்சினிடிருந்தது காதலரைப்பிரிந்தவர் கொடுமைகளை யான் றன்னோடு நினைத்தக்காலவ்வளவறிந்தென்னைத் தின்பதுபோன்று துன்பஞ்செய்தற்கேயென்பதாம். ❀ என்னிடத்திருந்தது அப்போது அவர்கொடுமைகளை உட்கொண்டெனக்குப் பொறுக்கமாட்டாமையைச் செய்தற்கே இப்போது அவைநோக்கி அவரோடுபிணங்குதற் கன்றென்பதாம். (௬)

நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென் ........................ *
மாணா மடநெஞ்சிற் பட்டு ........................ *

[இதுவுமது.] இ-ள். அவர்மறக்கல்லா-(தன்னை மறந்த) அவரை மறக்கமாட்டாத- மாணா- மாட்சியில்லாத- என்மடநெஞ்சிற்பட்டு- எனது அறிவில்லாத மனத்தோடுகூடி. நாணும்- என் னுயிரினுஞ்-சிறந்த) நாணத்தையும் -மறந்தேன்-மறந்துவிட்டேன்.எ,று. (கருத்து) தன்னை மறந்தகாதலரைத்தான்மறக்கவுமாட்டாத வென்மாட்சியில்லாத மடநெஞ்சுடனேகூடி யென் னுயிரினுஞ் சிறந்தநாடன்னையுமறந்துவிட்டேன்என்பதாம். ❀மடமைகண்டவிடத்துநினைந்து காணாதவிடத்து மறத்தல்-நான் எந்நாளுங்கூடியொழுகினும் அந்நாள்கண்டார்போல் ஒடுங்குதல் கண்டபொழுதே புணர்ச்சிக்கு விரைதலால் அதனைமறந்தேமென்றாள். (௭)

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற ........................ *
முள்ளு முயிர்க்காத னெஞ்சு ........................ *

இதுவுமது. ( இ-ள். ) உயிர்க்காதனெஞ்சு - உயிர்மேல்ஆசையுடைய(என்)னெஞ்சு-(நம்மை இகழ்ந்து சென்றாரென்று) - எள்ளின்- (நாமும்)இகழ்வோமாயின்-இளிவாமென்றெண்ணி - (பின்புநமக்கு) அவமானமாமென்றுநினைத்து- அவர்திறம் - அவர்திறத்தையே உள்ளும்- நினைக்கின்றது. (எ-று.) (கருத்து) உயிர்மேற் காதலையுடை

யவெந்நெஞ்சுதம்மையெள்ளிச் சென்றொன்று நாமுமெள்ளுவோ மாயிற்பின்னமக்கிளிவாமென் றுகருதியவர்திறத்தினையே நினையாநின் றதென்பதாம்-※எள்ளுதல், நா துமறுத்தல். இளிவு, வழிபடாமையா லும்- பிரிவுபொறுமையாலும் -நாணிலறமுதலியவை இழத்தலாலும் உண்டாவது-திறம்-தூதுக்குடன்படலும்வருதலும்- கூடலும்-முத லானவை. இளிவிற்குஅஞ்சலாலும், இறந்துபடமாட்டாமையாலும், கூடநினைக்கின்றதென்பதாம். (அ)

துன்பத்திற் கியாரோ துணையாவார் தாமுடைய ......... ※
நெஞ்சந் துணையல் வழி ............................................ ※

இது-ஒழித்தற்குவாராதபிணக்கிலே தலைவன்சொல்லியது. (இ-ள்.) (துன்பத்திற்கு) (ஒருவர்க்குத்)துன்பம்வந்தவிடத்து (அதை நீக்குத ற்கு)-தாமுடைய-தாம்உரித்தாகப் பெற்ற-நெஞ்சம் - (தமது)மன மானது துணையல்வழி துணையாகாதவிடத்து -துணையாவார்- யாரோ. (ஒருவரும் இல்லை.) (எ-று.) (கருத்து) நீக்குதற்குத்தாமுரித்தாகப் பெற்ற தம்முடைய நெஞ்சந்துணையாகாவழி வேறுதுணை யாவா ரொருவருமில்லையென்பதாம். ※ இங்கேதுன்பமாவது ஒழித்தற்கு வாராத பிணக்கு. நெஞ்சந்துணையாகாமையாவது அவளை அன்பில ளென்றொழியாது கூடற்கண்ணேவிரைதல். ஒருதுணைஇல்லாமையா ல் இத்துன்பமுற்றுவிடுதலே உள்ளதென்பதாம். (௯)

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய ......... ※
நெஞ்சந் தமரல் வழி ............................................ ※

இதுவுமது. (இ-ள்.) தாமுடைய - தாம்உரித்தாகவுடைய - நெஞ் சம்-மனம்-தமரல்வழி-(ஒருவர்க்குத்) தம்மவராகாதவிடத்து - ஏதி லார், அயலார்-தமரல்லர் - தம்மவரல்லராகுதல் - தஞ்சம் - எளிதன் றோ. (எ-று.) (கருத்து) தாமுரித்தாகவுடைய நெஞ்சமொருவர்க்கு த்தமரல்லாவழி யயலார்தமரல்ல ராதல் சொல்லவேண்டுமோவென் பதாம். ※ வேறொருத்தியைக் காதலியென்று நினைத்து என்னெஞ்ச மே என்னைவருத்துகின்றபின்பு வேறொருத்தி பிணங்குகின்றதெளி தென்பதாம். (௰)

(௱௩)





# ௱௩௧ - ஆம் - அதி - புலவி.



அஃதாவது - இருவர்நெஞ்சும்புணர்ச்சிவிரும்பாது பிணங்கநினைத்தவிடத்து ஒருவரோடுஒருவர்பிணங்கல் - அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்.

புல்லா திராஅப் புலத்தை யவருறு ............................ ❋
மல்லனோய் காண்கஞ் சிறிது............................ ❋

இது - தூதாகச்சென்றதோழி தலைவி தூதுக்கு உடன்படுதற்பொருட்டு அவளோடு நகைத்துச் சொல்லியது. (இ-ள்.) அவருறும் - அக்காதலரடையும் - அல்லனோய் - துன்பநோயினை - சிறிது - சிறிது - காண்கம் - காணக்கடவோம் - புல்லாது - (நீ அவரைவிரைந்துபோய்த்) தழுவாமல் இராஅ - (இத்தொழிலைமேவிட்டுக்கொண்டு) இருந்து - புலத்தை - பிணங்கு. (எ-று) (கருத்து) அர்வனம் புலந்தாற் காதலரெய்து மல்லனோயினையாஞ் சிறிதுகாணக்கடவே நீயவரை விரைந்துசென்று புல்லாதேயித்தொழிலை மேவிட்டுக்கொண் டிருந்து புலப்பாயாகவென்பதாம். ❋ அல்லனோய் - துன்பஞ்செய்யுங் காமநோய் - சிறிதென்றாள் - பிணக்கை நீளவிடலாகாதென்பதுபற்றி புலவிக்குறிப்புக்கண்டு அவள் வழியளாய் நின்று நாம்உற்ற வருத்தம்சிறிதுஉறலறிதல்வேண்டுமென நகைசெய்து நேர்வித்தபடி. (௧)

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது..... ..... ..... ............ ❋
மிக்கற்றா னீள விடல்........ ........... ............... .... .... ❋

இது - பிணக்குத்தீர்ந்து தூதுக்கு உடன்படும் வகைசொல்லியது. (இ-ள்.) புலவி - பிணக்கு - (புணர்ச்சியின்பஞ் செய்தற்குவேண்டுமளவினதாகுதல்) - உப்பமைந்தற்று - உப்பானது (உணவுகளை இன்சுவையாக்குதற்கு) வேண்டுமளவின தாகுதல்போலும் - நீளவிடல் - (இனி அதனை அவ்வளவிற்சிறிது) மிகவிடுதல் - அதுசிறிதுமிக்கற்று - அவ்வுப்பளவு சிறிதுமிகுந்ததுபோலும். (எ-று.) (கருத்து.) புலவி கலவியின்பஞ் செய்தற்குவேண்டுமளவிற்றாத லுப்புத் துய்ப்பனவற்றையின்சுவையாக சற்குவேண்டு மளவிற்றாதல்போலு மினியதனையவ்வளவிற் சிறிதுமிகவிடுத லவ்வுப்பளவின் மிக்காற்போலுமென்பதாம். ❋ நீளவிடுதல் - அளவறிந்து ஒழியாமல் புணர்ச்சிமேலெழுந்தகுறிப்பு அழுங்குமளவுஞ்செலுத்தல். சிறிதும் நீளவிடலாகாதென்றாள். நேர்விக்கின்றாளாகலால். உப்பு மிகுந்தவிடத்து உணவுசுவையில்லாமற் போதல்போல் பிணக்கு மிகுந்தவிடத்துப் புணர்ச்சி இன்பமில்லாமற்போமென்றமையால் இதுபண்புவமை. (௨)

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்..........*
புலந்தாரைப் புல்லா விடல் .................................*

இது-பரத்தையிடத்திருந்து வந்ததலைவனோடு தலைவி பிணங்கிச் சொல்லியது. (இ-ள்.) (ஆடவர்) தம்மைப்புலந்தாரை-தம்மைப்பெறு து பிணங்கியமகளிரை(அப்பிணக்குநீக்கி)- புல்லாவிடல் - புணராம ல்விடுதல்-அலந்தாரை - (முன்னமே துன்பமுற்று) அழிந்தவர்க்கு-அல்லனோய்செய்தற்று. (அதன்மேலும் மிகுந்ததுன்பநோய் செய் ததுபோலுமாம். (எ-று.) (கருத்து) தம்மைப்பெறாது புலந்தமகளி ரைப் புலவிநீக்கிக் கலவாதாடவர் சேறல்பண்டே துன்பமுற்றழிந்தா ரையதன்மேலு மிகத்துன்பத்தினைச் செய்தாற்போலு மென்பதாம். ❁பிறரிடத்துச் செல்லுதலால் உம்மைப்பெறாது பிணங்கியிருக்கின் ற பரத்தையரைப்போய்ப் பிணக்குநீக்கிப் புணரீராயின் அவர்பொ றாரென்பதாம். (௩)

ஊடியவரை யுணர்த்தாமை வாடிய..........................*
வள்ளி முதலரிந் தற்று.... ............ ..............................*

இதுவுமது. (இ-ள்.) ஊடியவரை-(உம்மோடு) பிணங்கியபரத்தை யரை-உணர்த்தாமை-பிணக்குத்தீர்த்துக் கூடாமை-வாடிய-(முன்ன மேநீர்பெறாமல்)வாடிய-வள்ளி-கொடியை- முதலரிந்தற்று- அடியி லே அறுத்தல்போலும். (எ-று.) (கருத்து) நம்மோடூடிய பரத்தைய ரை யூடலுணர்த்திக் கூடாதொழிதல் பண்டே நீர் பெறாது வாடிய கொடியை யடியிலே யறுத்தாற்போலு மென்பதாம்.❁நீர்பரத்தை யரிடத்திருக்கும்போது எம்புதல்வனைக்கண்டு பொறுத்திருக்க வல்ல யாம்உம்மோடு பிணங்குதற்கு உரியேமல்லேம் ஆகையால்எமக்குப் பிணக்குத்தீர்த்தலும் வேண்டாம் உரியராய்ப்பிணங்கிய 'பரத்தைய ருக்கே பிணக்குத் தீர்க்கவேண்டுவது அதனால் அங்கேசெல்லுமென் பதாம். (௪)

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை..........................*
பூவன்ன கண்ணா ரகத்து................................ ..*

இது - தலைவியைப் பிணக்குத்தீர்த்துக் கூடியதலைவன் தன்னுள் ளேசொல்லியது. (இ-ள்.) நலத்தகை- நற்குணங்களாலே தகுதியுடை ய-நல்லவர்க்கு- தலைவர்க்கும் - ஏஎர் - அழகாவது - பூவன்னகண்ணாரக த்து-மலர்போலுங் கண்ணியர் நெஞ்சிலுண்டாகின்ற - புலத்தகை-பி ணக்கின் மிகுதியன்றோ. (எ-று.) (கருத்து) நற்குணங்களாற் றகுதியு டையராய தலைவர்க்கு மழகாவது தம்பூவன்ன கண்ணார் நெஞ்சினிக ழும்புலவி மிகுதியன்றே யென்பதாம்.❁தலைவர்க்குமென்கின்ற சிறு

ப்பும்மை விகாரத்தால் தொக்கது. தவறில்லாதார்க்கும் அப்பிணக்கு இனிதென்றற்கு நலத்தகைநல்லவர்க்குமென்றான். அழகு- இன்பப்பயனப்பெறுதல். தான் அனுபவித்த இன்பத்திற்கு ஏதுவாகியபிணக்கை வியந்துசொல்லியபடி. (௫)

**து**னியும் புலவியு மில்லாயிற் காமங்.........................*
கனியுங் கருக்காயு மற்று...................................*

இதுவுமது. (இ-ள்.) துனியும், பெரும்பிணக்கும்- புலவியும், சிறுபிணக்கும்- இல்லாயின், இல்லையாயின்- காமம், காமமானது - கனியும், பக்குவமுதிர்ந்தபழமும்-கருக்காயுமற்று, இளங்காயும்போலும். எ-று. (கருத்து) முதிர்ந்தகலாமாகியதுனியு மிளையகலாமாகியபுலவியுமில்லையாயிற் காமஞ்செவ்விமுதிர்ந்த பழமுங்காயும்போலுமென்பதாம். ❋ மிகமுதிர்ந்து இருமளவின்தாகிய பழம் அனுபவிப்பார்க்குமிகவும் இன்பஞ்செய்தலால் - பெரும்பிணக்கு இல்லையாயிற்கனியற்றென்றும், கட்டிளமைத்தாகிய காய்தின்னப் படுகிற பக்குவத்ததன்றாகலால் சிறுபிணக்கு இல்லையாயின் - கருக்காயற்றென்றும், சொல்லினான். இரண்டும்வேண்டுமென்று வியந்து சொல்லியபடி.]

**ஊ**டலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது.......................*
நீடுவ தன்றுகொ லென்று........................................*

இதுவுமது. (இ-ள்,) புணர்வது-புணர்ச்சியானது - நீடுவதுகொல்-நீட்டிக்குமோ-அன்றுகொல்- நீட்டியாதோ-என்று - என்றுநினைத்தால் - ஊடலின் (இன்பத்திற்கு அவசியம்வேண்டும்) பிணக்கிலேயும்-ஓர்துன்பம்-ஒருதுன்பம்- உண்டு- உண்டாம். (எ-று.) (கருத்து) இப்புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோவென்று கருதலாலின்பத்திற்கின்றியமையாதவூடலின்கண்ணே யுந்துன்ப நிகழுமென்பதாம். ❋ ஊடலினுமென்கிற சிறப்பும்மை விகாரத்தாலே தொக்கது, கொல்லென்பதனை நீடுவதென்பதனுடனுங் கூட்டப்பட்டது ஆங்கென்பது, அசைநிலை, ஊடலானது, கூடலிலே விளைவித்தல் சொல்லியபடி.

**நோ**தலெவன்மற்று நொந்தாரொன் றஃதறியுங்.......................*
காதல ரில்லா வழி..............................................*

இது-ஒழித்தற்கு வாராதபிணக்கிலே தலைவன் தலைவியோடுபிணங்கிச்சொல்லியது. (இ-ள்.) நொந்தாரொன்று- (இவர் நம்பொருட்டு) நொந்தாரென்று-அஃதறியும்-அந்நோவை அறிகிற- காதலர் - அன்புடையவரை- இல்லாவழி-பெறாதவிடத்து- நோதல் - (ஒருவர்) நோகின்றவதனால்-எவன்மற்று-(பயன்)யாது. (எ-று.)(கருத்து) இவர் நம்பொருட்டானொந்தாரென் றன்னோயினையறியுமன்புடையாளைப்பெ

முவதிபொருவர் நோகின்றதனாற் பயனென வென்பதாம். ❁ இவள் நமதுதலைவியல்லள் அல்லாமையால் இந்நோவறியாள் அறியாமையால்நாம் பிணங்குதலாலே பயன் இல்லையென்று தன் பொருமை அறிவித்தபடி. (அ)

நீருநிழல தினிதே புலவியும் ........................................ ❋
வீழுநர் கண்ணே யினிது........................................ ❋

இதுவுமது. (இ-ள்.) நீரும்-(உயிர்க்கு அவசியம்வேண்டும்) நீரும் நிழலதே நிழலிதுள்ளதே- இனிது இனிதாகும். (அதுபோல்) புலவியும் (புணர்ச்சிக்கு அவசியம்வேண்டும்) பிணக்கும் - வீழுநர்கண்ணேயினிது, அன்புடையவரிடத்தே இனிதாகும் (மற்றையன்பிலாரிடத்து ஆகாது) எ-று. (கருத்து) உயிர்க்கின்றியமையாத நீரு நிழலின் கண்ணதே யினிதாவதெனை வெயிலினகண்ண தாகாததுபோலக் கல்விக்கின்றியமையாத புலவியு மன்புடையார்கண்ணே யினிதாவதெனையன்பில்லார்கண்ணுகாதென்பதாம. ❁ நிழலிடத்துள்ளநீர் மிகுந்த குளிர்ச்சியுடையதாய்த் தாகத்தணித்தலால், இனிதாயிற்று. அன்புடையவர் பொருமைக்கு நோகுதலும்- கூடுதலிலே ஆசையும்- உடையராவார். இவளிடத்து அவ்விரண்டும் இல்லாமையால் இப் பிணங்குதலும் துன்பஞ்செய்கின்றதென்பதாம். (௯)

ஊடலுணங்க விடுவாரோ டென்னெஞ்சங் ...... ❋
கூடுவே மென்ப தவா ........................ ❋

இதுவுமது. இ- ள். ஊடலுணங்க (தான்) பிணங்கலிலே வருந்தாநிற்கவும்- விடுவாரோடு' (தன்னை) விட்டிருக்கவல்லாரோடு-என்னெஞ்சம் என்மனம்- கூடுவேமென்பது கூடக்கடவேமென்றுமுயற்சி செய்தற்குக் காரணம்- அவா, (தன்) ஆசையே(வேறில்லை எ-று.(கருத்து) தானூடற்கண்ணே மெலியாநிற்கவும் விட்டிருக்க வல்லாரோடு கூடக்கடவேமென்றென் னெஞ்சமுயறற் கேதுதன்னவாவே பிறிதில்லையென்பதாம். ❁ அன்பும் அருளும் இல்லாரை உடையமொன்றும் - அவரோடு யாம் பொருந்துவேமென்றும் - நினைத்து அதற்கு முயலுதல் அவாவுற்றார் செயலாகலால் கூடுவேமென்பது அவாவென்றான். இக்கூட்டம் முடியாதென்பதாம். (௰)



❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊*❊

## ௱௩௨-ஆம்-அதி-புலவி நுணுக்கம்

அஃதாவது- தலைவனும் தலைவியும் ஒரு படுக்கையிலே கூடியிருந்தவிடத்து அவனிடத்துப் பிணங்குதற்குக்காரணம்இல்லாதிருக்கவும் ஆசை அதிகப்படுதலால் நுட்பமாகிய ஒரு காரணம் இருக்கிறதாக உட்கொண்டு அதனை அவன்மேல் ஏற்றி அவள் பிணங்குதல். காரணத்தின் நுணுக்கம். காரியத்தின்மேனின்றது. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற்பொதுவுண்பர் *
நண்ணேன் பரத்தநின் மார்பு ...... .... ...... *

இது- உலாப்போய்வந்த தலைவன் படுக்கையிடத்துவந்தபோது தலைவி சொல்லியது. இ-ள். பரத்த. பரத்தையரிடத்துச் செல்லுகையுடையாய் - பெண்ணியலாரெல்லாரும், பெண்ணியல்பினையுடையாரெல்லாரும் கண்ணின், (தமது) கண்களால்- பொதுவுண்பர், பொதுவாக (உன்னை) அனுபவிப்பார். (அதனால்) நின்மார்பு, நின்மார்பு (அவரெச்சிலாகிய நின்மார்பை- நண்ணேன், பொருந்தேன். எ-று (கருத்து) பரத்தமையையுடையாய் நின்னைப் பெண்ணியல்பினையுடையா யாவருந் தங்கண்ணாற் பொதுவாகவுண்பரதனாலவரெச்சிலாயநின்மார்பினைப்பொருந்தேனென்பதாம். ❊ கற்புநாண்முதலாகிய நற்குணங்கள் இல்லாமையால், பரத்தையர்க்கு உள்ளது பெண்ணாயிருக்கைமாத்திரமேஎன்கிறகருத்தால், பெண்ணியலாரென்றாள் - பொதுவாக வுண்டல், தமது சேரியிலே செல்லுகையில் முறையாலன்றி ஒருகாலத்து ஒருசேரநோக்குதல், அதுவும் ஓர்குற்றம் தானோக்கி இன்புற்றபடியே அவரும்நோக்கி இன்புறுவரென்று ஆசங்கித்து அவள் அவரிடத்துப் பொருமை யடைதலால், நுணுக்கமாயிற்று. (க)

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை .... ..... *
நீடுவாழ் கென்பாக் கறிந்து ..... ..... .. ...... ... *

இது - தலைவன் நீங்கியபோதுசென்ற தோழிக்குத் தலைவி படுக்கையிடத்து நடந்ததுசொல்லியது. (இ-ள்.) ஊடி, (யாம்தம்மோடு) பிணங்கி இருந்தேமா, (பேசா) திருந்தேமாக- தும்மினார், (காதலர்) தும்மினார். (அப்பிணக்குநீங்கி- யாம், நாம்- தம்மை, தம்மை- நீடுவாழ்க்கென்பாக்கறிந்து, நெடுங்காலம்வாழ்கவென்று சொல்லுவேமாக நினைத்து. எ-று. (கருத்து) யாந் தம்மோடூடி யுரையாடாதிருந்தேமாகக்காதலர் தும்மினாரது நீங்கித்தம்மை நீடுவாழ்கென் றுரையாடுவேமாகக் கருதியிருந்தென்பதாம். ❊ தும்மியக்கால் வாழ்த்து

தில் மரபாகலாற்பேசவேண்டியதாயிற்றென்பதாம். இயல்பாகவுண்டாகிய தும்மலைக்குறிப்பாலுண்டாகியதாகக்கொள்ளுதலால்நுணுக்கமாயிற்று. (௨)

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்.... ※
காட்டிய சூடினி ரென்று.................. ... ※

இது- தலைவியது பிணக்குக் குறிப்பைக் கண்டு நீர்சூடியொழுகாநிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம்யாதென்றதோழிக்குத்தலைவன் சொல்லியது. (இ-ள்) கோட்டுப்பூ,வளைவாகியபூமாலையை. சூடினும் சூடினேனாயினும்- ஒருத்தியை (உம்மால் இச்சிக்கப்பட்ட) ஒருத்திக்கு- காட்டிய (இப்பூவலங்கரிப்பைக்) காட்டுதல் வேண்டி - சூடினிரென்று அணிந்தீரென்று - காயும் கோபியாநிற்பள். (இப்படிப்பட்டவளுக்கு ஒருகாரணம் வேண்டுமோ.)எ-று. (கருத்து) யான்கொடுதலைச்செய்யு மாலையைச் சூடினேனாயினு நும்மாற் காதலிக்கப்பட்டாளொருத்திக்குப் பூவணிக் காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளாநிற்கு மித்தன்மையாட் கொருகாரணம் வேண்டுமோவென்பதாம். ※ பூ,ஆகுபெயர். வளையமாக வெனினுமாம். (௩)

யாரினுங் காதல மென்றேனா வூடினாள்........※
யாரினும் யாரினு மென்று .... ........ ... .... ※

இதுவமது. இ-ள். (காமம் அனுபவித்தற்கு உரிய இருவராயுள்ளவர் எவரினும் தாம் மிகுந்த காதலையுடையே மென்பது நினைத்து) யாரினுங் காதலமென்றேனா யாரினும் மிகுந்த காதலுடையேமென்று சொன்னேனாக- (உனதுதோழி அதுநினையாமல் உன்னால்விரும்பப்பட்ட மகளிர் பலருள்ளும் உன்னிடத்து மிகுந்தகாதலை யுடையேமென்றேனாக நினைத்து) யாரினும் யாரினுமென்று யாரினும் யாரினும் (என்னிடத்துக் காதலையுடையீர்) என்றுசொல்லி- ஊடினாள் பிணங்கினாள். எ-று. (கருத்து) காமநுகர்தற்குரிய விருவராயினார் யாவரினு நாமிக்க காதலையுடையேமென்பதுகருதி யாரினுக்காதலமென்றேனாக நின்றோழியது கருதாதென்னாற் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளுநின்கட் காதலையுடையே னென்றேனாகக் கருதிய மகளிர் யாரினும் மென்கட் காதலுடையீ ராயினீரென்று சொல்லிப் புலந்தாளென்பதாம். ※ தலைவிகருத்துக்குக் காதலம் என்றதன்மைப்பன்மை தலைவன்தன்னை உயர்த்திச் சொல்லியதாக வந்தது யான் அன்பு மிகுதியினாலேசொல்லியதைக்கருத்துவேறுபடக்கொண்டதல்லது வேறொருகாரணம் இல்லையென்பதாம். (௪)

இம்மைப் பிறப்பிற் பிரியல னென்றேனாக் .... .. .....※
கண்ணிறை நீர்கொண்டனள்.........................※

இதுவுமது. (இ-ள்.) காதன்மிகுதியால்) இம்மைப்பிறப்பில், இப்பிறப்பிலே - பிரியலேனென்றேனா, பிரியேனென்று சொன்னேனாக. (அதனால் என்னை மறுபிறப்பிலே பிரிவேன் என்கிற கருத்துடையேனாக நினைத்து - கண்ணிறைநீர்கொண்டனள் (அவள்) கண்ணிறைந்த நீரைக்கொண்டாள். எ-று. (கருத்து) காதன்மிகுதியா லிம்மையாகிய பிறப்பின்கண் யான்பிரியேனென்று சொன்னேனாக வதனாலென்னை மறுமையாகிய பிறப்பின்கட் பிரிவலெனனுங் குறிப்பினேனாகக்கருதி யவடன்கண்ணிறைந்த நீரைக்கொண்டாளென்பதாம். ☼ வெளிப்படுசொல்லைக் குறிப்புச்சொல்லாகக் கொள்கின்றதல்லது என்னிடத்துத் தவறில்லையென்பதாம். (௫)

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீரென் றென்னைப். *
புல்லாள் புலத்தக் கனள் ... ... ....... ................... .... *

இதுவுமது. இ-ள். உள்ளினேனென்றேன், (பிரிவில் இடைவிடாமல் உன்னை நினைந்தேன். என்கிறகருத்தால்) நினைந்தேனென்றேன். (அவள் அதனை ஒருகால்மறந்து பின் நினைந்தேனென்று சொல்லியதாகவெண்ணி) மற்று, அதற்கு விரோதமாக என்மறந்தீரென்று, என்னை மறந்தீரென்றுசொல்லி-முன்னேதழுவுதற்கு அமைந்தவள்)என்னை, என்னை - புல்லாள் தழுவாளாகி - புலத்தக்கனள், பிணங்கற்கு அமைந்தாள். எ-று. (கருத்து) பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தேனென்னுங் கருத்தால் யானுள்ளினேனென்றேனென வதனை யொருகான்மறந்து பின்னை நினைத்தேனாகக்கருதி யென்னைமறந்தீரென்றுசொல்லி முன் புல்லுதற்கமைந்தவ ளஃதொழிந்துபுலத்தற்கமைந்தாளென்பதாம் ☼ மற்றுவினைமாற்று. அருத்தாபத்திவகையால் மறத்தலை உட்கொண்டு பிணங்கினாளென்பதாம். (௬)

வழுத்தினாடும்மினே னாக வழித்தழுதாள் ............ *
யாருள்ளித் தும்மினீ ரென்று .. ........................ *

இதுவுமது. இ-ள். (கூடியிருக்கின்றவள் தும்மினேனாக (யான் தும்மினேனாக - வழுத்தினாள் (தன்னியற்கைபற்றி) வாழ்த்தினாள். (அப்படி வாழ்த்தியதானே) அழித்து (அக்கருத்தை)மறித்து (உம்மை நினைந்து வருந்துகின்ற மகளிருள்) யாருள்ளி யார் நினைத்தலால் தும்மினீரென்று தும்மினீரென்று- அழுதாள் (பிணங்கி அழுதாள் எ-று. (கருத்து) கூடியிருக்கின்றவள் யான் றும்மினேனாகத் தன்னியற்கைபற்றி வாழ்த்தினா ளங்ஙனம்வாழ்த்தியதானைமறித்து நும்மை நினைந்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரென்றுசொல்லிப் புலந்தழுதாளென்பதாம். ☼ வாழ்த்தலோடு பிணங்குதல் பொருந்தாமையால், அழித்தென்றான். அன்புடையார் நினைத்தி

வழி நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் தோன்றுமென்பது மகளிர்வழக்கு இவ்வழக்கையும்உள்ளதாகநினைத்துப்பிணங்கினாளென்பதாம்.

தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள..........*
லெம்மை மறைத்தீரோ வென்று..............*

இதுவுமது. இ-ள். எனக்குத் தும்மல் தோன்றியவிடத்தேயார் நினைத்தலால் தும்மினீரென்று பிணங்குதற்கு அஞ்சி) தும்முச்செறுப்ப அத்தும்மலை அடக்கவும்· நுமருள்ளல் உம்மவர் (உம்மை) நினைத்தலை - எம்மை மறைத்தீரோவென்று உம்மோடு ஒருசம்பந்தமும் இல்லாத எமக்கு மறைக்கலுற்றீரோவென்று சொல்லி - அழுதாள், (பிணங்கி) அழுதாள் (எ-று.)(கருத்து) எனக்குத்தும்மறோன்றியவழிபாருள்ளித்தும்மினீரென்றுபுலத்தலையஞ்சியதனையானடக்கினேனாங்ஙனமடக்கியுநுமாநும்மை நினைத்தலையெம்மை மறைக்கலுற்றீரோவென்றுசொல்லிப் புலந்தழுதாளென்பதாம். ※ செறுப்பவும் என்பதினும்மை விகாரத்தால் தொக்கது. தும்மினுங்குற்றம் ஒழியினுங்குற்றம் ஆகியக்கால் இனியான் செய்தற்றன்மையது யாதென்பதாம். (அ)

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ..........*
ரிந்நீர ராகுதி ரென்று..............*

இதுவுமது. (இ-ள்) தன்னை இவ்விதத்தாலே பிணங்கிய) தன்னை உணர்த்தினும் (நான்வணங்கிப்) பிணக்குத்தீர்க்கும்போது- காயும் கோபியாநிற்பள். பிறர்க்கும் பிறமகளிர்க்கும்- நீர் நீர்- இந்நீரராகுதிரென்று (அவர்பிணங்கியபோது) இப்படியே வணங்கிப் பிணக்குத் தீர்க்குந் தன்மை யீராகின்றீரென்றுசொல்லி. எ- று. (கருத்து) இவ்வாற்றானூடிய தன்னை யான் பணிந் துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும் பிறமகளிர்க்கு மவரூடியவழியிவ்வாறே பணிந் துணர்த்து நீர்மையை யுடையிராதிரென்று சொல்லிரென்பதாம். ※ இவள் தெளிவித்த வழியும் தெளியாளென்பதுபற்றி என்மேல் ஏற்றிக்கொண்டு அக்குற்றங்களுக்கு உடன்பட்டு வணங்கினேன் வணங்க அதுவும் பிணங்குதற்கு ஏதுவாய் முடிந்தது இனி இவளிடத்துச்செய்யத்தகுவது யாதென்பதாம். (௯)

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்.....*
யாருள்ளி நோக்கினீ ரென்று..................*

இதுவுமது. இ-ள். (என்சொற்களும் செயல்களும்பற்றித் தான் கோபித்தலால்) இருந்து (அவைகளையொழிந்து) இருந்து - நினைத்து (தன்னவயவங்களின் ஒப்பில்லாமையை) நினைத்து - நோக்கினும்

(அவைகளியே) பார்த்துக்கொண்டிருந்தாலும்- காயும். (என்னைக் கோபியாநிற்பள். அனைத்தும் (என்னவயவ) மெல்லாம்- நீர் நீர்- யாருள்ளி நோக்கினீரென்று (அவைகளினொப்புமையால்) யாவரை நினைத்துப்பார்த்தீரென்றுசொல்லி. (எ-று.) (கருத்து) என்சொற்களுஞ் செயல்களும்பற்றித் தான்வெகுளலா னவற்றை யொழிந்திருந்து தன்னவயவங்களதொப் பின்மையைநினைந் தவற்றையே நோக்கினுமென்னை வெகுளாநிற்கு மென்னவையவமனைத்து நோக்கினீ ரவற்றொப்புமையாலெம்மகளிரைநினைந்ததென்றுசொல்லியென்பதாம். ❊யான் எல்லா வவயவங்களாலும் ஒருத்தியோடு ஒத்தல் கூடாமையால் ஒன்றால் ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும் அவரெல்லாரையும் யான் அறியச்சொல்லுமென்கிறகருத்தால் அனைத்துநோக்கினீர் யாருள்ளியென்றாள்-சும்மாவிருத்தலும்குற்றமாயிற்றென்பதாம்



## ாஉஉ- ஆம் அதி - ஊடலுவகை.



அஃதாவது- அப்படிப்பட்ட ஊடலால் தமக்குக் கூடலின்பம் சிறந்த விடத்து அச்சிறப்புக்கு எதுவாகிய அவ்வூடலைத் தலைவி மகிழ்தலும், தலைவன் மகிழ்தலும், ஆம்- அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்..........................❊
வல்ல தவரளிக்கு மாறு.......................!.......❊

இது- தலைவிகாரணம் இல்லாமற் பிணங்குகின்றமை கேட்டு அப்படி நீ பிணங்குகின்றது என்னவென்ற தோழிக்கு அவள் சொல்லியது (இ-ள்) அவர்க்கு அவரிடத்து - தவறு பிழைகள் - இல்லையாயினும் இல்லாதிருந்தாலும் - அவரளிக்குமாறு (நமக்கு) அவர் அருள்செய்கின்றவிதம் ஊடுதல்வல்லது பிணங்கலை (விளைக்க) வல்லதாகின்றது எ-று. (கருத்து) அவர்மாட்டுத் தவறில்லையாயினு நகைகவர்தலையளி செய்கின்றவா றூடுதலை விளைக்கவற்றாகின்றதென்பதாம். ❊அவர்க்கென்பது வேற்றுமைமயக்கம். அளவிறந்த இன்பத்ததாகலால் யான் அடைதற்றன்மையதாகிய இத்தலையளிமற்றவரும் அடைவரென்று நினைத்து அதுபொறாமையால் ஊடல் நிகழ்கின்றதென்பதாம்..(க)

ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி.............❊
வாடினும் பாடு பெறும்..............................❊

இது- பிணங்காதிருக்கின்றபோதும் அத்தலையளிபெறலாயிருக்க அதையிழந்து பிணக்கினால் வருந்துவது என்னென்றதோழிக்குத் தலைவிசொல்லியது. (இ-ள்) ஊடலிற்றோன்றும் (பிணங்குதலாலே நம்மிடத்துத்) தோன்றுகின்ற-சிறுதுனி சிறியதுன்பத்தால்- நல்லளி (தலைவர்செய்கிற) நல்லருள்- வாடினும் வாடுமாயினும் - பாடுபெறும் பெருமையை பெறும். எ-று. (கருத்து) ஊடலேதுவாக நங்கட்டோன்றுகின்ற சிறியதுனி தன்னாற் காதலர் செய்யு நல்ல தலையளி வாடுமாயினும் பெருமையெயதுமென்பதாம். ✽தவறில்லாமல் நிற்கின்ற ஊடல் கடிது நீங்கலால் அத்துன்பமும் நில்லாதென்றற்கு- சிறுதுனியென்றும்- ஆராமைபற்றி நிகழ்தலால் அதனால் நல்லளிவாடாதென்றற்கு வாடினுமென்றும்- பின் பேரின்பந் தருமென்றற்கு- பாடுபெறுமென்றும் - சொல்லினாள். அது வருத்தமெனப்படாதென்பதாம். (௨)

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு....... ...✽
நீரியைந் தன்னா ரகத்து.......... ... .... ... ... ... ..... ✽

இதுவுமது. (இ-ள்) நிலத்தொடு நிலத்தினோடு - நீர் - நீரானது இயந்தன்னாரகத்து- கலந்ததுபோல்ஒற்றுமையுடைய காதலரிடத்து புலத்தலின் பிணங்குதல்போல்(நமக்குஇன்பஞ்செய்வது)புத்தேணாடு ஒரு தெய்வலோகம்உண்டோஇல்லை.எ-று(கருத்து நிலத்தோடுநீர் கலந்தாற்போல வேற்றுமையுடையகாதலர்மாட்டுப்புலத்தல்போல நமக் கின்பந்தருவ தொருபுத்தே ளுலகமுண்டோ வில்லையென்பதாம். ✽எப்படிநீரானது, தானின்ற நிலத்தியல்பின தாமோ அப்படியே காதலரும்-தாம்கூடிய மகளிரியல்பின ராதலால்-அதுபற்றி அவரோடு பிணங்குதல் நிகழுமென்றற்கு,நிலத்தொடு நீரியைந்தன்னாரகத்தென்றும், அவர்நமக்கும் அப்படிப்பட்டவராதலால் அப்பிணக்குப் பின்னேபேரின்பம் தருகின்றதென்றற்கு, புலத்தலிற் புத்தேணுண்டோவென்றும்,சொல்லினாள்,உவமம்,பயன்பற்றிவந்தது.

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென் ... .... ........ ✽
னுள்ள முடைக்கும் படை ........ .... ....... ...... .... ........ ✽

இது-அப்பிணக்கு இனி எதனால் நீங்குமென்ற தோழிக்குச் சொல்லியது. (இ-ள்,) புல்லி- (அன்பனைத்) தழுவிக்கொண்டு - விடாஅ, (பின்)விடாமைக்கு ஏதுவாகிய -புலவியுள் - அப்பிணக்கினுள்ளே- என்னுள்ளமுடைக்கும்-(தன்மேற்சென்ற) என்னுள்ளத்தைச்சிதைக்கிற-படை-ஆயுதம் தோன்றும் - உளதாகும். (எ-று.) (கருத்து) காதலனைப் புல்லிக் கொண்டு பின் விடாமைக் கேதுவாகியவப்புலவிகண்ணேயுள தாம்தன்மேற்சென்றவென்னுள்ளத்தைக்கெடுக்கும்படைக்கலமென்பதாம். ✽ வணக்கத்தலையும்- பணிமொழியை

யும்-உள்ளமுடைக்கும் படையென்றாள் அவற்றால் அப் பிணக்குள்ளா ம்அழிதலால் பிணக்கு நீங்கும் விதம்சொல்லியபடி. (௪)

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ........................ *
ளகறலி னாங்கொன் றுடைத்து ........................ *

இது - தலைவியைப் பிணக்குநீக்கிக் கூடியதலைவன் அதிக மகிழ்ச்சியடைந்தவனாய்த் தன்னுள்ளே சொல்லியது. (இ-ள்) தவறிலராயினும்,(ஆடவர்தம்மிடத்துப்)பிழையில்லாதவராயிருந்தாலும்-(உடையோர்போல் பிணங்கப்பட்டு) தாம்வீழ்வார் - தம்மால்விரும்பப்படு மகளிரது-மென்றோள்-மெல்லியதோள்களை - அகறலின் - கூடப்பெறாத சமயத்தில்-ஆங்கொன்று- (அவர்க்கு) அப்படிப்பட்டதோரின்பம்-உடைத்து-(பயத்த)லுடைத்து. (எ-று.)(கருத்து) ஆடவர்தங்கட்டவறிலராயினு முடையார்போல வூடப்பட்டுத்தாம்விரும்புமகளிருடையமெல்லியதோள்களைக் கூடப்பெறாத வெல்லைக்கண் அவர்க்கப்பெற்றியதோரின்பம் பயத்தலுடைத் தென்பதாம். ❋ தவறுடையார்க்குஊடியக்கால்இறந்தவின்பத்தோடு வருமின்பமும் அடைவராகலால், அதுமிகவும்நன்று. மற்றைத்தவறிலார்க்கும் ஊடுமின்பத்தை இகழ்ந்ததில்லையென்னுங் கருத்தால் தவறில ராயினும் ஆங்கொன்றுடைத்தென்றான். ஊடலினாலாகிய இன்பம் அளவிறத்தலால், சொல்லுதற்கு அரிதென்றற்கு, அப்படிப்பட்டதொன்றென்றான். தவறில்லாமல் ஊடியதுவும் எனக்கு இன்பமாயிற்றென்பதாம். (௫)

உணலினு முண்ட தறலினிது காமம் ........................ *
புணர்தலி னூட லினிது........................ *

இதுவுமது. (இ-ள்) (உயிர்களுக்கு) உணலினும் - (மேலே) உண்ணுதலினும்-உண்டதறல்-முன்னுணப்பட்டது சீரணித்தல் இனிது-இன்பந்தரும்-(அதுபோல்)காமம்-காமத்துக்கு - புணர்தலின்-(மேலே)புணர்தலினும்-ஊடல்- முன்னைத்தவறுபற்றிப் பிணங்கல் - இனிது-இன்பந்தரும். (எ-று.) (கருத்து) உயிர்க்குமேலுண்பதினு முன்னுண்டதறுத லின்பந்தரு மதுபோலக் காமத்திற்குமேற் புணர்தலினுமுன்னைத் தவறுபற்றி யூடுதலின்பந்தரு மென்பதாம். ❋ காமத்திற்கு என்பதிலே சாரியையும் நான்காம் வேற்றுமையுருபும் விகாரத்தால் தொக்கன; பசித்துண்ணும்வழி- மிகவுண்ணலுமாய் இன்சுவையதுமாம் அதுபோல் அகன்றுகூடும்வழி, ஆராதலுமாய்ப் பேரின்பத்ததுமாமென்று தன்னனுபவம் பற்றிச்சொல்லியபடி. (௬)

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங் ........................ *
கூடலிற் காணப் படும்........................ *

இதுவுமது. (இ-ள்.) (காமம் அனுபவித்தற்குரிய இருவருள்) ஊடலிற்றோற்றவர்-பிணக்கிலே தோற்றவர் - வென்றார் - வென்றோராவார்-அது-(அப்பொழுது அறியப்படாதாயினும்) கூடலிற்காணப்படும்-(பின்னே) புணர்ச்சியிலே(அவரால் அறியப்படும். (எ - று.) (கருத்து) காமநுகர்தற்குரிய விருவருளூடலின்கட் டோற்றவர் வென்றோராவரஃதப்பொழுதறியப் படாதாயினும் பின்னர்ப் புணர்ச்சியின்கணவரால‌றியப்படுமென்பதாம். ❋ தோற்றவர், எதிரிடமாட்டாமல்சாய்ந்தவர். அவர்புணர்ச்சியிடத்தே பேரின்பத்தை அடைதலால் வென்றாராயினர். மன், உம்-அசைநிலைகள். யான் அதுபொழுதுசாய்தலால் இதுபொழுது பேரின்பம்பெற்றேனென்பதாம். (எ)

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வியர்ப்பக்.........❋
கூடலிற் றோன்றிய வுப்பு.............................❋

இதுவுமது. (இ-ள்.) நுதல்வியர்ப்ப - (இப்போது இவளது)நெற்றிவெயர்வரும்பும்வகை -கூடலிற்றோன்றிய புணர்ச்சியிடத்து உளதாகிய - உப்பு இனிமையை - (இன்னுமொருகால்) ஊடி, (இவள்) பிணங்கி- பெறுகுவங்கொல் (யாம்) பெறவல்லமோ. எ-று. (கருத்து) இதுபொழுதிவணுதல வியர்க்கும்வகைகலவியின்க ணுளதாய வினிமையை யின்னுமொருகா லிவளூடி யாம் பெறவல்லேமோ வென்பதாம். ❋ புணர்ச்சியினது விசேடம்பற்றி-நுதல்வியர்ப்பவென்றான். இனிமை -கண்டுகேட்டுண் டுயிர்த்துற்றதனால்ஆகியஇன்பம்.இனிஅப்பேறுகிடைப்பது அரிதென்று பெற்றதன் சிறப்புச்சொல்லியபடி.

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப.........❋
நீடுக மன்னோ விரா...........................❋

[இதுவுமது.] இ - ள். ஒளியிழை, விளங்குகின்ற ஆபரணத்தையுடையவள்.-ஊடுகமன்,(இன்னும் எம்மோடு பிணங்குவாளாக)(அப்படிப்பிணங்கிநிற்றற்கும்- அதனைத்தீர்த்தற்பொருட்டும்) -யாம்-நாம்- இரப்ப, இரந்துநிற்றற்குக் (காலம்பெறும்வகை) இரா, இவ்விரவு-நீடுமகன், (விடியாது) நீட்டித்தல்வேண்டுக. எ-று. (கருத்து)ஒளியிழையினையுடையாளின்னு மெம்மோடூடுவாளாக வங்ஙன மவ ளூடியததனைத்தீர்த்தற் பொருட்டியானு மிரந்துநிற்றற்குக் காலம்பெறும்வகையிவ்விரவுவிடியாது நீட்டித்தல் வேண்டுகவென்பதாம். ❋ ஊடுகநீடுகவென்பன:- வேண்டிக்கோள்ளுதற் பொருளில்வந்தன. மன்னிரண்டும். ஆக்கத்தில்வந்தன. ஓகாரங்கள் அசைநிலைகள், (கூ)

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்........❋
கூடி முயங்கப் பெறின்...........................❋

இரவும்து. (இ-ள்) காமத்திற்கு காமவனுபவத்திற்கு- இன்பம்-இன்பமாவது- ஊடுதல்- (அதனை அனுபவத்திற்குரியோர் ஆ மை யற்றித் (முள்) ஊடுதலாம். அதற்கு, அவ்வூடுதற்கு- இன்பம்-முன் புமாவது-கூடி (அதனை அளவறிந்து நீங்கித் தம்முள்) கூடி- முயங் ப்பின் புணர்தல் கூடுமாயின் (அப்புணர்ச்சியாம்) எ-று. (கருத் இ )ஒளியினமுயினை யுடையாளின்னு மெம்மோ டூடுவாளாக வங்ஙன மவ ூடியதனை யுணர்த்துதற்பொருட் டியானு மிரந்துநிற்றற்குக் காலம்பெறும்வகை யிவ்விரவுவிடியாது நீட்டித்தல் வேண்டுகவென் பதாம்.☼கூடுதல் ஒத்தவளவினராதல். முதிர்ந்துபெரும்பிணக்காகி விடத்தே துன்பஞ்செய்தலாலும் முதிராது சிறுபிணக்காகிபவிடத்துப் புணர்ச்சி யின்பஞ்செய்யாமையாலும் இரண்டற்கும் நடுவாகிய அளவறிந்து நீங்குதல் அரிதென்பதுபற்றிக் கூடிமுயங்கப் பெறி னென்முன் அவ்வூடவின்பமும் கூடலின்பமும் யான் பெற்றேனெ ன்பதாம். (ய)

# கற்பியல்முற்றிற்றுமுற்றும்

---

காமத்துப்பால்-முற்றிற்று.



திருவள்ளுவர்என்கிறதிருக்குறண்மூலமும், இதற்குப்பதவுரையும், கருத்துரையும், விசேட வுரையும் நிறைவேறின.

ஆ-பால்-௩இ-அதிகாரம் - ௱௩௰௩ - திருக்குறள்- ௲௱௩௰.

☞ இத்திருக்குறளுக்கு - மூவகை யுரைகளும்
களத்தூர்- தமிழ்ப்புலவர் - வேதகிரிமுதலியாரவர்களாற்
செய்யப்பட்டன.

☞ திருவள்ளுவர் சங்கத்தைவென்ற செய்யுட்களும்
இவர் சரித்திரமும் - சங்கத்தார்செய்த மாலையும்
சற்றேறக்குறைய இப்புத்தகத்துக்கு
ஒழுக்காற்பங் கிருக்கின்றமையால் இவையெல்லாம் ஒருபுத்தகமாக
இனி அச்சிற்பதிப்பித்துப் பிரசுரப்படுத்துவோம்.
இப்படிக்குத்தமிழ்ப்புலவர்வேதகிரிமுதலியார்.



